உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் திரட்டியருளிய

# வாசிட்டத்திரட்டு.

# பாகவதத்திரட்டு.

# பகவற்கீதைத்திரட்டு.

---

இவை
சமீவனக்ஷேத்திரமென்னுங்கோயிலூர்
ஸ்ரீ முத்துராமலிங்க சுவாமிகளின்
ஆதீனத்துக்குரிய
ஷை சிதம்பர சுவாமிகள்
மாணாக்கர்களிலொருவராகிய

அ. இராமசுவாமிகளால்
பரிசோதித்து

உய்யக்கொண்டான் சிறுவயல்
ந. அ. வெ. சு. சுப்பிரமண்ணியஞ்செட்டியார்
புதுவயல். கு. வீ. பழ. பழணியப்பசெட்டியார்
இவர்கள் வேண்டுகோளின்படி

சென்னை:
ஜீவரக்ஷாமிர்த அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டன.

---

விய வருஷம் சித்திரைமீ.

வாசிட்டத்திரட்டின் செய்யுள்
இலக்கவிபரம் இப்புத்தக
அந்தத்திற் காட்டப்பட்டிருக்கின்றன.

உ

கணபதிதுணை.

# சூசீபத்திரம்.

மேலோனாகிச்சகம்படைக்கும்விளையாட்டுடையவித்தகனே
நாலோடொருபதெனுமுலகினண்ணாவுயர்ந்தநற்பொருளே
யாலோனாகிக்கண்வளர்ந்தவையாமெய்யாவருண்மூர்த்தி
பூலோகத்தினாயகமேபோற்றிபோற்றிமிகப்போற்றி. (௩)

கேதமிருந்தவசுரரெனுங்கிளைத்தாமரைக்குநெடும்பனியே
வேதநெறிச்செல்லமரரெனுவிரிதாமரைக்குவெய்யோனே
பேதமறுத்தோருள்ளமெனும்பெருந்தாமரையிற்பிரமரமே
பூதமனைத்தினாயகமேபோற்றிபோற்றிமிகப்போற்றி. (௪)

நோக்கப்பட்டநோக்கெல்லாருண்மையறிவாநோக்கொன்றே
யாக்கப்பட்டவுயிரனைத்துமகத்தாயறிவிலாவறிவாய்த்
தாக்கப்பட்டதொன்றில்லாத்தனித்தத்துவமாய்த்துணையன்றிப்
போக்கப்பட்டதில்லாவெம்பொருட்டுவணங்கிப்புகழுதுமால். (௫)

நீடத்தகுமன்னுயிர்க்கெல்லாநெஞ்சத்துறைவாய்நெடுநாளாக்
கூடப்பெற்றேனுனையிந்தக்குறைவில்பேற்றையார்பெற்றார்
தேடப்பட்டாய்பெறப்பெற்றாய்தெரியநின்றாய்விகற்பமெலாம்
வீடப்பட்டாயெதுவானாயதுவாய்நின்றாய்மிகத்துதிப்பாம். (௬)

நானேநீயாய்நீநானாய்ஞானவடிவாய்முடிவின்றித்
தானேயாகியண்டத்தின்றலையாய்ப்பரமதத்துவமாங்
கோனேயுன்னைத்தொழுகின்றேன்கொண்டன்மறையாநிறைமதிபோ
லூனேர்நினைவுகளின்மறையாவொளியாமுருவேயுனைப்பணிவேன். ()

ஒழிவிலுலகின்சொல்லாமுண்டாயிருந்துநீயிலையேல்
விழியிலவர்க்குப்பேரொழில்கூர்மின்றுணைப்போல்விளங்காதால்
வழிவிறேவேசயசாந்திமன்னுமிடமேசயவேத
முழுதுக்கயலேசயவேதமுளைத்தவிடமேசயவென்று. (௮)

சகலசங்கற்பப்பலனாய்ச்சகலவொளிக்குமொளியாகிச்
சகலமானகொள்கையுந்தீர்தனிச்சிற்பரத்தையேத்துகிற்பாஞ்
சகலசங்கற்பமுமற்றுச்சகலசந்தோடமுமற்றுச்
சகலவாரம்பமுமற்றதனிச்சிற்பரத்தையேத்துகிற்பாம். (௯)

## இந்நூலாசிரியர்வணக்கம்.

வேறு.

பாற்கடற்புக்குப்பணிலத்திரட்கொணர்ந்
தார்க்குமளித்தனவற்புதவாசிட்ட
நூற்குறுவழைந்துத்திரட்டினைநூற்றான்
பார்க்குட்சிதம்பரப்பாவலன்மாதோ. (௧௦)

வீட்டைக்கருதிவியர்த்தத்துறைக்கும்
பாட்டைவிடுத்துபரம்பதமெய்தக்
காட்டினனல்வழிகாமுறுநாட்டுக்
கோட்டைச்சிதம்பரக்கொற்றவனன்றே. (௧௧)

மதம்பரவாதமனத்தினியாரு
மிதம்பரமப்பதமெய்திடவேண்டித்
இதம்பரஞானத்திரட்டிக்கொடுத்தான்
சிதம்பரஞானச்சிகாமணியம்ம. (௧௨)

நல்லவர்தாம்பெறுஞானமூலோகத்
தெல்லவரும்பெறற்கீவதியற்கை
யல்லதுதாமேயடைந்திடலன்றால்
வல்லவனீதுதிரட்டினன்மன்றே. (கரு)

வையகமாமழைக்கென்னகைம்மாறு
செய்யுஞ்சிதம்பரற்காங்கெனினுஞ்செய்
யையமறச்சிவமியாமெனநிற்கிற்
பொய்யிலவனுளம்பூரிக்கலாமால். (கசு)

பாயிரம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-கசு.

# முதலாவது மகான்கள்மான்மியம்.

அஃதாவது

அதிகாரியாயினோர் மகான்கள்மான்மியமும்
அவர்களாலுண்டாகுஞ் சுகப்பேறும் கேட்டவர்களை
அடையவேண்டுதலின் நூன்முகப்பில்
இதனை வைக்கலாயிற்று.

கலி.

அடையவேண்டியதடைந்துமேற்றுயரமற்றின்பமளவிலாதாய்க்
கடையதாக்கருவிலங்குபறவைகள்போல்வீணாள்கள்கழியாதாகித்
தடையிலாமனனத்தால்வாழ்வதேயுயர்வாணாள்சநகந்தீர்ந்தோ
ருடையபிறப்புயர்ந்ததாங்கிழவேசரிப்பிறப்பாமொழிந்தவெல்லாம்.()

பெரியவர்கண்பதினாருஞ்செல்கதிகிட்டாதுண்மைபெறற்கொணாதாங்
கரியமனமோகிக்குமுண்மகிழ்ச்சிநாமதாங்கருணைதோன்று
விரியுமிழிவினாத்திறமனுகுலைமைபோய்வேறும்வீழ்வோர்
திரியவுடனெழுவர்சிறியவர்கூட்டமெனிதரிதுதெளிந்தோர்கூட்டம்.

வேறு.

அற்புதமாயமுதமாயறிவேயாகி யத்தமனமுதயமிலா வருக்கன் போலாய்ப், பொற்புமிகும்புத்தியுளவும்மைப்போல்வார்பொன்னடியைமுடியாகப்புனைந்தாரன்றே, தற்பரமாமுலகாளும்வேந்தராவோர் தமையுணர்ந்தோரைச்சேர்ந்தாற்றளர்வுண்டாமோ, நற்பயன்போல் வருமுமக்கிங்கினியின்றேனுரான்செய்யுங்கைம்மாறுநவிலுமென்றான்.

தனையறியுநிட்டையுளோர்க்கெய்தலாகுந்தத்துவபூமிகளறிந்த தலைமைமேலோர், நினையவுந்தாழவுமுரியார்பொறிகளென்னுநெடும்

பகைவென்றோராழியாநிலையினின்றோர், துணைநருபல்லுயிரிறைஞ்சமே
லாய்வாழுஞ்சுரோந்திரருநரோந்திரருந்தரும்பாய்த்தோன்று, மனைய
பெரும் பதம்பெற்றோரவரோயாரு மல்லாதோர்பவக்கடலிலமிழ்ந்தா
நிற்போர். (௪)

வேறு,

துவங்களாற்றெய்வமீராற்சாத்திரங்களினூற்போகாப்
பவங்களையுயர்ந்தோர்பாதம்பணிந்துபற்றறுக்கவேண்டி
மவங்களாங்காரங்கோபமறவுந்தேய்ந்தியற்கையான
சுவங்களினடந்துநன்னூற்றுறைநின்றோருயர்ந்தமேலோர். (௫)

வேறு.

இலங்கியசிந்தாமணியாமிதயமெனுஞ்சரக்கறையிலிருக்கும்போதங், கலங்கலிலாவிவேகியர்க்குக்கருதுபொருள்கற்பகம்போற்கணத்தினல்குந், துலங்குவிசாரம்படைத்துப்பேதைமையோய் நல்லறிவுதோன்றிறோலா, விலங்குகவசத்தோரையம்புகள்போற்காமாதிவிகற்பந்தாக்கா. (௭)

வேறு.

எவ்விடத்தில்லைநல்லஞானிகளாமீர்ங்கனிமலர்குளிர்சோலை
யவ்விடங்கானன்மேடதாமாங்கேயமர்பவரறிவிலாரன்றோ
கவ்வியசெல்வநட்புநூல்சுற்றங்கருமமாதிகளெலாமுதவாச்
செவ்வியமனமேயுதவுறல்வேண்டுஞ்சிவனைச்செல்கதியேற்ற. (௭)

வேறு.

எவனுடையமனப்புற்றிலிராகமுனிவெனும்பணிகளியக்கமில்லை
யவனெனுங்கற்பகத்தருவா லனுகாததொன்றுண்டோ வறிவின்மிக்
கவனமறவறிவிறேன்மதத்தோராய்ப்பலகலைநூல்கல்விமிக்குத்[தோய்
தவமறுகாமம்வெகுளிநிறைந்தோரோவேசரிபோற்றள்ளத்தக்கோர். ()

வேறு.

இட்டமானபொருளெல்லாமேகரிட்டர்க்கெளிதெய்துந்
திட்டமாந்தென்றிசைநோக்கிச்செல்வார்வடக்கெப்படிசேர்வார்
தொட்டசங்கற்பத்தருத்தஞ்சூழ்வாரதுவேறன்னுவரான்
முட்டிற்றமதுபயன்வசத்தோர்முன்சேர்பொருளைமுன்னோ. (கூ)

ஞானமடைந்தபொழுதிலிவனல்வீடுற்றேன்மனமிறந்தோ
னீனமானவகம்பாவப்பிராந்தியன்றேவிடர்பந்த
மானவீடாவதுமடமையந்தகாரங்கெடலன்றே
மானமிருந்தவிவனெய்தின்மனிதர்பூசைசெயவேண்டும். (க0)

யோற்றவணங்கப்பூசிக்கப்புகழவருந்திப்போய்க்காண
வாற்றவுரியோனெவனவன்வன்பிறவியறுப்போர்க்கனவரதஞ்
சாற்றுமகத்தாற்றீர்த்தத்தாற்றவத்தாற்றனத்தாற்கிட்டா
தூற்றவறிவாற்பிறவியறுத்துயர்ந்தோன்பத்திதரும்பயனே. (கக)

க-வது. மகான்கள்மான்மியம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-உ௫.

## இரண்டாவது மகான்கடரிசனப் பேற்றினுலுண்டாகுஞ்சுகம்.

அஃதாவது

மகான்கண்மான்மியம் வினவுற்றவர்களையடைந்த வதிகாரிகட்குச் சுகமுண்டாதலியல்பாதலின் அதன்பின் இதனை வைக்கலாயிற்று.

கலி.

நினைவறவெளிதின்வந்தநின்னுயர்காட்சியாலே
வினையெலாந்தவிர்ந்துவெய்யோன்மேவியகமலமொத்தே

ணிணையதோரின்பமென்றுயிலையந்திலேன்மழையிலாநா
ணைதருமழையுமந்தணண்ணியகண்ணுமொத்த. (௧)

உடலொடுவிண்சென்மார்க்கமுற்றெனவொழிந்தவாயி
கடமுறவந்ததென்னக்கனைகடலமுதகும்ப
மிடமுறவெய்திற்றென்னவெங்கைநீவந்தவின்பஞ்
சடமெலாங்குளிர்ப்பநின்றென்றளர்வெலாமகற்றிற்றன்றே. (௨)

வாசுதேவப்பேர்மைந்தன்மற்றிவர்தம்மைநோக்கித்
தேசுடையுமதுநல்லதெரிசனப்பேற்றினாலே
மாசறுதவத்தானூலான்மகங்களாற்றனத்தாற்போகா
வேசுறுமோகந்தீர்ந்தேனிதிலமுதின்பஞ்செய்யா. (௩)

இருக்கவென்னவாசனந்தந்திருந்தபின்னினிமையுட
னருக்கியத்தைமுதலனைத்துமளித்தன்பானநல்லுரைகள்
பெருக்கவோதிப்பெரியோய்நின்காட்சியமுதப்பெருமழையால்
வருக்கமுடனானங்குளிர்ந்தேன்வழிவந்துடலம்வருந்தினையோ. (௪)

வேறு.

அன்றுதொட்டுநான்புரிந்தவறங்களெல்லாநின்வடிவா
யின்றுபலித்ததுயரறிஞரிணக்கமென்னுநிறைநிலவு
மன்றலமுதமயமாகமாருச்சுகமியார்க்களியாது
நன்றிதென்னுமுயிர்க்குறுநல்லோரருளிற்பிறிதுண்டோ. (௫)

பரமமுணர்ந்தேனென்னினுநின்பார்வையாலென்பாவமெலாம்
விரைவிலறுத்தலாலிந்தப்பிறப்பேமிக்கபயனுடைத்தால்
வரதனேயென்றனைமீண்டும்பூசைசெய்தான்மற்றவனை
யுரவிதாயுன்னுடன்பிறந்தோரொழிந்தவாறென்னுரையென்றேன் ( )

வேறு.

ஞானவமுதத்துக்கோர்நிறைகுடமாந்திரதைையாகன்னிலாவுக்
கூனமிலாமதியாமெய்வீட்டிக்குவழியாகுமுன்னைநாட
லானவுனைநாடலெனுமணிதிகழ்சிந்தாமணியையடைவுற்றேயான்
றீனமுறுமனைத்தாபத்தின்றலையைமிதிக்கின்றேனென்றேவர்தேவே. (எ)

மகான்கடரிசனப்பேற்றினாலுண்டாகும் சுகம் முற்றிற்று.

உ-வது. ஆகத்திருவிருத்தம்-கூஉ.

---

## மூன்றாவது நூற்பெருமை.

அஃதாவது

சத்துக்களை யடைந்த வதிகாரிகட்கவரனுக் கிரகிக்குஞ் சாத்திரத்தி னம்பிக்கை வரும்பொருட் டதனது மகிமையைச் சொல்லவேண்டுதலின் அதன் பின்னர் இதனை வைக்கலாயிற்று.

கலி.

இகமுநான்முகன்முதற்றேவர்மூவருஞ்
சகலவேதங்களுஞ்சாத்திரங்களும்
புகலுஞானத்திறற்புராணமானது
நிகரில்வாசிட்டமாநிபுணஞானநூல். (க)

தலைமைநான்முகன்மனத்தாமைாக்கினன்
சிலையிலிராகவன்றிருச்செவிக்குத்தெள்ளமு
துலவில்வான்மீகிவாக்குதித்ததத்துவ
நிலைமைவாசிட்டமாநிபுணஞானநூல். (உ)

பெரியவரறிவுறுபெருமைசான்றது
விரிவுறுசிறியவர்மேவொணாதது
வரிசையிலுயர்ந்ததுவசிட்டசங்கிதை
யரியமெய்ஞ்ஞானநூலனைத்துமிக்கதே. (கூ)

தெருளுறுமகர்க்கிதஞ்செய்யுமன்பிலு
லருமைவாசிட்டநூற்கன்னையொப்பளோ
வுரியதாய்பிறவியையுள்ளதாக்குவள்
பெருமைவாசிட்டமிப்பிறப்பைமாற்றுமே. (சு)

பரமமேனிவசிட்டமுனிபச்சைமேனியிராமற்குப்
பிரமஞானமுணர்வித்தபெருவாசிட்டநன்னூலைத்
திரமதாகக்கற்பளவேசிவன்முத்திப்பதஞ்சேர்வ
ருரமதாகவுள்ளுணர்வோருறுபேறெங்ஙனுரைப்பதுவே. (எ)

கூ-வது. நூற்பெருமைமுற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-கஎ.

---

## நான்காவது சாதனசதுட்டயம்.

அஃதாவது

வேதாந்த விசாரத்திற்குரிய வதிகாரிக்குவேண்டுவது
சாதனசதுட்டயமாகலின் அதன்பின்னர் இதனை
வைக்கலாயிற்று.

கலி.

ஓதுகின்றபொருண்முழுதுமுன்பின்கூட்டியுணர்பவர்க்கல்லது
பசுவையொப்போர்க்கெல்லாந், தீதகன்றகுருவுண்மை செப்பாரன்
றேதிகழ்சாந்தி விசாரமொடுசெறிசந்தோடஞ், சாதுசங்கமெனவீட்

டின்வாயில்காக்குஞ்சதுஷ்டயருமுறவாகிற்றடைவேறுண்டோ, மே
தினிகாவலர்மனையிற்கடைகாப்பாளர் விடுவதுபோல் வீட்டிலவர்விடு
வரன்றே. (க)

அன்னால்வர்தமிலொருவ ரன்பாலுமனைவருமொத்தன்பாவ
ராதலாலே, பன்னாளுமிகமுயன்றுயாதுநீத்தும்பற்றியொருவனையே
னும்பழகவேண்டு, மன்னாதபிறப்பறுக்க நல்லோர்நன்னூன்மாதவத்
தாலறிவைமுதல்வளர்க்கவேண்டு,மின்னாதமாயையெனுநஞ்சம்போத
மென்கின்றகாருடமந்திரத்தான்மீளும். (உ)

மடமையொடு வாழ்கின்ற வாழ்வினீசர்மனைதொறுமோட்டிரந்
துழல்கைவரிசையாகு, மடர்தனநட்புறவுபரதேசந்தீர்த்தமாச்சிரம
மெய்வருந்தமனைத்தினாலுந், தொடருதவியில்லைமனவருத்தத்தாலே
தூயபதமுறுமுத்தித்துவாரபாலர்க், கடவகுணங்கேட்டியுயர்சாந்திவ
ந்தாற்காதலுந் துன்பமுங்கதிர்முன்கங்குல்போற்போம். (௩)

நல்லவருந்தியவருமன்னைபோலநம்புதற்காயமுதன்னநண்ணி
னாலு, மல்லன்மலர்மகட்புணர்ந்தபோதுமொவ்வாமகிழ்ச்சிதருஞ்சா
ந்தியுளோர்மரணஞ்செல்வங், கொல்லமெய்தினுமசையார்புலனைந்
தாலுங்குற்றமுநன்மையுநுகர்ந்துகுளிரார்வாடார், தொல்லறிஞர்மக
ம்புரிந்தோர்முனிவர்மொய்ம்பர் தூயவரியாரினும்விளங்குந் தூய்மை
யோரே. (௪)

ஆரியர்பேணுவதாகியமேலோர்க்கெல்லாமரிதானசாந்தியமுதருந்
திமேலோர், சீரியவீட்டினையுற்றார்நீயுமந்தச்செயல்புரிவாய் நன்னூலா
ற்றெளிந்தசுத்த, நேரியபுந்தியினாலேவிசாரந்தன்னைநிறைத்திடுகவது
நிறைந்தானிகரில்புந்தி, கூரியதாய்வீடுணரும்விசாரந்தானேகொடும்ப
வநோய்க்கருமருந்தாங்குறிப்புளோர்க்கே. (௫)

கருகியகங்குலின்மறையாக்கதிர்க்கு மட்காக்காண் பரியபொரு ளெல்லாங்காணுங்கண்ணாற், றெருளூறநாளுருலகம்வந்தவாறென்செ றிபிறவியாரதெனுந்திகழ்விசார, மிருளூறுமாபத்தினுக்குமருந்தாமப் பாலேற்றமுளசந்தோடமேதென்றேதில், வருபொருளிலின்பமறத் துய்த்துவாராவனபொருளிற்றுன்பமிலாமகிழ்ச்சிதானே. (சூ)

நிகரறுசந்தோடவமுதமையப் பெற்றுனெடும்போக நஞ்சாமந் நிறைசந்தோட, மகனுறவாசையில் விழுநெஞ்சறிவைநோக்கிலழுக் குறுகண்ணுடியிலாநம்போற்றேன்று, மகிழ்குணமெய்தியபுருடமகி மையோனைமாதவருநராதிபரும் வணங்காநிற்பர், சகமெனுமாயை யைவெல்லத்தக்கோர்க்கெல்லாந் தப்பாத சகாயமாஞ் சாதுசங்கம்.

அறக்குறைவைநிறைவாக்குஞ்சம்பத்தாக்கு மாபத்தைச்சுபமாக் குமசுபந்தன்னைச், சிறக்குமுயர்ந்தவர்கூட்ட மென்னுங்கங்கைச்சீ தநீராடினர்க்குச்செந்தீவேள்வி,யிறக்கரியதவந்தானர்தீர்த்தம்வேண் டாமிடர்பந்தமறுத்தெவர்க்குமினியோராகிப், பிறப்பெனும்வேலைப்பு ணையாமுணர்வுசான்றபெரியோரையெவ்வகையும்பேணல்வேண்டும்

ஈ-வது. சாதனசதுட்டயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-சரு.

---

## ஐந்தாவதுஅனதிகாரிலட்சணம்.

அஃதாவது,

சாதனசதுட்டய சம்பன்னத்வ மில்லாதவர்களதிகாரிய

ன்றுகலின் அதன்பின்னர் இதனை

வைக்கலாயிற்று.

கலி.

காதல்செறிபொல்லாமாணுக்கனுக்குக்கற்பித்தவுபதேசங்கருநா ய்த்தோலுண், மேதகுபாலெனவசுத்தமேவுமென்றுமிருகாதிசேய்பல

வும் விளம்பக்கேட்டுத், தீதறுநாரதன்வேதவியாதனுதித்திரன்முனி வர்நன்றிதெனச்சிறப்புச்செய்தார், காதிபுதல்வனை நோக்கிக்கமலத் தோனோர்கமலமுனிபுதல்வனிவைகழறலுற்றான். (க)

இயற்கைகுணஞ்சோதித்துமுன்னேபின்னேயாவையுமாம்பிரம நீயென்னல்வேண்டும், வியப்புறவாசையிலுழல்வார்க்கிவ்வாறோதின் மீளாததிநரகில்வீழ்த்ததாகும், தியக்குறுபோகத்தாசைதீர்ந்துபுந்தி தெளிந்தவனைப்போல்வார்க் கேதிகழத்தோன்று, மயக்கமறவுணர்த் தவல்லகுருவைக்கிட்டாவருந்தியுந்தன்பிறப்பறுக்குமகனுமாங்கே. ()

வேறு.

ஆயமூடர்க்களித்தபொருளளற்றில்வீழ்ந்தபொருளொக்குந்
தீயவவரோடுரைத்தவுரைசேணைநோக்கிநாய்குரைத்தன்
மேயமடமாபத்தினிடமெய்ம்மையுணராரர்க்கெவ்வாபத்
தேயவணுகாதிம்மாயையெழுவதறிவிலோர்க்கருளால். (ரு)

சகப்பேர்பெறுமிவ்வாதனைதான்றவிரிலழியாச்சாந்தியதா
மகப்பாவனையிலிச்சகத்திலலகைத்தேராநீர்தன்னி
லுகப்பாமறுதியுள்ளோர்களுபதேசிக்கவொண்ணுதோர்
மிகப்பாவிகளாஞ்சீசீயென்றிகழ்வாரவரைமெய்யுணர்ந்தோர். (சு)

பரமமுணர்ந்தோர்விவேகியர்க்கேபரமவுபதேசம்பகர்வர்
திரமின்மயக்கத்திழிந்தோர்க்குச்செப்பநினையார்சொப்பனத்தில்
வரனைநனவிற்கன்னிகைக்குமகிணனுக்குமியல்பொக்கும்
விரதமுனிசேய்கேட்சொன்னவினுவுக்குண்மைவிளம்பினமால். (ரு)

வேறு.

சொன்னதுகைக்கொள்ளாதுவிரோதத்தாற்கேட்பவர்க்குச்சொ ன்னவார்த்தை, பன்னியுமோர்பயனுகாதிருளிலேவிழிக்குணர்வுபலி

ப்பதுண்டோ, வென்னனுமன்னவனுரைப்பான்வேதவிதியே நீயிங்கி சைத்தவெல்லா, நின்னருளாற்கைக்கொண்டுசத்தியமோனன்முகநினை யாநிற்பேன். (சுஅ)

ரு-வது. அனதிகாரிலட்சணம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ருக.

## ஆறுவது அதிகாரிலட்சணம்.

அஃதாவது

சாதனசதுட்டய சம்பன்னத்துவமுள்ளவர்களே அதிகாரியாகலின் அதன் பின்னர் இதனை வைக்கலாயிற்று.

கலி.

பந்தமுற்றனன்பரபதத்தைச்சேர்கவென்
றந்தநிச்சயமுளானறிவிலானலான்
சிந்தனைத்துயர்கெடசித்தைச்சேர்ந்துளா
னிந்தநூற்குரியவனென்றுகொள்கவே. (க)

வேறு.

பதம்பணிந்துவேண்டியபின்பண்டைநியமஞ்சிறிதுபண்ணுநிற்கு
மிதந்தருமாதருநிதியுமில்லமும்பொய்யாதலினுலென்னேயென்னுஞ்
சிதம்படுநற்றுயிலடிசில்சீதநீராதிகளிற்சிந்தைதீரு
மதந்தவிர்சந்நியாசியர்போன்மானமிராச்சியமகிழ்ச்சிமறுக்கமாற்றும்

இடரில்பதமொழிந்தபலதொழிலாற் போம்வாணுளென்றிரங்கிப்பாடு, மடர்செல்வமாபத்துக் கிடமென்றேயாசைதவிர்ந்தியார்க்குமீயும், படர்கின்றகருத்தறியேமிவர்க்காரோ நற்குணங்கள்பயிற்றவல்லார், தொடர்செய்கையிதுவென்று தொழுதுரைத்தார்முனிகேட்டுச்சொல்வதானுன். (உ)

தந்தையிவனிற்பிறந்துவளர்ந்துபலகலைதரித்துச்சதாசாரத்தால்
வந்துயர்நன்னதியாடிவாரிதிசூழ்புவியுழன்றுவருதலோடு
மிந்தநெடுஞ்சகமோகத்திச்சையெலாந்தீர்ந்ததிதிலின்பமில்லை
யந்தமுறல்பிறப்பதற்கேபிறப்பதுமீட்டிறப்பதற்கேயநித்தமியாவும்.

வேறு.

அனையகுற்றங்களாங்காட்டெரியினலறவும்வெந்த
நினைவினீரினிற்கானற்போனெடியபோகங்கடோன்று
வினையுறுமரணம்வாணாளிரண்டையும்விரும்புதில்லே
னினையதோரிடருமின்றியிருந்தவாறிருக்கின்றேனல். (ரு)

தெரிவுறுவயதில்வந்தபுந்தியாற்சித்தந்தன்னைப்
பரிகரியாதுவிட்டாற்பரிகரிப்பதுமற்றெந்நாள்
விரிவிடம்விடமதன்றுவிடயமேவிடமாந்துன்பம்
புரிவிடங்கொல்வதோர்மெய்புலன்மறுபிறப்புங்கொல்லும். (சு)

இந்நிலையிலதாவேனுமுளதியம்பாராவேனு
மந்நிலையையமின்றியகங்கரமின்றியானே
துன்னுறமாட்டேன்செய்வதேதெனிற்சோறும்வேண்டே
னன்னயநீரும்வேண்டேனலம்பெறுதுகிலும்வேண்டேன். (எ)

முழுகுதருனமாதிநியமங்கண்முழுதுஞ்செய்யேன்
விழுமியகருமஞ்சம்பத்தாபத்தின்மேவேனியாக்கை
நழுவுவதன்றியொன்றுநயக்கிலன்மவுனியாகி
யெழுதுமோவியம்போற்காமங்கோபம்பற்றின்றிநிற்பேன். (அ)

வேறு.

பறக்கின்றபறவைகளின்சிறகென்னவன்வரதம்பதைத்துலாவி
யிறக்கின்றவுலகநடைநோக்கிவாய்விட்டிரங்கியியம்பலுற்று
னறக்கன்றியவத்திலுழன்றலமருமிவ்வுலகிடையானந்தோவந்தோ
நிறக்கின்றமயக்கத்தாற்கல்லிடைக்கற்போலுருண்டுநெரிந்தேனந்தோ

காலமொருகான்முடியா திதனிடையெண்ணுருண்டோர் கணமுமில்
சாலவிது தனைமதித்துவன்காதலிடைவீழ்ந்துதளர்வதேனுன் [லைச்
றாலமதியாற்கெட்டவெனைப்போலவினரார்சொல்லற்பாற்றே
சீலமறுவாணுளைப்பெரிதாகநினைவதேசிசியந்தோ. (கo)

எல்லையிலாவண்டத்தி லியாணுளும்புவிநோக்கி லிறையுமில்லை, யல்லலுறுமிதுபெரிதாவாதரித்துநிற்பதேயந்தோவந்தோ, புல்லிமை யத்தினிதாகியுதாரமாச்செயப்படாப்பொருளீதென்னத்; தொல்லு லகிலொருபொருளுங்காணேனித்தொடர்ச்சிநிலையென்னேயென்னே

வேறு.

தலைவர்தலைமே லுறைவோர்நாட்களிறுற்றுழ்ந்தோர்க்குத் தாழ வீழ்வர், நிலையில்பெருமையையுறுதிநினைக்கின்றநெஞ்சேயின்னினை வீ தென்னே, துலைவில்பெரும் போகங்கள் பெரியோர்கள் கிளையோடுந் தோன்றித்தோன்றி, யுலைவுறமாண்டார் முன்னுளின்னுளிங் கிவைய னைத்தி லுறுதியென்னே, (கஉ)

உள்ளத்தின்முடிமேலேயில்லாமைவீற்றிருக்குமுலகிலென்றுந்
தெள்ளுற்றநல்லறத்தின்சிரத்திலேயெப்பொழுதுந்தீமைவாழு
மெள்ளற்றவின்பத்தின்றலைமேலேதுன்பங்களிருக்குமென்றுற்
கொள்ளத்தக்கனவானகுற்றமிலாப்பொருளேதுகுறிப்புளேற்கே. ()

வேறு.

ஒருபகற்றனியிருந்தனனிவையிவையுணர்ந்தான்
பெருகுபோகங்கண்முனிந்தனன்பிறவியைநினைந்தான்
பொருவின்மூவுலகங்களிற்போகங்கணெடுநாட்
பருகநல்குநம்பேரரசாலென்கொல்பயனே. (கச)

உண்டவின்பமேமீளவுமுண்கின்றதொருநாட்
கண்டகாட்சியேமீளவுங்காண்கின்றதுவந்து
கொண்டகோலமேமீளவுங்கொள்கின்றதென்றால்
விண்டமேலவர்நாணுறுதொழிவரோவெறுத்து. (கரு)

அருந்துமட்டினிதென்றதேமீண்டுமீண்டருந்தித்
திருந்திடாதபுன்சிறுவர்போற்செயலறியாது
வருந்துகின்றனநாள்பக்கமாதமாண்டுகங்கள்
பொருந்திவந்ததேயல்லதுபுதிதொன்றும்வாரா. (கசு)

வேறு.

பூதநெறியாற்றவத்தானூற்பொருளால்யமனியமும்பொருந்துநீராற்
றீதறுநல்விவேகந்தான்சேர்தலுமேயவணிவினையசிந்தைசெய்தான்
கேதமறவிளைப்பாறும்பதமேதுமறுபிறவிக்கேடிலாத
மேதகையபதமேதிங்கிதுவன்றேமுதல்விரைவின்மேவற்பாற்றே.()

வேறு.

உளநினைவிலாவிமல பரபதத்தேநெடுங்கால மொன்றியொன்று
ய்க், கிளர்கனகவரைச்சிகரத்துறைமுகில்போலிளைப்பாறக்கிடைப்ப
தென்றுட், டளர்வறவீதியற்றினமேலெவையியற்றத் தக்கதெனச்ச
லித்துச்செல்லு, மளவறுபோகச்செல்வமெனதுளநின்றெக்காலமவி
ழ்ந்துபோமே. (கஅ)

மனனமெனுந் திரைமோதிமதத் தெழுந்தபேராசை வாரிதன்
னிற், புனிதமுறும்புந்தியினாலமூழ்ந்தாமற்கரையேறிப் போவதென்னா,
ளனவரதந்தொழிறொழிலிலாமைகள் போய்ப்பற்றுவீடின்றி யுள்ளே,
தனதொளியாம்பதமேவியெக்காலமகிழ்வுறுவேன்றளராநின்றே.

கருதுநினைவொழித்தொடுங் கிக்கார்வரையின் முழையிடத்திற்
கருங்கற்போல, நிருவிகற்பசமாதியினாலெக்காலமசைவற்றநிலையினி

ற்ப, னொருமைபெறு தியானத்தா லிளைப்பாறு மென்னுடைய வுச்சி மீதே, குருவியினங்கூடமைத்துக்குடியிருப்பதெக்காலங்குஞ்சியாலே

வேறு.

விதியினூற்கானன்மேட்டிற்கொடியனவிசாரந்தோன்ற
வுதவுமேகாந்தமெய்தியொன்றொடொன்றுவ்வாக்கூட்டத்
ததிசயவுலகின்றன்மையிதனைப்பார்த்தகத்திற் றேர்வான்
புதிதிலையொன்றுமென்றும்போனதேபுகுதுமீட்டும். (உக)

வேறு.

போகியபகலேமீளப்போகியவிரவேமீள
வேகியகொடையேமீளவேகியவிரப்பேமீள
வாகியவுணவேமீளவாகியதொழிலேமீள
மோகியர்மீளமீளமுயலுவாரொன்றினுணர். (உஉ)

சுவையறவுணங்குமந்தக்கருமமேசூழாநிற்பர்
நவையறவெத்தைச்சேர்ந்தானண்ணுறுதில்லையென்ன
வெவையும்வந்தணுகுமத்தையியற்றலேயியல்பாஞ்செய்கை
சுவையுறுமற்றவெல்லாக்கருமமும்விடேயாகும். (உங)

பலபடச்செய்தசெய்வார்பாமரரறிஞர்செய்யா
ருலகியலிதுவென்றுள்ளம்வெருவினனொருகாற்சென்று
நலனுறுதிரிதலப்போர்நற்குருசரணந்தாழ்ந்து
சலனுறுபிறவிக்கஞ்சித்தனித்திவைகழறலுற்றான். (உச)

வேறு.

எறியுங்கடலினுகத்துளையிலாமைக்கழுத்துப்புகுவதுபோற்
பொறிவெம்பிறவியநேகத்தாற்புருடன்விவேகியெனப்பிறந்து

முறியும்பிறவிப்பயனிலதிம்மோகமமையுஞ்செய்தொழிலாற்
செறிவதென்னேயிவற்குலேதினங்களெல்லாஞ்சென்றிடுமால்.(௨௫)

௬-வது. அதிகாரிலட்சணம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-எ௬.

## ஏழாவதுமுயற்சிலட்சணம்.

அஃதாவது

அதிகாரியாயினோர்க ளரிதாய்க்கிடைத்த
மாநுடதேகமும் விவேகமுமிருக்கும்போதே
மோக்ஷமடைதற்குரிய முயற்சியிற் பிரவேசிக்கவேண்டுதலின்
அதன்பின்னரிதனைவைக்கலாயிற்று-

கலி.

இராகவகேளிப்பவத்திலென்றுமெல்லா மியல்புறுநன்முயற்சியி
னாலியார்க்குமெய்து, மாகலைநன்னூன்முயற்சியொன்றுமொன்றுவரு
நூலிலாமுயற்சிமற்றிவற்றின், சோகமின்னூல்வழிவீடாநூலிலாமை
துன்பமாஞ் சைசவத்திற்றொடருமிந்நூன், மோகமினல்லோர்கூட்
டக்குணங்களாலேமுயற்சியுறுபெரியோர்க்குமுத்திபேறும். (௧)

முற்பிறப்பின்வாதனையின்வயத்தினின்றேன் முயற்சியிலேனெ
ன்செய்கேன்முனிவவென்ன, வற்புதனேதன்வருத்தமுயற்சியாலே
யடையலாம்பரமபதமயல்வேறின்று, சொற்பயில்வாதனைத்திரளின்
பேதஞ்சொல்லிற் சுபமசுபமெனவிரண்டாஞ்சொன்னவற்றில், வற்
புறுமுற்பவந்தோறுந்தொடர்ந்துவந்த வாதனையேததுவொன்றேமரு
விநிற்கும். (௨)

மிகமுயன்றுவருந்தாமற்சமமாகின்றவேண்டுகொளாற்றன்முய
ல்வால்வினைதந்தன்றாற், பகர்மனமாஞ்சிறுமகவைநிறுத்தல்வேண

டும்பலபிறப்பிற்பரிசயங்களகலப்பண்ணி, யகல்சுபவாதனையுதித்தான்முயற்சி பேருமையுறினுஞ்சுபமுயல்வையதுதீதல்லத், திகழ்மனம்போய்த்தற்பதத்தைத்தெளியுமட்டுந் தேசிகனூற்சொல்வழியிற் செல்லுவாயே. (௩)

பிறப்பிறப்பாம்பெயருடைய விந்தமாயைப் பெருமையினைமுடிவுபெறப்பேசவொண்ணு, வறப்பெரியதன்மனத்தைவென்றன்மாறுமல்லதொருவகையாலுமகற்றலாகாச், சிறப்புடையவன்மாயை விரிவினுள்ளச்சித்திரந்தோன்றிடவுனக்குச்செப்புங்காதை, மறப்பறுசிந்தையனுகிக்கேட்டியென்று மனுகுலநாயகனுக்கு வசிட்டன் சொல்வான். (௪)

வேறு.

நலங்கியசிறைதீர்மன்னனகர்மட்டுமகிழ்வுகூரு
மலங்கல்வேல்வெற்றிவேந்தனவனியுஞ்சிறிதென்றெண்ணுங்
கலங்குறுமனதைவெல்வோர்கைகையாற்கால்கள்காலா
விலங்குபற்பல்லாலங்கமியாவுமிப்படிமுன்சேர்க்க. (௫)

ஒழிவறுமுயற்சிதன்றனூகத்தாலுயர்ந்தநூலா
விழிவறவியற்றுவோர்கட்கெப்பயனெளிதினெய்தா
வழிபடுநன்னூலாளர்வருபயன்கருதாச்செய்யி
லழிவறமுற்றுமுற்றியளவறுபயனைநல்கும். (௬)

வேறு.

பெருகியவித்துயர்களாலவசமாய்த்தன் பிதாமகனைமறந்துமிகப்பீடையுற்றுக், கருகியவிம்மனந்தன்னையளற்றிலானைக்கரையேற்றிவிடுவதுபோற்கரையிலேற்ருய், வெருவுசராமரணமெனும்விடத்தால்வெந்துமிகுநலந்தீங்கெனும்பகையான்மெலியுநெஞ்சுக், கருள்புரியாகார்மனிதவடிவமானவரக்கரேயருள்வடிவமானவள்ளால். (௭)

வேறு,

சனனமஞ்சினர்க்கவருடைமுயற்சியேசரணுந்
தினமுமிங்கிவனெனுஞ்சிறுமைதான்சிதைபி
லனகமாயுலகெங்குமாம்விசாலமுண்டாகு
மனனுறத்தனதுயர்ச்சிதான்காண்புறவருமால். (அ)

வேறு.

மேவுறுதுன்பப்பெருஞ்சுமைசுமந்துமீட்சிபோக்கிவையுடற்புண்ணு
யீவறுபிறவிக்குழியில்வீழ்சிவவெருத்திணையிக்குழிநின்று
மோவலின்முயல்வாலெடுப்பதே வலியாமுயர்ந்தஞானிகளுறவுளதே
னுவிகர்நாவாய்தருவபோலூகநல்குவர்பவக்கடல்கடக்க. (க)

வேறு.

ஆற்றுமதத்துவஞானமொன்றுளுமலதுபிறப்பறுதென்றெண்ணி
யூற்றமுறுதற்பரராயதின்மனமாயதிற்சேர்ந்தவுயிராய்நித்தஞ் [சைக்
சாற்றுமதினிட்டையராயதற்கடுத்தோர் சார்வாய்ச்சான்றோர்கள்பூ
கேற்றசெயலாற்சிறிதுமிடைவிடாப்பரிசயமாயிரண்டுபேரும். (க0)

வேறு.

சோகநன்மைதீமைகளைச்சூழ்வுற்றிருந்துஞ்சமமாகிப்
பாகமின்றிக்கற்போலப்படிந்துநிற்பாய்பலபிறவி
மோகமகலுமவ்வளவுமுயலுந்தனதுமுயற்சியினு
னேகமனையாய்சுகதுக்கநவுள்ளதுநீநாடலையாய். (கக)

இந்தவளவாந்தன்முயற்சியிடர்தீர்முடிவில்பதமளிக்குஞ்
சிந்துகலைகணிறைமதிபோற்சீதவமுதேயுண்ணிறைய

வந்தவறிவன்சுகமடைவனகிலவுலகின்பொருட்சார
மூர்தவறிந்துசெயற்செய்யாதவனுய்முத்தியெய்திடுமே. (கஉ)

எ-வது. முயற்சிலட்சணம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-அஅ.

## எட்டாவது சர்வமுங்காலனாற் கெடுமெனல்.

அஃதாவது

அதிகாரியாயினோர் சிருட்டியிலுண்டான
வெவ்வகைப்பொருள்களு மழிதலைகண்ட நித்தியமென
விட்டுத்துறக்கவேண்டுதலின் அதன்பின்னர்
இதனைவைக்கலாயிற்று.

கவி.

மகரநீர்கடல்குடிக்கும்வடமுகக்கனலேபோலச்
சகலமும்விழுங்குங்காலன்சகத்திடைவிழுங்காதில்லைப்
புகலரும்பெரியோரோனும்பொழுதொருகணமுந்தாழா
னகிலமும்விழுங்கித்தானேயகிலமாய்நிற்குமன்றே. (க)

விழுமியர்சுபத்தின்பாலர்மேருவையொப்போரெல்லாம்
பழுதறுகருடன்கொல்லும்பாம்பெனக்காலன்கொல்லும்
புழுதியோடிலைதுரும்புபொன்மலைபுணரிவெள்ளஞ்
செழுமயேந்திரமுங்காலன்சிதைத்துத்தன்வடிவமாக்கும். (உ)

வேறு.

கொண்டபாவனைபிறவியாம்பூதங்கள்குலைந்துபோந்திசைதோன்றாக்
கண்டதேசங்கள்பிறசொலாத்திரிந்திடுங்கனகிரிதுகளாகு
முண்டெனுந்தன்மைவிழுங்கிடவுலகுபோமும்பர்போம்புவனம்போ
மண்டுவாரிபோமுடுக்கள்போந்தானவர்வானவர்கணம்போகும். (ங)

சித்தர்பொன்றுவர்துருவனுஞ்சிதைதுவன்சிவனயன்றிருமாற்பன்
றத்துவந்தனிலொன்றுவர்காலமுந்தருமமுமுடிவாகு
மத்தவானும்போமயக்கமேதருவதாய்வாக்கொடுசெவிக்கெட்டாச்
சுத்தமாம்பொருளொன்றினாலிகழ்வுறத்தொல்லுலகிழிவாகும். (௪)

வேறு.

பகையெலாந்துறந்துதள்ளிப்பாக்கியம்பலவந்தெய்த
விகலறத்துய்க்குநாளிலெவ்விடத்திருந்தோவந்து
மிகையறுகாலன்கொல்லும்விவிதமாமிடத்தினின்று
வகுந்தின்வந்தொன்றுவார்போன்மனைவிசேய்முதலாமாயை. (௫)

வேறு.

குடும்பவலையிற்பிணிப்புண்டகோடாகோடியுருத்திரரு
நெடும்பங்கயக்கண்மாதவருநிலையாமென்றுற்றுலைவுற்று
ரிடும்பையுலகிலெனைக்கடந்தாரில்லையாருமெனக்கினையாம்
படும்பல்லுயிருமியாம்படுத்தல்பகுதியாயபழங்கதி. (௬)

வேறு.

அனித்தமானகுடும்பத்தவத்தமுணர்கின்றிலையென்
சனித்தபொழுதேமரித்தல்சற்றுந்தப்பாகண்டாய்
பனித்தவிழியோடயர்வாய்பகலோனுதயஞ்செய்தா
லினித்தன்னிலையத்தமனத்தெய்தானென்பாருளரோ. (௭)

வேறு.

மண்ணுடுமன்னவருமவர்தனமுமாண்டனநுண்மணலையொக்கும்
விண்ணுடுமிந்திரருமவர்வாழ்வும்போயினவிண்மீனையொக்கு
மெண்ணும்பிரமருமண்டமும்பூதங்களுமிறந்தவெல்லையில்லைக்
கண்ணுடுமவையெங்கேநின்வாழ்க்கைநிலை யென்னேகவலுநெஞ்சே.
நடுவின்முடிவினிலடியினன்றனபொருளொன்றுஞாலத்தில்லைப்
படுபொருளெல்லாமிறப்பாமலத்தினாலேபூசப்பட்டதன்றே

கடுவினைகளுடோறுங்காய்துயரநாடோறுங்களையொன்றில்லாக்
கொடுமைகளேநாடோறுஞ்செய்கின்றாரறிவிலார்குரம்பைக்கூத்தால்

அ-வது. சர்வமுங்காலனாற்கெடுமெனல் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-கஎ.

---

## ஒன்பதாவது செல்வதூடணம்.

அஃதாவது

அநித்தியவிவேகம் பிறந்தமுமூட்சுக்கள்
மூன்றுறத்தற்குரியவருந்தல் பொருந்தல்கட்குமூலம்
செல்வமாகலின் அதனைத் துறத்தற்பொருட் டதன்பின்னர்
இதனை வைக்கலாயிற்று.

கலி.

இனமிகழுமென்றஞ்சியித்துயருக்கழுதாற்றேனின்றமாதர்
தனமுதலாமாபத்தோர்க்கெனச்சிந்தாவினஞ்சுழலுந்தானமாகும்
கனமிலதாமுதாரமதாமென்னினுமின்பம்பயவாக்கயவனென்ன [ம்.
வனகனைத்தரமறியாதரசனைப் போலடைந்தார்பாலணுகுஞ்செல்வ

கருமவகையால்விரிந்தகாமாதிப்பாப்புணைப்பாற்காதனீங்குந், திருவெனுஞ் சூறைக்காற்றுற் பனிபோலச் சிதறுதோர் சேரார்சேர்ந்தோ, ரிருவகைக்குங்குளிர்ந்தினியர்நன்றியறிவோரறிஞரினியோர்சூரர், பொருவிலெவருந்திருவாற்புழுதிசெறிசுடர்மணிபோற்புன்மைசேர்வர். (உ)

தீதடையாச்செல்வர்மொழி திறம்பாதசூரர்நடுத்தெரிந்துநோக்கு
காதரிவர்மிகவரியர்நாகஞ்சூழ்துழிவல்லிநனைபோற்செல்வஞ்
சாதனத்துக்கரிதுளத்தையிழுத்திமைப்பி லிருந்தலைகீழ்த்தளிரினுன்ற
வோதுதுளியொத்தவுயிர்மத்தனெனவகாலத்திலுடல்விட்டோடும். ()

வேறு.

வருத்தமற்றச்சஞ்சோகமதமின் றிருன்னூற்பின்போ
யொருத்தராலேவலின் றியுலாவுகநகிக்கவேண்டா
வருத்தங்களனர்த்தமாகுமளவில்போகங்களையாம்
பெருத்தவாபத்தாஞ்செல்வம்பேரின்பநிராசைதானே. (ச)

வேறு.

கொல்வதானபெருநோயாங்கொடியபோகப்பரப்பெல்லாஞ்
செல்வமெல்லாமாபத்துக்கிடமாஞ்செற்றல்பிறப்பதற்கா
மொல்வதானநற்புந்திக்குள்ளகவலைநெடுநோயாஞ்
சொல்வஞாலமெலாங்காலன்றொலைக்கமுயலும்விடாதன்றே. (ரு)

கூ-வது. செல்வதூடணம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-சoஉ.

---

## பத்தாவது மகளிர்தூடணம்.

அஃதாவது

செல்வமுடையவற்கே மகளிச்சைவருதல்
முக்கியமாகலின் அதன்பின்னரிதனை
வைக்கலாயிற்று.

கவி.

சந்துறுநரம்போடென்புதசைசெறிபாவையொப்பா
ரொந்திரத்தியங்குமங்கபஞ்சரத்தினிமையென்னே
கந்தமென்குழலார்கண்ணிற்றோற்றசைகண்ணீர்புண்ணீர்
சிந்தையிற்பிரித்துநோக்கிச்சீரிதேன்மோகஞ்செய்வாம். (க)

மேருவின்குவட்டின்வீழும்விரிதிரைக்கங்கைநீர்போ
லாரமுற்றிலங்குகின்றவணியிழைமடவார்கொங்கை
யூரயன்மயானந்தன்னிலுற்றபோதுருண்டைச்சோற்றி
னேருறுகவளம்போலநிரைநிரைநாய்கடிக்கும். (உ)

மேவுதற்கரிதாய்க்கேசம்புகையதாய்விழிக்குநன்காய்த்
தீவினைச்சிகைசேர்மாதரொனுங்கனற்றிரணம்போல
யாவரைச்சுடாதுதூரத்தெரிகின்றநரகத்தீக்குப்
பாவையர்குளிர்ந்தமேனிபசையிலாவிறகதாமே. (௩)

மாமடஞ்செறிந்தநெஞ்சின்மணிதராம்புட்பிடிக்கக்
காமனும்வேடன்வீசும்வலையொப்பார்கருங்கண்மாதர்
தீமனச்சேறூர்சன்மச்சிறுகுழிமீனுமாந்தர்க்
கேமவாதனைக்கயிற்றுத்தூண்டிலுக்கிரையுமொப்பார். (௪)

மூதுதுயர்விலங்குமாகிமுடிவில்காமாதியென்னும்
பூதமணிவைத்தசெப்பாம்பூவையரின்பம்வேண்டே
னிதுதகையிதுசெய்த்தோரொன்பிதுரம்பிதுவென்றெண்ணில்
விதுமுகமாதர்வேட்கைவிரோதமாஞ்சிறிதுநாளில். (௫)

பாரியையுடையோனியாவனவனுக்கேபற்றும்போக
நாரியையில்லாதார்க்குப்போகத்தினலமெங்குண்டாங்
காரிகைதன்னைநீக்கிற்கருத்துறுசகத்துநீங்கும்
பேரியல்சகத்துநீங்கிற்பிரிவில்பேரின்பமுண்டாம். (௬)

வந்துறுபோதினன்றாய்வரியளிச்சிறகுபோலச்
சந்ததஞ்சலித்துத்தள்ளற்கரியதாம்போகந்தன்னை

மூந்துநோய்மரணமூப்புமூதலவாந்துயர்கட்கஞ்சிச்
சிந்தையில்விரும்பேனெங்ஙன்சேர்வரும்பதத்தைச்சேர்வேன். (எ)

கo-வது. மகளிர்தூடணம்முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - கoக.

## பதினோராவதுபுறத்துறவுலட்சணம்.

அஃதாவது.

செல்வமகளிர்முதலிய விடயங்களிற்

றோஷதிருட்டி வைத்தவர்கள்

அவைகளைவிட்டுத் துறக்கவேண்டுமாதலின்

அதன்பின்னர் இதனை வைக்கலாயிற்று.

கவி.

வெங்காதற்பெரும்பாம்புநெளிபுற்றுங்குடும்பபரம் வெறும்பொய்யென்றே, யிங்காசையறநீக்கியெல்லையிலாப்பரமபதத்திருந்துவாழ்வாய், சிங்காரக்கந்தற்பநகரிருந்தென்சிதைவுற்றென்றீதோகன்றே, பங்கான மனைமக்கள் வாழ்ந்தாலென் கெட்டாலென் பாசமாயை.()

தாரதனமிகுமென்னிற்றளையாகுமப்பாசந்தளைத்துக்கொண்டா
லாரதனையறுத்தகலும்விரகுடையாரறிவில்லாராசைவிஞ்சிக் [தே
கூரிதயாமப் போகத் தழன்றழுக்குங் கொடுந்துயராக்குறித்தபோ
தீரதையாமறிஞர்க்குவிரத்தியுளதாய்ச்சித்தந்தெளியுமன்றே. (உ)

வேறு.

அனைத்துளவிசேடநீங்கியச்சமற்றேடனைக்குட்
டினைத்துணைப்பற்றற்றின்மைச்சிக்கெனச்சேர்ந்து செல்வம்
வினைப்பகைக்கீந்துநானென்பதுவிட்டுமேனிச்செய்கை
தனைத்துறந்தவர்பாலையந்தனையிரந்தெனையும்விட்டு. (ங)

யாவருமிரங்கயாதுமினிமையார்தனதுநாட்டை
மேவரும்பகைவர்க்கீந்துவேறுதுயிலொன்றன்றேன்
றுவருமுனியாஞானமுனிக்குணஞ்சார்ந்துதன்ன
தோவறுநாடுநீங்கியொருவனுயுலாவலுற்றான். (௪)

முகத்தினுற்பெயராற்கண்டோரறிகிலாமூதூர்தோறு
நகத்துயர்வனங்கடோறுநண்ணினன்றீரனுகி
யகத்திலேடணைகளெல்லாமவிழ்த்தனன்சிறிதுநாளி
லிகத்துயர்சாந்தியாற்றன்னிடத்தினைப்பாறினனே. (௫)

படிமுழுதுமழல்வானோர்காற்பகைவர்க்குத்தான்முன்னீந்த
கடிநகர்புக்கானெல்லாக்கரணமும்வென்றான்சென்று
மடியிலாவமைச்சர்மற்றோர்மனையெலாமையமேற்றான்
முடியுடையிவனைநோக்கியிரங்கினார்முன்புகண்டோர். (௬)

அதிகபூசனைகள்பண்ணியரசுசெய்தருளுகென்றே
பதிபெறுபகைவன்றானும்பகரவும்பலியேயன்றி
யெதிரொருதிரணமேனுமிச்சையற்றிருந்துசின்னுட்
புதிதிதென்றெவரும்வெம்பப்போயினன்புறத்துந்தானே. (எ)

வேறு.

ஆண்டவரசினும்புசித்தசெல்வத்துமின்றுநானுசையற்றே,னீண்டவனம்புகநயந்தேன்றுக்கசுகமாபத்துநிதிகளெல்லா, மாண்டவனத்துறைவோரைத்துயர்செய்யாப் புவிபொருட்டான்மயங்கவேண்டாக், காண்டகுதன்கிளைநாசந்தோன்றுதநாட்டினும்வன்காடுநன்றே. ()

பற்றின்றித்தனியிருக்கு மனத்தைப்போற் பனிமதியும் பதுமத்தோனும், பொற்றிரள்சேரிந்திரனுஞ்சுகமடையாராதலிற்கான் போகுமென்னைக், குற்றமெனவிலக்கலைநீகணவர்நயந்ததுவிலக்கார்குலத்

தின்மாதர், சிற்றிடையாயென்றுரைத்தமன் னனுக்குச் சூடாலைசெ
ப்பலுற்றாள். (கூ)

வேறு.

போகமயலைவிரத்தியினுற்போக்கவினையிலஞ்ஞான
மேகநினைந்துவெட்டுமரத்திருக்கும்பேய்போனின்றலையு
மோகமறவேபோகங்கண்முற்றும்விவேகத்தால்விட்டால்
வேகமுறப்போமஞ்ஞானம்வெட்டிவீழ்ந்தமரப்பேய்போல். (க0)

கந்தைதண்டுசெபமாலைகலைத்தோல்பாண் டங்கமண் டலமுண்
டெந்தையிவற்றைவிடுகின்றேனென்றுகூட்டியெரிகொளுத்திச்
சிந்தைகளித்துவெற்றுடலாய்ச்சிக்கற்றனன்பற்றிலனென்றே
முந்தையறிஞன்முகநோக்கிமொழியலுற்றான்சிகித்துவசன். (கக)

கக-வது. புறத்துறவுலட்சணம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-கஉ0.

## பன்னிரண்டாவது சரீர தூடணம்.

அஃதாவது

இங்ஙனம் புறத்துறவடைந்தவர்கள்
அகத்துறவு செய்யவேண்டியதற்குத் தடையாயுள்ள
தேகப்பற்றைமுந்திக் கைவிடவேண்டுதலின்
அதன்பின்னர் இதனை வைக்கலாயிற்று.

கவி.

ஈரித்தகுடனரம்பாற்செறிந்துபலவிகாரியாயிரங்கவாடிப்
பூரித்தவுடல்பிறப்பிற்பொலிந்தாலுந்துன்பத்தின்பொருட்டேயாகும்
பாரித்தசிற்றின்பஞ்சிறுதுன்பமனுபவிக்கும்பகர்ந்தமெய்போ
னேரிட்டகுணமிலதுந்துயருள்ளதுகீசமுமாநிலைவேறுண்டோ. (க)

அற்பமதாஞ்சுகாசுகத்திலழுந்துமுடனிலையெனினுமழிவென்றுவு
கற்பலமென்னகங்கரனுக்ககமாகிப்பொறிப்பசுக்களோடாறுங்[கே
கற்பனைசெய் மனத்தொழும்பு மாசைமனைவியும்வாயாங்கடையுமாங்
பற்பலபல்லென்புகளாந்தோரணமுநாக்குரங்கும்பயின்றுதோன்றும்

வேறு.

நிதியுமரசுஞ்செயலு மிவ்வுடம்பும் வேண்டுவன நிற்கினன்றே,
விதியில்வருகாலனுற்சிலநாளிலிவையெலாம்வீந்துபோகு,முதிரமொ
டுதசையுடைத்தாயுடைவதியல்பாய்த்தாழ்ந்தோருயர்ந்தோரொத்தே,
யதிகசராமரணமுறுந்தரமறியாதிவ்வுடலிலழகென்கொல்லோ. (௩)

மின்னிடத்திற்சரக்காலமேகத்திற்கந்தர்வவியன்மூதூரி
னன்னிலைமையெண்ணுவோனெவனவனேயுடனிலைமை நாடுகிற்போ
மன்னுகிலாதசைந்துபலதொழிற்றரங்கஞ்செறிபிறவிவாரிதன்னி
லென்னபிறப்பெய்துகினுமிளமைமிகுதுயரத்துக்கேதுவாகும். (௪)

வேறு.

முன்னியவகத்தனுகியான்சகமுறைசெய்கின்றே
னன்னியநினைவிலாமையாலதில்விகாரமில்லை
யென்னதுநீநான்செய்தேன்செய்திலேனென்னும்பார்வை
யுன்னியபொழுதேதுன்பமுடலைநானென்பாருண்டோ. (௫)

மெய்யுடனுனேயென்னின்மூவேழுநரகுமஃதே
வெய்யவன்றுயராமேனுமெய்யையானென்னவேண்டா
வையமில்கேள்விநல்லோர்நினைவரோவனைத்தாமூனுங்
கையுறத்தின்பரோனுநாய்ப்பிணங்கவரார்நீசர். (௬)

நாமுடலென்னுமாசான்ஞானக்கண்குருடாய்ப்போகுந்
தோமுறுமதனைத்தூரத்தூர்ப்பரோற்சோதிஞான

மாமுகிலிலாநிலாப்போல்வயங்கிடுமினையகண்ணு
லேமுறுபிறவிவேலையிருங்கரையொளிதுதோன்றும். (எ)

வேறு.

தோற்றரவுமாத்திரமேயீதிப்போதிப்படியேதோற்றுகின்ற
தூற்றமுறவிவனுடனென்றுடலினையுள்ளுறநினைதலுற்றபொய்யே
யேற்றநரம்பெலும்பினுலியன்றவுடலினைநானென்றெண்ணுமோக
மாற்றுதியாற்சங்கற்பத்தாலியன்றவடிவுக்கோர்மட்டுண்டாமோ. (அ)

அனைத்தானபூசையினமங்கத்தைச்சுடுதலேயமலமாகும்
வினைத்தேகவுடலைநானென்னுமதுவிடுதலேமிகுந்தபூசை
யினைத்தானதியானத்தாற்பூசிக்கச்சித்துருவாயிலக்கம்பானு
இனைத்தாகுமெனவொளிகட்கொளியாமுட்சிற்சுடர்நானென்றுசேர்க.

வேறு.

தொலைவறுமாபத்தெளிமைசொல்லின்மைமடமாசைத்துவட்சியெய்
யுலைவுறுசைசவத்துடனேயுலையியல்பாமனங்கூடியோதநீரி [தி
னலைமடவார்விழியனலின்கொழுந்தொடுமினிவைக்கெல்லாமலைவுகற்
தலைதலுறுநாய்போலமலமருந்துமற்பத்தான்மகிழும்வாடும். [பித்

மண்ணுகரும் விண்மதியை வரவழைக்குமிம்மடமைமகிழ்ச்சி யாமோ, நண்ணுகுருதாய்தந்தையுற்றோர்மூத்தோரொவர்க்குநடுக்கங்கூரும், புண்ணுறுசைசவம்பயத்துக்கிடமாகுங்குற்றமெல்லாம் பொதிந்தகூடா, மெண்ணுமவிவேகவிடன்வாழ்மனையாம்யார்க்குமிதி லின்பமெய்தா. (கக)

கருத்தெனுமான் மருண்டோடி விடயமெனுங் குழியில்விழக்காயமென்னு, மருத்தலத்திலெவ்வனமாங்கடுங்கான லெழுந்துமிகவளராநிற்கும், பெருத்ததுயரிளமைநலமெவ்வளவுண்டவ்வளவும் பெரு

காரிற்கு, மருத்திகளுமெவ்வனமவ்வளவும்விரைந்தெழுந்து மிகவுணர்த்தஞ்செய்யும். (௧௨)

எத்திறத்தோரெவ்வனமாமிடையூற்றைக்கடந்தெளிதினேறவல்லோர, ரத்திறத்தோரோபுருடரவர்களே தொழற்குரியோ ரவரோசான்றோர், மெய்த்திறத்தோர்சேரிடமாய்விநயநிதிபடைத்தருளால்விளங்காநிற்குஞ், சுத்தகுணவெவ்வனமிவ்வுலகிலுளதோவிசும்பிற் சூழ்காண்டோ. (௧௩)

வேறு.

ஈறறுசைசவத்தையெவ்வனம்விழுங்குமித்தை
மாறுறுசரைவிழுங்குமயக்கநோய்வருத்தமிக்க
பேறுறுசரைகைக்கொண்டாற்பேரறிவகன்றிட்டோடும்
வேறுறுமணங்கான்முன்னைமெல்லியலகனுமாபோல். (௧௪)

பொறையுடனெகிழ்வுசோர்வுபொருந்தியலோபந்துன்பங்
கரையுறுகருமந்தன்னில்வலியின்மைகடுநோய்தோற்றம்
வரைபொருள்செயமாட்டாமைமைந்தரோமுதலோர்நிந்தை
சரைநரைவருகாலத்துத்தருந்துயர்விதமாகும். (௧௫)

விருத்தராய்நடுக்குவோரைமித்திரர்மைந்தருற்றார்
கருத்துறுமாதர்தாசர்நகைசெய்வர்காணுறுதாய்
வருத்தமுஞ்சரையுமுற்றுவலிகுணமிழந்தமூப்பை
யருத்திவந்தடையுங்கட்டைமரங்கழுகடையுமாபோல். (௧௬)

குற்றமுமிளைப்புமேவிக்குறிதன்றியுளத்தைச்சுட்டுத்
துற்றவாபத்துக்கெல்லாந்தோழியாமாசைதுன்னு
முற்றதோர்பரலோகத்துக்குறுதியேதென்றுமூப்பிற்
பற்றுறுபரிகாரந்தீர்பயமிகப்படருமன்றோ. (௧௭)

ஆதரச்செருக்குமல்குமருந்துதற்கரிதுமூப்பிற்
காதல்செய்வலியிலாமைகருத்தெலாம்வெந்துசோரும்
போதுறுநீரார்முற்றற்பூசிணைப்பெருங்காய்போல
மேதகுகாலன்மாந்தர்வெண்ணைத்தலையைத்தின்னும். (௧அ)

வேறு.

பாலகனுயஞ்ஞானத்தமுழந்துவனற்காளையாய்ப்பாவைமாராற்
சாலவருந்துவன்விருத்தன்ருறுகிக்குடும்பத்தாற்றளர்ந்துசாவன்
மேலவிவனெக்காலத்தென்செய்வான்மாயக்கூத்திருந்தவாறே
ஞாலமெலாமாடரங்காய்ப்பொறிமேளமாய்மனப்பேய்நடிக்குமன்றே.

கரதலத்துநீரதுபோனித்தலும்வாணுண்மெல்லக்கழன்றுசெல்லத்
திரண்மழைநாட்சுனைக்கொடிபோற்றீராமாலொன்றுமேதீர்க்கமாக
விரவுசரக்காலத்திலாற்றுநீர்போலழகுவிளைவிலோடப் [றே.
புரமுறுநற்சுகங்களெலாஞ்சிலைவிடுத்தசரங்களைப்போற் போயிற்றன்

௧௨-வது. சரீரதூடணம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-௧௪௦.

---

## பதின்மூன்ருவது ஆசாதூடணம்.

அஃதாவது
சர்வஇச்சைக்கு மூலஞ் சரீரமாகலின்
அதன்பின்னர்
இதனைவைக்கலாயிற்று.

கவி.

ஆதரித்தநற்குணங்க ளாகுவிறுற்றந்திரிபோலாசையாலே, சேத
முறுஞ்சொருபநிலைசெறிதரவல்லமையில்லாச்சிர்தையேயுங்கண், மீது

வலையுறுபுட்போன்மெலியவருமாசைத்தீவெதுப்பநொந்தேன், கோதிலமுதிற்குளித்துங்குளிராதென்றென்மனத்திற்குறிக்கின்றேனால்.

பின்னுறுபக்கத்திருள்போற்பேராண்மைத் தீரனையும்பீதிசெய்யு, நன்னயனங்குருடாக்குமுபசாந்தத்தோர்தமையுநடுக்கஞ்செய்யுங், கின்னமுறுகாதலெனுங்கிழமடந்தையொருபொருளுங்கிட்டாதேனு, மின்னிதியநயந்தவர்க்கும்பின்றொடருமனோரதமுமெய்தாதாகும். ()

முதிர்பருவத்தளர்ச்சியான்முடியாதநடனகதிமுயல்வாளாகி மதிமகிழ்ச்சியறநடிக்குமாடுங்கூத்தியைப் போலவருத்துமாசை, யெதிர்கிடைத்தற்கரும்பொருளிற்சென்றெய்துமமைந்தாலு மின்பந்தேடுங், கதியறவோரிடத்துறையாதலைகின்றவானரம்போற்காதருமே.

காவின்மதர் வண்டென்னப்பாதலம்விண்டிசையனைத்துங்கணத்துலாவும், வாவிவளர்மயலொன்றேவருத்தமனைத்தினும்பெரியவருத்தநல்கு, மேவுமரணுறைபவர்க்குந்துயர் செய்யுமாசையெனும் விடூசிகைக்குத், தேவர்புகழ்மந்திரமாஞ்சிந்தையறலுலகிடர்போஞ்சிந்தையற்றால். (௪)

பைந்தொடியாராசைநோய்கெம்பீரம்னிதனையும்பதுமந்தனனை, முந்திரவிக்கதிர் போலுமிளிர் விக்குங்கனவிடியின்முனை கூர்வாளும், வெந்தவிருப்புப்பொறியுமெனக் கொடியமன வேட்கைமேருவொத்தோர், சுந்தரஞானியர்தீரர்சூரரையெல்லாமிமைப்பிற்றுரும்புசெய்யும். (௫)

வேறு.

வாயுவடிவாயுட்புகுந்துமண்ணில்விண்ணிற்பல்லுயிர்க
ளாயுவெல்லாமிருவடிவாயநேககாலமருந்தியபின்
ஞேயுமனத்தாளாயவமேயுழன்றுவருந்திபூசியுமாய்த்
தேயும்படியேகெடுத்ததெமைச்சீசீயாசையெனத்திகைத்தாள். (௬)

வேறு.

அறிபவற்றுசை யறிலதுதானே யவித்தையுமன மாண்டது வாம், பொறியிலாசை துன்பமாநிராசைபுகலருமுத்தியாமின்பம், பிறிவருதனதுமுயற்சியா லுண்டாம் பேதையருண்டெனும வித்தை, செறிதருபொய்யாய்நாமமாத்திரமாய்ச் சித்தெனத்தேர்ந்திடிலிலதாம்.

வேறு.

நிலைபெறும்படிநானெனும்வாதனைநின்றால்
வலைபுகுந்தபுள்ளாமெனமூவருமடிவர்
கொலைசெயற்கெளிதாசையேயுயிர்க்கெலாங்கூற்றாய்த்
தொலைவிறுன்பமாநிராசையேதுன்பமிலின்பம். (௮)

வேறு.

கரசரணமயவுடலைம்பொறிகளென்பர்கவல்வுற விப்படியன்றே கலந்துசீவன், விரவியசங்கற்பமெனும்பாசத்தாலேவீக்குண்டுதுன்ப வலைவீசப்பட்டுத், தரமறவீனதையடைவேயடையாநிற்குஞ்சத்திமய மாமனமித்தன்மையாகிப், புரவகங்காரதைமேவிக்கோசகாரப்புழுப் போற்றன்னிச்சையினாற்பூணும்பந்தம். (௯)

வேறு.

மதியைமேகம்போல்வெண்டலச்சுதையினைமைபோ
லதிகநன்னெஞ்சையாசையாம்பேயழகழிக்கும்
பொதியுமாலெலாநீக்கிவன்பவப்பயம்போக்கி
முதிர்மனத்தின்மால்பிணிப்பறின்முத்திவேறுளதோ. (௧௦)

ஓங்குமாசையாம்பாசத்தாலுறப்பிணிப்புண்டு
வீங்குமுள்ளுணர்வதன்வழியோடியேமெலிந்து
தாங்குசெய்கையான்மனமிகச்சலிப்பவற்கன்றே
நீங்குமேவியமரணந்தான்சிறப்பதுசகத்தில். (௧௧)

வேறு.

ஆசைவன்பாசத்திரளினாற்கட்டுண்டரும்பிணியீக்கடிக்கணுங்கி
யேசுறுபோகக்கதைகளான்மொத்துண்டிச்சைமுட்கோலினாலுலைந்து
காசுறுகருமச்சேற்றிலேயழுந்திக்கடுஞ்சகக்காட்டிலேசுழன்று
வீசுமாமோகத்தளிர்கிழற்றுயிலும்வீரனேசிவனுமெருது. (௧௨)

வேறு.

சேடானநல்லதெனுநினைவினாலேகிளர்போக வசத்தாலேகிட்டி நெஞ்சம், வீடாதபயனிலியாம்பற்றினாலே வெறும்பிணத்துக்கழுகு போல்வீழுமன்றே, பாடானபயனிலியாம்பற்றுளோர்க்குப்பன்னரகங்களும்வீடாய்ப்பண்ணப்பட்ட, வீடானபயனிலிப்பற்றுள்ளோரொன்றுமிளவிறகானரகவெரியெரியுமன்றே, (௧௩)

வேறு.

இருப்புக்கயிறும்விலங்குகளுமிச்சாபாசமென்பனவாம்
பெருக்கவிவற்றுற்கட்டுண்டாய்ப்பேசுமிரும்பின்மிகவன்பா
மிருப்புக்கயிறுமவிலங்குகளுமிகுநாட்செல்லிற்றேய்ந்தொழியுஞ்
செருக்குமாசைமேன்மேலேதிடமாய்வளருந்தீர்க்கமுற. (௧௪)

௧௩-வது. ஆசாதூடணம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧௫௪.

---

## பதினான்காவது இச்சாத்தியாகம்.

அஃதாவது

ஆசையினிடத்து தோஷதிருட்டி யுடையவர்கள்
அதனை யவசியம் விடவேண்டுதலின் அதன்பின்னர்
இதனை வைக்கலாயிற்று.

கவி

இன்பமிதாமின்பமிதாமென்றவெல்லாமெரியெனாஞ்செனநினை வேற்றத்தாழ்வாய்த், துன்புறுபோகம்பலகாற்றேர்ந்துநெஞ்சிற்றே

யாமலெளிதருந்திச்சுகமேயாகும், வன்புபயின்மனத்தோற்றநாசமா
குமனத்தினதுநாசமேமகத்தாந்தோற்ற, நன்பரமஞானிகணெஞ்சிற
ந்துபோகுநடைவிலங்காமறிவிலர்க்குநவைகூர்நெஞ்சம். (க)

வேறு.

முடிவறுகாலந்தன்னின்மொழிதருமாண்டுநூறு
நொடியளவெனினும்பற்றுநிதனையேநெடிதாய்நோக்கி
யொடிவறுபாரவேட்கையுறுவதென்பொருள்களுன்னிப்
படர்வதாமுள்ளத்தாசைபற்றறவொருக்கிநிற்பாய். (உ)

மாலறவெங்ஙனின்றுயங்ஙனேவாழ்வாய்பாரிற்
கோலநன்மணிகள்வேண்டாதிருக்கவுங்குறுகிப்பாயுந்
தூலநன்னிழல்போலுண்டாமாத்திரந்தோற்றமான
ஞாலமும்பரமந்தன்னினலம்பெறத்தோன்றுமன்றே. (௩)

வேறு.

மாளாதகாதலெனும்வர்ச்சனுபிக்கொடியின்வனத்தைச்சுட்டு
நீளாசையனைத்துமறுத்தவர்க்கன்றேவிப்பயன்றனேராநிற்குங்
கோளானபொருளனைத்தின்முன்பொடுபின் பினிமையிலாக்குற்றங்க
மீளாதபாவனையாற்கட்டுண்பார்வேசரியேவேறென்றன்றால். [ண்டு

பரமாதித்தனைமறைத்துக்கருத்தறிவற்றுக்களித்துப்படர்ந்துமீண்டு
திரமானவகங்காரமுகில்விவேகக்காற்றுற்சிதறிப்போகும்
வரமானபதம்வேண்டிற்றன்மனத்திறைசைமுதன்மாற்றல்வேண்டு
முரமானபுவியைமுதலுழுதன்றேவிளைபயன்களுறுகின்றோ. (௫)

வேறு.

காதலாற்கட்டிலுய்யார்கயிற்றிறுற்கட்டிலுய்வா
ராதலாலாசைக்கட்டையசங்கற்பத்தறுப்பாய்நானென்
றேதுபாவனையைநானென்றுதேதோர்வாளால்வீட்டி
யேதமில்சுபாவம்பாவித்தெழுபவமிலாவீடெய்தி. (௬)

புறப்பொருள்விட்டாலுள்ளேபூண்டமாலென்றுசொல்வர்
மறப்பறவனைத்தும்விட்டான்மாண்டமாலென்றுசொல்வர்
திறப்படவெனக்கீதாகவென்றெழுஞ்சிந்தையாசை
துறப்பில்பொன்விலங்காமித்தைத்துவக்கறத்துடைத்தல்வேண்டும்.

சத்தசத்தென்னப்பட்டசகலபாவனையிலென்றுங்
கொத்தறவாசைமாற்றிக்குறைவில்பேருளத்தனாகிச்
சுத்தநல்லுதாரமானசொரூபத்தினிற்பாய்பெத்த
முத்தமாமாசையின்பதுன்பங்கண்முழுதுநீக்கி. (அ)

அனந்தமாம்பிறப்புற்றுருக்ககிலமுமயலன்றாகிற்
சினந்திடனயத்தல்வேண்டாவாதலாற்செறிந்தவாசைக்
கனந்தனைவிடுவதல்லாற்கதித்துறவளர்க்கலாகா
மனந்தனில்வளர்க்கிற்சிந்தைவன்னிக்குவிறகாமன்றே. (௯)

இச்சையாம்விறகுமாண்டாலெண்ணமாம்வன்னிமாளும்
நிச்சயமாகுந்தேயத்தியாகமாநெடுந்தேரேறி
மெச்சியவுதாரக்கண்ணால்வேட்கையான்மிகவும்வாடுங்
கொச்சைஞாலத்தைநோக்கிக்குறைவறவிருப்பாய்தீரா. (௧௦)

செறிவாஞானமனமாய்வுதிரள்வாதனைமாய்விம்மூன்றும்
பிறிதாங்காரணங்கடம்மைப்பெறுசாதித்தற்கரிதாகு
நெறியாமதனால்விவேகிகளானிலைகூர்புருடவருத்தத்தாற்
பொறியார்போகமயல்தூரப்போக்கிவிவைதாம்பொருந்துவதாம். ()

வேறு.

தவமகந்தீர்த்தஞ்சேவையருச்சனைதானமாதி
யவமயக்கத்தானீணுள்விலங்குபோலபத்தர்வாழ்வர்
பவமுறுமிவற்றைவிட்டுப்பரிசுத்தபரமபோதங்
கவரறப்பற்றியெல்லாக்காதலுநீக்கிநிற்பாய். (௧௨)

ஈதனுபவியாதாராரிச்சிக்கவினிதாம்வத்துக்
காதலியாதபோதுகைப்புறுமாதலாலே
யாதரமூலமாகுமினிமைக்கவ்வினிமைதானும்
போதுமென்றிடப்போமிச்சைபோக்கிறலனைத்தும்போமே. (௧௩)

வேறு.

* பரமவிண்ணிற்சகமெல்லாமென்றுபாவித்தாசையறிற்
பிரமகவசனின்பமுளபெரியோனுகுநானென்னும்
பொருளைநீக்கிநினைவின்மைவடிவாநினைவாப்பொருளனைத்து
முருவமில்லைநிராலம்பவுணர்வுசாந்தமெனநினைவாய். (௧௪)

அற்பமுனக்கொன்றினிதாகிலதனுற்பிறப்பிலகப்பட்டாய்
பொற்பவுனக்கொன்றினுமினிமைபூணுதென்னிற்பிறப்பகன்றாய்
நிற்பநடப்பப்பொருட்டிரளினினக்குத்திரணமுதலாகத்
தற்பமுறுபொன்முடிவாகச்சற்றுமினிமையுறவேண்டாம். (௧௫)

௧௪-வது. இச்சாத்தியாகம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-௧௬௬.

## பதினைந்தாவது நிராசையினதுமகிமை.

அஃதாவது

இச்சாத்தியாகஞ்செய்த மனது சுகமுடன்
மகிமையுடைத்தாயிருத்தலின் அதன் பின்னர்
இதனை வைக்கலாயிற்று.

கவி.

மிகமாலுறுபல்பொருள்களையுமேவாதொழித்தோர்மனம்வென்றோர்
சுகமாயெளிதாய்த்தனக்குரித்தாந்துயர்தீர்நிராசையறிவரியோர்

* பரமவிண்ணே-எனவும் பாடம்.

சகமாமனிதபுழுவொப்பார்சான்றோருரைத்தநூற்பழகி
யகமாநினைவுதீர்மனத்தாலயருமனதைத்திருப்பிடலாம். (க)

வேறு.

வருத்தமற்றச்சஞ்சோகமதமின்றிநன்னூற்பின்போ
யொருத்தராலேவலின்றியுலாவுகநசிக்கவேண்டா
வருத்தங்களனர்த்தமாகுமளவில்போகங்களேயாம்
பெருத்தவாபத்தாஞ்செல்வம்பேரின்பநிராசைதானே. (உ)

வேறு.

மனநிறைந்திடலமுதமாய்நிறைந்திடும்வையந்
தனதுதாட்செருப்புலகெலாந்தோன்முச்சுந்தரம்போற்
கனநிராசையாணிறையுநெஞ்சாசையிற்கவிழாத்
தினமுமாசையாணிறைமனங்குறைவென்றுந்தீரா. (ங)

அகத்தியன்கவர்கடலெனநன்னெஞ்சையழிக்கு
மிகுத்தமாலிலாமனமெனநிறைமதிவிளங்காப்
பகுத்தபாற்கடனிறைவுருப்பரிமளக்கோக
னகத்திநாயகிதிருமுகநலம்பெறத்தோன்று. (ச)

வேறு.

என்றுமுன்னமென்றந்தையிசைத்தான்றெய்வசகாயத்தா
லொன்றுமொழிபாதின்றுணர்ந்தேனுணர்வுபெற்றேன்போகத்தி
னின்றவாசையின்றொழித்துநிராசையென்னுநிதியாலே
துன்றிநொய்தாயுபசாந்தச்சுவையிற்குளிர்ந்தசுகம்பெற்றேன். (ரு)

தாக்கற்றென்றிலறிவுக்குச்சமமேயொழிந்துகண்டநிலை
வாக்குக்கெட்டாமையினாலேவசனங்களினாற்சமந்தோன்று
நோக்கற்கரிதாம்பொய்ப்பொருள்போனொய்தாயழியாநிராசைதனைத்
தேக்கிற்சமபாவனைதானேதிரைதீர்கடல்போற்சேடிக்கும். (சு)

வேறு.

வெந்தோமோபத்தாங்கருவேற்காட்டை வெட்டுமெழுப்பரமசுக மேவுந்தானஞ், சந்தோடஞ்சாந்தியெனுமரப்பூங்கொத்துச்சாற்றுறு மிந்நிராசையுறிற்றளர்வுதிரு, மந்தோபார்குளப்படியாமுனையாமேரு வாசைகுருவிக்கூடாமவனிமூன்றும், வந்தோர்புன்றுரும்பாகுநிரா சைபூண்டமாருதவலங்காரவடிவுளோர்க்கே. (எ)

வேறு.

ஊறுவநத்தந்தருமிச்சையொருகால்வரினுமப்போதே
யாறுவிடயத்துணர்வின்மையானவதனுலறுத்திடுவாய்
கூறுமிச்சைபலவடிவாய்க்கோத்ததெனினுமிவ்வுடலின்
மாறுதானவாதனையைமாற்றுநிராதுவுணர்வின்மை. (அ)

ஒழியாநிலையாமுபசாந்தயோகமென்பதுணர்வின்மை
கழியாயோகநிலையினனுய்க்கவர்பற்றொழித்துத்தொழில்செய்வா
யிழியாதியற்றப்படாவுள்ளமிறந்தயோகமுணர்வின்மை
வழியான்மிகவுமதின்மயமாய்வல்லைநிற்பாய்மகிழ்ந்தபடி. (கூ)

கரு-வது. நிராசையினது மகிமை முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-கஎஅ.

---

## பதினுருவது அகங்காரதூடணம்.

அஃதாவது

ஆசையில்லாதவனிடத்தினு மகம்பாவமுண்டாதலின்
அதனைக் கெடுத்தற்பொருட் டதன்பின்னர்
இதனை வைக்கலாயிற்று.

கவி.

மனத்துயருமாபத்தும்வளர்தொழிலுமகங்காரத்தால்வருமித்தை ப்போற், கனத்தபகையிலதுநெடுங்காதம்வினையிதுசேர்ந்துகலங்கா

நின்றே, னனத்தொடுதண்ணீர்நுகரோனரும்போகம்விளம்புவதென் னகங்காரஞ்சேர், தினத்தொழில்களாமவுணவனைத்தும்பொய்யகங் காரந்தீர்தன்மெய்யே. (க)

வேறு.

அகங்காரமுகில்படரவாசைமலைமல்லிகையவ்வளவிற்குரு [தேன் மிகுந்துயரிவ்வகங்காரத்தொழில்பிரிந்தும் பேதைமையின்மிகவுநொக் செகந்தனிலாபத்திடமாய்த்திரந்துறப்பதாயுள்ளாய்த்தியக்கமாயு முகந்தவிசாரமுமுணர்வுமிலாவகங்காரம்போமாறுபதேசிப்பாய். ()

வேறு.

நானெனும்பொருள்காணுதோர்ஞானவாகாயங்காணுர்
நானெனும்பொருளைக்கண்டோர்ஞானவாகாயமாவார்
நானெனுமகங்காரக்கார்ஞானவிண்மதியைமூடி
நானெனுப்பரமவாம்பனன்மலர்விரியாதன்றே. (௩)

மடிவறுபிறவியென்னுமரத்திரளெனக்கிதென்னு
நெடியபல்கிளைகணீட்டிநிரையமாங்காய்கள்காய்க்கு
முடிவறுதுயராங்காரமுளையாகவிளையாநிற்கு
மிடியிலாஞானத்தீயால்வேரொடும்வெந்துபோமே. (௪)

கரசரணுதிமட்டாநானிவனென்றுகாணுந்
திரமதுதானேமூன்றுமகங்கரஞ்செகத்தோர்க்கெல்லா
முரியதாமிகவும்பொல்லாதுற்பவமென்னுநச்சு
மரமெழுமூலமாகும்வருந்தியுமொருக்கவேண்டும். (௫)

கொடிதிதுகொடிதுசாலக்கொடிதின்கொடுமையாலே
முடிவறுமுயிர்களெல்லாமோகமுற்றறிவுகெட்டார்
கடிதிலவ்விரண்டினுளுங்கடிந்திதெவ்வளவுவிட்டாய்
படிவுறவ்வளவேயெய்தும்பரமமாந்தற்பதார்த்தம். (௬)

வேறு.

பரமாதித்தனைமறைத்துக்கருத்தறிவற்றுக்களித்துப்படர்ந்துமீண்டு
திரமானவகங்காரமுகில்விவேகக்காற்ருற்சிதறிப்போகும்
வரமானபதம்வேண்டிற்றன்மனத்திருளைசமுதன்மாற்றல்வேண்டு
முரமானபுவியையுமுதலுழுதன்ருேவிளைபயன்களுறுகின்ருேோ. (எ)

வேறு.

சுகமிருக்குனருனெனலகங்கரத்துன்மதியிதுதீதா
மகமதிப்பிருலிவனவனுகுாவெனன்னுமிவ்வாரம்ப
மிகவகற்றுவ்ாயுன்வடிவெதுவெனில்விசாரமின்மையதாகு
மிகவிசாரத்தாலழிந்திடும்பரிதியாலிருள்கழிவதுபோல. (அ)

வேறு.

ஆபத்துக்கெல்லாநிலையமநித்தமவசமவிவேகம்
பாவத்துக்குமுதன்மடமைப்பவவித்தழிவைப்பற்றியது
தாபத்துக்கோரிடமானதகவிலகங்காரந்தனை
நீபற்றில்லாவறிவாலேநீக்கிலதுவேநிமலநிலை. (க)

வேறு.

அன்னியமாவோரிடத்திலிது கிஞ்சிலெனவென்றுமசத்துஞ்சத்துந், தன்னலுருதென்றுள்ளேதிடநிலையாயகங்காரந்துடைத்துநிற்பா, யுன்னுள்ளே முகமாகிப்புறத்தின்வருவனவெல்லா மொருங்குசெய்து, பின்னுதொழி லிடர்மேவா துருவமிலாவகந்தையைநீ பிரியவென்ருன். (க0)

கசு-வது. அகங்காரதூடணம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - கஅஅ.

## பதினேழாவது பரமாங்காரத்தின்மகிமை.

அஃதாவது
அகங்காரநீங்கியபின்னதுடனே மோக்ஷங்கொடுத்தலின்
அதன்பின்னர்
இதனை வைக்கலாயிற்று.

கவி.

மூவகையுலகிலிந்தவகங்காரமும்மையென்று
மேவறுமிரண்டுநன்றுமிகவுமொன்றீனமாகும்
யாவதும்பரமூநாமேயீதிலமெய்மையலாதோர்
பாவனையிலதென்றேரும்போதமேபரமாங்காரம். (க)

சென்னெல்வாலினுஞ்சற்றுஞ்செகங்களுக்கயலாயென்று
மன்னுதமெனக்கொள்போதமற்றையாங்காரமாகு
மின்னிலையிரண்டுஞ்சீவன்முத்தர்பாலிருந்தேற்றித்
துன்னருமுத்திநல்குஞ்சுழல்வுறுபந்தநல்கா. (உ)

கஎ-வது. பரமாங்காரத்தின்மகிமை முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம்-ககூ௦.

---

## பதினெட்டாவது சிருட்டிக்கு நியமமின்றெனல்.

அஃதாவது
அகங்காரம் நீங்கினவ னியமமில்லாத வதத்துவங்களை
நியதிகளைந்து நியமமாயிருக்கின்ற பரதத்துவத்தை
நிர்ணயம்பண்ணி யறியவேண்டுதலின் அதன்பின்னர்
இதனை வைக்கலாயிற்று.

கவி.

இவ்வகையேசிற்பாவசீவபேதமியல்வடிவாம்பிரமத்தி னிடையே
நின்று, வவ்வியபாவனையாலேவந்தகோடிவாராநின்றனகோடிவருவ

கோடி, தெய்வவரையறிவிநீர்த்துளிபோல்வந்தோர்சிலர்பிறவியொன்றிரண்டுமூன்றுசேர்ந்தோர், நைவருசென்மங்கள் சிலர்நூற்றின்மிக்கோர்நாடரியபவஞ்சிலர்கணண்ணிநின்றோர். (க)

வேறு.

ஒருகாலமரன்படைப்பனொருகாலமயன்படைப்பனுலகமெல்லா
மொருகாலமரிபடைப்பனொருகாலமுனிவர்படைப்புள்ளதாகு
மொருகாலம்புயத்துதிப்பனொருகால்வாரியினுதிப்பனுயர்ந்தவேதா
வொருகாலண்டத்துதிப்பனொருகால்விண்ணகத்திலேயுதிப்பனன்றே

வேறு.

வான்முதலாமண்முதலாநீர்முதலாந்தீமுதலாமற்றவாயுத், தான்முதலாமிப்படியேசிருட்டிதொறுமோரொன்றுதலைமையாகும், யான்முதலோரயன்சிருட்டிசிலேடையாயுனக்குரைத்தே னிந்தவாற்றான், மேன்முதலாநியமமிதற்கொன்றுகவிலதுபலவிதமாய்த்தோன்றும். ()

வேறு.

தோற்றமென்னுமிம்மயக்கந்துஞ்சாதென்றுஞ்சிற்பரத்து
ளாற்றவிருந்துபிறந்திறக்குமப்பினுட்சேரலைகளைப்போற்
சாற்றுதிசைவெற்பாதித்தன்சசிமீன்மேருத்தானங்கள்
வேற்றுவகையாஞ்சிருட்டிதொறுமேலோயிவையுங்கண்டனனால். ()

கஅ-வது. சிருட்டிக்குநியமமின்றெனல் முற்றிற்று.

ஆகத் திருவித்தம்-ககச.

## பத்தொன்பதாவதுசருவமும் மித்தையெனல்.

அஃதாவது

நியமமில்லாதவதத்துவங்களெல்லாம்
பொய்யென்றுணரவேண்டுதலின் அதன்பின்னர்
இதனைவைக்கலாயிற்று.

கலி.

நாசமுற்பத்திமூர்ச்சைகனுக்கனுச்சுழுத்தியெல்லா
மேசுறவொன்றினுள்ளொன்றில்லையாலிலதுண்டென்ன
மாசுறுமயக்கமட்டேமட்டறவளராநின்ற
தாசறுமனுபவங்களிருவகையவற்றைக்கேட்பாய். (க)

எழுதுவோனுமெழுதிடமுமெதிர்காண்பொருளுமிலதாகி
வழுவிலாதவிண்ணிடையேவந்துதோன்றுமோவியந்தான்
பழுதின்மேவுந்தனைத்தானேபாராநிற்கும்பலபொறியு
நழுவுதுயிலிலுலன்றிநன்வான்மேவுங்கனவொக்கும். (உ)

எதிருறுதோற்றமெய்யாயிவர்கள்போலிங்குயாமும்
விதியதாய்ப்புறத்திலொன்றுமேவலம்வீரனேநின்
மதியினுனெனலும்பொய்யேமதியினீயெனலும்பொய்யே
யதிர்குரற்றுமன்முன்னுமவர்களுண்டெனலும்பொய்யே. (ங)

வேறு.

விளக்குமிரவியுமலரு முண்டாயுண்டாம் வீசொளியும்பகற்பொழுதும்விளையும்போலத், துளக்கமில்சித்துண்டாகிலுண்டாஞாலந் தோற்றரவுமாத்திரமேசொரூபமாகுங், கிளத்தபரமார்த்தத்தாலில்லையென்னக் கேட்டலுமேபாற்கடல்போற் கெம்பீரத்தா, லளக்கரிதாய்ச் சீதளமாயமலமாகியற்புதமா நின்மொழியென் றண்ணல்சொல்வான். (ச)

வேறு.

வானநிகராமனைத்துங்கற்பனைமாத்திரம்வாளாவளராநிற்கு
மானசகனவுதனிற்கனவுபோலிராகவனேயறிதியன்றே
யீனமுறப்பிறப்பில்லையிறப்பில்லையெவ்விடத்துமொன்றுமென்று
ஞானபரமார்த்தத்தாலிவையெல்லாம்பொய்யாகநண்ணுமன்றே. (ரு)

வேறு.

ஏருதல்வருதறுஞ்சல்விழித்திடலிருத்தனிற்ற
லாகியவெல்லாம்பொய்யென்றழுந்தியுள்ளாசைதீர்வாய்
சேகுறவலையுஞ்சித்தம்பகுதியாற்சித்தின்பின்னே
போகலூன்மணத்தாற்சிங்கந்தனைத்தொடர்பூசைபோலாம். (௭)

வேறு.

நீண்டகனுநீண்டமனவிராச்சியந்தானீண்டமனமயக்கமென்றே
யீண்டுபவந்தனைநினைவாய்தோற்றரவுமாத்திரமாமிந்தஞாலங்
காண்டகவுண்டன்றிலதுமன்றென்றேவேற்றெண்ணங்களைதருனே
யாண்டகையேநன்றுனகாட்சியெனமெய்ஞ்ஞானரறைவரன்றே. (அ)

வேறு.

சொன்னநெறியிலறிஞர்தினந்தோறுந்தேவார்ச்சனைபுரியி
லென்னைமுதலோர்தொண்டர்களாலேத்தமிக்கபதமடைவ
ருன்னுசகமில்லாதிருந்துமுண்டுபோற்றுன்றிடுந்தோற்ற
மன்னதொழிந்துவேறில்லையரியதவத்திற்பெரியோனே. (௯)

எனைத்துஞானநன்னூலினியம்புமறுதியாதென்னி
லனைத்துங்கனவுகாண்பதுவேயன்றேவவிஞ்சையிங்கில்லை
வினைத்தின்கவலைசெய்கின்றவெய்யமாயைதானில்லைத்
தினைத்துன்பமுமற்றுபசாந்தத்திரமாம்பிரமமேயுளதே. (௧௦)

௧௯-வது. சருவமும்மித்தையெனல் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-உ௦௬.

## இருபதாவது நியதிலட்சணம்.

அஃதாவது
சர்வமுமித்தையென்றுணர்ந்தவர்கள்
அவைகளைத்தானல்லவென்று நியதிகளையவேண்டுதலி
னதன்பின்னர் இதனை வைக்கலாயிற்று.

கலி.

மடமையுந்துயருமவையவ நிறைந்தவடிவமு முடையனுனென்றே,படர்தருமவற்றிற்கேற்றபன்னடையாற்பாசமும்பந்தமுமுளதாஞ்,சடமுறுமிவற்றிலேதுமொன்றல்லேன்றசைநரம்பென்புநீரல்லே,னுடலின்மேலானபரம நானென்னு முறுதியோர்மாயைசெற்றுணர்ந்தோர். (க)

வேறு.

யானூர்முன்னமெவனுனேனிந்தப்புவியாடம்பரத்தி
லானுதிருந்துநின்றேடியழுதுசிரித்துமகிழ்ந்தயர்ந்தே
னுனவானசகமல்லேனகங்கல்புல்லுமண்மரங்க
டானுய்ப்புறம்பாயசேதனமாஞ்சகாமெனன்னத்தக்கதுவோ. (உ)

இல்லாவிடத்துண்டாய்மூகமெனலாய்க்காற்றிலியங்குவதாய்ச்
செல்லாநின்றசிலநாளிற்சிதைந்துசடமாமுடனுளே
நில்லாதாய்ப்பொய்க்கேதோன்றிநிராகாரமதாயறிவின்றிப்
புல்லாவறிவிற்செவிக்குணவாய்ப்பொன்றுஞ்சத்தநானுமோ. (ங)

தோலிலன்றியறிவரிதாய்த்தோற்றமின்றிக்கணத்திறந்து
கோலுமறிவாலறிந்தறிவுகூடாப்பரிசநானல்லக்
காலிலசைந்துவசித்துருவாய்க்காதன்மிக்குக்கணத்திறக்குந்
தாலுவுணவாய்த்திரவியத்திற்சனித்துச்சடமாஞ்சுவைநானே. (ச)

கணத்தினிறக்குங்காண்பவற்றிற்காட்சிதன்னிற்பற்றுகிப்
புணர்ப்பில்காண்பானிடத்திறக்கும்போதமில்லாவொளிநாளோ
குணக்குழூச்காமசேதனத்தாற்குறிப்பதாகிச்சடமாகி
மணக்குநொய்மைநியமங்கண்மருவுகந்தநாளுமோ. (ரு)

வேறு.

தசைபயில்பாதந்தொட்டுத்தலைமட்டும்வெவ்வேறாய்ந்து
மிசைவுறயானங்கில்லையானெனுநிலையெங்குண்டோ
திசையெலாம்விழுங்கிமேலாஞ்சித்ததாய்க்காண்பதின்றி
யசைவறவெங்குந்தானுமென்றுலகனைத்துங்காண்கேன். (சு)

முதுவிவேகத்தாற்போதமொய்ம்பினாலிந்தவுன்னைக்
கதுமெனக்கொல்லாநின்றேன்காணுதிகவலைநெஞ்சே
யிதுதசையிதுபுண்ணீரிதென்பிவையுளவுயிர்ப்பாய்ப்
பொதுளியவாதமிங்கேயகமெனல்பொருந்திற்றெங்கே. (எ)

தசைகள்வேறுதிரம்வேறுதடியென்புவேறுமெய்யி
லசைவுவேறறிவுவேறுவகமெனல்பொருந்திற்றெங்கே
விசைவிழியிதுதோலீதுவியன்செவியிதுமூக்கீது
பசைவுறுநாவிதிங்கேயகமெனல்பயின்றதெங்கே. (அ)

வேறு.

முனியகன்றபின்னெயினர்கோன்றனியிடமுந்திநன்மதியாலே
யனிசநானென்பதாரெனநாடினனடிமுதன்முடியீறுந்
தனியுடம்பைநானென்பதுபுதுமையாஞ்சடவுடல்காண்கேனன்
றுனிசெய்யிவ்வுடலசேதனந்தசைமுதற்றுன்னுமாதலினன்றே. ()

கரணமீரைந்துமன்னியஞ்சடமெனுங்கணக்கினுனன்றித்
திரளெனக்கிலவுடன்முதனுனலன்சேடமேதெனநோக்கில்
விரவுசீவனேசேடமாமின்னதும்வேறென்றுற்றெரிகின்ற
துறவிதானவேறென்றிருற்றெரியுமீதுயர்ந்ததத்துவமாகா. (கo)

தெரிவதாகியவிதனையுமகற்றவன்றெரிபொருணுமோ
பெரிதுசேடமாய்விகற்பமற்றமலமாம்போறிவியானகு
மரியயன்சிவனிந்திரனந்தகனதியாமிடந்தோறுஞ் [ம் (கக)
சொரிகொண்முத்தினுண்ணூலெனநிற்குமாற்றேன்றமிவ்வுயர் போத

வேறு.

முதலானவுடல்சடமாமுகமாநானென்றுமொழியலாகா
விதமானகருமஞானேந்தியங்கள்சடமாகிவெவ்வேறுகு
மதனுனன்றுகுந்தடியினுலோடுகளையசைக்குமாபோற்
றிதமாகாமனத்தாலேயிவையீரைந்துஞ்சேட்டைசெய்யுமன்றே. ()

செறிதருசங்கற்பமெனுஞ்சத்தியுளதாய்ச்சடமாஞ்சித்தந்தானு
மெறிகவணற்கற்போலப்புந்திநிச்சயத்தாலே யியக்கமெய்து
மறிவுறுபுந்தியுஞ்சடமாமறுதியிடலே வடிவாயகங்காரத்தா
னெறியுறுசெய்கையையுறுமாற்பள்ளத்தாலோடுநதிநீர்களேபோல்.

நிதகங்காரஞ்சடமாய்ப்பயனிலியாயவசமாய்ச்சீவனாலே
சாதமுறுமிதுசிறுவர்மயக்கத்திற்பேய்தோன்றுந்தன்மைபோலா
மோதியசீவனுந்தொழிலேவடிவாய்க்காற்றுருவாகியிதயமுற்று
மேதகையசுகுமாரமாயுள்ளேமற்றொன்றுன்மேவிவாழும். (கச)

வேறு.

ஆற்றுமதத்துவவறிவென்றறிந்தே னீதறிபொருளாலழுக்குமே வா, தேற்றமெனதுருவமாயசீரணமாஞ்சித்துருவாற்சீவன்வாழுந், தோற்றுபொருள்களின்மயங்குஞ்சித்துருவாற்சிவன்வாழ்தொடர்ச்சி கூறிற், காற்றதனுன் மணம்போலும் பள்ளதானீர்போலுங்கருதுங் காலே.

(கரு)

வேறு.

என்னுடையபுந்தியிருலெண்ணினேனுனிச்சகானல்லமலவுட ஞனல்லத், துன்னுபொறிகளுமல்லமனமுமல்லத்தொடர்புந்தியல்ல வகங்காரமல்ல, வின்னசடமாதலினுலெனஅம்தும்பணிவையன்றேல் வேருர்நீயியம்புகென்ன, மன்னனுரைப்பானெல்லாம்படைத்தளித்த மாசறுசின்மாத்திரமாம்வடிவனானே. (கசு)

உ0-வது. நியதிலட்சணம் முற்றிற்று.
ஆகத்திருவிருத்தம்-உகக.

---

# இருபத்தோராவது வஸ்துநிரணயம்.

அஃதாவது
அதத்துவங்களை நியதிகளைந்தவர்கள்
பரத்தத்துவத்தை நிரணயஞ்செய்யவேண்டுதலி
னதன்பின்ன ரிதனைவைக்கலாயிற்று.

கலி.

தன்னுள்விகற்பித்தெழுந்தவிகற்பம்போகிற்றவிர்ந்திடு மாயையி ற்பயனேர்சற்றுமில்லை, யின்னவகைத்தோருண்மையியம்பவேண்டு மியாவர் மயக்கமுமாற்று மிறைவவென்ன, மன்னனதற்குரைசெய் வான்முனிவநீயேமதித்துணர்ந்தும் பிதாவுரைக்கமறுத்துங்கேட்டா, யன்னிலையேநிச்சயமிங்ககண்டஞானவாகாயபுருடனுள னயலொன் றில்லை. (க)

வேறு.

மண்டியசுழுத்திதன்னில்வருகாட்போவதென்னக்
கண்டனவுலகமெல்லாங்கற்பனைமுடிவிற்போக

வொண்டருமலேவுதோற்றம்பெயரொலாமின்றியாழ்ந்து
தண்டலிலிருடேசின்றித்தனித்ததோருண்மைநிற்கும். (உ)

அத்தமியாதசோதியருக்கனுயளவிலாதாய்
மெத்தியபிணியிலாதாய்மேவரும்பிறப்பிலாதா
யெத்தலங்களினுமென்றுமியாவுமாயாவுஞ்செய்து
முத்தியுமாகியோங்குமுதற்பரம்பொருளொான்றுண்டு. (ங)

வேறு.

நனேமுதலாய்க் காண்கின்ற சகமெல்லா நீள்கனவாஞ்சகத்திற் றோன்று, மனேயபொருள்களுங்கன்விற்காண்கின்ற பொருள்களா மென்றுதேர்வா, யனேயபொருள்களுங்காணுவறிவுமாத்திரம் வடிவா யனேத்துமேவி, வினேயில்செறிவாய்க் ககனமாய்ச்சுத்தமாகிப்பிரமவி ண்ணேயுண்டாம். (ச)

வேறு.

காட்சியென்னுங்குற்றமறக்கதித்தலீலேகதையாலே
யாட்சியானசகமென்னுமதிபாரத்தையறவிடுவாய்
சூட்சியானவுலகமெனுந் தோற்றமுடைத்தாய்ப்பேதமற
மாட்சிஞானசுகவடிவாய்வயங்கும்பிரமமேயுளதே. (ரு)

உரைசெயூசிகதையாலேயுண்மையாகிப்பரமான
கரையில்பிரமமேயுளதாங்காணப்படுவதொன்றில்லே
வரையில்சிருட்டிகளின்முதலாய்மனமேவிளங்குமிதுபொருட்டோர்
புரையில்கதைகேளெனவசிட்டன்புயன்மேனியற்குப்புகல்கின்றான்.

வேறு.

இவையெனுமனேத்துஞ்சிற்கனமாகியிறப்பிலாப்பிரமமேயென்று
நவையுறுமனமாங்கற்பனேயில்லேநாசமும்பிறவியுமென்னு

மவையெலாம்புவனமூன்றினுமில்லையறுவகைவிகாரமுமில்லைக்
கவையறுசமமாங்குறிபெறுமறிவுமாத்திரங்காணகின்றுளதால். (எ)

வேறு.

கீற்றுப்பலசேரொருகற்போற்கிளருஞ்சகங்கள்செறிபிரமந்
தோற்றப்படுமாலிரண்டென்னத்தொடர்காரணமவேறிலாமையினு
லாற்றச்சகமென்றொன்றிலதாமறிவேயுளதாமனைத்துலகுந்
தேற்றப்பிரமத்திருக்குமிவைதெளியவெள்ளிகதைகேட்பாய். (அ)

வேறு.

அறிவதாயறிவேமெய்யாயமலமாயனைத்தாயாறிப்
பிரிவுறுவரவுபோக்கில்பிரமமேயுளதாமந்தச்
செறிபொருட்சத்திதோற்றமாத்திரஞ்சகமாய்நிற்கும்
பொறிகள்பல்காட்சிபொய்யேபொருண்மெய்யேயென்றுவாழ்வாய்.

வேறு.

சோகமில்லைமோகமில்லைபிறப்பில்லைபிறப்பிறப்பிற்சுழல்வாரில்லை
யேகமெனவிங்கென்றுமுள்ளபொருளேயுள்ளதிரங்கவேண்டா
மூகமுறவருவனபோவனகினையேற்றொருந்தனைகளொன்றுமில்லா
மாகனசத்துவகுணத்தோடொருவனுயிடரெல்லாமாற்றிகிற்பாய். ()

வேறு.

ஆயதேயத்திலும்பெரும்பூதமுமில்லைச்
சேயகுன்றில்லைவனமில்லைதீர்த்தங்களில்லைத்
தூயதேவரோமுதலியதொல்லுயிரில்லை
நாயகன்பெருஞ்சுடரொனுமொருவனேநண்ணும். (கக)

வேறு.

தீவினையெல்லாமறுத்துமங்கலமெல்லாமுதவுந்தேவபூசை [யேதிற்
யாவதெனக் கேட்டலுமே யருள்செய்வான் றெய்வந்தானியாதென்

மிறையுமறவொழித்தின்பமெய்திநிற்பாய், பின்னவனேயெனமுன்
னேறுரைத்தானென்றுபெருந்தகைக்குவசிட்டமுனிபேசினனே. ()

வேறு.

ஞானமுற்றவர்மனத்தைநாற்கூறெனநாட்டி
யானநூலினும்விராகத்துமனுபவந்தனிலு
மானநற்குருபூசைபின்வழியினுஞ்செலுத்தி
லீனமற்றநன்முத்திவந்தெய்திடுமெளிதின். (௩௫)

வேறு.

எங்கேயெங்கேமனமோடியிளையோரென்னவீழ்ந்தழுந்து
மங்கேயங்கேநின்றெழுப்பியகண்டவறிவிலடைவிப்பாய்
சங்கேதமதாயிவ்வாறுசாதித்துளமாமதகரியை
வெங்கேதமறத்தளைத்தெல்லாவிசாரத்தாலும்வீடணைவாம். (௩௬)

வேறு.

அனவரதமுரைத்தல்விடல்பற்றலிமைப்புறல்விழித்தலனைத்துஞ்செய்
மனனமறுசுகவாளுய்ச்சற்சின்மாத்திரபரனாய்வாழ்திமைந்தா [து
கனமலமாங்காண்பவைதீர்ந்துள்ளத்தின்மலமறுத்துக்காதற்பாச
மேனவுயர்கோளையைபறுத்துநின்னறிவிற்றற்பரனாயிருத்தியன்றே.

கலனிழிவாஞ்சங்கேதத்தாசையெனும்வீடுசிகையைநண்ணயாகிச்
சலனமுறவிருப்புவெறுப்பரவுணர்வின்சார்பரமந்தானாய்வாழ்வா
யலகறநானிவனவனீததுவெனதாம்வாதனைகளறுத்தொன்றென்றே
நிலவியசிட்டையிலாறிச்சற்சின்மாத்திரபரனாய்நின்றுவாழ்வாய். ()

எனதுபிறரதுவென்னுமெண்ணமறச்சகநிலையிலிரண்டற்றொன்றாய்க்
கனவயிரத்தம்பமெனுமுணர்வுநிலைப்பற்றிநிலைகண்டுநிற்பா
யனகமுடனமலமாயகண்டமாந்தன்னறிவிலமைவென்றுண்டாஞ்
சனனமயக்கத்துக்குக்காரணமாம்பிரிவன்றுதவிர்ந்துபோமே. (௩௯)

இந்தவொழுங்காலுணர்வையுணர்வினாலுணர்ந்துலகிலியங்காநின்றோ
யந்தமறும்பெரும்பதத்தேயாறுதியாற்காண்கின்றவனைத்துமாளச்
சந்ததஞ்சாதித்தனைப்பெறுமளவுநூல்குரவன்றனிநெஞ்சாலே
பந்தமறுதத்துவத்தைவிசாரித்தேபெறவேண்டும்பதுமக்கண்ணாய். ()

யானாரிச்சகமெங்ஙன்பிறப்பிறப்பெங்ஙனமென்றேயிதயத்துள்ளே
யானுமலிப்படியேயாராயின்மகத்துவமேயடைதிசாலத்
தானனசுபாவனாயிருந்துளநின்விசாரத்தாற்றானேநெஞ்ச
நீநாடும்படிதோன்றித்தன்னுருவிட்டிளைப்பாறித்துன்பம்நீங்கும்(சக)

எத்தனையெத்தனை நீத்தாயகிலத்தைப் பரஞ்சுடராயெறிக்குஞ்சோதி, யத்தனையத்தனைதோன்றுமெந்நாண்மட்டனைத்தும்விடாயந்நாண்மட்டுந், தத்துவமாம்பொருளெய்தாச்சகலமும்போனாற்சேடந்தானுஞ்சித்தந், தொத்தறவேற்றுமையெல்லாம்போகாதேற்சமமானசோதிதோன்றா. (சஉ)

பேதமறுபொருளொருமை தோன்றாதேற் றன்னைத்தான்பெறுவதெங்கே, யாதலினாற்றனைப்பெறுதற்பொருட்டாகவனைத்தினையுமகற்றல்வேண்டு, மேதமறவனைத்தையும்விட்டாயென்னிற்சேடித்ததிறவாவீடா, மேதகையபதமதுவாஞ்சுரகுவெனும் பெயர்கீர்த்திவேடர்வேந்தே. (சங)

வேறு.

சங்கற்பத்தறிபொருளையறிவுதன்பாற்றானே நோக்கிடுங்கனவிற்றனதுசாவு, மங்குத்தேசாந்தரமுந்தன்வசத்தாலடைவதுபோலறிபொருளையறிவுகாணும், பங்கிட்டுமுன்னறிந்த தறியாதேனும்பகரறிவுக்கெதுபத்திபாய்ந்ததத்தைத், துங்கத்தம் வருத்தத்தால் விசாரமுள்ளோர்துடைப்பதுவேவெம்மாயைதுடைத்ததாகும். (சச)

வேறு.

அதுவேயமலஞ்சாயற்றதஃதாற்றுமதத்துவமதுவே
சதுராவதுவக்துறிலுள்ளஞ்சாற்றுமுபசாந்தியையடையுந்
திதமாயதிந்தவ்வடிவாவாய்சென்மமற்றபதம்பெறுதி
முதல்வாவென்னவிராமனுமம்முனியைநோக்கிமொழிகின்றான். (௪௫)

வேறு.

கெடாதசிற்கண்ணுநீதான்கிளர்மேலவர்களுடனேதான்
விடாதிவ்வுலகேதியாமாவொன்றுறைக்கமெல்லவிசாரிப்பாய்
தடாதுட்பொருடேர்வித்தைக்குவிசாரந்தானேதனிஞானங்
கடாவியறியத்தக்கததிற்காணும்பாலின்மதுரம்போல். (௪௬)

வேறு.

மீட்டுமுளைப்பான்றிசைகாலமறலான்மறைதலறவிளங்கி
யோட்டமிறத்தலடிமுடிவற்றென்றுயறிவுமாத்திரமாய்
நாட்டுபிரமமுளவேறென்றில்லையென்றுள்ளேநாடிக்
காட்டுநானென்பதுவிட்டுக்காயமில்லாப்பெரியோனாய். (௪௭)

ஏகவுருவாயுபசாந்தமோனமெய்திநின்னுணர்விற்
சோகமற்றசுகியாவாய்தொடரஞ்ஞானநினைவெம்மட்
டாகும்பிரமபாவனைமேவாதம்மட்டும்புவிவலையிற்
போகமயலெம்மட்டம்மட்டுளமாதியின்கற்பனைபொருந்தும். (௪௮)

சித்தமாயைமனஞ்சீவனென்றுமில்லைத்திகழ்பிரம
மொத்தவொன்றாய்ப்பெருங்கடல்போலுகண்டுவளருமுத்தமனே
போத்தவுடலைநானெனலெம்மட்டுக்காணுமிப்பொருளில்
வத்துவெனும்பாவனையெம்மட்டம்மட்டுளமாதியின்மயக்கம். (௪௯)

எனதீதென்னுமாலெம்மட்டம்மட்டுளமாதியின்மயக்க
மனகவுள்ளேமுகமாகியதனுன்மும்மையுலகென்னுங்

கனமிறுரும்பையறிவனலிலோமஞ்செய்யிற்கார்வண்ணு
மனனைமுதலாமயக்கங்களவனுளென்றும்வாராதே. (௫o)

படர்சித்துருவாய்ப்பிறிவிலனாய்ப்பாராபாரம்பற்றிலனாய்த்
திடமுற்றுனதுகனவடிவைநினைசங்கற்பஞ்சேராதே
கடனுவுயிர்கொல்லுறுபகைவன்கருத்தில்வஞ்சமிலாநட்பிற்
றொடர்பானவனேயெனக்காணுமவனேகண்டோன்றாய்தாக. (௫௧)

பற்றத்தகுவாக்கியப்பொருளைப்பயிறன்னெஞ்சாற்பாவித்தோர்க்
குற்றுப்புகல்சொற்றிரளுள்ளேயொடுங்கும்வெந்தநிலநீர்போற்
கற்றுப்பரமப்பொருளுக்கார்கண்ணுமறிவைக்கண்டறியார்
வற்றத்திரணம்போல்வாளாத்திரிவர்மனச்செய்கையிலெவரும். (௫௨)

அறிஞர்க்குலகாநந்தமயமறியாதவருக்கிடர்மயமாஞ்
செறிந்தவிருளாமந்தகர்க்குச்செங்கணுள்ளோர்க்கொளியாகும்
பிறிவில்பிரமமனைத்துமெனநாடிப்பிரமமவனேயா
நறியவமுதுண்டவனமுதமயர்தைநண்ணுதிரானனறே. (௫௩)

மயக்கமுபாதிமலமன்றிவாய்மையாகிமேலிதமாய்த் [ம்
துயக்குந்தொழிறீர்பொருள்வசத்தே தொடரமனதைச் செயவேண்டு
பயக்குநெடுஞ்சூனியநல்கியசுத்தமாகும்பன்மைப்பே
யியக்கங்காணுப்பொருள்வசத்தேயெய்தமனதைச்செயவேண்டும், ()

தனையுள்ளுணர்வாறுடுதலேசகலவிடற்கும்போக்கிடமா
முனையொப்பார்கட்கெளிதென்னையொப்பார்க்கரிதாமுயர்முனிவா
வினைகட்கெல்லாமப்பாலாமேலாங்கோடிதனைமேவு
மினையபதஞ்சாமானியத்தே[illegible]பொங்ஙனம்பெறுவார். (௫௫)

வேறு.

துன்னுபொருள்களில்வேறுகூறொழித்துத்தோற்றரவுமாத்திரத்தே
மன்னுசமமாயுலகைக்காண்டியாற்றோற்றரவுமாத்திரந்தா

னுன்னுமனக்கண்ணுடிக்கழுக்காகுமாதலினுனுற்றதெல்லாம்
பின்னமறவேமாற்றித்தோற்றரவில்லாதவனைப்பெருமையோனே. ()

அறிவுசம்பாவனைசந்தோடமெனுமலர்களாலந்தத்தேவாம்
பிறிவரியவாத்துமதத்துவத்தையருச்சிப்பதேபெரியபூசை
குறிவடிவிற்பூசனைபூசனையல்லவகண்டமெனக்கூறுந்தெய்வ
நெறிகொள்புறத்தொழில்களானேராதியிங்கதனுலேநிறையுமின்பம்.

நயனமூக்குச்செவிதொக்குநாக்குமனமாஞ்சத்திகளா
லியல்பிலெங்கும்விடயங்களருந்தியெண்ணங்களுக்கெல்லா
மபலதாகுமெவ்விடத்தும்பரமசிவமென்றகத்தெண்ணி
யுயர்தெய்வத்தைவிதிநெறியேயோங்குபூசைசெயல்வேண்டும். (ருஅ)

தன்னதறிவேவடிவாகித்தயங்குதேவின்பூசைக்கு
மன்னுமுபசாரங்களெலாமரபன்றுகுமெப்போது
பின்னலன்றிக்குளிர்ந்தழிவற்றேகமாகியமுதாகித்
தன்னுதன்போதத்தாலேதூயபூசைசெயல்வேண்டும். (ருகூ)

ஒழியாதுள்ளேபரிசுத்தவுணர்வாமறிவேதநுதானே
யிழியாதானதியானமதுதானேயியல்பாமருச்சனையாம்
விழிதோல்செவிநாமூக்கைந்தால்விடயங்கொள்ளிற்றுயில்செய்யின்
மொழிகூறிடிலேகிடினுயிர்க்கின்முற்றுமுணர்வாயிடல்வேண்டும். ()

திகழாத்துமதத்துவத்தினுயர்தியானமுபகாரங்களொடு
நிகழ்பூசனையாமிவ்வழியாலன்றிப்பிறிதோர்நெறிகளினுற்
பகழ்மெய்யுணர்வுகிடையாதுபுரணதியானபூசையினை
யிகழ்மூடர்கள்செயினும்பதின்மூன்றிமைப்பிற்பசுவீந்துளபேறும். ()

புறனும்பூசையிதுவாகும்போதக்கடவுளுட்பூசை
திறனுய்க்கேட்பாயெப்போதுந்தேகத்துறையுமித்தேவை

மறவாதிந்தப்பரசிவத்தைவருவோனிருப்போன்றுயின்றெழுவோ
னிறனூர்போகவிடயங்கள்புசிப்போன்விடுவோனெனநினைந்து. (கூஉ)

வெருவாயடைந்தபொருள்களிலேமேவித்தனதுமெய்யுணர்வாந்
தருநீர்முழுக்கான்மலமற்றுத்தப்பில்போதபூசனையான்
மிகுநற்போதவிலிங்கத்தைமேவுபூசைசெயல்வேண்டும்
பகுதியில்லாவிப்போதம்பயிலாதிருக்குமிடமுண்டோ. (கூங)

என்னதுடலிற்சிறக்கதிராயிலங்குதெய்வநானென்ன
வுன்னுமனங்கண்வாக்குக்களுடையசத்தித்திரளெல்லாம்
பின்னமின்றிநாயகனைப்பிரியாமகளீர்போனூருந்
துன்னுமென்றேயனவரதந்தொடர்பாவனைசெய்திடல்வேண்டும். ( )

சகத்தைநிவேதித்திடுஞ்சித்தமெனதுவாயிற்றனிக்காப்போ
னகத்துவாயிற்பயிலேவலாளாமெனக்குநற்சிந்தை
யுகத்திவுடற்பூண்ஞானங்களுற்றகரணமொருபத்து
நிகழ்ச்சியுறுவாயில்களாகுமென்னுமெண்ணநீங்காமல். (கூரு)

அவ்வாறுனவிவனவனனந்தமாகாப்பிரிவற்றுத்
தவ்வாதெல்லாம்பரித்தொன்றாய்ச்சாலநிறைந்தெல்லாநிறைவித்
தெவ்வாயினுமோர்சமனாகியியலாசாரமியலொளிகொண்
டோவ்வாதாய்ச்சித்தாய்நின்றேனெழியேனென்றேபூசிக்க. (கூசா)

அமலமாயிப்பூசையினலதிகத்தெளிவையெய்திடலாஞ்
சமமதாயெல்லாமானதடம்புந்தியினுலுடலறிவு
சுமடென்றப்பாலாஞ்சித்தைப்பெற்றதொன்றாற்றொடர்பாக
விமலமானோர்பூசிக்கவேண்டுமென்பர்விடாதென்றும். (கூஎ)

எட்டாதொன்றைவேண்டுமெனவிதற்காயிரங்காதிச்சைவழி
மூட்டாவறிவாற்பூசித்தென்முறைமையன்னபானத்தாற்

றட்டாதுயர்ந்தசெல்வத்தாற்சயனுசனவாகனங்களினுற்
கிட்டாநின்றசுகமனைத்தாலறிந்துகிளர்பூசனைசெய்க. (சுஅ)

ஆதிவியாதிபயின்மோகவாரம்பத்தாலனைத்திடரா
னீதிபயிலுமிராச்சியத்தானிறையுமிடியால்விசித்திரமா
நீதிரெழில்களாமலராற்சித்தையறிந்துபூசிக்கக்
கோதில்போகநைவைபோகங்கொளனீக்குதலாலருச்சிக்க. (சுகூ)

நிருவிகாரபாவனையானேர்ந்தபொருளையினிதருந்தி
யொருவியிறந்தபொருளினையேயுறுமையுணர்வின்பூசனையாம்
வெருவுதுன்பமின்பமுதன்மேவுமனைத்துமுணர்வுருவாய்க்
கருதல்வேண்டுமறிவருசிற்கடவுள்பூசையொழியாதோர். (எ0)

என்றுமெல்லாவடிவாலுமெல்லாவிடங்கடன்னுலுந்
துன்றுமெல்லாம்பிரமமெனத்துணிந்துபூசைசெயல்வேண்டு
மன்றெனுமல்விரும்பாமலடைந்தபோகமெலாமறிஞர்க்
கொன்றுசுபாவத்தாற்புசித்தற்குரித்தாங்கடற்குநதித்திரள்போல். ()

நீசமுயர்வாநோக்கங்கணேர்ந்தாலிறையும்பற்றுமற்
றேசகாலத்தொழிற்குரித்தாய்ச்சேராநின்றசுபாசுபத்தை
யாசுவிகாரமறக்கைக்கொண்டதனுற்பூசைசெயல்வேண்டும்
பேசுபரமார்ச்சனைவிதியிற்பெரிதுமிவைநற்றிரவியமே. (எ௨)

கொள்ளுவானுங்கொள்பொருளுங்கூடலுயிர்க்கெல்லாம்பொதுவா
நள்ளுமந்தக்கூட்டத்தேஞானயோகிக்கவதான
முள்ளதேதங்கதுதானேயுயரான்மாவுக்கருச்சனையாந்
தெள்ளுமிந்நோக்காற்சங்கஞ்சேராமனத்தாற்சகத்துறைவாய். (எங)

வேறு.

ஏகமெனும்பிரமத்துக்குறுமுத்தியோகமேயிலங்குஞான
மியோகமுமாங்ஙதுவென்பருலகமுஙானும்பிரமத்துருவென்றோர்த
லாகுபிரமார்ப்பணமாங்கருமபலம்விடல்சன்னியாதமாகுஞ்
சோகமுறுசங்கற்பமறுத்தலேசங்கத்தைத்துடைத்ததென்பர். (எச)

எண்ணமனைத்தினு மீசனொருவனே யென்றிருமையெண்ணந்தீர்தல், புண்ணியவீசுரார்ப்பணமாமெனைநாடியெனக்கன்பாய்ப்பூசித்தென்னை, நண்ணியெனைத்தொழுதென்னைத்துதித்தாயேறுனெனுநின்சொரூபச்சோதி, யுண்ணிறையும்பரமஞ்சாமானியமென்றிரண்டுவடிவுண்டெனக்கே. (எரு)

காமமுறுசங்கற்பமின்றியாரம்பமெலாங்கலந்துநிற்போர், தாமமுறுஞானத்தீயாற்கருமங்களைச்சுட்டசான்றோரென்பர், சேமமுமேல்வரும்பொருளுஞ்சிந்தையறத்தொந்தமறச்சித்தாமுண்மை, தோமறப்பெற்றெப்போதுந்தோற்றுதொழில்வழிநிற்பாய்துளக்கமின்றி. ()

வேறு.

ஆதாராதேயம்போலாமதிலொன்றிறக்கிலயலதும்போ
மோதாநின்றவிவைமாயிலுயர்ந்தவீடுமுதவிடுமான்
மீதாகியதன்பரிசயத்தால்வெளியாய்நினைவுபோமளவு
மேதாகிலுமோர்தத்துவத்திலிறுகவேண்டும்பாவனையே. (எஎ)

வேறு.

இல்லவளில்லமாதிப்பற்றறவிட்டாநிட்டம்
புல்லிடிற்சமசிற்பாவம்பொருந்துதறனக்குப்பேத
மல்லவாயவற்றவற்றின்றோற்றங்களாதலென்று
மல்லலேகாந்தஞ்சேர்தன்மாறுடத்திரளைநீத்தல் (எஅ)

ஆற்றுமவத்துவத்திலகல்கிலாஞானநிட்டை
யூற்றமாமுண்மைஞானத்துறுபொருட்காட்சியிந்தத்

தோற்றமாங்குறிகள்சேர்தன்ஞானமாய்ச்செல்வர்சொல்வர்
வேற்றுளவழிகண்முற்றும்விதனவஞ்ஞானந்தானே. (எகூ)

ஏதமதாகநானென்றெண்ணுதலிறந்தபோது
காதலுமுனிவுந்தீர்க்குங்கலைகளுய்ப்பிறவிநோய்க்கு
மேதகுமருந்தாஞானம்வெளிப்படுமென்றுசொன்ன
சேதனமுனிவனுனதிரிதுலர்க்கரசன்செப்பும். (அ0)

மலைமிசைமரம்போனீளுள்வன்புறவிந்தமெய்யி
னிலைபெறநானென்றெண்ணநீக்குவதெங்ஙனென்னத்
தலைமைசேர்குரவன்சொல்வான்றன்மனவருத்தத்தாலே
தொலைவறுபோகத்தெண்ணந்துவக்கறத்துடைத்துநீக்கி. (அக)

வேறு.

பலமதனையொருக்காலும்பலியாதசரவணத்தின்பரிசுபோல
வலமருவாதனைதீர்ந்தகிரியையுமேற்பலந்தன்னையளிக்கமாட்டா
வுலகமெலாம்பிரமமெனும்பாவனையாலஞ்ஞானமொழிந்துபோனுன்
மலமுறுவாதனைதோன்றுக்கானலினீருண்டென்றுமதிப்பாருண்டோ

வேறு.

ஆதலினுன்மிகநல்லநெறியாலேநீயந்தமனமரத்தின்வேரறுத்துச் சுட்டாற், சாதமுறுதென்றனுமேமன்னன்சொல்வான்றனிமரத்தின் வித்தாகுமகம்பாவத்தை, மாதவனேசுடக்கனலேதெனலுங்கும்பன் மறித்துரைப்பானுறொன்றெண்ணுகின்ற, போதவிசாரந்தானேமன த்தின்வித்தைப்பொன்றுவிக்குங்கனலெனவும்பூபன்சொல்வான். ()

ஞானமனஞ்சத்துவமேயென்றுசொல்வர் ஞானமிலாதார்சித்த நடையுநிற்ப, ரீனமறுஞானிகள்சத்துவத்தேநிற்பரோதொன்றுசுவர்க் கம்வீடெல்லாநல்கு, மானவையெல்லாம்விட்டுச்சமமாஞ்சோதியாலு

லேதாகுதியிங்கதாநீயாகு, மூனமுறுபொருளொன்றுங்கைக்கொளாம
லுள்ளமசைவறநிற்பாயுறுதியாக. (அசு)

வேறு.

அலர்கசக்குமுன்னிமைக்குமுன்ன கங்கரமகற்றுதலெளிதாகும்
பலவுரைப்பதென்னேகமாயனந்தமாய்ப்பரமசித்தேயாகிக்
குலவுசுத்தமாம்விண்ணிலுநுண்ணிதாங்குறைவிலாப்பொருணிற்குஞ்
சலனமற்றதைப்பாவனைசெய்துபசாந்தனுமிடர்தீர்வாய். (அரு)

சுத்தமித்தையேயாதலிலகங்காந்தொலைந்துபோமெய்யான
தத்துவந்தனைநினைதலாற்சித்திலேசாற்றகங்கரமெங்கே
மெத்துநீரிலேபு...முன்போ
நித்தருபத்தைநினைத்திவனுனெனுநிச்சயமறநிற்பாய். (அசூ)

வேறு.

ஆதலினூற்பந்தம்வீடெங்குளதுவீடிதெனவடுத்தபந்த
மீதெனவெண்ணுவதெல்லாம்வலிந்தகற்றியபிமானமிறையுமின்றித்
தீதுதவிர்மவுனியாய்ப்பொறிவென்றுமானமதந்தீர்மேலோனு
யோதியநின்காரியஞ்செய்திராமனேயகங்காரமொழிந்துநிற்பாய். ()

வேறு.

ஊனூர்பிறவிக்கடல்கடப்போர்க்குரியவிளைப்பாறுதலெய்த
நானூரிந்தச்சகமெங்ஙனும்பரமனூராகு
மானுவிடயபோகத்தாலாவதென்னேவென்னுமதி
தானும்பரமவுபாயமெனச்சாற்றுங்கண்டாய்சற்குணனே. (அஅ)

பந்தமுத்திநினைவுகளைப்பயிலாதோட்டியுன்வசமாய்
மூந்துபிறவிப்பயமெல்லாமுற்றுமொழித்துநிலைநிற்பா
யந்தநீசங்பற்பநினைவடைந்தாற்சின்மாத்திரவறிவு
வந்துசிவத்துவமடைந்தவாரியலையாவதுபோல. (அகூ)

கலைகளாலுங் குருவாலுங் காண்டற்கரியபரன்றனே
தலைமையானசாத்திரஞ்சேர்தன்புத்தியினாற்றன்றாலே
நிலையில்வெளியாநெறிபோவார்நெறிசேர்காட்சிகளிற்புந்தி
செலவுபற்றில்லாததுபோற்றெவ்வாங்கரணங்களைக்காண்பாய். (௯௰)

இனையகரணங்களைப்பற்றலிகழ்தலிரண்டுமியல்பல்ல
வினைசெயுடலமுதற்பொருள்கண்மேவுமியல்பின்மேவிடுக
வனையபொருள்கள்புந்தியினாலகலநீக்கியதிசீதம்
புனையுட்கரணத்தினாலெப்போதும்பரமமயமாவாய். (௯௧)

தானலாதாய்முன்சொன்னசகத்தின்றிரளாயுடலமுத
லானபொருளின்சாலத்தையான்மாவாலேயறத்தள்ளி
ஞானசற்பாவந்தன்னைநனிமேற்கொண்டுமறைந்தோரா
யீனமில்லாமதிவேந்தேயிச்சையானபடிநிற்பாய். (௯௨)

சாந்தனாகிச்சமநிலையாய்ச்சாலநொய்தாயறிவுருவை
வேந்தனேசந்ததநினைவாயென்றுமனுமீண்டுரைசெய்வா
னாய்ந்தநூலானல்லோராலறிவைவளர்க்கவேண்டுமுத
லேய்ந்தயோகத்துக்குமுதற்பூமியிதுயோகிக்கில்லை. (௯௩)

இதற்குநானீதெனக்கவன்மற்றிவனானென்றிடுமோக
விதத்தையுயர்புந்தியினாலேவிட்டோர்மேற்குமேற்செல்வோர்
திரத்தனொளிகூரான்மாவைச்சிறிதுந்தாழாதுறப்பற்றி
யுதித்தசகத்தைத்தற்புரணவுருவமாகநோக்குதியால். (௯௪)

என்றிப்படிதன்சித்துருவமிரண்டற்றுள்ளேதனித்தோன்று
மன்றிப்பவம்போய்ப்பரமேசனாகலாகுமயன்சிவன்மால்
வென்றிக்குலிசத்தவன்முதலோர்செய்தவெல்லாமெய்ம்மையினா [ய்.
லொன்றிச்செறிசித்துருவுடைநான்செய்கின்றேனென்னுணர்வுறவா

மெய்யாய்மூலமீறின்றிவிகற்பமறுசின்மாத்திரமே
மொய்யார்சீவன்பரவடிவாமூன்றுருகுவதுமுண்டகம்போற்
கையாய்சுத்ததுரியபதங்கண்டாயிதுவேயிதிலீழுந்தி
மையார்முதற்சொல்வடிவிரண்டுமாற்றியவைநானெனவேண்டா. ()

அந்தநிலையேயோகிகடாமரிதிற்சாதித்தடைகின்றூர்
வெந்ததுயர்செய்சங்கற்பவிகற்பமில்லாத்துரியத்தே
மைந்தநிலையாயிடர்தீர்வாய்மகத்தாயுயர்ந்தமுனிவரராய்ப்
பந்தமிலராய்ப்பேதமறும்பழையோர்விடாதிப்பதத்துறைவார். (கூஎ)

எல்லாநீக்கிமகாமௌனத்திருப்பாய்நிருவாணத்தினுய்ப் [போய்ச்
பொல்லாமனம் போய்ச்சித்தம் போய்ப்புந்திபோய்த் தானென்பது
சொல்லாவூமைகுருடுசெவிடொத்துத்தூயவான்மாவி
னில்லாயுள்ளேமுகமாகிநித்தநோய்தாய்நிறைமதியாய். (கூஅ)

எட்டியறிந்ததறியாதஇரண்டும்பாவிப்பதுநினைவாம்
பட்டமரம்போலிவையிரண்டிற்பற்றுநினைவுதனைமறந்து
வட்டமிடுமியாவையும்விளைவின்மறந்துசான்றமதியுடைத்தாய்த்
திட்டமுறத்தோன்றுதலில்லாத்திறத்தோனுகிநிலைநிற்பாய். (கூகூ)

எனக்கீதென்னுமுணர்வுடைமையிடர்விட்டகலாதுணர்வின்மை
யனர்த்தமில்லாவீடளிக்குமாசையேதிங்கதுசெய்வாய்
சனிப்பில்சிவமெங்கணுமுளதுசாந்தஞ்சுகஞ்சித்துருவென்னுங்
கனத்தவந்தவொருநினைவேகருமத்யாகமிராகவனே. (க00)

௩0-வது. அப்பியாசலட்சணம்முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-௫௨௬.

---

அ

# முப்பத்தோராவது மனோலட்சணம்.

அஃதாவது
அப்பியாசஞ்செய்யத் தொடங்கினோன்
மனோநாசம் வாசனாட்சயம் தத்துவதரிசனம்
செய்யவேண்டுதலின்
அதன்பின்ன ரிதனை வைக்கலாயிற்று.

கலி.

சடசூனியமாயெங்கணுஞ்சேர்தனிநெஞ்சுக்குப்பேரொழிய
வுடனாங்ககனந்தனைப்போலவுள்ளும்புறம்புமுருவிலதாம்
படர்தீர்மெய்பொய்யெனும்பொருளிற்பயிறோற்றரவேமனமாகுந்
தொடர்சங்கற்பமெங்குளதாந்தோன்றுமனமுமங்குளதே. (க)

மனத்தின்வடிவுசங்கற்பமற்றிவ்விரண்டுமொன்றாகு
மனர்த்தமோகமலம்பந்தமவித்தைமாயைதமமுதலா
மினத்தபெயர்சங்கற்பத்துக்கேற்றபெயராமிதுநழுவிற்
கனத்தசகக்காட்சியும்போகுங்கதிர்விட்டெறிக்கும்பரவடிவம். (௨)

மெத்துகின்றவாதனையைவிட்டான்மேலாநலமுளதாஞ்
சத்தினசத்தினிடைநின்றசைதன்னியத்தியத்திற்சாட்டியத்தி
லொத்துநடுநின்றலைவதுவேயுள்ளமாகுமிவ்வுள்ளஞ்
சித்தின்முயல்வாற்சித்தாகுஞ்செடத்தின்முயல்வாற்செடமாகும். ()

வேறு.

பற்றுவீடென்றிரண்டிற்பற்றலும்விடுதலுமா
முற்றவைமனத்துருபமுயர்பந்தமதுவேறில்லை
முற்றுறுபற்றுவீட்டின்மோகமுந்துயரும்விட்டுத்
துற்றுளபற்றுவீடுதொடைத்தசையாதுநிற்பாய். (௪)

வேறு.

வாதனையின்வேகத்தின்விவசத்தாற்றன்வடிவினைவிட்டனைத்தினையுமயக்கமாகத், தீதமைபுந்தியிற்காணுமதவசத்தாற்றியங்குதல்போலிம்மனத்தைத்தெரியக்கூறி, லேதமுறுகாட்சியெதுதானல்லாததியானெனும்பாவனையேதுபொருளல்லாத, தோதுபொருளெனுங்கருத்தேததுவேசித்தமுறுபிறவிசனாமரணமுண்டாமித்தால். (௫)

சகப்பொருளிலோரிடத்தோர்நினைவுமின்றேற்றனியிதயசூனியவிண்டன்னினுள்ள, நிகழ்ச்சியுறத்தோன்றுவ தெப்படியே வள்ளானெஞ்சுக்கம்மட்டுருவமெனநினைப்பே,னுகப்புறுமின்பத்தாலும்பொருண்மெய்யாலுமுள்ளூறுபல்பொருணினைவேயுளத்தின்மேனி, மிகப்படர்காண்பவைதொழிற்காகாதென்றெண்ணும்விண்ணினுநொய்யவர்க்கெங்ஙன்விளையுமுள்ளம். (௬)

வேறு.

மற்றுங்கும்பனுரைசெய்வான்மனத்துக்குருவம்வாதனையே
யுற்றமனமென்றுரைக்குமுரையுறுவாதனையின்பரியாயங்
குற்றமெல்லாங்குவிந்திருக்குங்கூடாரமெனன்பதுதானே
செற்றமனமாமரத்துக்குத்திகழும்விதையாந்தேர்வேந்தே. (௭)

வேறு.

உரையெனமன்னவன்கேட்பக்கும்பன்சொல்வா னுளமென்றுசொன்னதுவேறென்றுமன்று, கரையறுபல்பவந்தருவாதனையேயுள்ளங்கண்டதனையறிந்தாலக்கவலையில்லை, வரையறக்கண்டவர்கருமங்களிற்சரிக்கும்வாதனைதான்மறுபிறப்பைவழங்காதந்தப், புரைமனஞ்சத்துவமென்பர் சித்தமென்றுபோதமில்லாச் சித்தத்தைப்புகல்வரன்றே. (௮)

வேறு.

உயிர்களியாவையுமுள்ளூறநானெனவுன்னுபாவனை தானே
செயிர்செய்சித்தமென்றுரைத்தலுமிங்கிதுதீர்ப்பதுமிகவன்பாம்
வயிரமாவதுதீர்வதெவ்வகையெனமறித்துமந்திரிசொல்வான்
வெயில்செய்துன்பமோர்சிறிதிலையகங்கரம்விடமிகவெளிதாகும். (கூ)

ருக-வது. மனோலட்சணம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ருருரு.

---

## முப்பத்திரண்டாவது மனந்தடிப்புறல்.

அஃதாவது

மனோலட்சணந் தெரிந்தவனது பருக்கும்
விதமுந் தெரியவேண்டுதலி
னதன்பின்னர் இதனைவைக்கலாயிற்று.

கவி.

சரீரமாத்திரத்தாசைபுந்தியாற்றனல்லாதன தானென்றே
பரிவுறலான்மக்கண்மனைகுடும்பமெனும் பாவனையாற்பருக்குமுள்ளம்
விரியுமகங்காரவிகாரத்தினன்மமதைமலவிநோதந்தன்னு
லுரியவெனதிதுவென்னும்பாவனையான்மிகப்பருக்குமுள்ளந்தானே.

ஆதிவியாதியின்விரிவாலவைமாறித்தேறுதலாலகற்றல்பற்ற
லாதியமாமுயற்சியினாற்பிறவிதொறுமிகப்பருக்குமுள்ளமைந்தா
மாதர்மணிதனமுதலாநேயத்தாலாபத்தால்வருலோபத்தாற்
போதுபொழுதிவைநன்முநல்த்தினாற்பருத்துள்ளம்பூரிப்பாமே. (உ)

வேறு.

அராசையெனும்பால்பருகித்தொல்போகமெனுங்காற்றுற்றொ
டர்மொய்ம்புண்டா, யிராகமுறுவழியுலவிமனப்பாம்பு மிகப்பருக்கு

மிராமகேளாய், புராதனவுத்தாலகன்போலேம்பூதத்தையும்பொடியா ய்ப்போகப்பண்ணி, நிராகுலமாம்புந்தியினாலிதயத்தேகிலேனத்தியென நிகழ்த்தலோடும். (௩)

௩௨ - வது. மனந்தடிப்புறல் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-௫௩௮.

## முப்பத்துமூன்றாவது மனமேசர்வகாரணமெனல்.

அஃதாவது

தடிப்புற்றமனஞ் சர்வமாகியும் சர்வத்துக்குங்

காரணமாயுமிருத்தலி

னதன்பின்ன ரிதனேவைக்கலாயிற்று.

கவி.

சீவனெவ்வறிவினாலேதெரிவுறுமதுபதார்த்தந்
தாவுறும்விவிதமானசங்கற்பவிகற்பமுற்று
மேவியமயக்கர்தன்னால்விரிந்தநீரலேயாமாபோற்
பூவலயங்களாகிப்பொலிந்ததுபுகன்றசீவன். (௧)

செல்லுறுகானலாற்றிற்றேன்றிடுந்திரைகள்போல
வில்லேயாமனதிலுண்டுபோலெழுமிந்தஞால
மல்லல்செய்மோகம்பந்தம்மலமவித்தைமாயை
புல்லுசம்சாரமென்றேஞானிகள்புகலப்பட்ட. (௨)

வேறு.

இனத்தாற்படருமனம்பரமனேதுவாயிப்படிதோன்று
மனத்தால்விரிந்தசகமெல்லாமனனவடிவேமற்றில்லேக்

கனத்தாற்கனாதீர்பலவறிவாங்கல்லோலச்சிற்கடல்பொங்குந்
தினத்தானீண்டகனவொப்பச்சித்தவசத்தாற்சகந்திரமாம். (௩)

பிரமனுமேசிருட்டியெலாம்பிறப்பதெம்பாலென்றுள்ளே
திரமதானமனத்தாலேசிந்தித்துடலிற்சிந்தையற
மரமதென்னவிருத்தலுமேவருநாட்பலபோய்மனோபாவ
முரமதாகியனுனொருபதுலகமுளதான. (௪)

வேறு.

அவரொலாநிரம்பவுண்டபின்மிகுந்ததருந்தினர்வேட்டைகளாடி
யிவர்கண்மூவருமங்கிருந்தனரொன்னவிளமையானம்பினன்சிறுவன்
புவனமுமிவ்வாறறிவிலோர்காண்பர்புகன்மனவிரிவுசங்கற்பம்
விவரமாமிதனாலுலகமாமிதனைவிடுநிருவிகற்பமாயிடுநீ. (௫)

மனமேபுருடன்மற்றில்லைமனத்தின்செயலேசெயலாகுங்
கனசீவனத்தாற்சீவனுமாங்கவர்நிச்சயத்தாற்புந்தியுமாஞ்
சினவுமபிமானத்தாலேதீயவகங்காரமுமாகுந்
தனதுவிகற்பசாலத்தாற்றுனேசகமாந்தனிமனமே. (௬)

வேறு.

மாலதற்குறைப்பானந்தனுவிந்தமண்முதலியாவையுமனத்தின்
பாலுறவிருப்பதன்றியேபுறத்திற்பயில்வதோர்காலமுமிலதா
மூலமில்கனவுமயக்குமமதமுமுதலியநெறிகளிலியாருஞ்
சீலமாய்நோக்கியனுபவிக்கின்றுர்சிந்தையுட்சகமிருப்பதுவே. (௭)

இதையமயலாலெரியினுலகெலாங்காட்டெரிபோ லெரிந்துதோன்று, முதையமுறுமுயிர்க்கெல்லாமுள்ளிருப்பதேபுறத்துமுண்டாய் நிற்குஞ், சுதைபயினூர்புவிகால்விண்டொகுவனாநீணதிதிக்குச்சூழ்ந்

தவெல்லாம், புதைதலுறுமுட்கரணதத்துவத்தின்பங்குகளாய்ப்புறத் தினிற்ப. (அ)

வேறு.

இயலார்கும்பனுமைசெய்வானெல்லாச்சகமுமிதுவாகி
வியனார்சீவன்பிராணனெனமேவுபெயர்கள்பலபெற்றுப்
பயனார்சடமுமசடமுமன்றாகிப்பரந்தசித்தத்தை
யுயர்வோர்சகலமென்றுரைப்பருலகுமிதுபந்தமுமிதுவே. (கூ)

ரு௩-வது. மனமேசர்வகாரணமெனல் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் - ருசஎ.

## முப்பத்திநான்காவது மனோவல்லபம்.

அஃதாவது
சர்வகாரணமானமனதி
லதுளதாயுளதிலதாகியவகடிதகடிதஞ்செய்தலி
னதன்பின்னரிதனை வைக்கலாயிற்று.

கலி.

கடுமனவன்பேய்கனலிற் கொடிதாகுமலைகளினுங் கடத்தற்கொண்ணு, நெடுவயிரத் தினும்வலிதுகடல்பருகிமேருவினை நேரோபேர்த்துச், சுடுகனலை விழுங்குகினு நிறுத்தரிது புலன்முழுதுந் தோன்றுமூலங், கெடுமூலகீதுண்டெனிலுண்டிலதாகி லிலதிதனைக்கெடுத்தல்வேண்டும். (க)

வேறு.

பொருவில்சகத்தை யளிப்போனும்புருடன்றானும்புகன்மனமே
கருதுமனத்தின்செயல்செயலாங்காயச்செயல்கள்செயலன்றாம்
பருதியுமைசெய்புதுமறையோர்பதுமாதனராய்ப்பார்படைத்தார்
பெருமாமனத்தினுயர்சத்திப்பிறராலறிதற்கெளிதாமோ. (உ)

மாண்டுவோளாபோனவுடன்மட்டொன்றில்லையவையெல்லாந்
தாண்டுமனத்தாலுண்டாகுஞ்சலத்தாலன்றிக்காடுண்டோ
தூண்டுமனமேமுதல்வடிவாய்த்தூலவுடலம்போனாலும்
வேண்டுமுடல்கள்விளைந்தெடுக்கும்விரியுங்கனவிற்செயல்போல. ()

வேறு.

கருத்தின்வல்லமையாற்கற்பமோர்கணமாங்கணமொரு கற்பமா மிவற்றைத், திருத்தமாயுணர்த்துமொருகதையதனைற்செகமெனு மிந்திரசாலங், குருத்துவமானமனத்தினுள்ளிருக்கும் கொள்கைதோற்றிடுமெனவுரைப்பா, னெருத்தனிங்கரிச்சந்திரகுலத்துள்ளா னுத்தரபாண்டவநாட்டோன். (சு)

மூகமாய்ச்சடமாய்ச்சுகாசுகங்களிலேமூழ்கியோர்பயனறவருந் துந், தேகமார்நீயாரகோவகோவீதோர்சித்திரமிருந்தவாகாணு, யேகமாய்மெய்யாயிலங்கியபிரமமெங்குமாயிருக்க வுந்தோன்றுச், சோகமாய்ப்பொய்யாய்விளங்குறுமாயைதோன்றுறுதிருக்கவுந்தோன்றும்.

வேறு.

இலதுளதாமுளதிலதாமிம்மாயைவல்லபத்தா லென்னலோடுங், கலனமுறுசொற் பணத்திற்கண்டதெலாஞ் சாக்கிரத்திற் கண்டதென்னே, குலமுனிவவெனக்கேட்டவள்ளலுக்குமுனியுரைப்பான்கொடியமாயை, யலகறுமோகம்புரியுங்காதிகதையாலிதுமேல்றியலாகும்.()

வேறு.

இல்லதுள்ளதாமுள்ளதுமில்லதாமிமைப்பிற்
புல்லுமந்திரிநிலைத்திடிலிவனென்றும்புசிக்க
வல்லதில்லையொன்றறிகிலன்மன்னனைவிடாது
செல்லுந்தன்மையாற்கேவலமனைத்தையுஞ்செய்யும். (எ)

வேறு.

அனந்தமாய்விரிந்தசகத்திரளெல்லாமயர்வறவமர்வதற் கிடமா, மனந்தனுலிந்த ஙாய்ப்புலத்தன்மை வெளிசெயின் மற்றிதில்வியப்பென், கனந்தருபத்திப்பாச்சலின் வயத்தாற்கடைப்புலைத்திறந்தெரிந்துளதா, முனந்தொடரதிதிதானு மப்படியே மோகங்கண்முழுவதுங்கண்டான். (அ)

வேறு.

இவ்வகையேயிம்மாயையறநெடிதாய்வெலற்கரிதாயேறித்தாழ்ந்து
வெவ்வியமாமோகங்கள்விளைவித்துப்பரமத்தின்மேவிநிற்கு
மவ்வகையாலுரைக்கின்றேனநவரதஞ்சொரூபத்தையடையாதாரைப்
பவ்வமெனவருந்துயரின்மூழ்குவிக்குமிம்மாயைப்பண்புதானே. (கூ)

வேறு.

மனவன்பே யுறப்பிடித்தாற் சாத்திரத்தாற் சுற்றத்தான் மாற்றவொண்ணு, வினவுறுதேசிகராலு மீட்பரிதாமந்தப்பேய் விட்டுநீங்கிச், சினமின்றி யிருக்குமெனின் முன்னுரைத்தவகைகளாற் றீர்க்கலாகுங், கனபங்கமிலதாகிற் சிறுகுழியில் விலங்குதனைக் களையுப்பார்போல். (கo)

வேறு.

அதுந்தானறியார்க்கிடர்நல்கியதுவேயதுவல்லாததுபோற்
றிதமாய்நிற்குமிம்மாயைச்சித்திரந்தானற்புதமே
பொதுவாயகங்கமத்தனையும்புணர்ந்துபிறிவற்றிருக்கவுந்தா
னிதமாயுயிரையுயிர்காணுதிருக்கமயக்குமியாரையுமே. (கக)

நசு-வது. மஞேவல்லபம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ருருஅ.

# முப்பத்தைந்தாவது மனோதூடணம்.

அஃதாவது

அகடித கடிதமே சுபாவமான மன தனேகவித தோடத்தோடுங் கூடியிருத்தலி னதன்பின்னர் இதனைவைக்கலாயிற்று.

கவி.

காமமுதல் வினைக்குடைந்துகற்றவர்நற்றொழிலகலும் கடுங்காற் றுற்ற, மாமயிலின் பீலிபோன்ற தூரநகர்நாய் போல்வாளாசுற்று, மாமதுகிஞ்சிலுங்கிடையாதருநிதிபெற்றாலுமகிழ்ந்தமைந்துட்கொள் ளாச், சேமமுறுகரண்டகநீர்தரியாபோற்றிரியுமனத்தீயதன்றே. (க)

காதலெனுமனைவியின்பின் செல்கின்றமனமென்னுங் கடியஞா ளி, பேதைமைமேவியவென்னைப்பிணந்தின்னுமாறுபோற்பிடுங்கித் தின்னு, மோதுபெருங்காற்றினான்முறிந்தெழுந்ததுரும்புபோன்மோ கமெய்த, வாதைமனம்பெரும்பாழின் மிகவீழவதூரமலங்கத்தள் ளும். (உ)

வேரறுபொய்யாய்ச்செறிந்தவடிவாகிவிசாரத்தால்விரோதமா குங், கோரமனம்பேய்பிடித்த சிறுவனைப்போற்பலதொழிலிற்கூட் டாகிற்கும், பாரகன்றுபாதலம்போம்பாதலத்தினின்றகன்றுபாரின் மீளுஞ், சோரமனங்கிணற்றுமரம்பழங்கயிற்றாலெடுப்பதுபோற்றொ ழிலிற்றள்ளும். (௩)

வேறு.

வாராய்மூடமனமேநின்மாயவாழ்க்கைகளிற்பயனென்
றீராவிடோமுடிவில்வருஞ்செயலிற்பெரியோர்சேருவரோ

வாராவமுதாஞ்சாந்தியைவிட்டழியும்போகமாதரிப்போ
ரோரார்மலர்க்கற்பகக்கான்விட்டெரிகூர்விடவெங்கானுறுவார். (௪)

சத்தாதிகளாமித்தொழில்கடன்ஞன்மண்டேகம்போலப்
பித்தாய்மூர்க்கமனமேயேன்பிரமிக்கின்றாய்விடாதவமே
யெத்தாற்சிறிதுதனையடைந்தாயெதிலேயின்பமுறுகின்றாய்
நித்தாரமுதாய்ச்சமமாகுமதினீநிலைசேராநெறியென். (௫)

வேறு.

படர்மூர்க்கமாமனமேவீணாய்த்தோன்றிப்பருக்கின்றசெவித்தொழில்கள்பயின்றுசத்தந், தொடர்கின்றபுந்தியினாலசுணமாபோற்றுஞ் சுறவேண்டாதேரலின்றொழிலேமேவி, யடர்பரிசமூகமாமதஞற்றன் பமடியாகப்பிடிக்கன்பா மியானைபோல, மடமைமிகுமூர்க்கமா மன மேயென்றுமாறுதவாபத்தைமருவவேண்டா. (௬)

ஒளியுருவத்திரளைக்குவிழியின்செய்கையுற்றுநீவெவ்விளக்கை யுணராதாகி, விளிதலுறும்விட்டில்போல்வேகவேண்டாவெய்யமன மோாவின்விருத்திமேவி, யெளிதருந்தியுணவுகளின்மணத்திறலேயி னைத்தூண்டிற்கவர்மீன்போலிறக்கவேண்டா, நளினவிதயத்துளுயிர் நெறிபோய்க்கந்தநாட்டத்தாற்கட்டுண்ணேனைவண்டேபோல். (எ)

வேறு.

சாறுவாகனுய்ச்சாரணனுகிநாற்றடந்திசைபலியேற்கப்
பாறுநெஞ்சமேவீணிலேவருந்துதல்பயனிலபடிமீதே
யாறியேவிளையாடுநீயுனையறிவென்னும்வாதனைபொய்யாம்
வேறுபாடுதான்மிருந்துளமனத்தொடுமெய்யுணர்வொன்றாகா. (அ)

வேறு.

முன்னந்தோற்றமற்றிப்பொழு துனக்கெனவுருவன்றிம்முறை யாலே, பின்னுந்தோன்றலையென்னுடைநெஞ்சமேபெரிதுநீபெறுந

ன்மை, யின்னறீர்தெய்வசகாயத்தாலிடரிலாவின்பமுற்றியானென்று ந், துன்னுசாந்தனுய்த்துரியமாமென்சொரூபத்திலேசுகிக்கின்றேன்.()

நல்லறிவுநற்புருடர்குணநன்னூன்மேவியநல்வருத்தத்தாலே, புல்லில்பொருளோரிடத்துங் கிடையாது மனமென்னும் பொல்லாவன்பே, யல்லறரும்பயஞ்செய்யுந் தீரதையாம் பெருஞ்செல்வமனைத்துமாய்க்கும், கொல்லுமிது தனைநீக்கியே தானுயஃதாகிக் குறைவுதீர்வாய். (கo)

ஙரு-வது. மனோதூடணம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-ருகூஅ.

---

## முப்பத்தாருவது மனோநாசம்.

அஃதாவது

மனோதோடங்கண்டவ னம்மனதையவசியங்
கெடுக்கவேண்டுதலி னதன்பின்னரிதனை வைக்கலாயிற்று.

கவி.

இறப்பிலாவிந்தமோகமிறையுமீட்டெண்ணமின்றி
மறப்பதேநல்லதென்றுமதித்துயர்மனத்தினுக்குத்
திறப்படக்காணப்பட்டதில்லெனச்சித்தினாலே
யுறப்பெறுமெய்ப்போதப்போதுயர்பரசுகமதாமே. (க)

வேறு.

சங்கற்பசாலந்தவிர்ந்தாலுபசாந்தமாகித்
துங்கப்புவியாவையுமாகியசோதிதோன்று
மிங்கற்பமுங்காண்பனவில்லைவெறும்பொய்யென்று
லங்கப்பொழுதவ்வறிவாலதுசேர்தலாகும். (உ)

வேறு.

கோசகாரப்புழுப்போற்கொடுங்கற்பனைவாதனையாற்
பாசமடைவரியாரும்பகர்ந்தமனத்தின்கதையை
மாசிலாதமனத்தான்மதித்துமனத்தைமாய்ப்பாய்
தேசமுடையாயென்றுதெளிந்தவசிட்டனுரைத்தான். (ங)

வேறு.

ஆயமனத்தின்செயல்செயலாமதனுலொழிந்தொழிந்துளதா
மேயமனத்தினைலவொழித்தோர்மிகவுநல்லதியானத்தோர்
தூயமனமாயிடில்வெற்பாற்சுழலாக்கடல்போற்பிறப்பிறப்பா
மாயைமயக்கங்கெடுமென்னுவசிட்டன்மீண்டுமுரைசெய்வான். (ச)

இரும்பாலிரும்புதிருந்துவபோலியற்றுமனத்தான்மனந்திருந்துந்
திரும்பாநிராசைவடிவாகிச்செறியுந்தன்னுலியற்றுவதாய்
விரும்பாநின்றோர்க்கெளிதானவெய்யமனத்தினுபசாந்தி
பெரும்பாரந்தீர்நற்கதியாம்பிறிதோர்கதியுநன்றாகா. (ரு)

வாவுமனத்தையசங்கற்பவாளாலறுக்கினிறைந்தெங்கு
மியாவுமதுவாம்பொருடோன்றுமிந்தவழிநின்றறிவாலே
மேவுமனத்தைவிழுங்கியதின்மேலாமாயாவிகற்பமெலா
மோவுமதியாலறிவுகடந்துளத்தைவிழுங்கும்பொருளுணர்வாய். (சு)

வருந்திமுயன்றுமனந்தன்னைமாற்றியில்லையுண்டென்று
திருந்தபதத்திலிருந்திடுவாயிடர்தீர்செல்வமிடரின்றிப்
பொருந்தவேண்டுமனம்வென்றுற்புவனமூன்றுந்துரும்பாகுந்
திருந்தவினிதென்றனவெல்லாந்தீதாய்த்தோன்றின்மனமாளும். (எ)

சித்தவிண்ணிற்றிகழறிவாந்தியானத்தாலேயறிவென்னு
மொத்தபடையாலையமறவுளத்தையறுப்பாயறுத்ததற்பின்

மெத்துதுயர்போமவனிவனுன்மேவுமென்னததுவிதுவாய்
வைத்தவிவையேமனமிதனைமறப்பாம்வாளாலறுத்திடுவாய். (அ)

பெருகத்திரண்டமுகிலெல்லாம்பெருங்காற்றுலேயொருவுதல்போல்
வருகற்பனைநாசத்தாலேமனம்போயிறக்குமனமிறந்தாற்
பொருகற்பாந்தமாருதமும்பொங்குகடலும்புவியனைத்து
முருகச்சுடுபன்னிருகதிருமொருகால்வரினுமிடருண்டோ. (கூ)

தன்னைக்கொண்டேதனையறுக்கிற்ருனுய்ச்சகலபூமிக்கு
முன்னைத்தலைமைபோலின்பமுதிரநிறைந்துவகற்பனைக்கே
துன்னித்திகழ்தற்பதம்பற்றிச்சுகத்தையடைவாய்பலவாக
வுன்னிப்படர்கற்பனைச்செல்வமுடையமனமேயுயிர்ப்பகையாம். (க0)

உள்ளப்பகைவன்பலவிதமாயுறுகாட்சிகளால்வெல்லாமற்
றெள்ளத்தகுசந்தோடமெனுஞ்செல்வமுடையகிராசையினுற்
கள்ளத்தனிநெஞ்சினைவெல்வாய்க்கற்ருேர்க்கன்பாய்நிர்மலமாய்ங்
குள்ளக்குளிர்ந்தாங்காரத்தாற்கூறுகாதுசமபாவம். (கக)

அலையுமந்தமனமூலகாமலைவுபோயின்மனங்கெடுமிந்
நிலையேதவமூன்றாற்கருத்துநிமலவீடுந்துணிபொருளுந்
துலைவிலவேமனமாயைத்தொடர்வாதனையுமதன்பெயரா
மலையுமனமுமதுவதனைமாறுவிசாரத்தான்மாய்ப்பாய். (கஉ)

ஊக்கமுளதாய்மனமொன்றிலுறைக்கிலதுவாமாதலினுற்
றுக்குமனதைமனத்தாலேதள்ளியேறித்தளர்வின்றி
யாக்கமழிவில்மதம்விளைவிலடைவாய்மனதைமனத்தாலே
நீக்கவலதாந்தகைமைத்தாநிருபனிறுத்துநெறிபோல. (கூ௩)

பிறவிக்கடலிற்காதலெனும்பெருவாய்முதலைபிடித்தீர்க்க
விறவுச்சுழியிற்சுழலுமவர்க்கிதயநாவாயெட்டாவா
மறமுற்றுளத்தையுளத்தாலேமாய்த்துப்பிறப்பில்வருந்தாம
லுறவுற்றுனைநீயுய்விப்பாயுயிர்க்குப்பிறராலுய்வுண்டோ. (கச)

வேறு.

பிறப்பெனுமாயைக் களையதாயெங்கும் பிறிவறு பெரும்பொரு டோன்றி, விறப்புறுமாயைக்கிச்சையேவடிவாமிதனுடைநாசமேவீடு, சிறப்பில்சங்கற்பஞ்சிதைந்திடிலிதுதான்றேய்ந்திடுஞ் சித்தெனுங்கதிரோன், புறப்படிலிதயவிசும்பில்வாதனையாம்பொங்கிருள் போமெனப்புகல. (கரு)

வேறு.

சோகமுறுசங்கற்பநாசத்தான்மனமாளிற்றொன்றுதொட்ட
மோகமெனுமூடுபனிவிட்டகலுஞ்சரற்காலமுதிரவர்தான்
மாகம்விளங்குவதென்னநல்லறிவுமாத்திரமாய்மாயாதாகி
யேகமாய்வடிவின்றிப்பிறப்பிறப்பிலாப்பிரமமிலங்குநொய்தாய் (கசு)

வேறு.

பேதமுறுபுந்தியேமாயையாகும்பெரிதுமருந்திய மிதனைப்போக்கல்வேண்டும், போதமுறுபேற்றிஞலன்றிமாயைப் பொருநதியின் கரைதோன்றுப்பொருந்தத்தோன்றி, வேதமறுமப்பதமேயிறவாவீடாமிம்மாயைப்பிறப்பிடமே தென்னவேண்டாஞ், சேதமுறக்கொல்வழியேதென்றுதேர்வாய்சிதைவுற்ருலிதனியல்புதெரியுமன்றே. (கஎ)

வேறு.

உள்ளினும்புறத்துமெழுந்தசங்கற்பமொருப்படவொருக்கிடநினைவா
யெள்ளருந்தவங்கள்கற்பகோடிகணீயியற்றினும்பாதலம்பூமி
தள்ளருந்துறக்கமேவினுமுனக்குச்சாற்றுசங்கற்பமாய்வல்லாற்
றெள்ளியபரமபதத்தினைமேவத்தியக்கமிலுபாயம்வேறில்லை. (கஅ)

துயர்களும்விகாரங்களுமிலாப்பிரமசுகஞ்செய்சங்கற்பநாசத்தை
முயலுதிரணிசங்கற்பமாங்கயிற்றின்முடிவறுபாவனையெல்லா
மியல்புறுகோவையாலெழுமந்தக்கயிற்றினையெளிதினிலறுத்தான்
மயல்கொள்பாவனைகளெங்ஙனேதாளாய்மடியுமோவறிகிலமைந்தா.

துணிசெய்சங்கற்பமின்றிமுன்வந்துதோன்றியதொழில்வழிநிற்பாய்
பணிசெய்சங்கற்பமாண்டிடிலறிவுபார்வைகளனைத்தினும்பற்றுத்
தணியுயர்பிரமபதமடைந்தகிலவிகற்பமாந்தனையெலாந்தள்ளி
யினியனேகத்துவத்திலேசழுந்திட்டயமுற்றின்பமேபெறுவாய். ()

அறிவெனும்விதைசங்கற்பமாமுளையாமனையசங்கற்பமாந்தன்னைப்
பிறிவுறத்தானேசெய்துதான்பிறக்கும்பெரிதுறவளர்ந்திடுந்தானே
செறிதுயரொழியவின்பமொன்றில்லையாதலாற்செப்புசங்கற்ப
நெறியுறநினையேனிற்புறுநிலையினிமிடமும்பாவனைநினையேல். (உக)

இவ்வளவானபாவனையாலேயின்பாமினையசங்கற்பந்
தவ்வுறப்பெரியமுயற்சிகள்வேண்டாதாக்குபாவனையெலா மொழித்த
வவ்வகையாலேயிறந்துபோந்தன்னெஞ்சலர்வுறுபூவினைக்கசக்கிற்
கைவருவருத்தமொன்றுளதாகுங்கழறியவிதற்கதுவேண்டா. (உஉ)

எழுந்தசங்கற்ப பாவனைவிட்டா விறந்துபோமிதனையிங்கிதனு,
லழுந்துறமாய்த்துமனத்தினுன்மனத்தையறுத்து நின்னறிவினீநிற்பா,
யுழுந்துருள் பொழுதின் முடியுமீதரிதோ வுலகமு வானமுமொக்கு,
முழுந்தியபொய்யாய்ப் போம்விகற்பத்தான் முளைத்தவையன்றிமுன்
னிலதால். (உங)

வேறு.

சங்கற்பநாசத்தாலெளிதாகமனநாசந்தானேயெய்து
மங்குற்றமனமிறக்கிற்சநநமரணங்களெனுமரமுமாயு [நெஞ்சம்
மிங்கிப்பா லெனத்திருடுங்கள் ளனைக்கண்டேன் கண்டேனிவன்பேர்
பொங்குற்றநெஞ்சத்தானெடுநாளுழந்தேனின்றுபொன்றுவிப்பேன்.

பிறப்பிறப்பாம்பெயருடையவிந்தமாயைப்பெருமையினைமுடிவு பெறப்பேசவொண்ணு, வறப்பெரியதன்மனத்தைவென்முன்மாளுமல் லதொருவகையாலுமகற்றலாகாச், சிறப்புடையவன்மாயைவிரிவினு ள்ளச்சித்திரந்தோன்றிடவுனர்க்குச்செப்புங்காதை, மறப்பறுசிந்தை யனுகிக்கேட்டியென்னுமனுகுலநாயகனுக்குவசிட்டன்சொல்வான்.

வேறு.

சித்தசயமாத்திரமாந்தெய்வமருந்தாலன்றிச்சென்மவெந்நோய்
சத்தியமேபிறமுயற்சியானவையினுந்தீராதுதகைமைமிக்கோய்
வைத்தநிகழ்காலத்துக்கணத்தில்வருமியல்புறவாகியத்தாறபற்றி
யொத்துவருமெதிர்காலமிறந்தகாலங்கருதாருளமிலாதார். (உசு)

வேறு.

ஆங்கதுவேயதீதபதமாதலாலேயதுகிஞ்சிலன்றெங்குமதுவேயா கும், பாங்குறுவீடென்றும்பருலகிலில்லைப்பாதலத்திற்பூதலத்திற்பா ர்க்கிலில்லை, வீங்கியவாசைகளெல்லாமிறந்தகாலைவிரிந்தமனமிறப்பது வேவீடென்றேது, மோங்கிய்வீடெனக்குளதென்றுள்ளேயெண்ண முண்டாகின்மீண்டுமனமுற்பவிக்கும். (உஎ)

நினைப்புமிகிலிவனுக்குப்பிறப்பிறப்புநீங்காதுவன்பந்தநிலையதா கு, மனைத்தினுக்கு மதீதமாயுருவமெல்லா மாகியகன்றுத்துமதத்துவ மேநிற்கில், வினைத்தொடராம்பந்தமெதுமுத்தியேதுவேறறச்சிந்தை யைக்கெடுப்பாய்மேலதாகத், தனைத்தெளிந்துநிறைந்தமலநெஞ்சாய் நல்லசாந்தியையுற்றோர்விரும்பார்சற்றுமொன்றும். (உஅ)

வேறு.

சீவன்முத்திதனிலுருவநாசஞ்சித்தந்தனக்குளதாந்
தாவிலுடறீர்முத்திதனிற்சாற்றுமருவநாசமுறு

மேவுசித்தமுண்டாகிலிடராமிறக்கின்மிகுமின்பம்
பாவியுள்ளமெழாதபடிபண்ணியதைநாசம்பயில்வாய். (உகூ)

வேறு.

மாவுச்சவமாபத்தூகமந்தங்காற்பண்ணியமதங்கண்
மேவுற்றனபேதியாதெவரையவர்க்கேயுள்ளம்வீய்ந்துளதாந்
தாவுற்றெழுந்தபேதைமையேமனமாமதுவேதவிர்ந்தொழியி
லோவற்றுள்ளநாசமெனுமுறுபேருண்மையுதித்திடுமால். (ஙo)

வேறு.

மெத்துறுவன்பரிசயத்தாற்பதார்த்தந்தன்னின்மேவுமொருபாவனையான்மிகச்சலிக்குஞ், சித்தமுளதாற்பிறப்பாதிகளுமுண்டாந்தீர்வதுகொள்வதுவடிவாந்திரளிலொன்று, மித்தனையும்பாவியாதனைத்துநீங்கியெப்போதுநின்றதப்போதெழாதுசித்த, மொத்துளவாதனையொழிவானினைவுதீரிலுயர்ந்தவுபசாந்திதருமுளமாய்வுண்டாம் (ஙக)

வேறு.

தனதுமனத்தையொருக்காலேவிசாரத்தாலேசமிப்பித்த
வனகன்பிறவிப்பயன்பெற்றோனற்பமெனினுமிதயத்தே
வினவுவிசாரமெழிலதுதான்விடாதுபழகுமியோகத்தாற்
கனமதாகிப்பல்விதமாங்கப்பாயிரமாய்ப்பலவாகும். (ஙஉ)

வேறு.

இப்பிறவிமயக்கமெனுமாழித்தேர்சங்கற்பமென்னுமச்சைச்
செப்பமுறத்தடைசெய்தாலோடாதுமனவச்சுச்சிறிதசைந்தாற்
றுப்புறவார்தடுத்தாலுந்தடைபடாதறிவுவலிசூக்கலுக [றே.
மெய்ப்புருடவருத்தங்கடமைக் கொண்டேதடை செய்யவேண்டுமென்

அங்கத்தேசேர்ந்தனமென்றெண்ணலான்மாமோகவளற்றிலாழும்
பொங்குற்றதுன்பத்தாற்றுன்பமுறக்கீழ்க்கீழேபோகுந்துன்பஞ்
சங்கற்பமாத்திரத்திற்றுன்பமுறுஞ்சங்கற்பந்தவிர்ந்தமட்டி
லிங்குற்றதுன்பமறுஞ்சங்கற்பமேதுன்பமிலதேலின்பம். (ஙச)

தன்னுடையவிவேகமெனும்பெருங்காற்றுற்சங்கற்பமுகிலைத்தள்ளி
மன்னுசரற்காலத்தின்வானம்போனின்மலத்தைமருவாநிற்கு
முன்னுடையசங்கற்பமெனுமழுக்கையுன்றுலேயுனக்குமாற்றித்
துன்னிமிகுதெளிவுற்றுப்பரமானந்தக்கடலிற்றுளைந்துவாழ்வாய். ()

வேறு.

ஆதலாற்குரவனன்னூலகல்கிலாச்செறிவால்வன்பிற்
பேதமையுளத்தைமாய்ப்பாய்ப்பிராணனைத்தடைசெய்தாலும்
வேதனைவசைவுதீரவிடுகிலுஞ்சித்தம்போகுந்
தீதறுமதுவேமேலாம்பதமெனச்செப்புமன்றே. (ஙரு)

வேறு.

தெரிபொருடரிசனஞ்சேர்கூட்டத்திற்சேர்ந்தவின்பம்
விரிபரமார்த்தமாகுமதற்குமேலினிவேறில்லைப்
புரிதருபிரமநோக்காமதனிறுற்பொன்றுஞ்சித்தம்
வரிசையாஞ்சித்தநாசம்வஞ்சமிலின்பந்தானே. (ஙஎ)

வேறு.

சனனகருமங்களின்வித்தாய்த்தருவையசைக்குங்காற்றேயோற்
றினமுமுடலையசைப்பதுவுஞ்சித்தமிதனைத்தீர்வதுவே
யனகசகலத்யாகமதாமதுவேபரமவாநந்தம்
வினவுபிறவெல்லாமிகவும்வெருவுகின்றவெந்துயரே. (ஙஅ)

வினைவான்முடிக்குங்கருமமெனுநீண்டபெரியவன்காடு
தனைநீவினைவின்மையினாலேதடிந்துபரமபதமேவி
வினைதீருனதுவிவேகத்தைமேவியென்றுநிலைநிற்பாய்
புனைதாரிக்குவாகுவெனும்புகழாணிறைந்தபூபதியே. (௩௯)

பந்தநிதானஞ்சங்கற்பமன்றோவதுநீபற்றறுப்பாய்
முந்துசங்கற்பந்தவிர்ந்தான்முத்தியதுவாமதுதன்னைப்
புந்தியதனாற்பரிசயிப்பாய்பொருளும்பொருள்கொள்பவனுமுறின்
மைந்தமெள்ளவெப்போதுமறவாதொழிப்பாய்சங்கற்பம். (௪௦)

மதமாமோகமையன்முதன்மனத்திற்பிணித்தகயிறுகளாந்
திதமாமனத்தைமனத்தாலேசேதித்திடலாமறிவோரா
விதமாநெடுங்கூர்விவேகத்தாலிரும்பாலிரும்பையறுப்பதுபோல்
விதமாமனத்தைமனத்தாலேவீய்ப்பாய்பிறவிமயக்கறவே. (௪௧)

நனவிற்சுழுத்திநிலைமேவிநன்றாயெல்லாமுள்ளகற்றித்
தனதிச்சையில்வந்ததுபுறத்தேசமைப்பாய்சித்தமுண்டாகைக்
கனதுக்கமதாஞ்சித்தமறிற்கனத்தசுகமாஞ்சித்தத்தை
யுனதுட்படுத்தியுணர்வின்மையாலேயொழிப்பாயுணர்வுருவாய். ()

யனதீதென்னுமறிவுதனையிடர்கற்பனையென்றுரைசெய்வார்
கனமாமறிவின்பாவனையாற்காண்பதெல்லாங்கையகலி
லனகாதிபனேகற்பனைகளற்றதென்றுயர்நல்லோர்
மனமாநினைவேசங்கற்பமனத்தினினைவற்றதுசிவமே. (௪௩)

௩௬-வது. மனோநாசம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௬௪௪.

## முப்பத்தேழாவது நன்மனஞ்சுகஞ்செய்தல்.

அஃதாவது
கோரமூடமிறந்த
சாந்தமனதியாவர்க்குஞ் சுகஞ்செய்தலி
னதன்பின்னரிதனை வைக்கலாயிற்று.

கலி.

மந்திரியெனலாமுண்மைமருவுறும்விசாரத்தாலே
யிந்திரியங்களென்னுமிடர்ப்பகையறுத்தலாலே
தந்திரியெனலாமிட்டஞ்சமைத்தலாலேவலாளா
ரொந்திரிகிலாதவுள்ளநோக்கியவிவேகத்தோர்க்கே. (க)

ஆலிக்குமின்பத்தாலேயன்புறுமனைவியாகும்
பாலிக்குமியல்பினாலேபாவனதந்தையாகுஞ்
சீலிக்குமுறுதியாலேதேடருநட்புமாகுந்
தூலிக்கும்வினைகளில்லாத்தூய்மனம்விவேகத்தோர்க்கே. (உ)

நல்லனநூல்களாலேநல்லனநெறியைநோக்கி
நல்லனதியானஞ்செய்துநல்லனுபவத்தைநண்ணி
நல்லனசித்திநல்குநல்லதாய்த்தன்னைமாய்க்கு
நல்லதோர்தாதையாகிநல்லவர்க்குள்ளந்தானே. (ங)

மயலிலாமையாநூல்களான்மகத்துவமுதலா
முயர்குணங்களால்வருந்தியுமனத்தினையுய்க்கிற்
றுயர்கணீங்குமூவுலகுறுசெல்வமுந்தொக்குப்
பயனளிக்கினுமுயர்வுறுமனமெனப்பயிலா. (ச)

வேறு.

வெம்புதல்போய்த்தண்ணென்றவன் மனதுக்கிவ்வுலகின் வியாபாரங்கள், செம்புகர்வேழத்தினுக்கான்குளப்படிபோற்ருன்று மாறீனநெஞ்சுக், கம்புவியிற்றெழில்சிறிதேயாகினுநீந்திட வரிதாமாவின்பாதப், பைம்புனலுங் கிழக்கொதுகுக் கெல்லேகளை காணுதபரவையன்றே. (ரு)

வேறு.

மெல்லிதாகிக்குளப்படியாய்விவேகபுந்திக்காமுலக
மல்லலாகிக்கரைகாணுவாழ்மாகுமறிவில்லோர்க்
கெல்லேயிலதாயறிபொருளாலெண்ணப்படாதாய்ச்சாந்தமுமாய்ச்
சொல்லுமெல்லாமாய்நினைவுதோன்ருச்சற்சிற்சுகமுண்டாம். (சா)

உடனுனென்னும்புந்திபிறப்புற்றகட்டாமொருக்காலு
மிடர்தீர்வீடுவிருப்புறுவோர்க்கியல்பன்ருகுமிப்புந்தி
திடமாக்கிஞ்சின்மாத்திரமுமில்லாச்சின்மாத்திரவடிவன்
றடவானிலுநானணுவென்னுஞ்சமமாம்புந்திபிறப்பறுக்கும். (எ)

நஎ-வது. நன்மனஞ்சுகஞ்செய்தல் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம்-சுகஅ.

## முப்பத்தெட்டாவது வாசனுலட்சணம்.

அஃதாவது

மனோநாசஞ்செய்தவிடத்திற் பூருவசமஸ்கார வாசனை யுதயமாதலைக்கெடுக்கும்பொருட்டுமுன்னவ் வாசனுலட்சணந்தெரிய வேண்டுதலி னதன்பின்ன ரிதனை வைக்கலாயிற்று.

கலி.

மடமையின்செறிவேமெய்யாய்மலியகங்காரந்துன்றிப்
படர்தருபிறப்பைமேன்மேற்பயில்விக்குமலினமென்ப
ரடர்மறுசநநமென்னுமங்குரமின்றிச்செந்தீச்
சுடமுளையாவித்தொக்குஞ்சுத்தவாதனையதென்பர். (க)

வேறு.

என்னுடைமைந்தவென்னுடைநிதிநானிவனவனிதுவதுவென்னு, மின்னுடைநிலைமையிந்த்ரசாலத்தால்வீங்கியவாதனையோங்கு,நன்னுடைநிலையஞ்ஞானமாநிலைபோய்நாசமாயையிற்கருத்தொழிவாய், நின்னுடைவடிவிலவற்றைநீயென்றேநினைவிலார்போல்வருந்துவதென்,()

வேறு.

திடமானபாவனையான்முன்பினெண்ணந்தீர்ந்துபதார்த்தந்தனைச்சேர்வுறக்கைக்கொள்கை, மடமானவாதனையாங்கடுவேகத்தால்வல்லையிற்றானேயொன்றைமதித்துநாடி, யுடனேயவ்வுருவாய்வேற்றெண்ணமெல்லாமொழித்திடுமிவ்வாதனையின்வசத்திலோடித், தொடர்பானபுருடனுமாங்கதன்மெய்யாகித்தோன்றுபொருணன்றென்றேதுவண்டுமாலாம். (உ)

வேறு.

என்றமுனியையனைத்தையமென்னும்பனிக்குச்சரற்காலந்
துன்றுகடுங்காற்றெப்பாயிச்சங்கமேதுசொல்லென்ற
வென்றியிராமற்கவனுரைப்பான்மிகுபல்பொருள்பாவாபாவத்
தொன்றுமகிழ்வுபொறுமைகளையுறுதன்மலினவாதனையே. (ஈ)

உஅ-வது. வாசனுலட்சணம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-எஉஉ.

## முப்பத்தொன்பதாவது வாசனாத்தியாகம்.

அஃதாவது

வாசனையாற்றுக்கம் வருதலையறிந்தவனதனைக்
கெடுக்கவேண்டுதலி னதன்பின்ன ரிதனை வைக்கலாயிற்று.

கலி.

அலைசெய்வாதனையைச்சேடமறவிடனல்லதென்று
நிலைபெறுமுத்தியென்றுநிமலமாநெறியீதென்றுந்
தலைமையோர்பகர்வரன்னதிருவகைச்சகநல்கி
யுலைதருமலினமொன்றதொழித்திடுஞ்சுத்தமொன்றே. (க)

வேறு.

சுத்தவாதனைதொடரிலதனுன்மெல்லத் தூயபரபதம்பெறுவைச்சுத்தமல்லாப், பெத்தவாதனைதொடரிற்றுன்பமாக்கும்பெரிதுவருந்தியுமிதனைப்போக்கவேண்டும், வைத்தசுபமசுபமெனும்வழியிரண்டால்வாதனையாநதிபெருகும்வருத்தத்தாலே,மெத்தமுயன்றசுபவாதனையைத்தள்ளிமிக்கசுபவாதனையின்மேவிநிற்பாய். (உ)

வேறு.

எந்தவெந்தவாதனைகளிதயத்தெழுந்தவவையெல்லா
மந்தவந்தவிடத்தழிக்கிலதுவேமாயைக்கழிவாகு
முந்துபோகபேதமெனமொழிந்தவிருவாதனைவிட்டு
வந்தபாவாபாவங்கண்மாற்றிவிகற்பமறமகிழ்வாய். (ங)

வேறு.

துனிமனச்செருக்குமாய்த் துத்தொடர்பொறிப்பகையைவெல்லிற்
பனிபடுபதுமக்கான்போற்படர்ந்தவாதனைகண்மாளுந்
தனியறிவொன்றேயென்றுசாதித்திம்மனம்வென்மட்டுங்
கனியிருள்செறியும்பேய்போற்கருத்தில்வாதனைவந்தெய்தா. (ச)

வாதனைப்பாசத்தாலேமன்னுயிரெல்லாங்கட்டுண்
டேதமாமந்தப்பாசமிறுகுமேலிடனாச்செய்யும்
வேதனையிலதூரந்தீரநழுவுமேல்வேட்கையாலே
தீதிலோரனேகங்கற்றோர்தீரரொன்னினுங்கட்டுண்பார். (௫)

மற்றினியிர்தவாற்றால்வாதனையாலேபந்தம்
பற்றுறுமதனைநீங்கிற்பந்தம்போம்விவேகத்தாலே
யுற்றறியுண்மையாலேயுபாதிவாதனைபோம்போனா
லற்றமில்சித்தநெய்தீர்தீபம்போலாகுமன்றே. (௬)

புலன்களிற்பழகிச்சித்தம்பூண்டவாதனைகண்முன்னே
யலம்பெறமாற்றிவீட்டிற்கடுத்தவாதனையுந்தீர்வாய்
நலந்திகழருள்சந்தோடநட்புதாசினமிந்நாலு
மலந்தவிர்குணங்களாகமனத்தழுந்தாதுசெய்வாய். (௭)

மறுகுவாதனைகடேர்ந்தமவுனத்தையொழியவேறோ
ருறுகதிநல்லதில்லையுணர்வனவுணர்ந்ததாகுந்
துறுதிசைபத்துஞ்சுற்றிமீண்டதாந்தொல்லைஞாலத்
தறுதியாயுண்மைகண்டோர்சிலர்நின்றோரவத்தின்மாய்வோர். (௮)

வாதனையென்னுமிந்தவலைபுந்திவாளாலீர்ந்து
மோதுசூறைக்காற்சிந்துமுகிலெனச்சிந்திநிற்பாய்
பாதவங்குடாரத்தாலேபடுப்பபோனெஞ்சைநெஞ்சாற்
றீதறமாய்த்துமேலாம்பதத்திலேதிரமாய்நிற்பாய். (௯)

பொருளினோமல்லநாமுநமதல்லப்பொருளுமென்றே
தெருளுற்றுட்குளிர்ந்தியாவும்வினோதமாய்ச்செய்யுநெஞ்சான்
மருளறுநிச்சயத்தால்வாதனைவிடுதருனே
யருள்பொழிமேகமொப்பாய்தேயமென்றறிவாயன்றே. (௰)

தனதுவாதனைமாண்டெல்லாஞ்சமமதாநெஞ்சாற்பண்ணி
யெனதெனுதுடலைநீக்கினிந்தவாசனைாசந்தா
னனகமாநேயமாகுமகங்கரமயமதான
வினவுவாதனையைமுற்றும்விநோதமாய்விட்டோர்மேலோர். (கக)

வேறு.

உரைத்தவசனங்களிறு விட்டின்பின் றேஞரைசயூருளியிரந் நாற்றமென்ன, நிரைத்தவிவற்றென்றென்றன்மாய்ந்துபோகுநிலைய றிக்குமவையைந்துநேரேகூடிக், கரைத்தலுறுபவர்க்கின்பமெங்கேயு றன்கட்டுக்கு வாதனையேகயிற்றுச்சாலம், புரைத்தெழுநெஞ்சேயது வேபோகுமாகிற்பொருவில்சயமஃதுனக்குப்புகலுங்காலே. (கஉ)

வேறு.

வாதனைபொறிகட்கெல்லாமன்னுகாரணமன்றாகு
மாதலான்மூர்க்கமானவைம்பொறிநீவிர்நெஞ்சி
னைதவாதனைகண்மாற்றிக்கருமங்களெல்லாஞ்செய்வீர்
வேதனைத்துன்பமொன்றுங்கிஞ்சிலுமேவாதென்றும். (கங)

வேறு.

ஆசகலாவிடயவிடவிசேியாகியனந்தமாநாளெனும்வாதனையைத் தீர, மாசறவிட்டிச்சையெலாமொழிப்பதென்னுமந்திரயுத்தியினாலே மறுசென்மம்போய்த், தேசமுறுபகவானையச்சமெல்லாந் தீர்விடமா வாய்மனமே திரள்சங்கற்பம், வீசுதருமயல்கொடியாய் நீயாங்காட் டைவெட்டிநெடும்பூமியிலேவிநோதஞ்செய்வேன். (கச)

வேறு.

சாலவும்வாதனைபோகிலிம்மனஞ்செய்தொழில்புரிந்துந்தான்செ ய்யாதாஞ், சிலமனநெடிதகல்லருகிருந்தார்செப்புமொழிதெரியாதா

ப்போற், றூலமனந்தொழில்விடினுஞ்செய்ததாம்வாதனையேதன்னு மாகிற், கோலவுடலசைவறினுங்கனவிலேவரைநின்றுங்குழிவீழ்வார் போல். (கரு)

வேறு.

சிந்தனைவாதனையின்றித்திரமானமனத்தினையேதியானமென்ப
ரந்தவுபசாந்தமுமக்கேவலத்தன்மையுமென்றுமதுவேயாகு
மிந்தவுயர்பதப்பொருட்டுவாதனைசாலவுநேர்மையெய்தவேண்டுஞ்
சந்ததம்வாதனையில்லாமனந்தொழிலில்லாப்பதத்தைச்சாருமத்தால்.

வேறு.

நெருக்கமுறுவாசனையே நெஞ்சினது தொழிற்றிரமாகீங்காத்து ன்பம், பெருக்கவிடுமாதலினால்வாதனையேமிகநேர்மைபிறக்கச்செய் வாய், வருக்கமுறுபலபொருளினும்னெனும் பாவனைமனத்தால்மாற்றி யெங்ஙு, னிருக்குதியங்ஙனமிருப்பாய்வரையிலேமனையிலேயெங்கே யேனும். (கஎ)

வேறு.

சங்கமடியாப்பொருளுண்டாஞ்சங்கமடியாவாபத்தாஞ்
சங்கமடியாவாசைவருஞ்சங்கமடியாப்பிறப்புண்டாஞ்
சங்கமறுத்தல்வீடென்பர்சங்கமறுத்தல்பிறப்பறுத்தல்
சங்கமறுத்துப்பொருள்களினீதனிச்சீவனின்முத்தியைப்பெறுவாய்.

கொத்தாகியவாதனைமுற்றுங்குறிக்கொண்டறிந்துகைவிட்டுச்
சத்தாசாமானியவடிவமாஞற்றனிவீடதுவென்ப
ரொத்தாரியரோடுசாவியுநூலுணர்ந்துமுணர்வொன்றையும்பாவித்
தத்தாற்சத்தாசாமானியந்தானுகுமாகுமதுவீடே. (கக)

அகல்வாதனையின்வித்தானவந்தச்சுழுத்திவீடளியாப்
புகல்வித்தல்லாவாதனையேதுரியம்பொன்ருவீடளிக்கு
மிகல்வாதனைதீகடனுெய்நஞ்சிறைஞ்சார்கோபநேயமிவை
மிகவேண்டாஞ்சற்றுனுமிக்கவருத்தஞ்செய்திடுமே. (உ0)

வாதனைமாத்திரம்விட்டாற்சனைமரணமுறுபிறவிமருவாதான
தீதில்பதமுண்டாகும்வாதனையோடேசேர்ந்தசித்தந்தானே
பேதமையஞ்ஞானமாம்வாதனைதீர்மனந்தானேபிறவாஞான
மேதமறுஞானத்தானேயமுணர்ந்தாற்பிறவியெய்தாதன்றே. (உக)

ஙக-வது. வாசனுத்தியாகம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம்-கூசஙு.

## நாற்பதாவது தத்துவதரிசனம்.

அஃதாவது
மனோநாசம் வாசனுட்சயஞ் செய்தவன் தத்துவதரிசனஞ்
செய்யவேண்டுதலி னதன்பின்ன ரிதனை
வைக்கலாயிற்று.

கவி.

ஆதியந்தமிரேற்றமேதன் வடிவாகியபரமிங்குச்
சோதியாய்நின்றதென்னுமிவ்வுறுதியேதுகளறுமெய்ஞ்ஞானம்
பேதியாநின்றகடபடவடிவமாம்பெரும்பொருட்பலசத்தி
தீதிறப்பரம்வேறிலதென்றுணர்திண்மையேநற்காட்சி. (க)

வேறு.

செகங்கண்மூன்றினுமுண்மையாம் பொருளறிதிறமெதுவெனச் செப்பிற். செகங்களியாவையுந்தற்பொருள்வடிவெனத்திரமுறுநிறை

வாகுஞ், செகங்களியாவையுஞ்சொரூபமேயிதிற் றிகழபாவபாவனை யெங்கே, செகங்களிற்செறிபெத்தமுத்திகளனைத்தியங்குவேற்றுமை யெங்கே. (உ)

வேறு.

பிறிதுகாண்பனவில்லைநெஞ்சில்லைமெய்ப்பிரமமேயவையாகிச்
செறியுமாலிவை யாவுமொன்றாகியசிற்பரவிசும்பாகு
நெறிகொள்பர்தம்வீடெங்குளவிதுவெனநிகழ்பெருவடிவாகிக்
குறியறும்பெரும்பிரமமேநின்றதுகுறைந்திறந்ததுநெஞ்சே. (ங)

ஒருமையாகவேயுணர்விறுலுணர்தியாலுருவைநன்குறநோக்கிற்
றருவுங்கற்களும்படங்களுமுதலியசற்றும்வேற்றுமையில்லை
மருவுசங்கற்பமெங்குளசீவனும்மவையகப்பொருளியாவு
மருகலின்றியசாந்தரூபம்பெறுமடிமுடிவுறநோக்கில். (ச)

சo-வது. தத்துவதரிசனம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம்-கூசஎ.

---

## நாற்பத்தோராவது அனுபவம்விளுவுதல்

அஃதாவது
தத்துவதரிசனஞ்செய்தவனையாசாரியரனுபவங்
கேட்கவேண்டுதலி னதன்பின்னரிதனை
வைக்கலாயிற்று.

கலி

மிகத்தெளிந்துகெம்பீரமாய்ச்சமமதாம்விழியா
லிகத்துறுந்தொழின்மன்னவவியற்றுதிகொல்லோ
பகுத்தகாலத்தையறிவுறுநினதுபாவனைதான்
றெகுத்தவாதியும்வியாதியுந்தொடர்கிலகொல்லோ. (க)

அடையும்போதினிதாகியபோகத்திலழுந்தா
திடைநிலாய்கொலோசங்கற்பமற்றினைப்பாறித்
தடையில்சாந்தமாய்முத்தியாய்ச்சலனமொன்றில்லா
நடையயின்றுயர்சமாதியைநண்ணினைகொல்லோ. (உ)

வேறு.

இதுநீள்காலமெங்குறைந்தாயிதயவிடர்தீர்ந்தனைகொல்லோ
பொதுவாயுனைநீயறிந்தனையோபோதவிஞ்சைபலித்தனவோ
சதுராநலனுண்டாயினையோசாற்றுமென்றமொழிகேட்டு
முதுவாய்மையினுற்பாசனிவைமொழிந்தான்விபாசன்முகநோக்கி. ()

வேறு.

தடையின்றித்தவமுனக்கு நடந்ததோசார்வனதான்சார்ந்தவன்றோ, விடையங்களிறந்தனவோ வென்றுலகின் காரணமாம் விமலன்கூற, விடையவனையான்வணங்கிவேண்டுகோளாலுரைத்தேன் விண்ணோர்கோவே, யடைவுறநின்னருள்பெற்றோர்க்கடைவரிதொன்றிலைப்பயங்களருகும்வாரா. (ச)

ஒருமுகூர்த்தமிருந்துணர்ந்துவிழித்தலோடுமுயர்கும்பனுரைசெய்வானுளதாய்நன்றாய், நிருமலமாய்ச்சுத்தமாய் மிகமெத்தென்றுநிருவிகற்பங்களுக்கெல்லாநிலையமாகித், திருமிகுமிப் பதத்திலேசுகமாய்த்துன்பந்தீர்ந் தனையோ வுள்ளுணர்வுதெளி வுற்றாயோ, வருமயக்கமொழிந்தனையோஞேயநன்றாயறிந்தனையோகாண்பனகண்டனையோவென்றான். (ரு)

வேறு.

பேதமேவடிவமானதுன்பங்கள்பேதித்தாயோ
போதல்போதினிதாஞ்சங்கற்பத்தினிற்பூண்டவின்பந்

தீதெனவேருஞ்செற்றுச்சமதரிசனமுற்ருயோ
யாதினும்வீடுபெற்றற்றியைந்தசெய்தின்புற்ருயோ. (சு)

சக-வது. அனுபவம்வினவுதல் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம்-சுடுரு.

# நாற்பத்திரண்டாவது அனுபவ முரைத்தல்.

அஃதாவது.

அனுபவம்வினவிய வாசாரியர்க்கு
சீடன்றன் அனுபவஞ்சொல்லவேண்டுதலி
அதன்பின்னர் இதனைவைக்கலாயிற்று.

கவி.

கசனுயர்சமாதிநீங்கியொருபகற்களிக்குநெஞ்சன்
வசமறத்தழுதழுத்தவசனத்தன்யாதுசெய்கேன்
றிசையுறவெங்குசெல்கேன்றீர்ப்பதென்கொள்வதென்ற
மிசையுயர்கற்பநீர்போன்மேதினியெங்குநானே. (க)

மேனியிற்புறத்தினுள்ளின்மேலொடுகீழிற்றிக்கில்
வானில்வையகத்திலெங்குநானன்றிமற்ருென்றில்லை
யானிலாவிடமுமில்லையெனதிடத்திலாதுமில்லைத்
தானிகழ்பொருள்வேறில்லைச்சச்சிதாநந்தமென்ருன். (உ)

என்றுவெள்ளியேகியபின்னெல்லாமறிவாமுலகினைப்பார்த்
துன்றுவொக்குமொக்குமெனக்குசனுலுரைத்ததுண்மையதே
முன்றுமவனிசித்தால்குமூன்றுஞ்சித்துநான்சித்து
நன்றுலானதிசைசித்துகாட்டுகின்றதெலாஞ்சித்தே. (ங)

தெரிக்கும்பொருளுந்தரிசனமுந்தீர்ந்துவெறுநின்மலவடிவாய்ப்
புரிக்குமுதயம்விடாதென்றும்பொலியும்பரமப்பொருளானேன்
வரிக்குங்காட்சியிலாவறிவேவடிவாயொருகாலேயெங்கும்
விரிக்குநிறைவாயுபசாந்தவெளியாயறிவாமிகுபொருளன். (ச)

எனதற்றெண்ணமெல்லாம்போயிலைப்பற்றைந்துபொறிமயல்போ
யனகவறிவாய்த்தொழிலின்றியறியும்பொருடூரறிவேயாய்க்
கனமாயுள்ளும்புறம்பினுநிட்களமாயுண்டாமாத்திரமாய்ச்
சநநமரணமிலாவென்னைத்தயங்கக்கண்டேன்சத்தியமே. (ரு)

உள்ளிலொளியாற்கனற்பொறிகளொளிர்வதென்னவைம்பொறியுந்
தெள்ளியறியுமென்றுலேசெறிசித்திரமாய்த்திகழ்ந்தனவாற்
றள்ளிலயனேடுபட்டதனிக்கற்பாந்தத்துயிறனைத்தும்
வெள்ளவெளியாமப்போதுமீளாதொளிருமென்வடிவே. (சு)

இவனுனென்றுள்ளேபற்றுமெண்ணமெங்கேயெல்லையறப்
புவனமெல்லாநிறைந்தொளிரும்போதவடிவாமென்றனக்குக்
கவருமனப்பாவனைதானேகருதிலுண்டோமுடிவில்சுகத்
துவமையில்லாவுபசாந்தவுணர்வாங்கண்ணேயுலகெங்கும். (எ)

இவ்வாறுலகமெனும்பெருங்காடெய்திவருந்தாயென்றலுமே
வெவ்வாளிராமனுனாசெய்வான்விட்டேனையமெலாமிகவுந்
தவ்வாதறியற்பாலவெலாமறிந்தேன்சலியாதருள்பெற்றேன்
கைவாரணனேராசைதனைக்கடிந்தேனென்றிலசைவில்லேன். (அ)

பிறவிக்கடலிற்றீரநிலைபெற்றுப்பிறழ்கற்பனையெல்லா
மறவிட்டயர்வற்றறவலிதாயறவேதெளிந்தானந்தத்தை
யுறவுட்குளிர்ந்துநன்றுனதுள்ளமென்றுமெய்ஞ்ஞானத்
திறவித்தகனும்வசிட்டனுடன்செப்பிமேலுஞ்செப்புற்றான். (கூ)

வேறு.

என்றருளித்திருநெடுமாலிமைப்போதுமோனம்போலிருத்தலோடும், வென்றிமிகுவிசயன்மகிழ்ந்துரைசெய்யும்வகைகேளாய் மெய்ம்மைவீரா, கன்றுதுயரனைத்தும்போயெனதுமதிபரம்பொருளைக்கலந்தையா, துன்றிரவி காணவிரி கமலம்போ லெனவிசயன் சொல்லுமன்றே. (௧௦)

ஆற்றுமதத்துவமானவதனுற்றுனேயயனென்றுசொலப்பட்ட தனிலமாகித், தோற்றுமிவையுபசாந்தச்சொருபமாகுந்தோன்றலேயெனவொக்குஞ் சொன்னதெல்லா, மேற்றனவேபடைப்பவனின்மையினுல்வையமில்லையாமதனுற்பல்பொருளுக்கில்லைத், தேற்றுகின்றவிவ்வகையா லறிந்தேனன்றுய்ச்சிவமானேன்வேறென்றுந் தெரியக்காணேன். (௧௨)

வேறு.

எனதுநின்னருளாற்பங்கிற்றெய்வத்தாலெலாம்விட்டப்பான்
மனநிலைநின்றேன்மாயைக்கரைக்கண்டேன்வருபேறெல்லாங்
கனமுறப்பெற்றேன்கேட்கக்காணவேண்டுவதொன்றில்லை
யனவரதமுநிறைந்தேனயர்வற்றேன்பிறவியற்றேன். (௧௨)

பயமற்றேன்மோகமற்றேன்பற்றற்றேன்சமமாய்நின்றே
னுயர்வுற்றேனெல்லாமானேனொருசெயலற்றேன்விண்ணு
ளியலொத்ததெளிவாய்ச்சாந்தமெய்தினேனென்றுன்மோகச்
செயன்முற்றுங்கடந்தசிந்தைச்சிகித்துவசப்பேர்மன்னன். (௧௩)

சஉ-வது. அனுபவமுரைத்தல் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௬௬௬.

---

## நாற்பத்துமூன்ருவது வித்தையாநந்தம்.

அஃதாவது

சுபானுபவமுண்டானவிடத்தில்வித்தையானந்தமுண்டாதலி
னதன்பின்னரிதனை வைக்கலாயிற்று

கவி.

அந்தோவந்தோவிதுநெடுநாளறிந்திலேனின்றறிவுற்ற
சந்தோடத்தையென்சொல்வேன்சகலநினைவுஞ்சமித்தாறி
கொந்தோரின்பதுன்பத்தாறேவாகிருக்குமிடமிதுவே
யுய்ந்தோருறையும்பதமிதுவேயுபசாந்தத்தினுயர்விதுவே. (க)

ஆவாவிப்போதுள்ளபடியறியுநெறியிலெனையறிந்தே
னேவாவிகற்பமற்றறிவுள்ளொளியாஞ்சீவனுருவிதுவோ
தாவாதெங்குமுளநாறுந்தத்துவத்திற்சகமெல்லா
மேவாநின்றவிரவிமுதற்கடமீருகவிளங்கியதால். (உ)

காதலென்னுங்கட்டறுத்துக்காயமென்னுங்கூடகன்று
சாதன்மேவுமகங்கரமாந்தனிப்புள்ளெங்கேபறந்துளதோ
வேதமறுஞானிஞானியென்னுமொருமையிருமையதா
யோதும்விதியான்மீண்டொன்றியுயர்ஞானியானேம். (ங)

வேறு.

வேண்டியவாவிளையாடித்தற்பதத்தைமேவினன்கேவலமானேன் வெற்றியுற்றே,னீண்டுவுயர்நிருவாணமானேன்செய்வதிலதானேன்பி நிவற்றேனிடம்வேறற்றே, னீண்டதெளிவுடைமையொளிவுடைமை புண்மைநிகழ்வுடைமை யறிவுடைமை நீங்காமெய்ம்மை, மாண்டசுக முடைமையுபசாந்தநீர்மைமகிழ்வுடைமை நிறைவுடைமை மகிமை யான்மை. (ச)

ஆபரணமில்லாமையுதாரத்தன்மையழியாததேசுடைமையகண்டநீர்மை, யாவதுந்தானுமுறைமையச்சமின்மையேசமாந்தன்மைமனமெழுந்தோடாமை, யோவலிலாதுடனுறையிக்குணங்களென்னுமுத்தமிகள் சுமங்கலிகளொப்பிலாதார்,பாவனையொன்றுஞ்சொருபமடைந்தேற்கென்றும்பன்னியராயுளங்கவரும்பாவைமாரே. (௬)

வேறு.

இந்தவறிவெத்தாற்காணப்பட்டதென்னில்வேறேதுமில்லை
யந்தமில்காலத்தாலேயறியவேண்டியதறிந்தேனம்மவம்மா
மூந்துவறிவின்பரப்பைமுடிவாகமனக்கரணமுதலவெல்லாஞ்
சிந்தனைசெய்யாமையாலுதித்தனவாஞ்சிந்தித்தாற்சேரப்பொய்யே. ()

அம்மவம்மகடவுண்மகனனவுன்னலறிவுற்றேன்
மம்மரொழிந்தேன்கேவலமாய்மலங்களற்றேனிதுவென்று
விம்முசங்கற்பத்தெய்தாவேறொன்றறயாவையும்விட்டேன்
செம்முபொருளின்றிரளெல்லாஞ்செனனமளிக்கும்பந்தனையே. (எ)

வேறு.

நரபாலனதற்குரைப்பான்பகவனேநின்னருளாலேபெருஞ்செல்வநலத்தான்மிக்குப், பரமாகியனைத்திற்குமேலாய் விஞ்சுபதங்கண்டேனகோவகோபரமஞானந், திரமானபெரும்பெரியோர் கூட்டங்கிட்டாத்தெள்ளமுதாய்ப்பேரின்பந்தேங்கநல்கும்,வரமாநின்கூட்டத்தாலொருகாலத்தும்வாராதநல்லமுதுவரப்பெற்றேனால். (அ)

வேறு.

ஐயமற்றனனுசையற்றேன்பிறிவற்றே
ஞெய்யவிண்ணையொத்தேன்பொருள்வடிவமாய்நடங்கேன்
செய்யலாவதோர்கிட்டையுற்றேன்சித்தமகிழ்ச்சி
வெய்யதுன்பமொன்றிலனிதுவதுவெனவிளங்கேன். (கூ)

சோதிமண்டலத்தெழுந்ததாய்ச்சுவரினிற்படாமன்
மீதுவிஞ்சுதல்குறைதலற்றிருப்பதோர்விளக்கக்
தீதிலாவெனக்குவமையாஞ்சகத்திணைத்தீர்ந்து
யாதுமேவிவிண்ணிற்பதற்கிணையொத்துநின்றேன். (௬௦)

௨௫ - வது. வித்தையானந்தம்முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-௬௭௬.



## வாசிட்டத்திரட்டு முற்றுப்பெற்றது.



திருச்சிற்றம்பலம்.

# வாசிட்டத்திரட்டின்
# செய்யுள் இலக்கவிபரம்.

(மனோலட்சணம்.)

உ

கணபதிதுணை.

ஸ்ரீவாசுதேவபரப்பிர்மணேநம:

ஸ்ரீ சிதம்பரசுவாமிகள் திரட்டியருளிய

# பாகவதத்திரட்டு.

# பகவற்கீதைத்திரட்டு.



இவை

சமிவனக்ஷேத்திரமென்னுங் கோயிலூர்

ஸ்ரீ முத்துராமலிங்கசுவாமிகளின்

ஆதீனத்திற்குரிய

௸ ஸ்ரீ சிதம்பரசுவாமிகள்

மாணாக்கர்களிலொருவராகிய

அ-இராமசுவாமிகளால் பரிசோதித்து.

புதுவயல்-கு-வீ-பழ-பழனியப்பசெட்டியார்

வேண்டுகோளின்படி.

சென்னை

ஜீவரக்ஷாமிர்த அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.



விய௵ சித்திரை௴

# சூசிபத்திரம்.

பாகவதத்திரட்டுச்செய்யுளும்
அதன்அத்தியாயவிபரமும்
இப்புத்தக அந்தத்திற்
காட்டப்பட்டிருக்கின்றன.

கணபதி துணை.

ஹரிஓம்ஸ்ரீ வாசுதேவபரப்பிர்மணேநமஃ

# பாகவதத்திரட்டு.

சீர்பூத்த பரஞ்சுடராய்ச் சித்தாகிக் கானலிடை
நீர்பூத்த தெனவுலக நிறைந்தொளிதன் பாற்றோன்ற
வேர்பூத்த முத்தொழிலு மினிதியற்றித் தனிநின்ற
கார்பூத்த திருமேனிக் கடவுண்மலரடி நினைவாம். (க)

## பரமாத்மலட்சணம்.

பின்னபின்னமாய்த்தருக்களிற்பிறங்கியதழலிற்
றுன்னுகூத்தினிற்பற்பலவேடமுற்றவரின்
மன்னுமெவ்வுலகத்தினுமருவியேழ்பிறப்பாய்த்
துன்னுநல்லுருவாகவுந்துலங்குவன்றொல்லோன். (உ)

உண்மையாவுனக்குநாடி லுருவிலையுரைக்கிற்பொய்க்கும்
பெண்மையாமாயையாலேபெருநல்லுருவென்றனுந்
திண்மைசேர்நின்னையன்றித்திகழ்சகமில்லையானால்
வண்மையால்வழுத்துவாரார்வழுத்திடப்படுவார்யாரே. (ங)

ஈங்கிதன்றீங்கிதன்றென்றெவையும்விட்டொருவிநின்ற
வாங்கது தானே தானென்றறிவினாலறிந்து தன்னை
நீங்கலாவுணர்வினாலேநினைந்துகொண்டிருப்பானன்ன
லோங்கியபரமானந்தவுருவினைநினைந்தானுமால். (ச)

வேறு.

கனவிற்கண்டகடுஞ்செயல்பொய்ப்பதும்
புனல்விகாரம்புனல்மதிக்குற்றது
நினையிற்பொய்ப்பதும்போனிகழ்மாயைசேர்
வினைகளொன்றும்விமலனுக்கில்லையால். (௫)

வேறு.

பனிபடுதிரையெழுபருதிகண்டுசூழ்
கனியிருளிரிவதுகடுப்பக்கட்டமை
வினையிருளிரிதரவிளங்குமென்னையே
நினைதரின்மேவுறுநிகரின்முத்தியே. (௬)

வேறு.

புனலுறுநடுக்கந்தன்னைப்புனலிடைத்தோன்றுகின்ற
பனிமதிமேலதாக்கிப்பகர்வதோர்பான்மைபோல
மனமுதலாகிநின்றமாட்சிசால்கரணத்துற்ற
வினையினையுயிர்மேல்வைத்துவிளம்புவர்புனைந்துமன்றே. (௭)

உரைத்திடுங்கனவுபோலவுபாதிபொய்யாகுமென்றும்
விரித்தமூன்றவத்தையுள்ளும்விளங்குவன்புருடனென்றுந்
திருத்தியவறிவினாலேதேர்ந்துகொண்டிருப்பான்முத்தி
தரித்திடுமும்மையானதனுவொழித்தடைவனென்றான். (௮)

பொறிகளையடக்கித்தன்னைப்புலப்படவறிந்தானாகி
னுறுதுயிற்கனவுதன்னிலுற்றிடும்படைகளெல்லாஞ்
செறிதுயினீங்கிற்பொய்யாந்திகழ்பவனொருவன்றான்போ
னெறியுறுமுபாதிநீங்குநிறைந்ததோரறிவாய்நிற்பான். (௯)

தோற்றுவன்சத்தாய்ச்சித்தாய்ச்சுத்தமாய்ச்சுகமாய்த்தோன்றிப்
போற்றியநாமரூபம்புகல்குணமொன்றுமின்றி
யாற்றுமோர்வினையுமின்றியமர்ந்தவன்விகாரமெல்லாஞ்
சாற்றியகுணங்களாலேசார்ந்திடுமுணைக்கின்மாதோ. (௧௦)

வேறு.

தந்தையிவனன்னையிவளெனச்சாற்றுமுறைதிறம்பி
வந்துதிப்பர்பிறவிதொறும்வழங்குபணிப்பொருள்போன்றே
யந்தமிலாவானந்தமாகியறிவானபொரு
ணந்தலிலாத்தானெனவேநாடியறியாதவரோ. (௧௧)

வேறு.

பாதவங்களின்றளிரொடுபூமுதற்பலவு
மோதில்வேறுவேறுருவெனவொளிருமாபோலக்
கோதுசேரறுவிகாரமாங்குணமுடற்கன்றிப்
பேதநீங்கியேபிறங்குமெய்ப்பொருட்கிலைபேசின். (௧௨)

பன்னுமாக்கைசேரவையவமுதலியபலவு
முன்னியீங்கிதன்றெனமுறைமுறைமையாயொழித்துச்
சொன்னபுந்தியிற்கரியெனத்தோற்றியவறிவை
யின்னதேபரம்பொருளெனவறிவதிங்கியல்பே. (௧௩)

கூறுமங்கியுந்தூமமும்போற்குணகுணியாய்
வேறுவேறுசேர்பொருளெலாமேவியொன்றாகி
யீறிலாமுதலாயுடற்கிசைவிகாரங்க
ளாறுமெய்ப்பொருட்கில்லையென்றறிவதேயறிவே. (௧௪)

புந்திமுக்குணம்பொருந்திமூன்றவத்தையும்பொருந்து
மந்தமின்றியவவத்தையிலறிவெனவமரு
நந்தலின்றியபரம்பொருளுமெனக்கருதிப்
பந்தமுற்றவெவ்வினையறப்பரத்தொடொன்றுவரே. (௧௫)

மனமெனுமரசனூலேமருவுகற்பனைகளாகிப்
புனைவுறுபெயருலோகம்பொருந்துதல்குறித்தலாது
நினைவுறுபரமானந்தநித்தியப்பொருளுக்காதி
வினைநடுவந்தமென்னவிளம்புமோர்தன்மைத்தன்றால். (உஎ)

வேறு.

பிறத்தலுமிறத்தலும்பேசிலாக்கைக
ளுறத்தகுமுண்மையாயுற்றநல்லுயிர்க்
கறத்துறையரசவக்குணங்களின்மையா
லிறத்தல்மற்றுனக்கிலையென்றும்வைகுவாய். (உஅ)

கடத்துறைவானுமக்கடமுடைக்கில்வா
னிடத்தொடுமொன்றுபட்டிருக்குமாறுபோற்
சடத்துறையுணர்வுமச்சடந்தனக்கிலங்
கடக்கரும்பரத்திலொன்றாகிவைகுமே. (உகூ)

வேறு.

தந்தைநற்றாய்தம்பிதம்முன்றனெனு
மைந்தர்கண்முதலினோரென்றும்வைகுவேன்
சிந்துசெங்கதிர்ச்செழும்பொன்னிற்செய்தசீர்
நந்தலிலாதநற்பணிகள்போலவே. (ங0)

வேறு.

காதல்விட்டுக்கருதியபேதமா
யேதநீங்கிறொய்துவர்முத்தியிற்
பேதமாகுமுபாசனைபெற்றிடில்
வேதனாகினுமீளவுந்தோன்றுவான். (ஙக)

வேறு.

அன்புசெய்வதிங்கரிதிலையன்புசெய்வதுதான்
பொன்பிறங்கியவணியெலாம்பொலிந்திருப்பதுபோன்
மன்புகழ்ச்சராசரங்களாய்மாயனென்றுரைக்கு
நன்பெரும்பொருளிருக்குமென்றுளத்துணுடுவதே. (௩௨)

ஆதியிலொருத்தனாகிப்பரமென்றுரைக்கும்போது
மேதமிலொருவனாகியியையுமின்னடுவிற்பேத
மோதுயிர்பலவுமாகியுறைவபோலுறைவாயுற்ற
சோதியுன்விளையாட்டெல்லாஞ்சொல்லயார்வல்லர்மாதோ. (௩௩)

ஆதியாமாயையாகியகத்தகங்காரமாகிப்
பூதமாய்ப்பொறியாயந்தப்பொறிக்குறுங்குணங்களாகிப்
பேதமாமுயிராயொன்றாய்ப்பிறங்குசித்தாகிவைகுங்
கோதிலாவுன்னையன்றிக்குறிக்குமோர்பொருளுமுண்டோ. (௩௪)

வேறு.

முடியுமாரமுமொய்கதிர்ப்பட்டமுந்
தொடியுஞ்செஞ்சுடர்தூற்றுபொன்னுதல்போற்
படியுநீருங்கனலும்பவனமு
நெடியவானமுநின்னலதில்லையால். (௩௫)

அலகிலாவறிவானவரும்பொரு
ளுலகெலாமுடலாகவுவந்துறைந்
திலகுபேர்விராட்டென்னவுமுத்தொழில்
குலவுமூவருருவமுங்கொண்டதே. (௩௬)

வேறு.

கண்ணகன்றிடுமிடத்துள்வான்கடத்துள்வானெனவா
னெண்ணநின்றனபோகவொன்ருயியைந்ததனுற்
பண்ணுகின்றதன்மாயையிற்பற்பலபடைப்பாய்
நண்ணுகின்றதும்பிரமமொன்றென்றுநன்கறிந்தேன். (கஎ)

மாயையாமுபாதியாலேவழங்கினபலவல்லாமற்
றூயவாமணியிற்பொன்போற்றுலங்குமெவ்வுலகமாதி
மேயதோர்பொருளேயாகும்வினையினுற்பேதமாகிக்
காயமேதாமென்பார்கள்கலங்குவர்வெருக்கொண்டம்மா. (கஅ)

மருவியஞானகாண்டமந்திரகாண்டமென்றுங்
கருமநற்காண்டமென்றுங்கருதுமவ்வேதமூன்ரு
யுரைதருபவனுமியானேயுஞற்றிடுபவையுமியானே
யரசஞானத்தினுலேயறைந்திடுபவனுமியானே. (கக)

வேறு.

எங்குமாய்நிறைந்திலங்கியஞானவாரிதியிற்
பொங்குதெண்டிரைநுரைவரும்புற்புதமெனவே
யங்கண்மாநிலமுதலியவுலகங்களனைத்துந்
தங்கிநின்றெழும்வேறுவேறறிவிலர்சாற்ற (௨0)

மதிந்துதோன்றியதிரைநுரைகுமிழிமற்றனைத்துஞ்
சிறந்துதோன்றுமந்நீரலாற்றெரிக்கில்வேறிலைபோற்
குறைந்துதோன்றியவுலகங்களனைத்தையுங்குறிக்கி
னிறைந்துதோன்றுநல்லறிவலானிகழ்த்தவொன்றிலையால். (௨க)

வேறு.

ஆதியுநடுவுமுற்றவ்வந்தமுந்தானென்றாயு
மோதியநடுவிற்பல்பூணுருவொடுபெயர்வேறுற்றுத்
தீதறவிளங்கும்பொன்போற்செகத்துருநடுவினுற்றுப்
பேதமினடுவும்பின்னுமுதலுமப்பிரமம்வைகும். (சஉ)

சேலமாய்ச்சேலத்துற்றசித்திரம்பலவாமாபோல்
ஞாலமேமுதலவாகிநவையறுமுயிர்களாகிக்
காலமாய்க்கருவியாகிக்காரணமாகியொன்றாய்
மூலமாயழிவொன்றின்றிமுதன்மையாம்பிரமம்வைகும். (சங)

வேறு.

நுண்ணிதானசிலம்பியுண்டாக்குநூ
னண்ணியேயுறைந்துண்பதைநாடியா
னெண்ணிலாவுயிர்தந்தவையேய்ந்துறைந்
துண்ணுமோர்பொருளேயென்றுணர்ந்தனன். (சச)

## ஞானிலட்சணம்.

வேறு.

விரிவுறுநட்பொடுபகையைவிட்டுமனையறத்திருந்து
மருவுசெயப்படும்பொருளுமன்னுதொழில்செய்பவருங்
கருமமுமோர்பிரமமென்றேகண்டுவினைபுரிவோருந்
தெருளுறுசீரொதியாவோர்சேர்கதியேசேர்குவரே. (சரு)

வேறு.

அறைகின்றசராசரமியாவுமெழி
னிறைகின்றவுருத்திருநேசமுறு
மிறையென்றறிகின்றவிலங்குமுளத்
துறைகின்றவருத்தமபாகவதர். (சசா)

அறமார்மனையாரொடுமன்புசெயுந்
திறமாரொழின்மேவுசிறார்களொடு
மிறையோயிவண்யாமமதென்பதற
வுறைவோர்களுமுத்தமபாகவதர். (௪௭)

வேறு.

இப்பியேவெள்ளிபோலவிலங்குமத்தன்மைத்தென்ன
வொப்பிலாப்பிரமந்தானேயுலகுபோற்றோன்றிற்றென்று
செப்புமுள்ளுணர்வினாலேதேர்ந்துகொண்டிருப்போர்தம்மைத்
தப்பிலாஞானயோகத்தலைவரொன்றியம்புவாரோ. (௪௮)

அறிந்திடுஞானவாளாலகந்தையாம்வனத்தைநீக்கி
நிறைந்திடும்பிரமமாகிநித்தியமாவர்வேறாய்ப்
பிறந்திடுமுயிருங்காணார்பின்னமாய்ப்பிரிந்துநீங்கி
யிறந்திடும்பொருளுங்காணாரேகமாயிருப்பரன்றே. (௪௯)

நடையறுந்தொடையலொன்றேநாகமாய்விளைந்தவாபோற்
றடையுறுமாயைநீக்கித்தற்பரமாவராய்ந்தோர்
விடலருஞானயோகவித்தகவிவேகத்திவ்வா
றடைதரும்பிரளயப்பேராத்தியந்திகமென்றாகும். (௫௦)

வேறு.

பரிவின்வெட்டினுங்கெல்லினும்பயன்பொறுத்தளித்தும்
புரியுநல்லகைமாறெதிர்பொருந்திடாதசலத்
தருவிநீரடவிக்கனிமுதலியவளித்து
மிருதிறத்தையுமெனக்கறிவித்தநித்தனையே. (௫௧)

இருந்திராகமோடியம்பரும்வெறுப்பறவெறிந்து
பொருந்துகின்றனயாவையும்புசிப்பதுமெவரும்
விரைந்துவந்தணுகாவகைவீற்றிருப்பதுவுந்
திருந்துகின்றநற்காந்தியும்பெற்றனன்றீயின். (ருஉ)

வளர்ந்தகாதல்வெவ்வெறுப்படைந்தாரொனவரினுந்
தெளிந்தயோகியருயிர்க்கவையில்லெனத்தெரிந்தேன்
விளைந்தவாசமும்விளம்புதற்கந்தமுமேவி
யளைந்துவந்துமக்குணம்பெருவனிலனென்றறிந்தேன். (ருஙு)

நிறைவிஞேடொருகுறைவறவமைந்தயனீர்வந்
தறையுதிடினொக்கூடினுமதின்குணமடையா
துறையுமொரீஇச்செய்தீராற்றென்பதையுணர்ந்திங்
கிறைவயானுமக்குணங்களையுவந்தியைந்தனஞல். (ருச)

உற்றவுற்றவைமுயற்சியின்வருந்திடாதுண்ணுங்
குற்றமற்றநீண்மலையராவென்பதைக்குறித்திங்
கற்றமற்றநல்லறிவினர்க்கிதுவழக்கென்னப்
பெற்றபெற்றனமுயற்சியற்றிருந்தனன்பெரியோய். (ருரு)

வேறு.

மானமோடவமானமடைந்திடா
தானநீங்கியுவந்தசிறுவனைத்
தேனுலாந்தொடையோய்முனந்தேர்ந்ததா
லியானுமோகையுற்றேனவையற்றரோ. (ருசு)

வேறு.

கூறிருவினையிஞென்றூர்கொடுங்கதைகொண்டுமோதிச்
சிறினர்வைதுளோர்க்குஞ்சிறப்புநன்கியற்றிஞேர்க்கு
மாறறுஞ்சமமேயாகிமௌனமுற்றிருப்பர்மற்றூ
ராறறியரசதம்மையறிந்திடார்வருந்துவாரே. (ருஎ)

வேறு.

எண்ணறுகாமமுதற்பகையடக்காதிருள்படுகானகத்தேகி
நண்ணினுமாயைவலேயினைக்கடவார்நவிற்றியபகைவெறுத்தறிந்தோர்
மண்ணகம்புறந்துமகவொடுமகிழ்ந்துவைகினுமாயையைமருவார்[ன்
பண்ணுறுகருமங்கனவெனப்பார்த்துப்பார்புரந்தருளெனப்பணித்தா

தோத்திரம்.

## சிறுவிட்டுணுமாதோத்திரம்.

எழிற்படையெடுக்கிலேனென்றிசைத்தநின்மொழிவிட்டுன்னை
விழுப்படையெடுப்பித்தன்றிவிடுகலெனெனயான்சொன்ன
மொழித்திறம்பிழையாவண்ணமுழுகுவெஞ்சினத்தவாழி
யழற்படையெடுத்தாயன்பர்க்கெளிமைநீபெரிதுமன்றே. (ருக)

சுரும்புசூழ்தொடையல்சோரச்சுரிகுழல்வீழமார்பின்
விரிந்தபொன்னுத்தரீயம்வீழ்ந்திடவிரைந்துதேர்விட்
டெரிந்தபொற்றிகிரிதாங்கியெறுழ்வலிமடங்கலேறு
கருங்களிற்றேறல்போலென்கண்ணுறல்கண்ணதாமால். (சுo)

எழில்விளையாடுமார்பத்தெழுதியகலவைச்செஞ்சே
றழிதரப்பொடித்தவேர்மற்றுடலஞ்சிலைக்கைப்பார்த்தன்
கொழுமணிக்கொடிஞ்சித்திண்டேர்ச்குரகதத்தூளிமூழ்கி
யொழுகுசேருகவோடியுற்றதென்னுளத்ததாமால். (சுக)

சொரிகணைமாரிபாய்ந்ததுணிந்தபொற்கவசத்தூடு
மரகதக்காந்திகான்றுவயங்குநின்பசுந்தார்மார்புங்
குரகதத்தூளிசேர்ந்துகுழைவிராய்க்குறுவேர்வார்ந்த
முருகவிழ்கமலச்செவ்விமுகமுமென்முகத்ததாமால். (சுஉ)

நறைவளர்திகழ்பூமேவுநான்முகன்வழுத்தவெட்டாய்
மறைவளர்திகழுஞ்செய்யமாதவ ரரசரான
நிறைவளர்திகழும்வேலைநெருங்கியராசசூயத்
திறைவளர்திகழ்முற்பூசைக்கேற்றனையென்சொல்கேனே. (சுரு)

நச்சராவுச்சிமேயநானிலப்பொறைதீர்ப்பான்வந்
திச்சையாஞ்சூதென்றேருதமிலங்கியதழலைமூட்டிக்
கச்சமார்களிற்றுவேந்தர்கடுவனமெரித்தகண்ணா
பச்சைமாலேயுன்மாயைபகருதற்கெளிதன்றுமால். (சுச)

மூட்டமர்க்களத்தினின்றுமொழியுமென்றமறையெல்லாம்
வீட்டிலனெனமுன்சொன்னவிசயனுள்ளிழுதைநீக்கி
நாட்டினைஞானமுன்னேநானுடலொழிக்குமின்று
காட்டினைநினதுகோலங்கடந்தனன்பிறவிவேலை. (சுரு)

அருங்கதிரம்பொனுடையணிந்துமுன்வந்ததோற்றம்
பொருந்தியமாயையானபோர்வையாற்பொதியப்பட்டுத்
திருந்துமேலோரால்வாசுதேவனென்றுரைக்கும்பேர்பெற்
றிருந்ததிவ்வண்ணமென்றேயெனக்கறிவித்ததாமால். (சுசு)

உண்மையாலுனக்குநாடிலுருவிலையுளாக்கிற்பொய்க்கும்
பெண்மையாமாயையாலேபெருகுநல்லுருவென்றாலுந்
திண்மைசேர்நின்னையன்றித்திகழ்சகமில்லையாஞல்
வண்மையால்வழுத்துவார்யார்வழுத்திடப்படுவார்யாரே. (சுஎ)

## சவுனகாதிமுனிவரன்பினிலைகூறல்.

### வேறு.

இறந்தொழிந்ததுவெங்கூற்றமென்றுளத்துணர்ந்தார்போலு
மறந்தலைமணந்தசெங்கோலைவர்பாரேழுங்காப்ப

நறுந்துழாய்க்கொண்டறாதுநடந்ததாட்கமலப்போது
மறந்தனர்மாக்கள்வாளாவருபகல்கழிக்கின்றாரே. (சுஅ)

மழைதுளிமறுத்தகானின்வற்றநீண்மரமுமந்தண்
குழைதரலன்றிக்குன்றுங்குழைதரவமுதமூறுங்
கழையிசைவடித்தான்செவ்விகாண்கிலாக்கண்கண்மஞ்ஞை
தொழுதியங்கலாபமேயதுஞ்சலில்வருங்கணன்றே. (சுகூ)

காதமோர்நான்குந்தெய்வக்கடிகமழ்கமலைகொண்கன்
பாததாமரையிற்சாத்தும்பசுந்துழாய்மோந்துமோந்து
தீதறவுயிர்த்திலானேற்செற்றவனுயிர்ப்பதெண்ணி
லூதுலைக்குருகுமற்றாங்குயிர்ப்பதுபோலுமாதோ. (எ0)

## கருத்தமர்தோத்திரம்.

வேறு.

இடிக்குரலியானைவெண்கோடிறுத்தவன்மலர்ப்பொற்றாளிற்
கடித்துணர்புனையாக்கைகள்கையறுகைகளாமாற்
பொடித்தசெங்கதிர்போற்காந்திபொழிமணிச்சூட்டராவி
னடித்தவனும்பாடாநாவழங்காதநாவே. (எக)

பனியிருவிசும்புதேடப்பழமறைமுடியினின்ற
தனிமுதலடியிற்றாழாத்தலைதலையென்னலாகா
நினைதொறுமினியவாயநெடியவன்சரிதங்கேட்டுக்
கனிவுறாவுளமிரும்போகற்களோவறிகிலேமால். (எஉ)

தவப்பொழிமாரிகாக்கத்தடவரைக்கவிகையன்று
கவித்தவன்கோயில்செல்லாக்கான்மரத்தியன்றகாலே
யுவப்பினின்றமுதமூறியொழுகுமால்சரிதங்கேளாச்
செவித்துளைநச்சுநாகஞ்செறிவதோர்துளைமற்றாமால். (எங)

வேறு.

சிரிளம்பருதிசெம்முளரிசேர்ந்தென
வாரழலாழியுற்றிலங்குசெங்கையாய்
கூருமன்பினர்மனக்குறித்ததல்லதை
யோருருவுண்டுகொலுனக்குநாடிலே. (எச)

உமிழுநூல்சிலம்பியாங்குண்ணுமாறுபோ
லிமிழ்கடலுலகெலாமெழில்கொளுந்தியங்
கமலநாண்மலரிடைக்காட்டியுண்டனை
யமல நின்னிலைமையாரறியவல்லரோ. (எரு)

## கபிலாசாரியரைத்தாய்துதித்தல்.

வேறு.

வந்துசெம்பவளநீலமால்கடற்கிளைத்ததேய்ப்பச்
சிந்துமொண்சுடரவாகித்திசைதிசைவிரிந்தசெந்தோட்
டுந்தியங்கமலப்போதிலுதித்துலகனைத்துமீன்முன்
றந்தைநீயுன்னைமற்றோர்தனையனென்றுரைக்கலாமே. (எசு)

மின்வயிற்பிறந்தசோதிவெருவரவெயில்சூழ்கின்ற
பொன்வயிற்பிறந்தகாந்திபொழிந்தசெங்கமலைகேள்வ
வுன்வயிற்றோர்பாலெல்லாவுலகமுமிருக்குநீவந்
தென்வயிற்றிருந்தாயென்னவேழையெனெண்ணலாமே. (எஎ)

பொலன்முகடுடையக்கோத்தபுனனெடுங்கடலிலாலி
னிலைமிசைக்கங்கைவெள்ளமெடுத்துவார்ந்தொழுகும்பொற்றுண்
மலர்தொடிக்கமலம்பற்றிமணிநகைத்துவர்வாய்வைத்துக்
குலவுபைங்குழவிநீயென்குழவியாயிருக்கலாமே. (எஅ)

முளைத்தனையுலகுக்கெல்லாமுன்னநீயுனக்குஞாலம்
விளைத்தலுங்காத்தருளுமழித்தலும்விளையாட்டாமா
லளிக்கடனினதுதன்மையறிகுனரியாரோவென்ன
வளைத்தளிர்ச்செங்கைகூப்பிவாணுதல்வழுத்தினாளே. (எக)

## துருவன் துதித்தல்.

தாமரைப்பொகுட்டுவாழுந்தடஞ்சிறையன்னமன்ன
தாமரைத்தலைவிகொண்கதளைமகள்கொழுநவுந்தித்
தாமரைபெற்றெடுத்ததனிமுதலுனதுசெங்கட்
டாமரையருள்பெற்றன்றேதந்தனனுலகந்தானே. (அ0)

தண்டுழாய்மாலைமார்பதாமரைக்காடுபூத்த
கொண்டலேவிளங்குநீலக்குன்றமேயுனதுபாதப்
புண்டரீகங்களல்லாற்போதுதாயிறைஞ்சப்பெற்றார்க்
குண்டுகொலுயர்வீட்டின்பமுதவுவதொன்றுதானே. (அக)

பொற்றபூந்தருவைக்கண்டும்பொற்பிலதொன்றுவேட்டுப்
பெற்றதேபோலுமன்றேபெறலருமுத்திநல்கு
மொற்றையந்திகிரிச்செங்கையொருமுதனின்னைக்கண்டு
மற்றொருபொருளைவேட்டுப்பெறுவதுமதிக்குங்காலே, (அஉ)

## பிரகலாதன்தோத்திரம்.

விழைவறவெறிந்தோர்நாடும்விழுப்பெருஞ்சுடரோதூய
பழமறைக்கொழுந்தேபச்சைப்பசும்புயல்வண்ணாநின்னை
வழிபடுமன்பேயன்றிவரமெவன்பெறுவதென்னத்
தொழுதனன்வழுத்தலுற்றான்றூயபேரறிவினானே. (அங)

பூவுறைமணம்போலெல்லாப்பொருளினுமுறைவோய்நின்பொற்
சேவடிதொழுதுபோற்ருர்தேவரென்ருலுநீச
ராவர்பொல்லாதநீசராயினும்வணங்கியுன்சீர்
நாவினுல்வழுத்திற்றேவர்நாயகராகுவாரே. (அச)

எங்குநீயுறைந்திட்டாலுமிலங்குகண்ணுடிபார்க்கி
லங்கவர்முகங்கடாமேயறிவர்பேரன்பினோர்முன்
றங்கெழிலுருவத்தோடுஞ்சார்குவையறியுமாறுன்
பொங்குசீர்பிரமனுலும்புகல்வதற்கடங்காதம்மா. (அரு)

உருடருஞ்சகடுபோலவொழிவிலாப்பிறவியுற்றேன்
மருடரும்பிறவிபின்னும்வருங்கொலென்றஞ்சலல்லாற்
றெருடருநின்னைக்கண்டதேவர்போலஞ்சிலேனிங்
கருடரவேண்டுமென்பாலாளரியுருவத்தையா. (அசு)

அஞ்செவியானவண்டுன்னருங்கதைத்தேறன்மாந்த
நெஞ்செனுமன்னமுன்ருணிறையிதழ்க்கமலம்வைகத்
தஞ்சமாநினதுநாமஞ்சாற்றுகவென்றுவென்று
மெஞ்சலில்வரந்தந்திங்ஙனிடர்க்கடலகற்றுவாயே. (அஎ)

ஆதியிலொருத்தனுகியந்தமென்றுரைக்கும்போது
மேதமிலொருவனுகியியையுமிந்நடுவிற்பேத
மோதுயிர்பலவுமாகியுறைவபோலுறைவாயுற்ற
சோதியுன்விளையாட்டெல்லாஞ்சொல்லயார்வல்லர்மாதோ. (அஅ)

ஆதியாமாயையாகியகத்தகங்காரமாகிப்
பூதமாய்ப்பொறியாயந்தப்பொறிக்குறுங்குணங்களாகிப்
பேதமாமுயிராயொன்ருய்ப்பிறங்குசித்தாகிவைகுங்
கோதிலாவுன்னையன்றிக்குறிக்குமோர்பொருளுமுண்டோ. (அகூ)

வேட்டிடுமனையார்போகம்விரும்பினர்வேறுவேறு
தாட்டுணைச்சிலர்கைப்பற்றத்தானைகள்சிலர்கைப்பற்ற
வாட்டமுற்றலவர்போலவருந்துமைம்புலனும்போக
நாட்டமுற்றலைக்கப்பட்டோர்நலிவருன்னருணண்ணுறோ. (கூ0)

தோற்றுறில்வீயுங்காலத்துயருறுவதற்குமஞ்சி
யேற்றதாய்வயிற்றில்வந்தேயிடருறுவதற்குமஞ்சி
மாற்றருஞ்சுழல்காற்றுற்றுவயங்குமோர்சருகுபோல்வார்
போற்றிடார்நின்னையன்றோர்புலமையையென்சொல்கேனே. (கூக)

வெற்றிவேலவுணர்க்கொன்றுவிழுச்சிறப்பளித்தோயிங்ஙன
னுற்றவெஞ்சிற்றநீங்கியுவந்தருளென்றுபல்காற்
பற்றெறிந்துயர்ந்தவைந்தாம்பருவத்தோன்பரவலோடு
மற்றமில்வெகுளிபோகவாளரிமகிழ்ந்ததன்றே. (கூஉ)

## கடல்கடைந்தபோதுதேவர்கடுதித்தல்.

வேறு.

குணமாய்க்குணியாய்க்குவலயமாய்க்கொழுந்தீம்புனலாய்க்கனலாகித்
தணவாவளியாய்வெளியாகித்தன்மாத்திரையாய்ச்சார்பொறியாய்க்
கணமாய்முக்காலமுமாகிக்கருணைக்கடல்போற்பாற்கடலிற்
பணவாளரவிலரிதுயில்செய்பரமாவெங்கட்கருள்வாயே. (கூங)

ஓரேழ்பிறவியுடனுயிராயுலகமனைத்துமோருருவாஞ்
சீராயுறைவாய்நின்னையல்லாற்செப்பும்பொருள்வேறுளதோ
தேராற்கிருள்ாய்த்தெளிந்தவர்க்குச்சித்தாயுறையுஞ்செழுஞ்சுடரோ
யாராவமுதேயெங்களுக்கிங்கருளாயென்றென்றேத்தினரால். (கூச)

# பிரமாமுதலானதேவர்கிருஷ்ணமூர்த்தி தேவகிவயிற்றிருக்கும்போது துதித்தல்.

வேறு.

தெளிக்குநான்மறையுமின்னந்தெளிவதற்கரியதெய்வ
விளக்கமேஞானானந்தவெள்ளமேயுனதுமாயை
வளைத்திடப்பட்டோர்நின்னைமதிப்பரோமூவராக
வுளத்தெளிவுற்றோர்பார்ப்பருன்னைமற்றொருவனென்றே. (கரு)

ஆக்கமுமழிவுமின்றியகண்டமாயமலமாகி
வாக்கொடுமனத்துக்கெட்டாவள்ளலேயறத்தின்வாழ்வே
சீக்கவுந்தீயோர்தம்மைச்செய்வினைநலத்தினோரைக்
காக்கவுமன்றோகோடிகடவுணல்லுருவுதானே. (கசு)

பாழிவாய்ச்சுடிகைநெற்றிப்பஃறலைப்பாந்தண்மீதே
யூழிவாயண்டகோளமுடைபடக்கோத்தவெண்ணீ
ராழிவாய்வளர்வாய்மற்றுன்னடிப்புணைபற்றப்பெற்றோ
ரேழிரும்பிறவிவேலையெளிதினிற்கடப்பரன்றே. (கஎ)

இருட்குறும்பிரியத்தோன்றுமிளங்கதிர்ப்பருதிபோல
மருட்பெருந்திமிரமோடமாண்டகவிளங்குஞானப்
பொருட்கதிரில்லதாமேபூந்துழாயலங்கன்மாலே
யருட்கடற்பிறந்திலாயேலாழிசூழுலகிற்கம்மா. (கஅ)

ஆதிநின்றுமெல்லாமஞ்செவிநிறைத்தும்வாயா
லோதியுமழுகுவாய்ந்தவுருவுகண்களிப்பக்கண்டுங்
கோதில்வீட்டின்பமெல்லாங்கொள்ளைகொண்டுண்பரன்றே
மோதுவெண்டரங்கமுன்னீர்முதுநிலமாக்கடாமே. (கக)

கற்றையங்கதிர்கால்பைம்பொற்கிண்கிணிகவையேதெய்வச்
சிற்றடிக்கமலப்போதுதீண்டவென்றுெத்ததேயோ
ஒற்றையந்திகிரிச்செல்வவொருபெருங்கமலத்தாளா
லற்றைநாட்பொதியப்பெற்றவங்கண்மாஞாலந்தானே. (க00)

மாயையால்விளைந்தவண்ணமல்லதுவாய்மையாக
மாய்தலும்பிறத்தலுமன்னுயிர்தனக்குமில்லை
மாயையிற்றீர்ந்துநின்றமற்றுனக்குண்டுகொல்லோ
மாயநின்றேற்றமெல்லாமதிக்கிலோர்விளையாட்டன்றே. (க0க)

## கிருஷ்ணசுவாமிபிறந்தபோது வசுதேவருந்தேவகியுந்துதித்தல்.

வேறு.

ஈனுநல்லிளங்கதிர்ப்பரிதியோகொலாய்
வானுறவயங்குசெவ்வண்ணங்கோடியாற்
பானிறங்கோடியாற்பாதுகாத்திட
நீனிறங்கோடியானீறுசெய்யவே. (க0உ)

செய்யதாமரைமலர்ச்செல்விகாதல
பையராத்தாங்கியபரவைமண்மிசை
வெய்யகோலரசரைவீட்டற்கன்றுகொ
லையகாருருவம்வந்தடைந்தவண்ணமே. (க0ங)

மன்னவன்படைச்செயல்மன்னன்செய்கையாப்
பன்னுதல்போற்றனிப்பரமமாயையுன்
முன்னமேயியற்றியமூவகைச்செய
னின்னுடைச்செயலெனநிகழ்த்தல்செய்வரால். (க0ச)

கானுயிர்த்த துபுனல்கனல்கறங்குகால்
வானுயிர்த்தவன்றனைவருத்துகின்றபூந்
தேனுயிர்த்தலர்ந்ததார்ச்செம்மன்மற்றனை
நானுயிர்த்தனனெனநகையுடைத்தரோ. (கoரு)

கழிந்தொருநான்முகன்காலந்தீர்தலு
மழிந்துமண்முதலியவனைத்துமீதுற
லொழிந்துநீசேடனென்றுரைப்பநின்றனை
செழுஞ்சுடர்நின்னிலைசெப்பற்பாலதோ. (கoசு)

## பிரமாகன்றுகொண்டுவிட்டுத்துதித்தல்.

வெஞ்சினநிருதர்தம்வேரறுத்திடச்
செஞ்சிலைநிமிர்கடைகுழைத்தசேவக
கஞ்சனென்றுரைபெறுங்கடுங்கட்கூற்றினுக்
கஞ்சினனஞ்சினனளிக்கவேண்டுமால். (கoஎ)

வேறு.

அற்றமில்லெனவண்டமணுவென
முற்றுகின்றவானின்முழுமெய்யுறு
மொற்றையண்டத்தொருவழிவைகுவே
னெற்றெனத்துணிவேன்கொனின்சீர்த்தியே. (கoஅ)

வேறு.

வெங்கதிர்ப்பருதிமுன்னமேயமின்மினியும்விள்ளாப்
பொங்கிருட்கங்குல்சேர்ந்தபுன்பனியிருளுமன்றே
யங்கண்மாஞாலமுண்டோராலிலைப்பள்ளிதுஞ்சுஞ்
செங்கண்மாமாயநின்பாற்செய்தவென்மாயைதானே. (கoக)

அடைத்துழாய்ப்படலைமாலையமலநின்னிலைமைதேரார்க்
குடைப்பெருமாயைதன்னுலுருப்பலகாட்டுவாயாற்
படைக்கயானுகிமற்றப்படைப்பெலாங்காப்பனீயாய்த்
துடைப்பமுக்கண்ணனுகித்தோன்றுமாபோலமாதோ. (கக0)

அல்லியங்கமலச்செங்கண்ணமலநீயாகத்தன்னை
நல்லுணர்வதனுெடுநற்றவமுடையாற்கன்றே
மெல்லிணர்க்கண்ணிமேயவெஞ்சினவரவுபோல
வில்லதாமெல்லையில்லாவிருள்படுந்தோற்றந்தானே. (கக்க)

மண்ணெலாமுண்டசெல்வவயிற்றகத்துறையாநின்ற
வொண்ணிறக்குழவிதாளாலுதைத்தலாற்பிழையென்றோரா
ரண்ணனின்னகல்வயிற்றுளகப்படாப்பொருளுமுண்டோ
வெண்ணினின்வயிற்றுவாழ்வேனிழைத்ததெப்பிழையதாமல். ()

உவப்பொடுமறையோர்வேள்வியூட்டுமின்னவியினுலே
தெவிட்டலாய்தெவிட்டுமாறுதீஞ்சுவையமுதமூட்டுங்
குவட்டிளங்குவவுக்கொங்கைக்கொடியிடையாயர்மாதர்
தவத்தையென்புகல்வனின்றூர்தவத்தையென்சாற்றுகேனே. (கக௩)

வெஞ்சினந்திருகுநஞ்சம்விளைத்தவெம்முலைப்பாலூட்டும்
வஞ்சனையரக்கிதானும்வந்துநின்னடியிற்சேர்ந்தாள்
நெஞ்சுவந்தமுதமூட்டுநேரிழையவரோடாவிற்
கஞ்சனவண்ணவென்னேவளித்திமற்றறிகிலேனல். (கக௪)

திருவினர்பெரிதுமந்தோதிருவினர்பெரிதுமந்தோ
விரியல்வெண்டோட்டுமுல்லைவியன்புலத்துறையப்பெற்றோ
ரருவமாயொன்றாய்ச்சித்தாயகண்டமாய்ப்பரமானந்த
வுருவமாய்நின்றான்றன்னேடுறவுகொண்டிருக்கின்றூரோ. (கக௫)

## கோவர்த்தனமெடுத்தபோது தேவேந்திரன் துதித்தல்.

வேறு.

உரைவாயிகழ்ந்துள்ளுணர்வுங்கடந்தோங்கிநிற்பாய்
தரைவாய்ப்பிறந்துதனிநல்லறங்காத்தல்செய்வாய்
விரைவாய்மலர்மேலுறைவாய்வரைவீற்றிருப்பாய்
திரைவாய்துயில்வாய்நினையெங்ஙனந்தேர்வல்யானே. (ககசு)

மாற்றற்றபொற்றாமரையாள்புணர்கின்றமார்பா
வாற்றற்றிகிரிப்படையாய்வெறுப்பார்வமில்லாய்
சீற்றத்திழைத்தசெயலீதுபொறுத்தியென்னப்
போற்றிப்பணிந்தான்பதம்பொன்னகர்போற்றும்வேந்தன். (ககஎ)

## முசுகுந்தன்றுதித்தல்.

வேறு.

இறக்குமுடலமியானெனப்பட்டிறந்துபோயவித்துணைநாட்
பிறப்பின்மக்கட்பிறப்பம்மபெறுதற்கரிதாலினிப்பிறவாச்
சிறப்புநெறிதந்திடவேண்டுந்தெவிட்டாவமுதேயருட்கடலே
துறக்குமுனிவருளக்கமலந்துறவாத்தெய்வச்சுடரொளியே. (ககஅ)

யாழின்மிழற்றுமாதர்முதலெல்லாப்பொருளும்போயதுவு
மாழித்தடக்கைமுதல்வனினதருளால்விளைந்ததென்றறிந்தேன்
வீழ்தலிலன்மற்றினியொன்றின்வீழ்ந்தேனமரர்முடிசூடி
வாழிவளநான்மறைமுடிமேல்வைத்தநின்றாட்டாமரையே. (ககக)

பொலந்தாமரையினரசிருக்கும்பொன்னங்கொழுந்தின்முலையுழக்க
மலர்ந்தாய்பிழிதாதுகுக்கின்றமன்றத்துளவமணிமார்பா
நிலந்தாய்விசும்பிற்றவழ்கங்கைநீர்பூத்தலர்ந்ததாண்முளரி
யலர்ந்தார்க்களிக்கலாகாதோவமலாவென்றென்றிறைஞ்சினனால். ()

## உருக்குமணிதுதித்தல்.

வேறு.

முற்றத்துறந்துபற்றின்றிமுருகுபருகுமதுகரம்போற்
பெற்றபெற்றவழியருந்தும்பெரியோரின்றித்திருவுந்திப்
பொற்றகமலத்துலகேழும்பூத்தோய்செல்வக்களிமயக்க
முற்றமாக்கணினையெங்ஙனுணர்வுபடைத்துவிழைகிற்பார். (கஉக)

ஏடுபடுபூந்துளவமுகிலெல்லாவுலகுமிறந்துபட
நீடுதடங்கோட்டாலிலைமேனீலப்புயல்போனிமிர்பசும்பொற்
கோடுபிடுங்கித்திகிரிவரைகொன்றுநெடுவானடையவளைத்
தாடுதிரைகோத்ததிர்கடலிலார்க்குவெருவியமர்ந்தனையால். (கஉஉ)

ஆலக்கருஞ்சேறுமிழ்பகுவாயரவிற்கிடந்தவாரமுதே
நீலப்பொருப்பேயருட்கடலேநெடுநீர்வேலியுலகளிக்கு
மாலைத்திகிரிமழைமுகிலேமணியிலொளியுமலர்மணமும்
போலத்திகழ்வாயெங்குநினைப்புகலார்க்கென்கொல்புகலாயே. ()

வேறு.

அழியாவுயிரியாவையுந்தருநாளமர்ந்தகமலமலர்வேட்கை
யொழிவாய்போலவிழுதவத்தோருள்ளக்கமலத்துறைசுடரோ
மொழியால்வழுத்தற்கெளிதோநின்முழுச்சீரென்னவருள்பெருகி
வழியாவிதழ்த்தாமரைமலர்க்கண்வள்ளலுள்ளமகிழ்கூர்ந்தான். ()

## சுருதிகள்தோத்திரம்.

வேறு.

புனிதமற்றுன்னையல்லாப்பொருள்பரப்பிரமமல்ல
வெனவெடுத்துரைப்பதல்லாலீறொடுதோற்றமின்றித்
தனிமுதலாகிநின்றசச்சிதானந்தமூர்த்தி
நினைவருஞ்சுடரோநின்னைநிகழ்த்துமாறறிகிலேமால். (கஉரு

வேறு.

வியக்குஞ்செல்வவிணைமலர் மெல்லிய
நயக்குமார்பகளினமலர்ந்துபார்
பயக்குமுந்திப்பரமவிம்மன்னுயிர்
மயக்குமாயைநீமாற்றிடவேண்டுமால். (கஉசு)

# குடும்பநீக்கம்.

வேறு.

தழுவுறுகிளைஞர்தந்தைதாய்முதலெவருநாளிற்
கழிவஃதுகண்டுகண்டுங்கண்டிலார்போலவாழ்வா
ரொழிவறவுள்ளத்துள்ளேயுறைபரஞ்சுடரையோரார்
விழைவெனநின்றதுன்பவித்தினைவிளைக்கின்றாரோ. (கஉஎ)

விடங்கலுழெயிற்றுப்பேழ்வாய்வெயில்மணிச்சூட்டுநாகப்
படங்கெழுபரவைஞாலப்பாயலொன்றுண்டுசெய்ய
குடங்கைமெல்லணையுண்டெங்குங்குலவுவற்கலைகளுண்டா
லடங்கலாவார்வவேர்மற்றறிந்தவற்கிலதெனம்மா. (கஉஅ)

திருநதித்துறைகளெல்லாந்தீம்புனல்வறந்தவேயோ
விரிகடலமுதமூறும்விழுச்சுவைக்கனிகள்வாய்ந்த
மரமெலாமாண்டவேயோமாநிதிச்செருக்கினாற்கண்
குருடுபட்டவர்பாலென்னோகுறையிரந்துழல்கின்றாரோ. (கஉகூ)

இருவினைக்குறும்புதீர்ப்பானெனதுநானவிற்றல்வேண்டும்
வருபவந்துறுமென்றெண்ணிவைகிடவேண்டும்பெற்ற
தொருவலனுவப்பவேண்டுமுயிர்க்கெலாமிரங்கல்வேண்டுந்
தருமலிகானந்தன்னிற்றனித்தினிதுறையவேண்டும். (கங0)

வேறு.

விழைவெனப்படுகின்றதுமென்மெல
வழல்விரிந்தகனகத்தரும்பிமென்
மழலைமாதர்மருங்கிற்படர்ந்துபைங்
குழவிமீதுகொழுந்துவிட்டோங்குமால். (கஙக)

வேறு.

வண்டினஞ்சிறிதுசிறிதெனவலருமலர்தொறும்வருமுருகுவப்பா
னுண்டனதிரிதல்கண்டனனியானுமுறைக்கிலித்தொழிலழகென்ன
வெண்டருநகரின்மனைதொறுங்குறுகியெனதொருகரமிசையையங்
கொண்டனன்சிறிதுசிறிதெனக்கருதக்கொள்கலத்தேற்றிடாதன்றே.

ஒருமறைமலரோயுவந்துமென்முருகுண்டுறைதருமொருசுரும்பிரவில்
விரியிதழ்குவியுமலரகப்பட்டுவிளிந்ததுகண்டொருநாளுங்
கருதியநகரிலொருமனையுறைந்துகவின்பெறுமுணவுவந்தருந்தேன்
மருவலர்மகுடகோடிகளிடறுமலர்புரைதருபதயுகத்தோய். (கஙங)

வேறு.

துன்றிவைத்ததண்டேனுணுதிகழ்ந்துசூழ்ந்தெடுக்க
வொன்றுமற்றவராலுயிருலர்ந்தமையுணர்ந்து
நன்றறிந்துபற்றெறிந்தவர்க்கொன்றையுநாளைக்
கென்றுவைப்பதுதீதெனத்தெளிந்தனனிறையோய். (கஙச)

நீணிறக்கொடுவேட்டுவன்படுத்தநீள்வலைவாய்த்
தூநிறப்பெடைப்பார்ப்பினந்துயர்தல்கண்டணுகித்
தானுமுற்றதிலொருபுறவிறந்ததுதன்று
ளூனமுற்றிடுமெனத்தமர்சினேகமிங்கொழிந்தேன். (கஙரு)

வேறு.

அன்றிலூன்கவர்ந்தந்தரத்தேகுழி
துன்றுமோர்புட்டுரந்துபறித்தனு
மொன்றலூனையொழிந்துவப்புற்றதா
லென்றுமோர்பொருளுற்றிடலுற்றிலன். (கரு௬)

சுற்றில்மேவியசொல்கறையான்புரி
புற்றில்மேவுபுயங்கமென்றோர்ந்தபி
னுற்றியானுமுற்றேனென்றமர்தொறு
மற்றுளோர்செய்மதிற்குகைவைகுவேன். (கருஎ)

வேறு.

உற்றவினவறத்தினனென்றுரைக்கவொருசின்னமிலா
னெற்றிடினுமெறிந்திடினுமீனனெனவைதிடினு
மற்றவரைவெகுண்டிரையான்வழங்குமூணவேற்பதற்குச்
செற்றமறும்படிமுயற்சிசெய்தாலுஞ்செய்குவனால். (கருஅ)

## ஆசைலட்சணம்.

வேறு.

குழனைத்திடக்கோத்தமுத்தாமென
வெழில்படைத்தவெயிறிடைவீழ்தரப்
பழிபடைத்துடலுழிற்புழுக்கவும்
விழைவினுக்குவிளையுமிளமையே. (கருக)

வேறு.

காமமானதுதெவிட்டிடாபெறுதவேகருது
நாமருபத்தோடுறைபவனலனழிந்திறந்து
போமென்றுலும்பொய்ப்பொருளையேகாதலித்துழல்வா
ரீமஞ்சேர்ந்துடலெரிவதுங்கண்டிலரோகொல். (கசo)

வேறு.

என்றுகூறியவேந்திழையீறிலா
தொன்றுமாசையொழித்துவப்பெய்தின
ளன்றியானவ்வகையறிந்தாசையை
வென்றிவீரவிடுத்தனன்வேரொடும். (கசக)

வேறு.

இருள்படுகாட்டினூடேயிருந்துழல்குருடராஞேர்
தெருள்படுநகரந்தாமேசேர்நெறியறியார்போல
மருள்படுகாமமுன்னிவருவினைமுயலாநிற்போர்
பொருள்படுநலஞ்செய்வீட்டிற்புகும்வழியறிகலாரே. (கசஉ)

தாமத்தான்மூடுங்கண்ணார்சூழ்ந்தருகிருந்துஞ்சாலைச்
சேமத்தான்மூடுமோமத்தீயினைத்தெரிகிலார்போற்
காமத்தான்மூடுநெஞ்சக்கருமத்தோருலகமாயை
நாமத்தான்மூடுமுள்ளநம்பனைத்தெளியாரன்றே. (கசங)

## சரீரலட்சணம்.

வேறு.

இடையுறுமென்பினைநரம்பினூர்த்திடாப்
புடையுறுமிறைச்சியாற்பொருந்துபோக்கற
மிடைதருந்தோலினுல்மேயப்பட்டதோ
ருடலினையானெனவுரைக்கற்பாலதோ (கசச)

வேறு.

கனவைப்போலவுங்கானலினீருடன்
றனிசெயிந்திரசாலத்தைப்போலவு
மனதின்கற்பனையால்வருமாக்கையை
வினையின்கட்டுறமெய்யெனப்பாலதோ. (கசரு)

வேறு.

தழுவுதாவரத்தெங்கணுந்தனித்துறைதழல்போற்
பழுதிலாமலெவ்விடத்தினும்பரம்பொருளிருக்கு
மெழுவெங்கானலினீரொனவிவ்வுடலிறக்கு
மழுவதென்கொனீர்பொய்யைமெய்யாமெனவறிந்தே. (௧௪௬)

பாபத்தால்வரும்பொய்யுடலியானெனப்பகரு
நீபத்தால்வருமிருவினைக்கட்டொடுநிகழ்த்திற்
கூபத்தேவிழுமறிவிலாக்குருடர்மூன்றுன
தாபத்தீச்சுடவருந்துவார்மடமையார்தணிப்பார். (௧௪௭)

வேறு.

உறக்கமும்விழிப்புமுறுந்தன்மைபோற்
பிறக்குமாக்கையிறக்குமெய்ப்பெட்பொடு
மிறக்குமாக்கையுமேய்ந்துபிறத்தலிற்
றுறக்கவேண்டுமெய்யாசையைச்சூட்சியோய். (௧௪௮)

வேறு.

உறங்குழிக்கனவிடையொருவன்றன்றலை
கறங்கெனச்சுழல்பவர்கையிற்கொய்தெழ
மறங்கிளர்வேலவமரணங்காண்கையா
லிறந்திடுமாக்கைநீயென்றுமல்லையே. (௧௪௯)

வேறு.

உழுதுபல்வளமுய்த்தமழவிடை
கிழவுபட்டிடிற்போற்றல்கெழீஇயதே
விழுமெய்யாங்குமுதிர்ந்திடில்வேட்டதன்
மழலைமாதருமைந்தரும்போற்றிலார். (௧௫0)

உன்னிற்போதவுருவத்தலைவனுண்
மன்னிப்போகம்வழங்கிவதியவு
மின்னைப்போல்விழுநாதனைவீதிதேர்ந்
தென்னைப்போலயர்வாரொவருண்டரோ. (௧௫௧)

சலத்தையுந்தசையென்பொடுசாற்றுழும்
மலத்தையும்மயிர்த்தோலின்மறைத்ததை
நலத்ததென்றுநயந்துநலிந்தவென்
புலத்தையென்கொல்புகலப்பெறுவதே. (௧௫௨)

## மகளிரதுலட்சணம்.

வேறு.

மடந்தையர்வதனநல்லமதியெனவசனந்தேவர்
கடைந்தநல்லமுதமென்னக்கவினுமென்றாலுமுள்ளம்
விடங்கொடுபுரிந்தவாள்போல்வெங்கொலைவிரும்புமந்த
மடங்கலார்மனஞ்செல்வண்ணமாரறிந்தியம்புவாரே. (௧௫௩)

புல்லுநன்கொழுநன்பெற்றபுதல்வனொன்றாலுமன்பாற்
சொல்லுமோர்வயிற்றிற்றோன்றுந்துணைவனொன்றாலுமாதர்
கொல்லுவர்கோபமுற்றாற்கூசிடார்சிறிதுமென்ன
வல்லனுற்றழுங்கியன்னாட்கொருவரமளிக்கலுற்றான். (௧௫௪)

ஓதுநூல்பலவுலகியல்முழுவதுமுணர்ந்து
பேதநீங்கிடத்தம்மைநன்கறிந்திடார்பெரிதாங்
காதலாகியவிலங்குசேர்விலங்கெனக்கருத
மாதர்பால்விளையாடுவொனிலெவர்மறுப்பார். (௧௫௫)

வேறு.

துதிதரும்வயவர் படுகுழிசெலுத்துந் துகளறுபிடியையுள் ளுவந்து, மதகரிதழுவி வயவர்கைவசமாய் வயங்குதல்கண்டுமெட்டொழு

குந், தைமலர்குழலார்தனகிரிதழுவிற்றணப்பரிதாய்மதன்வசமாய், விதலையின்மனமாய் மயக்குறுமென்ன விடுத்தனன்புணர்ச்சிமற்றன்றே. (௧௫௬)

ஒளிகொளும்விளக்கினழலுருக்கண்டதுணவுகொலெனவதிற்சுழன்று, விளிவுறும்பசியபதங்கமுன்கண்டுவெய்யதீத்தொழிலெனக்கருதித்,தெளிவுகொள்முனிவராயினுங்காணிற்சிந்தைகொண்டனுதினம்வருந்திக், களிகொளுங்கருங்கண்மடந்தையருருவங்கருத்தொடுங்காண்கிலனம்மா. (௧௫௭)

## தனலட்சணம்.

வேறு.

பொன்னினைவிழைந்துழைபுகுந்துவாடுவோர்
மன்னியகுளிர்நனிமாற்றுவோமெனத்
துன்னுவெங்கானழற்றுலங்குவாய்நரி
தன்னைவெங்கனலெனச்சார்தல்போலுமே. (௧௫௮)

பறவைவெம்பசியினிற்பழுத்துக்காட்டகத்
துறையுமுள்ளிலவையுற்றுணங்குமாறுபோ
னெறிதவறுலுத்தர்தநீள்கடைத்தலை
யறிவிலரடைந்திடைந்தழுங்குவார்களே. (௧௫௯)

அண்ணலங்குரவன்வந்தடைந்ததாயிரங்
கண்ணுடையிந்திரன்கண்டிலானெனில்
மண்ணிடைக்காண்பர்கொல்வந்துற்றோர்தமை
யெண்ணருநிதிச்செருக்கெய்தினாரோ. (௧௬௦)

வேறு.

சேயரும்பொருட்செல்வமிவையென
நேயம்வைக்கினிகரில்பயந்தரு
மாயுங்காலிவ்விருப்பறுத்தாழிசேர்
மாயன்றாளின்மனதுவைமன்னனே. (கசுக)

வேறு.

பன்னுநூல்பலதேர்ந்துநற்பரம்பொருளறியா
ரின்னல்பார்த்திடாரழியுமோர்பரபொருளெடுத்தற்
குன்னுவாரொனில்மைந்தர்களுலகின்மீதொளிசேர்
பொன்னின்மேற்செலும்விழைவையார்போக்குவரம்மா. (கசுஉ)

ஆசையாலருந்தாராகியருநிதிவருந்தப்பெற்றோர்
நேசமாரரசர்கள்ளர்நெடும்பகைமுதலினோராற்
காசுலாம்பயமுட்கொள்வார்கண்படைதானுங்கொள்ளார்
நாசமேயடைவர்காமம்விட்டவர்நலன்றுய்ப்பாரோ. (கசுௐ)

வேறு.

வாயினின்றுமயங்குநடுவிர
வாயதென்றயர்வெய்தியகம்புகு
நேயநன்பொருணெஞ்சினினைந்தழும்
பாயன்மீதுபடுக்கும்பதைக்குமே. (கசுச)

இன்னதன்மையங்கெய்தியவேந்திழை
பொன்னினுற்றவிவ்வாசைபொல்லாதவென்
றுன்னியுன்னியொழிந்தமனத்தொடு
மன்னர்மன்னமகிழ்ந்திவைசொல்லுமால். (கசுரு)

## பஞ்சவிடயலட்சணம்.

காட்டினிற்கலந்துறைபிலங்குகானலை
யாட்டுதெண்டிரைவருநீரதாமென
வேட்டிடுமாறுபோல்விடயவின்பமே
நாட்டமுற்றறிவிலார்நலிவருள்ளமே. (கசுசு)

போக்கிடாமலைம்புலன்களும்பொசித்திடும்போகங்
காக்கையேமுதலுயிர்களுங்கலந்திடும்பெரியோ
ராக்கையாவியோடெவ்வளவுறையுமவ்வளவு
நீக்கமின்றிமால்பதவிணைந்துயர்பதமுறுவார். (கசுஎ)

வேறு.

வஞ்சநெஞ்சினராய்த்தூண்டிலின்வளைந்தவன் சுவையூண்பெற
வடைந்து, துஞ்சுதலடைந்தமீன்குழுக்கண்டுதுன்னுமைவகையெ
னுவாயுப், பஞ்சரமென்றுற்றுடலுறைவதற்காய்ப்பசிக்கனறவிர்ப்ப
தற்கன்றி, யஞ்சுவையிவையென்றுசையினலம்வந்தருந்துதலொழிந்
தனனடிசில். (கசுஅ)

## பஞ்ச இந்திரியநீக்கம்.

ஊற்றினிற்களிறுதுஞ்சுமொலியினிற்பதங்கமாயு
நாற்றத்தில்வண்டுவீயுஞ்சுவையின்மீனுசமெய்து
மேற்றதோரிசையினுலேயிறந்திடுமசுணங்கல்வி
யாற்றலிற்புலன்களைந்துமடக்கிடவேண்டுமன்றோ. (கசுகூ)

மூந்தமேயொலியாதியிலொருகுணமுன்னிப்
பந்தமோடினுற்றிறந்தனபலவுயிரொன்று
ளைந்துசேர்குணங்களுமொருங்காசையினடைந்தோ
ருய்ந்துபோநெறியுண்டுகொலோமதித்துரைக்கில். (சஎ0)

பம்பிரும்பொறிவழிமனம்பறந்துருதடக்கி
யம்புசெய்ததின்கோணறத்திருத்தினனவன்போல்
வெம்புமைம்பொறிவழிமனம்விரும்புதல்வெறுத்துக்
கம்பமில்லறிவாம்பொருளறிந்தனன்கருத்தால். (௧௭௧)

மன்னுமைம்புலனுமாய்த்துமருவியமனத்தையென்று
மென்னிடத்திருத்தல்வேண்டுமிருத்தலிங்கரிதாமென்னிற்
சொன்னநல்வினைசெய்தாலுந்துகளுறுபவைசெய்தாலும்
பன்னுறுமன்பினந்தப்பயனமக்களித்தனன்றே. (௧௭௨)

## துதிநிந்தையில்லையெனல்.

புகழ்தலும்பழித்தலும்புகன்றிடுமுடலுக்கல்லா
னிகழ்தருகுணங்கண்மூன்றுநீங்கியொன்முகிச்சித்தாய்த்
தகைபெறுஞ்சத்தாய்நின்றுதயங்குமோர்பொருட்குமுண்டோ
விகல்செய்யாளெனவதென்பார்தம்மிமூதையாரியம்புவாரோ. (௧௭௩)

வேறு.

எண்ணுநிந்தைசெய்வாரையென்செய்குவங்
கண்ணிற்கைபடிற்கையையென்செய்வது
தண்ணுறுஞ்செழுந்தாலுற்றெயிறுறிற்
பண்ணமைந்தவப்பல்லையென்செய்வதே. (௧௭௪)

## நினைத்தவண்ணமாகை.

அன்பினுயினுமாசையினுயினும்
வன்பயத்தின்வயிரத்தினுயினும்
நன்பெருந்திருநாதனையேநினைந்
தின்பமவ்வுயிரெய்துவதென்பதை. (௧௭௫)

ஈங்கறிந்தனனியானுற்றெடுத்தொரு
பாங்கர்வைத்துப்பரிவிற்பறந்தய
னீங்கும்வண்டைநினைந்தபசும்பூழ
வாங்கவ்வண்டுருவானதுங்கண்டரோ. (௧௭௬)

## பிரபஞ்சமித்தையெனல்.

வேறு.

ஐயமிலறிவிலுலேயழிவின்றியகண்டமாகி
மெய்யெனும்பொருளைநாடிமேவருங்கானனீர்போல்
வையகமாதியாகவழங்கியவுலகமெல்லாம்
பொய்யெனுமாயையாலேபொருந்துமென்றெண்ணல்வேண்டும். ()

## கருமத்தால்மோட்சமின்மையெனல்.

பண்ணுறுகருமத்தாற்பவக்கடற்கரை
நண்ணுவனெனநயந்திருத்தல்வா
ழெண்ணுறுபுலிமிடைந்திருந்தகாட்டிடைக்
கண்ணிலன்கடந்திடக்கருதல்போலுமே. (௧௭௮)

## பிரபஞ்சவார்த்தைநீக்கம்.

பெரியகைவளையார்ப்பவர்கேட்கிலிப்பேதை
யுறைசெய்நல்குரவுற்றவளென்பரொன்றுணர்ந்தாங்
கரியகைவளைகழற்றினளொன்றுவைத்ததனால்
கருதுவெவ்வுரைவருங்கொலென்றுற்றுரைகடிந்தேன். (௧௭௯)

## மாதாபிதாக்களின்மையெனல்.

மைப்புயலைக்கிழித்தெழுந்தமின்னுப்போல்மாய்ப்பிறவி
யுப்புறுவெண்டிரைப்பறவையுறுமணலிற்பலவாமா

லெப்பிறப்பிற்றந்தைதாயின்றிரங்கியழுகின்றார்
செப்புதிநீமறைவல்லோய்தெள்ளிதிலியானறிந்திலனே. (கஅ௦)

## மாநுடசரீரம்பெறுதற்கருமையெனல்.

வேறு.

மடல்விரிந்தமரைமலர்வைகுவோன்
சடமனைத்தையுந்தந்துமுவந்தில
ணிடராறுக்குமென்றெண்ணிநன்மாநுட
வுடல்படைத்தபின்றேகையுற்றனரோ. (கஅக)

## குருமுதலியவற்றால்ஞானமுதித்தலெனல்.

போற்றுகீழரணிபோல்வான்புகாறுகுரவனுங்குற்
றேற்றமேலரணிபோல்வானியைந்தநற்குணமாணுக்கன்
மாற்றருஞ்சந்திபோலும்வழங்கியவுபதேசச்சொற்
றேற்றியவங்கிபோலுந்தோன்றுநல்லறிவுமாதோ. (கஅஉ)

## ஞானியஞ்ஞானிலட்சணம்.

பந்தமொடுவீடுபகுத்தறிவான்பண்டிதனு
மந்தமிலான்மாவாக்கையானெனன்போனேமூர்க்கன்
நந்தலிலென்னூலறிதல்நல்லவழிதீவழிதான்
புந்தியொடுநிவர்த்தியிலாப்பொய்நூல்பார்த்தறிவதுவே. (கஅங)

## முயற்சிசெய்யவேண்டுமெனல்.

மாநுடவாக்கையென்னுமருவருந்தோணிபெற்று
மூனமில்குரவன்சொல்லாமோடமுய்ப்பவனேடென்சீ
ரானதோரனுகூலக்காலனுகவும்பிறவிவேலை
தானுழிதரவொண்ணுதான்றன்னையேகொல்கின்றனே. (கஅச)

இறந்தொழிந்ததுவெங்கூற்றமென்றுளத்துணர்ந்தார்போலு
மறந்தலைமணந்தசெங்கோலவர்பாரேழுங்காப்ப
நறுந்துழாய்க்கொண்டலூர்துநடந்ததாட்கமலப்போது
மறந்தனர்மாக்கள்வாளாவருபகற்கழிக்கின்றாரே. (௧௮௫)

## எடுத்தசரீரமெல்லாமிச்சைவருதலெனல்.

தன்னைத்தானறியானாகிற்றலைத்தலைத்துன்பஞ்சார
மின்னெனத்தோன்றிவீயுமாக்கைகள்பலவுமேவு
மென்னதோராக்கைதன்னையெடுப்பினுமெடுத்துநின்ற
வன்னதோராக்கைநீங்கவாற்றலனாசைகூரும். (௧௮௬)

## விதிப்படிவருகையெனல்.

வெறுத்துவாரியிலொருபொருள்வீழ்த்தினும்விரும்பி
மறுத்துவந்துதன்மருங்குறுபவற்குரித்தாயி
னிறுத்தோர்செப்பினுள்வைத்தறைநின்றுதான்றனே
பொறுத்துக்காப்பினுமறைந்துபோம்போம்பொருண்மாதோ. (௧௮௭)

உடையவன்மூக்குறுங்கயிற்றினுய்த்திடும்
விடையவன்கைவழிமேவுமாறுபோ
னடைபெறுமுயிர்களோர்நாதனாலென்றுற்
படிமிசையொருவருக்கொருவர்பற்றெவன். (௧௮௮)

பாகவதத்திரட்டு முற்றிற்று.

ஸ்ரீ வாசுதேவசகாயம்.



# பாகவதத்திரட்டுச்செய்யுளும் அதன் அத்தியாயவிபரமும்.

பொற்றபூந்தருவை.

பிருதுமன்கதையுரைத்த
அத்தியாயம்.

பொறிகளையடக்கி.

பிரிவிரதன்மரபுரைத்த
அத்தியாயம்.

எண்ணறுகாமமுத.

பரதன்சரித்திரமுரைத்த
அத்தியாயம்.

இடையுறுமென்பி.
பண்ணுறுகருமத்தா.
காட்டினிற்கலந்துறை.
பொன்னினைவிழைந்து.
பறவைவெம்பசியி.

இந்திரன் விச்சுவரூபனைக்
குருவாகக்கொண்ட அத்தியாயம்.

அண்ணலங்குரவன்.

சித்திரகேதுவின் கதையுரைத்த
அத்தியாயம்.

கனவைப்போலவும்.
சேயரும்பொருட்செல்.
மைப்புயலைக்கிழித்தெழுந்த.
தந்தைநற்றாய்தம்பி.

மருத்துக்கள் முதலியோர்
பிறப்புரைத்த அத்தியாயம்.

மடந்தையர்வதனந்.
புல்லுநன்கொழுநன்.

சிசுபாலன் வீடுபேறுரைத்த
அத்தியாயம்.

தோற்றுவன்சத்தா.
புகழ்தலும்பழித்த.

இரணியனைக்கொன்ற
அத்தியாயம்.

வெறுத்துவாரியி.
தழுவுதாவரத்தெங்.
போக்கிடாமலைம்பு.
பாவத்தால்வரும்பொய்.
பன்னுநூல்பலதேர்ந்.
ஓதுநூல்பலவுலகிய.
கூறுமங்கியுந்தாம.
பாதவங்களின்றளி.
பன்னுமாக்கைசேர்.
புந்திமுக்குணம்.
நிலவுமோர்வினை.
காமமானதுதெவிட்.
அன்புசெய்வதிங்கரி.
விழைவறவெறிந்.
பூவுறைமணம்போ.
எங்குநீயுறைந்திட்.
உருடருஞ்சகடுபோ.
அஞ்செவியானவண்.
ஆதியிலொருத்தனாகி.
ஆதியாமாயையாகி.
வேட்டுமெனையார்.
தோற்றுறில்வீயுங்.
வெற்றிவேலவுணர்.

வர்ணாச்சிரமமுரைத்த
அத்தியாயம்.

உலகெலாந்தன்னிட.
ஆசையாலருந்தாரா.

இல்லறத்தோர் கதியுரைத்த
அத்தியாயம்.

விரிவுறுநட்பொடுபகை.

# சூசீபத்திரம்.



பகவற்கீதைத்திரட்டுச்செய்யுளும்
அதன் அத்தியாயவிபரமும்
இப்புத்தக அந்தத்திற்
காட்டப்பட் டிருக்கின்றன.

உ

கணபதிதுணை.

ஹரிஓம்ஸ்ரீகிருஷ்ணாயபரப்பிரமணேநம:

# பகவற்கீதைத் திரட்டு.

## முதலாவது தோத்திரம்.

பாதியோர்பெண்மையான்பரிந்துபெற்றதோர்
சோதியாங்களிற்றினைத்துரமண்மையிற்
பேதியாதுளம்பெறப்பேணிப்பாகவற்
கீதையான்மொழிகுவன்ஞானங்கிட்டவே.

வேறு.

அரியயனோடரனாகி யகிலந்தன்னை யாக்கியளித்தழிக்கின்றவனி த்தைக்கென்றாங், கரியதுவாய்க்காந்தத்தி னிரும்புபோலக் கரணத்தின் சலனத்துக்கேதுவாகி, வரியமருமரவணை மேனெளியவேறி வைகுண்டத்தினி தமருமாயோன்மண்மேற், பரிபுணருமணி நெடுந்தேர் பார்த்தற்கூர்ந்த பாண்டவர்கள் * சாரதி நாம்பரவுந்தெய்வம்.

வேறு.

ஒருபதமடித்தொருபதம்பொற்றேர்மிதித்
தொருகையிற்குசைகசையொருகைஞானமாய்ப்
பொருகைவில்விசயனைப்புரிந்துநோக்கிமெய்
தருபொருளுரைத்தவர்சரணம்போற்றுவாம். (உ)

* சகாயனும் - எனப்பாடமோதுவாருமுளர்.

வேறு.

ஐவகைப்பொருளுநான்குகரணமுங்குணங்கண்மூன்றுஞ்
செய்வினையிரண்டுமொன்றியாவருந்திகைப்பநின்ற
பொய்யிருளகலஞானப்பொருட்கதிர்விரித்தபுத்தேள்
கைவளராழிச்செங்கட்கண்ணனைக்கருத்துள்வைப்பாம். (௩)

வேறு.

ஞானமுதலிந்தியங்களனைத்திற்குநாயகமே
யூனவினைத்தளையறுப்பாயுன்னுடையபுகழ்கேட்கில்
வானவருஞ்சித்தர்களுமனங்களித்துமகிழ்வெய்தத்
தானவருமரக்கர்களுஞ்சாய்துயரப்படுவர்களால். (௪)

கையும்பதமுந்திருவாயுங்கண்ணுஞ்செய்யகருமுகிலே
யையைம்பொருளுமறிவரியாயயனுர்தாயேயந்தமிலாய்
மெய்யும்பொய்யுமில்லாதாயெல்லாமாகிவிரிந்தாயே
யுய்யும்பரிசுநினைந்தவர்களுன்னைவணங்காதவருளரோ. (௫)

ஆதிதேவனுவாய்நீயாக்கைக்கமைந்தவாருயிர்நீ
யேதுமறியப்படாமையுநீயெல்லாங்கடைக்காற்புகலிடநீ
யோதியுணர்கின்றுயுநீயுணர்வாலுணரப்படும்பொருணீ
நீதியமனுயழிப்பாய்நீநீருங்காற்றுமாவாய்நீ. (௬)

ஏயும்பரிசிவ்வுலகெல்லாமென்றும்பிறப்பித்திடுகின்ற
தாயும்பிதாவுமாவாய்நீதாய்தாய்தந்தைதாதையுநீ
யாயும்படியேயல்லாதவையாவுன்னையடியேனென்
மாயும்பிறவித்துயர்தீரநூறுயிரக்கால்வணங்கினேன், (௭)

என்பேரிடும்பைகெடும்வண்ணமின்னந்தொழுதேனெந்தாயுன்
முன்பேதொழுதேனுன்னுடையபின்பேமுறையால்வணங்கினே
னன்பேயடியேனுருயிரேயகலாவிந்தப்பெரும்பிறவி
வன்பேகெடவுன்றனையெங்குமறித்துமறித்தும்வணங்கினேன். (அ)

வேறு.

தேவதேவநின்னில்வேறுதேவரேதுதெய்வமேது
பாவமேதறங்களேதுபற்றியாதுவீடியாது
சாவதேதுவாழ்வதேதெதனைத்துமாயதன்மைநீ
யாவதேதுமொன்றுநானறிந்திலேனென்மாயனே. (கூ)

நீதிவேதம்வானுளோர்நிலத்துளோர்நினைந்துநைந்
தோதியோதியுட்கசிந்துணர்ந்துமுன்னைமுன்னமே
சாதிபேதமாகிவாழ்சராசரங்களுக்கெலா
மாதிமூலமென்றுநானறிந்திலேனென்மாயனே. (க0)

சாயைபோலும்வாழ்வுமாடுவீடுதந்தைதாயெனும்
பேயையேறிமாறியேபிறந்திறக்குமீதெலாந்
தூயையாகியாதுமோர்தொடக்கிலாதுநின்றநின்
மாயையாவதென்றுநானறிந்திலேனென்மாயனே. (கக)

யாதவாவென்மைத்துனாவடாவசோதையின்னுயிர்க்
காதலாயகாலியாயகண்ணகண்ணவென்றுநா
னேதலாவதன்றியேயுரைத்ததீமையாவையு
மாதகாததென்றுநானறிந்திலேனென்மாயனே. (கஉ)

ஏறுமல்லுவென்றுகுன்றெடுத்தவண்ணமெண்ணியே
கூறுமல்லதீரவும்பர்கூறுகின்றகொண்டலே
வேறுமல்லையொன்றுமல்லைமெய்மைகூறுமப்பொரு
ளாறுமல்லையென்றுநானறிந்திலேனென்மாயனே. (கங)

வேறு.

என்னுடையதோழனெனவேகருதியாது
முன்னுடையமேன்மையினையொன்றுமுணராதே
வன்மையினின்மொழிமறித்தெதிருரைத்த
புன்மொழிகளானவைபொறுத்தருளுகண்டாய். (கச)

உண்ணல்விளையாடுதலுறங்குதல்சிரித்தல்
பண்ணலுறுபோதுகளினும்பழமையாலு
மெண்ணலறியாமையினில்வந்தபிழையெல்லாங்
கண்ணகருணாகரபொறுத்தருளுகண்டாய். (கரு)

வேறு.

உண்டாயவுலகனைத்துமீன்றாய்நீயே யெவராலு முன்னுண்மை யுணர்ந்துகூறிக், கொண்டாடப்படுவாய்நீமெய்மைநல்கிக்குருவாகிக் குற்றங்கடீர்க்கின்றாய்நீ, யென்றாலுமறையனைத்துமுன்னின்மிக்கா ரில்லையெனநின்றேது வெடுத்துக்காட்டக், கண்டாலுநின்பெருமை காணமாட்டார்கண்ணிலாதவர்வேறுகாண்பதுண்டோ. (கசா)

அறியாதபருவத்து மகன்செய்குற்ற மருந்தாதைபொறுத்தனவு மாவிபோலப், பிரியாததோழன்செய்குற்றநட்பிற்பெரியோர்கள்பொ றுத்தனவும்பேதையேனுய்க், குறியாதுசெய்துவருங்குற்றமெல்லாங் குணமாகக்கொண்டருளவேண்டுமென்றே, வெறியாருமலர்ப்பதங்க ளிடையேவீழ்ந்துவேண்டிக்கொண்டிவையின்னம்விளம்பலுற்றான்.

வேறு.

பண்டுகண்டறியாப்பழங்கோலத்தைக்
கண்டுநெஞ்சங்கலங்கிக்களிக்குமாற்
றண்டுநீண்முடிசங்கொடுசக்கரங்
கொண்டகோலத்தையேகொண்டருளுவாய். (கஎ)

## இரண்டாவது வஸ்துலட்சணம்.

மாயுமவராலுமுயிர்வாழுமவராலு
மாயுமறிவோர்களழியாமையறியாயோ
நீயுமிவர்தாமுநிகர்நானுநெறிதேரி
லேயும்வகையாலுலகிலென்றுமுளமேகாண். (கக)

பொன்றுவதுடம்பதனுணின்றபொருள்பொன்று
தென்றுமொரியற்கையொடுநிற்குமியல்பைக்கேண்
மூன்றொடர்மகப்பருவம்விட்டிளமைமூப்போ
டொன்றுமுடலாயினுமுயிர்க்கியல்பதன்றால். (உ0)

வேறு.

மண்ணினுயவிகாரமுமம்மண்ணேயந்தமண்ணொழித்துப்
பண்ணினரும்பிறரில்லைபண்ணப்பட்டபலபொருள்க
ளெண்ணினுருவதன்முன்புமிறந்தபொழுதுநிகழ்விடத்துங்
கண்ணினுடின்மண்ணொழியக்கண்டாருளரோகட்டுரைப்பாய். (உக)

வேறு.

யானும்வகையதுகேளொழுமொலியேமுதலியவும்
வானதியில்வருபூதமும்வருநாள்வருவிடமா
யானதெழுமறிவியாவையுமறிகாரணமதுவாய்ப்
போனதொளாடுவருநாள்வழிபுணராததொர்பொருளே, (உஉ)

அழியாதவையதுயாதெனிலவிகாரதையுருவா
யொழியாநிறைவொடுநீடியதெனதியானெனவுணரா
வழியாமதியியலாலிதுசிலமாறுகொள்குவதாய்
மொழியாரவியயமாமிதைமுயல்வாற்கொலவலரார், (உங)

இல்லாமையினியல்கேளெழுகழுதாழியினிடையே
யல்லாதெழுபுனல்போலறிவுறவேயழிகுவதா
லெல்லாவகையினுமாய்வதிவ்வுருவேயறிவதுதான்
சொல்லாதழிகொலையானதுகுறுகாததனெறிகேள். (உச)

வேறு.

ஊறுபடவொன்றிலேபிறத்தல்பிறந்துளவாதல்
வேறுபடவளர்தல்வளர்ந்தயலொன்ருய்விளைந்தமைதன்
மாறுபாடத்தேய்தலறமாய்தலெனவருகின்ற
வாறியல்புமுடம்பன்றியறிவடையாதாதலினல். (உரு)

வேறு

நில்லாவுடற்கேநின்றேயுநித்யமாகியதுநாச
மில்லாததுபொய்ப்பிறப்பிறப்பொன்றறியாததுமற்றதுவறிந்தோர்
சொல்லார்கொலையேவலுஞ்செய்யார்கொலைமேலிட்டுக்குலமறைக
ளெல்லாம்விதித்ததொழிலினையுமியம்பிற்றென்றேயிதுதெளிநீ (உசு)

வேறு.

பீறியபோர்வையைப்பெயர்த்துப்பின்னரோ
வேறியல்போர்வையைவிரும்புவாரென
வூறியவுடம்பினிலுதித்தவுண்மைதான்
மாறியோடரும்பினைமருவுமன்னனே. (உஎ)

வேறு.

உருப்பான்மைமற்றதனுக்கொருநாளுமின்மையாற்
செருப்பால்வெம்படைக்கலங்கள்சேதிக்கமாட்டவா
னெருப்பால்வெந்தழியாதுநீரானெக்கொழுகாது
மருத்தாலுஞ்சலியாதுமற்றதன்றன்வகைகேளாய். (உஅ)

வேறு.

ஆற்றுமிவ்வுடம்பிற்பரமைம்புலன்
மாற்றுமைம்புலனிற்பரமாமனம்
போற்றும்புத்தியதிற்பரம்புத்தியிற்
றேற்றுகின்றதுகாண்பதுதொல்பரம். (உகூ)

வேறு.

சாதிபுரியுந்தொழில்களுக்குந்தக்கோர்செய்யுந்தவங்களுக்குந்
தீதிலுலகமேழினுக்குஞ்சேருமிடமாயுள்ளவெனை
யோதிமுடியும்பரிசேமெய்யுணர்ந்தார்பிறவாரெனவுரைத்தா
ளுதிமுடிவொன்றின்றியேயடையத்தானேயாய்நின்றான். (௩௦)

வேறு.

யாதொன்றிந்தப்புலனறியாவளவினின்பமாயிருக்கு
மியாதொன்றினைச்சென்றடைந்தோர்கள்பின்னையதனிலிரண்டாகா
ரியாதொன்றினைப்பெற்றவரிதனின்மிக்கதொப்பதுண்டென்று
ரியாதொன்றிந்தவறிவுக்கேயறிவாய்நிற்குமதினின்றோர். (௩க)

வேறு.

கண்ணினூற்றெரியலுற்றுணர்ந்தவிவ்விரண்டினூலும்வருகாரியம்
பண்ணிநிற்பனநடப்பவென்றபொருளியாவுமற்றவிருபான்மையே
நண்ணிநிற்பதுலகாதலாலுலகினூசவுற்பவமுநானலா [யால்
தெண்ணின்மற் றறிவதில்லை யெப்பொருளுமென்னிலன்னியமதில்லை

வேதமாகிநிகழ்யானலாதுலகிலென்னில்வேறெனவிளங்கிடும்
பூதமானவைபொறுக்கவேறுபொறையாளரில்லையெதுபோலெனி
லோதுமாமணியனேகமூடுருவுகோவைநூலிலொருபான்மைபோற்
பேதமானபொருடோறுநான்மருவிநின்றவாறுநனிபேசுவாம். (௩௩)

வேறு.

திரியுமிருகதிரினிடைத்திகழொளிநான்றிருமறையி
னரியமுதலெழுத்துநானுடவர்பாலாண்மையுநான்
விரிபுனலிற்சுவையுநான்மேதினியில்வாசமுநா
னெரியில்வருவெம்மையுநானுகாசத்தெழுமொலிநான். (௩௪)

ஆன்றவறிவுடையோர்பாலறிவுநானடங்கினர்பால்
வான்றவநான்வளர்நன்மைபூண்டார்பால்வண்புகழ்நான்
ரேன்றன்மிகுதிறலோர்பாற்காமமுறுத்தொல்வலிநா
னூன்றுபொருளனைத்தினுக்குமுயிராகியுள்ளேனுன். (௩௫)

மூன்றுகுணவகையாகிமுடிகின்றபொருண்முழுதுந்
தோன்றுவதுமென்னிடையேயெனைத்தொடர்ந்தேநிற்பதுவு
மான்றவமற்றவற்றினிடையான்றேன்றேனவற்றினுக்குச்
சான்றெனநிற்குவனல்லாலவைசார்ந்துவாழேனுன். (௩௬)

வேறு.

விரியவுரைசெய்தருளவேண்டுமெனமீண்டவ்
வரியரவிலேதுயிலுமாயவனுரைப்பா
னரியதழியாமையதனைத்தினுமுரைக்கிற்
பெரியதுமொழிந்தபிரமம்பிறவையுங்கேள். (௩௭)

வேறு.

எல்லாப்பொருளுமறிவானையெல்லாப்பொருட்கும்பழையானை
யெல்லாரையுந்தன்னிலைநிறுத்துவானையிரம்பச்சிறியானை
யெல்லாப்பயனுமீவானையார்க்குநினைதற்கரியானை
யெல்லாவிடத்துமிருடீர்த்தவிளவெங்கதிர்போலெழுவானை (௩௮)

வேறு.

யாதொன்றைமறைதெரிந்தோரழியாதென்றெடுத்துரைப்பர்
யாதொன்றையவாவறுத்தயோகிகடாமெய்திடுவர்
யாதொன்றையுறநினைந்தோர்காமமுதலியவிழப்பர்
யாதொன்றப்பரம்பொருளாமதனைச்சுருங்கவியம்புவன்கேள். (௩௧)

வேறு.

நெறியில்வருவியத்தமோடவ்வியத்தங்கூடாதநிலைமையென்றும்
பொறியழியுமாக்கைதனிலழியாதபுலமென்றும்புதிதன்றென்று
மறிவரியநெறியென்றுமழியாதபொருளென்றுமணடந்தோர்பின்னைப்
பிறிவரியநெறியென்றும்பெரியோர்கள்பேசுவதென்பெற்றிகண்டாய்

வேறு.

அறையும்பொருள்களின்முன்பனுபவமொன்றியவதனை
மறையும்பொருள்களின்முன்பறமறையும்பொருளினைமே
விறையுந்துயரதுவின்றிமுனியைநின்றதையிசைவோ
டுறையுந்துகளறநின்றதைமொழிகின்றனனுணர்நீ. (௪௧)

அழிவொன்றிலதறவொன்றியதரிதன்றியததன்மேல்
வழிவந்தமெய்யறிவன்பிலரொனையெங்கணுமருவா
திழிதந்திடுசெனனங்கொடுமரணங்கொடுமிறனே
யுழிதந்திகபரமொன்றியவுருவங்களிலுழல்வார். (௪௨)

வேறு.

யாருமறியப்படாமையேயெனக்குவடிவாயுடையனா
ருருமுலகங்களையடையப்பரப்பிநிற்பனுதலினாற்
சாருமுலகிற்சராசரங்களெனையேயவற்றையான்சாரேன்
சேரும்பரிசுநின்முற்போற்றெளியாதார்க்குத்திகழுமால், (௪௩)

முன்னேயொன்றுங்கலவாதியானிற்பன்முழுதுமாய்நின்ற
வந்நேர்மையினுலுலகமென்னேடங்கலவாதாதலினு
லென்னேயென்றனியற்கையினைப்பாராயிந்தச்சகமெல்லா
மன்னேயென்றன்மாயைபெறுமாங்காரமுன்னுய்த்தருவன்காண். ()

வேறு,

என்னுருவிற்புணராதேயென்னைவிடத்தோன்ருதே
மன்னுயிர்களெனையென்றுஞ்சார்ந்துவரும்வகைகேட்கி
லுன்னுமிடமெங்குநிறைந்தொளிர்கின்றவானெங்குந்
துன்னியற்கைசெறிகாற்றின்ருேற்றம்போற்சுடர்வேலோய். (௬௫)

ஈண்டுபொருளிவையனைத்துமிறக்குங்காலென்னிடையே
மாண்டுபுகும்பிறக்குநாண்மற்றவைதான்வரன்முறையே
மீண்டுபுறப்படுமெல்லாமாதலினுன்மெய்பார்க்கில்
யாண்டுமுயிர்படைத்துக்காத்தழிக்கின்றேன்யானேகாண். (௬௬)

வேறு.

வேதமொழிவேள்விமிகுவேள்விபிதிரர்க்கே
யீதனுறும்வேள்வியெரிநெய்சருவிவற்றுற்
காதலுறுவோர்கள்புரிகாரியமிதெல்லா
நாதமுதலாயபொருளாயவையுநானே. (௬௭)

ஆயினுலகங்களையளித்தொளிவளர்க்குந்
தாயினெடுதந்தையவர்தந்ததலைகண்ணுன்
போயினவினைப்பயனளித்தல்புரிவேறு
னேயுமறைமூன்றினுடனேமெனுமெழுத்தியான், (௬௮)

வேறு.

எல்லார்க்குங்கதியுநானிருவினைப்பார்கனுநா
னெல்லார்க்குந்தலைவனுனெப்பொருட்குஞ்சான்றுநா
னெல்லார்க்குமுறைவிடநானியார்க்குமிடர்தீர்ப்பேனு
னெல்லார்க்குநல்லேனுமெப்பொருட்கும்வித்துநான். (சக)

வேறு.

தாங்கியநீரையெல்லாமிரவியாய்த்தலத்துநின்று
வாங்குகின்றேனுமீளமழைகளாய்க்கொடுக்கின்றேனு
மீங்குமெய்யுணரிலியானேயாதலாலியாதொன்றேனு
மாங்கருச்சனைசெய்கின்றுரொன்னையேயருச்சிக்கின்றுர். (ருo)

ஞானமாயொன்றுய்நின்றவென்னையேநானுவாகப்
போனதீவினையின்மாந்தர்வேள்வியாற்பூசித்தத்தால்
வானமாமுலகமேறிவாழ்ந்துமண்ணிடையேவீழ்ந்திட்
டீனமாமாசையாலேயிறப்பதுபிறப்பதாவார். (ருக)

பேதமுடையபிறப்பகன்றுன்பிறழாநிறைவுபெருஞ்செல்வ
மாதிதேவன்பரப்பிரமமழிவில்லாதானுரணங்க
ளோதவரியவுத்தமனிங்கெல்லாமுயிர்ப்பானெனவுன்னை
நீதிமுனிவருரைத்தவெல்லாநீயேயருளிச்செய்தனையால். (ருஉ)

ஓதிற்பெருகும்பூதங்கட்கெல்லாமிதயத்துள்ளுயிர்நான்
பேதித்திடுமிப்பொருட்கெல்லாம்பிறப்புநிலைகடாவேனு
ளுதித்தியரில்விட்டுணுநான்மருத்துவரின்மரீசியுநான்
சோதிக்கதிரிலிரவியங்கியென்றுசொல்லப்படுவேனுன். (ருங)

வேறு.

இரும்புவனமனைத்தினுக்கும் வித்தானெனப்போக்கி யாதுமி ல்லை, வருந்தினுமென்பெருமைக்குவரம்புகாக்கமுடியாது வகுத்துச் சொன்னோம், பெருந்திருவையுடையனமெய்ப்பெருமுயற்சியனவெ ன்றுபேசுமிந்த, வரும்பொருள்களனைத்துமெனதொளியினால் வருவ னவென்றறிதிநீயும். (ருச)

வேறு.

பலவினியுளத்தெனிந்தப்பல்லுயிரனைத்துமெல்லா
வுலகமுமொடுங்கிநிற்பதென்னிலோரிடத்தினுள்ளே
கலவலனவற்றோடென்றான்கஞ்சனாருயிர்போய்த்துஞ்ச
வலைகடல்வளராதேபேர்ந்தாயர்பால்வளர்ந்தபெம்மான். (ருரு)

வேறு.

ஆதியந்தமிலதழியாதுநின்றபெருமைய
தோதிலுண்டதிலையெனுமூனமின்றியொளிர்வது
நீதியின்கணகிலமுமாகியெங்குநிறைதலி
னோதருங்கைசெவிதலைகால்களெங்குமுடையது. (ருசு)

வேறு.

பூதமைந்தினகத்திறோடுபுறத்தினும்பொலிகின்றதிங்
கேதமின்றிநடப்பநிற்பனவாயிருப்பததின்னதென்
றோதரும்படிநுண்ணிதாகியதொன்றதாகியிருந்துமெய்ப்
பேதம்வந்ததுபோலநின்றுபிணங்கவும்படுகின்றதே. (ருஎ)

வேறு.

காணும்புலன்களனைத்தினுக்குங்கண்ணாய்நின்றுகாட்டுவது
பேணும்புலன்கடனக்கொன்றுமில்லாதியன்றபெற்றியது
பூணும்பற்றுந்தனக்கின்றியெல்லாந்தானேபொறுக்கின்ற
தாணும்பெண்ணுமாங்குணமுமன்றியெங்குமாகியது. (ருஅ)

வேறு.

அருவமாயதிதூரமாயதனைத்துமாயதணித்துமா
யுருவமியாவுமளித்துமீளவொழிக்குநாளிலொழிப்பது
பொருவிலாவெளிகட்குமுள்ளொளியாகியேபொலிகின்றதிங்
கிருமைவீடியஞானமோடதின்ஞேயமாகியிசைந்தது. (ருக)

வேறு.

உண்பனயாவையுமுண்கின்றானுமெய்க்
கண்கொடெப்பொருளையுங்காண்கின்றானுமென்
னண்பவெப்பொருட்குமொத்திருக்குநாதனு
மெண்செய்திவ்வுடம்பிலேநின்றவீசனே. (கூ0)

வேறு.

உன்னியவானமெங்குமொழிவறநிறைந்ததேனுந்
தன்னுடைநுண்மையாலேபிறவொடுஞ்சார்தலுண்டோ
பன்னியவதுபோலெங்கும்பரந்துளனெனினுமங்கு
மன்னியவீசனந்தவுடம்பொடுமருவமாட்டான். (கூக)

இரவிதானொருவனேயாய்நின்றிந்தவுலகத்தெங்கும்
விரவியவிருளைநீக்கிவிளங்குறுமாறுபோலத்
தாவியாவருமுன்னில்லாச்சராசரவுடம்புதோறும்
பரவியானுளைத்தமாயோனொருவனேபரந்துநிற்பான். (கூஉ)

வேறு.

இந்தவண்ணத்திறைலிவ்வுலகிடை
வந்தயோனியெலாம்வருவித்திடுந்
தந்தைதாயவையீன்றளிக்கின்றதா
மந்தமாமலர்மேலயனுமன்றே. (கூரு)

வேறு.

துன்னியவாசைகோபங்கடந்தவர்காணத்தோன்று
மென்னுருவியற்கைகேட்கிலியாவையுங்காட்டுகின்ற
மன்னியவொளிகள்காணுவகையதாய்வந்துசேர்ந்தார்
பின்னியல்வேறென்றாகாப்பெற்றியேனென்றுபேசும். (சுச)

குடந்தொறுந்தோன்றுகின்றவாகாயமுங்குலைதற்கேற்பத்
தடம்புனறோறுந்தோன்றுஞ்சந்திரன்றானுமென்ன
வுடம்புகடோறும்வேறாயுயிரொனநின்றேயந்த
விடம்படுபுலன்களாறுமியல்பிணிவியற்றுவேனான். (சுரு)

இந்தியங்களுக்குங்கண்ணாணிரவிதீயிந்துவின்பால்
வந்தெழுகதிருநானேமாநிலமாகிநின்று
கந்தியன்றனையதோளாய்காமமேமுதலாந்தன்மை
தந்திரந்தவிர்த்தீதெல்லாந்தாங்குகின்றேனுநானே. (சுசு)

வேறு.

தின்பகக்குவசுவைப்பவுண்பவாய்
நன்பயன்செயுநால்வகையுண்டியு
மின்பமாம்வகையாக்கைகடன்னினின்
றன்பவங்கியாயறுக்கின்றேனுநான். (சுஎ)

நல்லமாந்தர்நல்லறிவுநன்கிலாப்
புல்லர்தங்கள்புல்லறிவும்போர்திகழ்
வில்லமைந்ததோள்வீரர்வீரயா
னல்லதில்லையென்றறியவேண்டுமே. (சுஅ)

மருவுகின்றதிவ்வுலகின்மாய்தலே
யுருவமாகமுன்புடையதொன்றுமே

யருவமொன்றிலுலழிவதின்மையே
பொருவநின்றதோர்பொருளுமுண்டரோ. (௬௯)

மொழிசெய்கின்றதிவ்விரண்டுமுற்றவே
விழியிலுலுறநோக்கின்மெய்மையே
யழிவதாக்கையங்கழிவுபாடிலா
தொழிவதென்னெனினுயிரொன்கின்றதே. (எ0)

இவையிரண்டையுங்கடந்தியாதுமோர்
நவையுமின்றியேநாசமின்றியே
யெவையுமின்றியேயிழிவுமின்றியே
குவையினின்றதோர்குறியிலின்பமே. (எக)

இந்தவின்பமாமென்னேயுள்ளவா
சிந்தையின்கணேதெளிதன்மேயினர்
பந்தமொன்றிலார்பழையவிப்பொருட்
கந்தமாதிவேறறியவொண்ணுமோ. (எஉ)

வேறு.

நன்றாய்ஞானத்திரளாகிநாலுவிதமாய்விரிந்தெங்கும்
பொன்றுநின்றபூதங்கடோறும்பொன்றப்பொருளாகி
யொன்றாய்நிற்பதொன்றதனையப்படியேயுணருமுணர்வதனை
யன்றுமென்னூர்சாத்துவிதஞானமெனவேயமைப்பரால். (எ௩)

## மூன்றுவதுஞானமகிமை.

தொன்மையாகமுன்சொன்னதுறைக்கெலா
நன்மையாமிகப்பாலதுஞானமே
பின்மையாலறுத்தாங்கதுபேணிடுந்
தன்மையாதெனிலாங்கதுஞ்சாற்றுவாம். (எ௪)

வேறு.

அதனால்வருபயனியாதெனிலழிபாதகமுதலாய்
விதநாடரும்வினையாழியினிடையேவிழுகுறுவார்
திதனுகியவறிவாகியசிதையாமிதனைவிரு
விதனும்வகைகளாசேருவரொமனெயெனிலதுகேள். (எரு)

எறியாவெரிவருகானிடையெரியாதனவெவைதா
னறியாவறிவுடையோர்களுமறிவாரதுவிதுபோற்
குறியால்வருகுணஞானமேயனலேகொளவிடுமேற்
பொறியால்வருவினையானவைபொடியாமிதொர்பொருளே. (எசு)

வேறு.

அத்திஞானம்வினையினதனினு
மெத்தியானமிகுமதின்மேலவாம்
வித்தினுயவினைப்பயன்வீடுதல்
சித்தசாந்தியதனினுஞ்சீரிதால். (எஎ)

## நான்காவது ஞானிலட்சணம்.

அன்னவகையாலுருவழிந்துவருமாங்கே
யென்னுருவமாமறிவிறந்துபிறவாதாற்
பின்னதறிவானுடலழிந்துபிரிபோதுந்
தன்னதெனவோதுமொர்சலிப்பதறியானல். (எஅ)

அறிவினிற்றன்னலின்புற்றனைத்தாவாவினையுநீக்கி
வெறிதருவெகுளிகாமமயக்கநீத்தின்பதுன்பம்
வறிதெழுபொழுதில்வாட்டமகிழ்ச்சியென்றிவையுமாய்த்துப்
பொறிதருநலனுந்தீங்கும்போற்றல்போற்றமைபோக்கி. (எகூ)

ஆமைதன்னுறுப்போரைந்துமதனுளேயடக்குமாபோற்
றீமைசெய்புலன்களைந்துந்தன்னுளேசெறியச்சேர்த்தி
வாய்மையுண்ணிகழுமின்னேவழுத்தவும்படுகின்றுனுற்
றூய்மைசெய்தவையேகாளுஞ்சொல்லுவதவன்றன்சொல்லால். ()

யாதொருபொருளையெல்லாவுயிர்களுமிருள்போற்காணு
மோதருஞானியத்தையுளங்கையிற்கனிபோற்காணு
மியாதொருபொருளையெல்லாவுயிர்களுமென்றுங்காண்பார்
காதலின்ஞானியத்தைக்கண்ணிருற்றெரியக்காணுன். (அக)

வேறு.

மெய்வகைதனக்கும்புலன்கட்குமுள்ள வேறுபாட்டினைமிகவறிந்தோர், ஊவகையியற்கைப்புலன்களேபொறியுற்றழுந்துகின்றனவெனவசங்கா, னிவ்வகையறியாதவனிருவினையுமியான்செய்தேனெனவிளைத்தேங்கு, முய்வகையிதுநீயுணர்ந்துணக்கடுத்தவினைசெயென்றுரைத்துமீண்டுரைப்பான். (அஉ)

வேறு.

பிரமமானோர்பிரமநெருப்பிடைப்
பிரமமாகியமந்திரந்தன்னிருற்
பிரமமாயசருவுடன்பெய்தபின்
பிரமமேயடைவாருளர்பின்னுங்கேள். (அ௩)

அறிவதாகியவங்கியிலேகொள
வறிவையேசிலராகுதிபண்ணுவார்
செறிவதாஞ்சமத்தீயிடையேசில
ரறிவதாயபுலன்களையீவர்கள். (அச)

வேறு.

காணுங்கேட்குமுறுமோக்குங்காலானடக்குங்கண்வளரும்
பேணுந்துறக்குமூச்சுவிடும்பேசும்விழிக்குஞ்சிம்பிளிக்கும்
பூணுமின்னம்பலவெனினும்புலன்சேர்பொறியின்புணர்ப்பென்றே
தூணுங்கிரியுமெனவொன்றுந்துளங்கான்விளங்குந்துணிவுடையோன்

இகமேநிகழும்புலன்விளைந்தவின்பமெல்லாமறவிகந்துள்
ளகமேவிளையும்பேரின்பமடைந்தார்க்கென்றுமழியாதாற்
புகமேய்கின்றபுலன்பொறிகள்புணர்ந்தவின்பம்போமென்றுந்
தகமேலிடராமெனவுமவைதக்கோரொன்றுஞ்சாராரால். (அசு)

வேறு.

உடம்புடனேயுளனாகியிருந்தே
விடம்புரைகாமவெகுளியின்வேகாச்
சடம்பொறையாமைதவிர்த்தவனேநல்
லிடம்புகுஞானியுமின்புறுவானும். (அஎ)

வேறு.

மெய்யறிவேவிளைவின்பமதாகவு
மெய்யறிவேவிளையாடிடமாகவு
மெய்யறிவேயொளியாகவுமேயோர்
மெய்யறிவேபெறுமின்பம்விடாதார். (அஅ)

வேறு.

அஞ்சுபொறித்திறனாசையடக்கா
நெஞ்சுபயத்தொடுகோபமுநீக்கா
வெஞ்சுதிறத்தலில்யோகிகள்காணு
முஞ்சுபிறப்பிடர்யாவுமுதிர்ப்பார். (அகூ)

புன்மையவாயபொறித்திறஞேடும்
பன்மையமானவினைப்பயனோடு
மன்மையனுனவனப்பொழுதையா
தன்மையில்யோகமதிற்றலைநின்ருன். (கூ0)

வேறு.

பாடும்பனுவல்பலவோதியவற்ருலறியும்பயனுணர்ந்து
நீடும்புலன்களவைவென்றுநிலையிற்கலக்கக்கரியாஞ
யோடும்பொன்னுமொருபொருள்போலொக்கப்பார்க்குமவனேயிங்
காடும்பெரியமாயக்கூத்தாடாததுகண்டமர்ந்திருப்பான். (கூக)

கைம்மாறில்லாதனசெய்வான்காதற்ரேழன்கடும்பகைஞன்
விம்மாதெவர்க்குமொத்திருப்பான்வேண்டப்படுவான்வேண்டாதா
னம்மாமறைநூன்னெறி புரிவாஞகாதனவாக்கிடுவானென்
றிம்மாநுடவரனைவருக்குமொப்பான்யோகியெனப்படுவான். (கூஉ)

வேறு.

வஞ்சர்வேல்கொடுமொர்பினெறியினு
மெஞ்சவேதழன்மூடியெரியினு
நஞ்சிஞரழஞகாலியினு
மஞ்சிடாரதுவானந்தமாவதே. (கூங)

வேறு.

இழியாதிருந்தயோகத்தையென்றுந்தலைநின்றவனென்று
மழியாவின்பத்தினையின்பத்தாலேயடையுமதுநிற்க
வொழியாவெல்லாவுயிர்களுந்தன்னுள்ளேகாணுமவற்றுள்ளே
கழியாதெங்குந்தானின்றபரிசுந்தெரியக்காணுமால். (கூச)

அறிவினாலென்னையாகவறிந்துகொண்டமைதியாலே
பொறிவழியடைத்தெப்போதுமென்னையேபோற்றிசெய்து
நெறியினால்வழுத்திவாயாலென்னையேநினைந்துநெஞ்சாற்
செறிதருமிவர்கள்கண்டாய்தேவரிற்றெரியப்பட்டார். (கரு)

வேறு.

இப்பரிசென்னையறிந்தவரொன்பால்
வைப்பர்கள்சிந்தையையமன் னுயிரோடு
மப்பரிசேயறியாரையுமாங்கே
யுய்ப்பருரைப்பர்களிப்பருவப்பர். (கசு)

வேறு.

ஒன்றினுமாசையின்றியிந்தியங்கடன்வழியொழுகிடாதொருக்கி
நன்றியினேடுதீங்கினிதொத்துநல்வினைதீவினைதுறந்து
பொன்றினுநோவுற்றழுதல்செய்யாதேபூரித்தல்வாடுதலின்றி[யாதே.
யென்றுமுன்பிழந்த பொருட்கிரங்காதேவரும் பொருட்கிச்சைசெய்

வேறு.

இகழ்பவர்நட்டாரொன்பதின்றியேயின்பதுன்பந்
திகழவமானமானஞ்சீதமோடழலின்றீமை
புகழ்பழியிவற்றுளொத்துபொருந்திவாழிடமொன்றின்றி
நிகழ்தரும்யோகிகண்டாய்மற்றெனக்குரியனீரான். (கஅ)

வேறு.

செறியுமிப்பொருளினைச்சிலர்தியானமாங்
குறியினாற்றம்முளேகண்டுகொள்வர்க
ளறிவருஞ்சாங்கியயோகமாகிய
நெறியினொன்குமாய்நிற்பக்காண்பரால். (கக)

வேறு.

கெடுகின்றபூதங்கடோறுங்கெடாதே
வடுவின்றிநின்றமறைப்பொருடன்னை
நடுவென்றுகண்டவனல்லனவெல்லாங்
கடுகின்றுணையொழியாவகைகண்டான். (கoo)

வேறு.

உணர்வவிகாரியென்றும்வினையெலாமுடம்பினோடே
புணர்வனவென்றுங்கண்டான்பொய்யிலாமெய்மைக்கண்டா
னிணர்மலர்முடியாயெல்லாவினைகளுஞ்செயினுமான்மாக்
குணமிலியாதலாலேயவற்றொடுங்கூடிநில்லான். (கoக)

வேறு.

சத்துவமாந்தர்பரகதியடைவர்தமத்துளோரதோகதிசார்வார்
மத்திமகுணத்தோராயினோர்நடுவின்மாநுடப்பிறவியாய்வாழ்வா
ரித்திறமாயவுருவமேவிகாரியானவிகாரியென்றிவற்றை
மெய்த்திறனுகவறிந்தவனறிந்தப்பொழுதிலேவீட்டின்பமடைந்தான்

வாய்மையவல்லாக் குணமவைமூன்றின் காரியமாய்வருகின்ற, தூய்மையுந்தொழிலுமயக்கமுமென்று சொல்லியதுறையிவைமூன்றுஞ், சேய்மையவென்றுபெறுதபோதிரங்கல்பெற்றபோமகிழ்தல்செய்யாதான், றன்மயலாகாக்குணங்களோடிருந்தேயவற்றினற்சலிப்பிக்கப்படாதான். (கoஉ)

வேறு.

மானமவமானம்வருமின்பமிடர்மண்பொன்
ஞனமகிழ்வப்பிரியமன்பர்பகையானே
ரூனவுரையோடுபுகழுற்றபொழுதொப்பா
னீனமுறுகின்றகுணமானவையிகழ்ந்தான். (கoச)

## ஐந்தாவது ஞானிமகிமை.

குளமுதலியவற்றேகுளிமுதலிய துய்ப்பா
னளவறுபுனல்பெற்றுலவைகொளலருமைத்தோ
வளமறுகருமத்தால்வருசிறுசுவைவற்ற
வுளமகிழ்பிரமத்தேயுளகொளலெளிமைத்தால். (க௦௫)

வேறு.

யானெனதென்பதின்றியெவ்வகைப்பொருளும்விட்டான்
றனெனச்சரிக்கின்றன்யாரவனையேயடையுஞ்சாந்தி
யீனமதடையாரித்தையடைந்தவரிறக்கும்போது
ஞானமேயுடையாரென்னைநண்ணுவார்பிறவிநண்ணர். (க௦௬)

வேறு.

கண்ணிற்கருதருமறிவைக்கருதியவறிவே மிகவருகளிகூர்வோ, னெண்ணிற்றெழிறரு பயனுற்றிடும் வகையிசையாறுதலில் வினையா வும், பண்ணிற்பெறுவதோர்பயனுண்டோவவைபண்ணுதுறுவதோர் பழியுண்டோ, மண்ணிற்பிறரிவனிவையுற்றிலனெனமதியாரவைசெய விதியாரால். (க௦௭)

வேறு.

செயன்மேனின்றவறிவிடையேசெயலின்மையுமச்செயல்செய்யா
வியன்மேனின்றபுலன்களிலேயெல்லாவினையுமியல்வது வு
மயன்மேலின்றியறிந்தான்யாரவனேயெல்லாமறிந்தானு
முயன்மேனின்றயோகியுநல்வினைகளெல்லாமுறுவானும். (க௦அ)

வேறு.

அடங்குகின்றபுலன்களொடாசைபோய்
மடங்குகின்றமனத்தினனவ
னுடம்பிதன்பொருட்டாலுளதாமெனத்
தொடங்குகின்றவினைதொடக்குண்ணுமோ. (க௦௯)

பெற்றதேகொடமைந்துமுன்பேறிழ
வுற்றபோதிலொத்தொன்றுமொருவர்பாற்
செற்றமேதுமிலாதவன்செய்வினை
குற்றமோவவற்றின்றிறங்கூறக்கேள். (௧௧0)

வேறு.

அறிவினலறிகிலாதவையெலாமழியவே
செறிவினறிவுவானிரவிபோறிகழுமா
னெறியினலதனிலேநிலையுமாயதனிலோர்
பிறிதிலாவகையினர்பிறவியானதுவிலார். (௧௧௧)

வேறு.

நன்றேஞானவருமறையோனன்றுயர்நாயிறைச்சிதனைத்
தின்றேயுழலுமவன்யானையாவென்றிந்தத்திறத்தெல்லா
மன்றேயென்றுதாமென்றுதறிவாய்நின்றவெனையெங்கு
மொன்றேயாகக்காண்பானிவ்வுடம்போடிருந்தேயுடம்பறுப்பான். ()

யாவனொருவனென்னையெல்லாவுயிர்களிடையுமென்னிடையே
மேவவெல்லாவுயிர்களையும்வேறுகாதேமெய்காண்பான்
றேவர்பகைமுன்செகுத்தோனேயவன்யாதெனினுஞ்செய்திடினு
மாவவனாகின்றேன்யானதுநீயேதுமையுறேல். (௧௧௩)

இடரானதுதானின்பந்தான்யாரோனுக்குமாயிடுகப்
படராநின்றவதுதானுமுறுவான்யோகியெனப்படுவான்
சுடராய்நின்றவடிவேலோய்துணிநீயென்றுதுழாயலங்க
லடராநின்றநெடுமுடியோனருளிச்செய்யவவனுரைப்பான். (௧௧௪)

வேறு.

இன்னவர்தங்களிலென்றெடும்வேறு
யுன்னலிலாமையின்ஞானியுயர்ந்தோ

னன்னவனல்லனெனக்கவனுக்கே
நன்னலம்வைப்பதுநானுநலத்தோய். (ககரு)

வேறு.

தேவரையடைந்தோர்தேவராவர்கள்பிதிர்கடம்மை
மேவவேயடைந்தோரந்தப்பிதிர்களாய்விளங்காநிற்பா
ரியாவர்கள்யாவர்பாலாரவர்களேயாவரொன்று
லாவவென்னடைந்தார்யானேயாவதற்கையமுண்டோ. (ககசு)

எப்பொருடனக்கும்யானொத்திருத்தலாலெனக்கியாரு
மொப்பர்களினியரின்றுதாரொனவொருவரில்லை
யிப்படியறியுமன்பர்பக்கலேயானுநிற்ப
னப்படியவருமென்பாலங்ஙனேயமர்ந்துநிற்பார். (ககஎ)

ஊனையேமுதலாயென்பாலொருக்கியென்னுணர்வார்நானு
நானையேவிட்டுத்தீமைபுரியினுமவர்கணல்லா
ரோனையேப்புயத்தாயென்றுங்கேடிலாவின்பமல்லா
தானையேயொருகேடில்லையெங்கணுமவருக்கையா. (ககஅ)

உரைசெயற்கரிதாய்நெஞ்சினுணர்விடப்படாதாயெங்கும்
புரையறக்கலந்துபோக்குவரவின்றிப்பொலிந்ததொன்றைக்
கரைசெயற்கரியவாயபுலன்களைக்கடந்துகாண்பா
னரசமற்றியானேயென்னிலன்னியமென்னலாமோ. (கககூ)

வேறு.

இருவகையுயிர்க்குமினியனு யின்பதுன்பம் யானென்னதென்ற றியா, தொருபொருளாலுங் குறைவுபாடின்றி யுள்ளமுமொருவழிப் படரப், பொருவருந்துணிவுங்கருணையும்புரிந்து புலன்றெறியுணர்வை யென்பாலே, மருவிநின்றொழுகும்யோகியென்பவன்காண் மன்னமற் றெனக்குவேறினியான். (கஉ0)

உலகமுந்தானும் வேறிலாமையினற் றொருபொருட்குமஞ்சாதே, யலகிலாவுயிர்கட்கினியனுதலினுலவைகளுந்தன்னையஞ்சாதே, புலவரானவர்கள்புகழவேகிகழ்வான் பொறுமையுமபக்கமுங்களிப்பு, மிலகிடாநெஞ்சத்தியோகியென்பவன்காண்யாரினுமெனக்குவேறினியான். (கஉக)

வேறு.

இப்படியுயிரையுமியாக்கைதன்னையு
மெய்ப்படவறிந்தவன்வேட்டவேறுகர்ந்
தொப்பரவன்றியேயொழுகிவாழினும்
பொய்ப்படுபிறவியின்மறித்தும்போகலான். (கஉஉ)

## ஆறுவதுநீக்கவேண்டியதுற்குணம்.

எவ்வகைப்பயனுந்தினவல்லதை
யெவ்வகைப்பெரும்பாவமுமீவதை
யெவ்வகைப்பொருட்கும்பகையாவதை
யிவ்வகைத்தெனக்கூறுவனின்னங்கேள், (கஉங)

செருப்பைமுற்றியதூமமுஙீடொளித்
தருப்பணத்தைமறைத்தனமாசும்போ
லுருப்படைத்தனவுள்ளுணர்வியாவையும்
விருப்பமுற்றவெங்காமம்விழுங்குமால். (கஉச)

வேறு,

எண்ணியவுலகமுமுலகிற்கீசனும்
புண்ணியபாவமும்பொய்யென்றேகொள்வர்
பெண்ணினோடாண்புணர்கின்றபெற்றியா
னண்ணியயாவையுமென்றுநாட்டுவார். (கஉரு)

வேறு.

இப்பொருளடைந்தோம்வேறுபொருளினையடைவோமென்று
மிப்பகைசெகுத்தோம்வேறுபகையினைச்செகுப்போமென்றுந்
துய்ப்பவரெம்மிற்றுய்க்கவல்லவரில்லையென்று
மொப்பவரெம்மின்மிக்காருளர்கொலென்றுணராநிற்பார். (கஉகூ)

இனம்வலியின்பம்பெற்றேமெம்மின்மிக்கார்களில்லைத்
தனமிகவுடையோமென்றுந்தம்மையேவியவாநிற்பார்
மனமகிழ்யாகஞ்செய்வோமழையெனக்கொடுப்போமென்றுந்
தினமவைதோறுஞ்சிந்திப்பதுவலாற்செய்வதில்லார். (கஉஎ)

வேறு.

காதலினுகியகாமமுலோபமுங்
கோதுறவேசுடுதீநிகர்கோபமு
மாதலினுலிவைமூன்றுமகன்றோர்
வேதனைதீர்பெருவீடுவிழைந்தார். (கஉஅ)

## ஏழாவது அநுட்டிக்கவேண்டியசற்குணம்.

மானமும்பிறர்தனைமதிக்கப்பண்ணலு
மூனமும்பிறவுயிர்க்குறுகண்செய்கையும்
யானெனுஞ்செருக்குமிவ்விகபரங்களி
லானபேராசையோடறுக்குமாற்றலும். (கஉகூ)

பெற்றநன்மனையொடுபெண்டிர்பாலர்பா
லுற்றெழுமவாவிடலுடம்பின்றூய்மையு
மற்றவைம்பொறிகளின்வாயில்வாழ்க்கையுஞ்
செற்றமுஞ்சிறியவர்குழுவுந்தீர்தலும். (கநo)

ஒருபெரும்பொருளையேயுளத்துள்வைத்தலு
மிருவினைகடப்பவரிடங்களெய்லுதங்

குருவினைவழிபடுகுணமுங்குற்றமி
லுருவினையுள்ளவாறுணருமுண்மையும். (கஙக)

முன்றிகழ்பிறப்பொடுமூப்பிறப்பினாற்
சென்றடையிடும்பையைச்சிந்தைசெய்கையு
மென்றிவையனைத்துமற்றிவற்றினாலினிச்
சென்றடைபொருளினைத்தெரிந்துகேளொடு. (கஙஉ)

வேறு.

அஞ்சுதலின்மையுமறிவையாக்கலு
நெஞ்சினையடக்கலுநிலைகெடாமையும்
வெஞ்சினமின்மையுமெய்மைகூறலுந்
தஞ்செனவேள்வியுந்தவமுமாக்கலும். (கஙங)

மறைபயிறலுந்தனைமதித்திராமையுங்
குறளைகடவிர்தலுங்கொல்கைமாற்றலும்
பிறர்பிழைபொறுத்தலும்பேரொழுக்கமு
மறன்வலிதானமோடருளையாக்கலும். (கஙச)

இருவகைத்தூய்மையுமிந்தியங்களை
யொருவழிப்படுத்தலுமுள்ளிட்டன்னவை
செருவருஞ்சிலையினாய்தெய்வத்தன்மையோர்
மருவியதொழிலெனமதிக்கவேண்டுமே. (கஙரு)

வேறு.

மனஞ்செயுந்தொழின்மன்னுயிரின்றொழி
லினஞ்செயிந்தியஞ்செய்தொழிலென்றிவை
கனஞ்செய்தேறலுங்கண்டுபொறுத்தலுஞ்
சினஞ்செயாமையுஞ்சாத்திகதிர்த்தியே. (கஙசா)

## எட்டாவது அப்பியாசலட்சணம்.

காதலாற்றவிக்காமம்புலன்களே
வாயிலாய்ப்புகுந்துள்ளமயக்குவ
தாதலாற்புலனைந்துமடக்கியே
யேதிலாக்கடுங்காமமிறுக்குவாய். (கநஎ)

வேறு.

மேலாயுள்ளவிப்பொருளைமெய்யாயறிந்துபொய்யாய
மாலாய்மயங்குமனத்தினையுமடக்கியந்தமனங்கலக்குங்
காலாயுள்ளகாமத்தைக்கரப்பாயென்றுகட்டுரைத்தான்
சேலாயுலகமுறுபுனலோர்செவியின்புரையேசெலுத்தினேன் (கநஅ)

வேறு.

விழியாமெனவறிவாலறிவுறுவார்விழிவசமே
வழிபாடுசெய்தவர்சேவடிமலர்சூடிடவவரோ
யொழியாதெவர்களுமியாவையுமொருநீயெனதிடையென்
றழியாவகையதுவாவதொராறிவேயருளுவரால். (கநகூ)

வேறு.

உடனாயபுலனாலுமனனாலுமுடம்பாலு
நடமாகுமெனமுயல்வார்நாடோறுமுயன்றாலும்
விடமாகுமவ்வினையேவீடாகும்வினைப்பயனைக்
கடனாகுமெனமுயல்வாரதனாலேகட்டுண்பார். (கசo)

வேறு,

தானலதியாவர்தன்மேன்மைசெய்தக்கார்
தானலதியாவர்தன்கீழ்மைசமைப்பார்
தானலதியாவர்தன்மெய்ப்பகையாவார்
தானலதியாவர்தனக்குறவாவார். (கசக)

வேறு.

இறவாவகைதன்னுள்ளத்தையடக்குமவனேதனக்கென்று
முறவாயுள்ளானல்லாதார்தமக்கேபகையாயொழுகுவார் [பான்
துறவாதொழுகும் துவந்துவங்கடிறந்தொன்றினையே தொடர்ந்தவர்
மறவாதெழுந்தமெய்யறிவிம்மாயைமறைக்கமறையாதால். (கசஉ)

தலையாமிந்தயோகத்தைத்தலைநின்றொழுகுந்தன்மைகே
ளுலையாவாசையறமாற்றியொன்றுந்தனக்கென்றொழுகாதே
மலையார்முழஞ்சேமுதலாகயோகங்களுக்குவகுத்துரைத்த
நிலையாவையினுமொன்றினில்வந்தியாதுநலியாவிடத்ததிலே. (கசங)

ஒக்கும்வகையாற்குசைபரப்பியதன்மேலுழையின்றோல்படுத்துத்
தக்கதுகிலையதன்மேலேவிரித்துத்தானங்கதிலிருந்து
மிக்கமனனையறவொருக்கிவேறுசெய்யும்வினைகளுடன்
றொக்கபுலன்களவையடக்கியுணர்வுதூய்தாவதன்பொருட்டால். ()

தலையுங்கழுத்துமுடம்புமிவைசெவ்வேதளராதேயிருக்கு
நிலையிலிருந்துகண்களைத்தன்மூக்கினுதிமேலேநிறுத்தி
யலையுங்கடல்போற்காமமுமெய்ப்பயமுந்தன்னைவிட்டகல
வுலையுமனமுள்ளடங்கவெனைபுணர்ந்தேயிருக்குமதுயோகம். (கசரு)

வேறு.

எண்டிகழும்யோகத்தையிப்பரிசேயெப்பொழுதுங்
கொண்டுபயில்வார்கடைக்காலென்னையேகூடுவரா
லுண்டியினின்மிகுவாருண்டிறப்பார்மிக்குறங்கிடுவார்
கண்டுயிலையறத்துறப்பாரவர்க்கிதுகைவாராதால். (கசசு)

இப்பரிசுபயில்கின்றயோகிகாலிலாவிடத்து
மெய்ப்பரிசுநடுங்காதவிளக்குப்போல்விளங்குமா

லெப்பொழுதங்கவனுணர்விவ்வுண்மையிலேசென்றிசையு
மப்பொழுதுபரமானந்தத்தினையுமடையுமால். (கசஎ)

வேறு.

வாங்கிவையம்பொறிநின்றமனத்தினை
நீங்கிடாவகைநின்னுளிருத்தியுந்
திங்கியாவையுஞ்சிந்தைசெயாமையும்
பாங்கியாததுவேபயில்வாயரோ. (கசஅ)

தேறுநெஞ்சினனாய்த்தன்செயலலால்
வேறுகண்டறியாமெய்யறிவினு
னூறிலிந்தவுடம்புடன்வேறுபெற்
றேறிநின்றவனேயின்பமெய்துவான். (கசகூ)

வேறு.

எல்லாவுயிருமொன்றாகப்பார்ப்பதியோகமெனவுரைத்தாய்
மல்லார்தோளாயிதற்குநிலைகாணேன்மனமாகின்றவிது
நில்லாவியற்கைத்தாய்ப்புலனைக்கலக்குமதனைநிலைநிறுத்த
லொல்லாதெனவுங்காற்றடக்கற்கொக்குமெனவுமுணர்கின்றேன். ()

வேறு.

இவ்வகைவிசயன்கூறமாயவனியம்புகின்ற
னைவகைப்புலனுநெஞ்சுமடக்குகையரிதானாலு
மூய்வகையோகமியாவுமுயற்சியினாலுமோவ்வா
வைவகைப்புலன்செயின்பமனைத்தையும்வெறுத்தலானும். (கருக)

வேறு.

வெய்யநெஞ்சமடங்கிடும்வேறிதற்
கையமில்லையென்றேயறியாதலாற்
பையவேகாரணம்பதினான்கையுங்
கைகடந்தவர்யோகமுங்கைகண்டார். (கருஉ)

வேறு.

நீடுமனநிலைநின்றிலனாகினு
மோடும்வகையால்விடாதேயுழன்றவன்
பாடும்பவங்கள்பலகடந்தாயினும்
வீடும்பெறுமின்னம்வேறுஞ்சிலகேளாய். (௧௫௩)

வேறு.

இந்தவுடலம்விடும்பொழுதுயாவன்யாதொன்றினைநினைந்தா
னந்தவளவேயந்தப்பாவனையாலதனையடையுமா
லெந்தனியல்பேயெப்பொழுதுமிதயத்திடைகொண்டென்பாலாஞ்
சிந்தையொடும்வாளமர்தொடங்கிலதனாலெனையேசேருதியால். ()

வேறு.

இப்பரிசினாண்டொரறுதிங்களளவென்று
தெப்பொழுதுமென்றனியல்பேநினையலுற்றூர்
கைப்படுவன்யானெனியல்கைப்படவிருந்தோர்
பொய்ப்பிறவியானதுமறித்தடைதல்பூணார். (௧௫௫)

வேறு.

விலங்கலனையாய்பலங்களுடன்வேண்டல்வேண்டாமையைவிட்டுச்
சலங்கொள்வினைகளவைசெய்வனதனாலென்னையவைசாரா
வுலண்டுவாயானூற்றந்தநூலாற்கட்டுண்பதுபோலப்
பலங்கணினைவாரதனாலேகட்டுண்டாங்கேபட்டுழப்பார் (௧௫௬)

வேறு.

புத்திபொறைதவஞானம்புகழ்பழிநிர்கோபிலநெறிகள்
சத்தியநற்சமைதமைநற்செபந்தானஞ்சாவுபிறப்
பத்திகொடுநிறைவின்பமிடரஞ்சலஞ்சாமை
யித்தனையுந்தோன்றுவதென்னிடைநின்றேயெனத்தெளிவாய். (௧௫௭)

வேறு.

எனைத் துவிதத்ததவத்தெழுவோரு
மனைத்தையுநிற்பநடப்பனவாக
மனைத்தமனுக்களோர்நால்வருமென்ற
னினைப்பிலுதித்தனரொன்பதுநேர்வாய். (கருஅ)

வேறு.

மெய்யுறவுன்னையென்னி லேவைத்தாலென்னில்வேறின்றியொ
ன்றுதற், கையுறவில்லையதுமுடியாதேலாயினுமதனையேபயில்வாய்,
பொய்யுறவதுவும் புரிகிலாயெனிலுன்வினைகளென்பொருட்டினுற்பு
ரிவாய், செய்யுமவ்வினைகளப்படிச்செயாயேல்வினைப்பயன்றவிரவே
செய்வாய். (கருகூ)

வேறு.

ஒத்தெங்குமாயவொருமைப்பொருளினை
யத்தன்மையினுலறியுமவனே
செத்தும்பிறந்துந்திரியாவகைதன்னை
மெய்த்தன்மையிலேபுகவிடுகின்றான். (கசூ0)

வேறு.

ஓரின்மேலாகிநின்றவுயிரினேடுடம்புக்குள்ள
பேரினுெடிறப்புமூப்புப்பிறப்பெனுமிவற்றைவேறுய்ப்
பாரின்மேலறிவார்வீடுபெற்றினுரென்றுன்பார்த்தன்
றேரின்மேனின்றேவேதச்சிரத்தின்மேலிருக்குஞ்சீரோன். (கசூக)

மந்திரமாயவிந்தமரத்தினைத்துறவென்கின்ற
தந்திரவாளால்வெட்டித்தற்பரமாகிநின்றே
யிந்திரசாலமென்னயாவுமென்னிடையேகாட்டு
மந்தமிலாதவென்னையடைகையேயடுப்பதையா. (கசூஉ)

வேறு.

கண்ணையோரிடத்துமின்றியதனிலேவைக்கிற்காதற்
பண்ணையோடாக்குகின்றவினையெலாம்பயக்குமென்றான்
வெண்ணையோவிதுரனிட்டவிருந்தையோவேலைசூழ்ந்த
மண்ணையோவுண்டுமுன்னாள்வருபசிதீர்ந்தமாயோன். (௧௬௩)

வேறு.

காடுமலையுமலைமுழஞ்சுங்கடுமாமுதலைநலிவில்லா
வோடும்புனலாறுள்ளிட்டவிடமேயுறையுளாய்க்கொண்டு
தேடும்பொருளொன்றின்றியேசிறிதேயுண்டுசென்றெங்கு
மாடுமனம்வாய்மொழியாக்கையடங்கப்பெறுமாலவனையா. (௧௬௪)

வேறு.

பொறிகளுண்ணின்றவற்றின்புணர்ப்பெலா
மறியவாட்டினன்போலாக்கைகடொறு
மறைவினின்றுதன்மாயையினால்வினைக்
குறிகள்செய்விப்பனீசனென்றேகொள்வாய். (௧௬௫)

வேறு.

என்னையேநினைந்தெழவுன்மனத்தினையென்னிடையேவை
யென்னையேநினைந்திருநீமற்றெனக்கேபூசனைசெ
யென்னையேகுருவாக்கொளெப்போதுமிதுசெய்யி
லென்னையேவந்தடைதியிதுமெய்யேயிதுமெய்யே. (௧௬௬)

## ஒன்பதாவதுபகவான்றிடங்கூறல்.

சாவதிலையாவர்களுநிற்கவதுதானே
மாய்வரெனநீகருதுமாரதர்களெல்லாந்
தேய்வரியதீவினைசெய்யாதமையினாலே
வீவதன்முன்வானுலகமேவுவர்கண்மேன்மேல். (௧௬௭)

வேறு.

எல்லாப்பொருட்கும்பழையதனையெக்குந்தானாயிருப்பதனை
நில்லாத்தன்மையில்லதனைநித்யத்துவத்தைநிலைப்பேற்றை
யல்லாப்புலன்கள்பதினொனுமறியாவறிவையறியாதே
யில்லாப்பொருள்போலழியுமெனவிரங்குகின்றதென்கொண்டோ. ()

வேறு.

வீவரொனக்கொடுமெய்தளர்வாயேல்
யாவர்பிறப்பவர்யாவர்களேனுஞ்
சாவர்பெயர்த்துமவ்வாறுசனிப்பர்
காவலிதற்குளதோகடனேகாண். (கசக)

செறிந்ததிவ்வாறிவரொன்பதுந்தேராய்
பிறிந்திவர்போமிடமும்பெரிதோரா
யறிந்ததுநீநடுவேசிலநாளே
யெறிந்திடுவேலவர்பாலிடரொன்றோ. (கஎ0)

வேறு.

மின்னையேயனையவாழ்வினின்றநீவிருப்பினோடு
மென்னையேவணங்கியென்றுமென்னையேநினைதியாகி
லென்னையேயடைதியென்றேயியம்பினானிலங்குவாட்கட்
பின்னையேய்மூறுவலோடும்பேய்முலையுண்டபெம்மான். (கஎக)

வேறு.

நிரந்தரமிப்பரிசென்னைநினைப்பார்க்
கரந்தைகெடுத்தெனையாயுமனத்தைப்
புரந்துகொடுத்தவர்தேர்பொருளாயே
வரங்களுமுற்றவளித்தவரத்தால். (கஎஉ)

மற்றவர்நெஞ்சின்மயக்கிருளெல்லா
மற்றமின்ஞானவிளக்கொளியாலே
பற்றறுவிப்பனெனப்பழையோன்முன்
கொற்றவன்மற்றிதுகூறவலித்தான். (கள௩)

வேறு.

யாவர்கள்சிலவரெல்லாவினையுமென்கண்ணேவிட்டிட்
டியாவர்தமறிவென்பாலேயாக்குவாரவர்கடம்மைச்
சாவதுமுதலாயுள்ள துயர்க்கடனின்றுந்தாங்கி
யாவர்களேனுங்காலஞ்சிறிதிலேயெடுக்கின்றேனுன். (கள௪)

செயத்தகுவதுவுமாகிச்சேர்ந்தவர்செல்லறீர
வுயக்கொடுபோவதாயபொருளையானுரைத்தவண்ண
மியற்படவுணர்கிற்பாருக்கியான்மிகவினியனென்றுன்
மயக்கறவொருவராலுமறிவரிதாயமாயோன். (கள௫)

யாவனொருவன்றன்னுடம்பையானென்றிருக்குமியல்பொழிந்தான்
யாவனொருவன்றன்கரணம்யாதொன்றேனும்விழைந்திரா
னுவவனிவ்வுலகத்தையடையக்கொன்றுனுயினுமோர்
பாவமில்லையவன்கொன்றபழியுமில்லைபார்மன்னு. (கள௬)

இருவேறுவகையாயவெவ்வேறுவினைகளையு
மருவேனென்றறவிட்டுமாயையினுன்மறைப்பரிய
வொருவனையேபற்றுதியப்பற்றினுலுனைப்பிறவிக்
கருவேலைகடந்தேறக்கைதருவேன்கதிர்வேலோய். (கள௭)

ஆ. திருவிருத்தம் – கள௮.

பகவற்கீதைத்திரட்டு முற்றிற்று.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.



# பகவற்கீதைத்திரட்டின்
# செய்யுள் இலக்கவிபரம்.

(முதல்தோத்திரம்.)
பாயிரத்தில் க-ங-ச-ரு.
(கக-வது.)
விசுவரூபவத்தியாயம்-உஅ-உகூ-ஙO-ஙக-ஙஉ-ஙங-ஙச-ஙரு-ஙசு-ஙஎ-ஙஅ-ஙகூ-சO-சக-சஉ.

---

{ இரண்டாவது வஸ்துலட்சணம். }
(உ-வது.)
சாங்கியயோகவத்தியாயம்-கங-கச-கஅ-உO-உக-உஉ-உங-உச-உரு-உசு.
(ங-வது.)
தேவபூசையத்தியாயம்-உரு.
(ரு-வது.)
ஞானகர்மவத்தியாயம்-ககூ.
(சு-வது.)
யோகவத்தியாயம்-கசு.
(எ-வது.)
மாயாரூபவத்தியாயம்-ச-ரு-சு-எ-அ.
(அ-வது.)
எழுவகைவிஞ்வுரைத்த வத்தியாயம்-ங-அ-கO-கரு.

(கூ-வது.)
மாயாவிகாரவத்தியாயம்-உ-ங-ச-ரு-சு-எ-கஉ-கங-கச-கரு-கசு.
(கO-வது.)
விபூதியத்தியாயம்.அ-கங-உரு-உசு
(கங-வது.)
சேத்திரசேத்திரக்ஞவத்தியாயம்.கஉ-கங-கச-கரு-உக-உகூ-ஙO.
(கச-வது.)
குணாதீதவத்தியாயம்-ரு.
(கரு-வது.)
பிரபஞ்சவத்தியாயம்-கக-கஉ-கரு-கஎ-கஅ-உO-உக-உஉ-உங.
(கஅ-வது.)
சஞ்சேபவத்தியாயம்-உO.

---

{ மூன்றாவது ஞானமகிமை. }
(ச-வது.)
சம்பிரதாய வத்தியாயம்-உரு-உஎ-உஅ.
(கஉ-வது.)
பத்தியோகவத்தியாயம்-எ.

---

{ நான்காவது ஞானிலட்சணம். }

(௨-வது.)

சாங்கியயோக வத்தியாயம் - ௧௫-௪௯-௫௰-௫௭.

(௩-வது.)

தேவபூசையத்தியாயம்-௧௫.

(௪-வது.)

சம்பிரதாயவத்தியாயம் - ௧௮-௧௯-

(௫-வது.)

ஞானகர்மவத்தியாயம்.௭-௧௪-௧௫-௧௬-௧௮.

(௬-வது.)

யோகவத்தியாயம் - ௫-௮-௯-௧௭-௨௧.

(௯-வது.)

மாயாவிகாரவத்தியாயம்-௧௦.

(௧௦-வது.)

விபூதியத்தியாயம்-௫.

(௧௨-வது.)

பத்தியோகவத்தியாயம்-௧௦-௧௧.

(௧௩-வது.)

சேத்திரசேத்திரக்ஞ வத்தியாயம், ௨௩-௨௬-௨௮.

(௧௪-வது.)

குணாதீதவத்தியாயம்-௧௭-௨௦-௨௧

---

{ ஐந்தாவது ஞானிமகிமை. }

(௨-வது.)

சாங்கியயோகவத்தியாயம் - ௪௨-௫௯.

(௩-வது.)

தேவபூசையத்தியாயம்-௧௧.

(௪-வது.)

சம்பிரதாயவத்தியாயம் - ௧௨-௧௫ ௧௯.

(௫-வது.)

ஞானகர்மவத்தியாயம்-௧௨-௧௩.

(௬-வது.)

யோகவத்தியாயம்-௨௨-௨௩.

(௭-வது.)

மாயாரூபவத்தியாயம். ௧௩.

(௯-வது.)

மாயாவிகாரவத்தியாயம் - ௧௮-௨௦ ௨௧.

(௧௨-வது.)

பத்தியோகவத்தியாயம்-௩-௮-௯.

(௧௩-வது.)

சேத்திரசேத்திரக்ஞ வத்தியாயம். ௨௨.

---

{ ஆறுவதுநீக்கவேண்டிய துற்குணம். }

(௩-வது.)

தேவபூசையத்தியாயம்-௨௨-௨௩-

(௧௬-வது.)

தேவாசுரவத்தியாயம் -௭-௧௧-௧௨-௧௯.

---

{ ஏழாவதுஅநுட்டிக்க வேண்டிய சற்குணம் }

(௧௩-வது.)
சேத்திரசேத்திரக்ஞவத்தியாயம். அ-௯-௧௦-௧௧.
(௧௬-வது.)
தேவாசுரவத்தியாயம்-௩-௪-௫.
(௧அ-வது.)
சஞ்சேபவத்தியாயம்-௩௦.

---

**எட்டாவது**
**அப்பியாசலட்சணம்**

(௩-வது.)
தேவபூசையத்தியாயம்-௨௪-௨௬.
(௪-வது.)
சம்பிரதாயவத்தியாயம்-௨௬.
(௫-வது.)
ஞானகர்மவத்தியாயம்-௯.
(௬-வது.)
யோகவத்தியாயம் - ௬-எ-௧௦-௧௧-௧௨-௧௩-௧௫-௧௯-௨௦-௨௪-௨௫ ௨௬-௩௫.
(அ-வது.)
எழுவகைவினைவுணர்த்தவத்தியாயம்-௬-௧௩.
(௯-வது.)
மாயாவிகாரவத்தியாயம்-அ.
(௧௦-வது.)
விபூதியத்தியாயம்-௩-௪.
(௧௨-வது.)
பத்தியோகவத்தியாயம்-௬.
(௧௩-வது.)
சேத்திரசேத்திரக்ஞ வத்தியாயம் ௨எ-௩௧.
(௧௫-வது.)
பிரபஞ்சவத்தியாயம்-௧௦-௨௫.
(௧அ-வது.)
சஞ்சேபவத்தியாயம் - ௪௪ - ௫௦-௫௩.

---

**ஒன்பதாவது**
**பகவான்றிடங்கூறல்**

(௨-வது.)
சாங்கியயோகவத்தியாயம் - ௧௧-௨எ-௨அ-௨௯.
(௯-வது.)
மாயாவிகாரவத்தியாயம்-௨௩.
(௧௦-வது.)
விபூதியத்தியாயம்-௬-எ.
(௧௨-வது.)
பத்தியோகவத்தியாயம்-௫-௧௨.
(௧அ-வது.)
சஞ்சேபவத்தியாயம்-௧எ-௫௪.

கணபதிதுணை.

## வாசிட்டத்திரட்டின்.

# பரிசோதன பத்திரம்.

| பக்கம். | பாடல். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ங | கக | உ | விடுத்து. ... | விடுத்துப். |
| எ | | உ0 | பின். ... | பின்னர். |
| கூ | | ரு | ,, ... | உ - வது. |
| ,, | | கூ | உ - வது. ... | ,, |
| க0 | ங | ச | நூலினைத்து. ... | நூலினைத்தின். |
| கச | க | ங | கெட. ... | கெடச். |
| உரு | | கச | மகளிச்சை. ... | மகளிரிச்சை. |
| ங0 | ச | உ | கிற்போ. ... | கிற்போன். |
| ஙக | எ | ச | யொளிது. ... | யெளிது. |
| ஙச | க | உ | நினை. ... | நினைக. |
| ஙகூ | கச | ங | நினைவாய். ... | நினைவாற். |
| ச0 | ச | ச | நாயகி. ... | ஞயகி. |
| சக | க | உ | காதம். ... | காலம். |
| ருஉ | ச | ச | ககனமா ... | கனமா. |
| ருச | கச | க | சொல்லு. ... | செல்லு. |
| ருசா | சா | ங | னென்று. ... | னென்னு. |
| ருஅ | ரு | க | கய. ... | காய. |
| சா0 | கங | க | வென்ருய். ... | யென்ருய். |
| சாச | ஙசா | ச | கடம். ... | குடம். |
| சாரு | க | உ | பொன்னே. ... | பொன்னை. |
| சாஎ | கக | க | மாய். ... | மாய்ச். |

| பக்கம். | பாடல். | வரி. | பிழை. | | திருத்தம். |
|---|---|---|---|---|---|
| ௭௪ | ௧௪ | ௪ | பாவனையி. | ... | பாவனையினி. |
| ௮0 | ௭ | ௩ | யநேக. | ... | யனேக. |
| ௯௨ | ௫௫ | ௩ | புளிப்புங். | ... | புளிப்புக். |
| ௧00 | ௨௬ | ௨ | றோன்றி. | ... | தோன்றி. |
| ௧0௧ | ௩௩ | ௩ | பஞ்சாங். | ... | பஞ்சரங். |
| ௧0௩ | ௪0 | ௩ | சாதித்தனை | ... | சாதித்ததனை. |
| ௧0௫ | ௫௩ | ௪ | னனறே. | ... | னன்றே. |
| ௧0௬ | ௫௭ | ௪ | னேராதியி. | ... | னேராதி. |
| ௧௧௨ | ௯௫ | ௪ | னென்னு. | ... | னென்று. |
| ௧௨௧ | ௧௧ | ௩ | யஃகங்க. | ... | யங்க. |
| ௧௨௭ | ௧௭ | ௧ | மருந்தி. | ... | வருந்தி. |
| ௧௩௧ | ௩௬ | ௩ | வேதனை. | ... | வேதன. |
| ௧௩௨ | ௪௧ | ௩ | விவேத். | ... | விவேகத். |
| ௧௩௮ | ௩௨ | ௩ | கேயு. | ... | கேயுன் |
| ௧௪௩ | | ௮ | தலி. | ... | தலின். |
| ௧௪௪ | ௪ | ௨ | புரிங்கு | ... | புரிக்கு. |
| ௱ | ௬ | ௩ | துயிற. | ... | துயிர. |

## பரிசோதன பத்திரம்.

## வாசிட்டத்திரட்டு.

| பக்கம். | பாடல். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௩௧ | ௯ | ௧ | யின ... | யினு |
| ௪௨ | ௪ | ௨ | கனை ... | பனை |
| ௪௫ | ௩ | ௧ | மற்ற ... | மற்றை |
| ௫௧ | ௨ | ௧ | கநாட் ... | கறுப் |
| ௫௩ | ௯ | ௨ | பிரி ... | பிறி |
| ௭௬ | ௩ | ௩ | நன ... | நறு |
| ௸ | ௸ | ௫ | ௸ ... | ௸ |
| ௭௮ | ௰௨ | ௧ | ஒக்கு ... | ஒக்க |
| ௮௭ | ௩௧ | ௨ | வழி ... | விழி |
| ௯௨ | ௫௭ | ௩ | முழுந்த ... | முழுந்து |
| ௱௰௭ | ௯௮ | ௨ | தென் ... | தன் |
| ௱௨௬ | ௰௧ | ௩ | வாய்க்க ... | வாய்க |
| ௸ | ௰௩ | ௩ | மதம் ... | பதம் |
| ௱௨௮ | ௨௨ | ௧ | யின்பா ... | யின்பமா |
| ௸ | ௨௪ | ௩ | லென்ன ... | லெனை |
| ௱௩௯ | ௰௭ | ௨ | வாதனையே ... | வாதனையை |

# பாகவதத்திரட்டின்

# பரிசோதனபத்திரம்.

| பக்கம். | பாடல். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ச | உக | ச | பூமிமின். ... | பூமியின். |
| கஉ | சாக | ச | யுள்ளதெ. ... | யுற்றதெ. |
| கஅ | கூரு | ச | லரிதுயில். ... | லறிதுயில். |
| சக | | ரு | ளுமொழ். ... | ளுமோழ். |

# பகவற்கீதைத்திரட்டின்

# பரிசோதனபத்திரம்.

---

| பக்கம். | பாடல். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௩ | கக | ௩ | துடக்கிலா. ... | தொடக்கிலா. |
| ௬ | உ௫ | ௩ | பாடத். ... | படத். |
| ௭ | ௩க | க | வளவினின். ... | வளவிலின். |
| க௩ | ௫௯ | ௩ | வெளி. ... | வொளி. |
| ௰ | ௬உ | ௩ | ரவியா. ... | தரவியா. |
| க௬ | ௭௮ | ௪ | வோது. ... | வேது. |

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ-வித்தியாரண்ணியசுவாமிகள்

அருளிச்செய்த

# பஞ்சதசப்பிரகரணம்.

:o‡o:

இஃது

சமிவனக்ஷேத்திரமென்னும்

**கோயிலூர்-ஸ்ரீ-முத்துராமலிங்கசுவாமிகளின்**

ஆதீனத்திற்குரிய

ஸ்ரீ-சிதம்பரசுவாமிகள் பாதசேகரரான

**பொன்னம்பலசுவாமிகளால்**

பரிசோதிக்கப்பட்டு

கண்டமாணிக்கம் - இங்கிலீஷ்

**மெய்யப்பசெட்டியார்**

வேண்டுகோளின்படி

ஷை கோயிலூர்

**ஸ்ரீ-சிதம்பரசுவாமிகள்**

மாணாக்கர்களிலொருவராகிய

**அ - இராமசுவாமிகளால்**

சென்னை:

**மிமோரியல் அச்சுக்கூடத்திற்**

பதிப்பிக்கப்பட்டது.

விய௵ ஆனி௴

## பஞ்சதசப்பிரகரண அட்டவணை.

உ
கணபதி துணை.
திருச்சிற்றம்பலம்.

# பஞ்சதசப்பிரகரணம்.

## குருஸ்துதி.

அநேகவித லக்ஷணை விஸ்தாரத்துடனே கூடியிருக்கா நின்ற மஹா மாயாமோஹத்தை எந்நேரமும் எடுத்துவிழுங்குகிறதே வேலையாயிருக்கின்ற ஸ்ரீசங்கராசாரிய குருமூர்த்திகளினது பாதாரவிந்தப்பொருட்டு நமஸ்காரம்.

நூல் ஆரம்பம்.

## முதலாவது - சித்திரதீபம்.

வித்தியாரண்ணிய ஸ்வாமிகள், லோகாநுக்கிரக நிமித்தமாகச் சகலவேதாந்தத்தினுடைய பொருள்களெல்லாம் மனதிலே சேகரித்துக்கொண்டு சகல வேதாந்தமெல்லாம் அதிகரிக்கமாட்டாத பேருக்கும் சகல வேதாந்தமெல்லாம் படித்தாலும் அதின் அர்த்தந் தெளிந்தறிய மாட்டாதபேருக்கும் எளிதாக வேதாந்தத்தினுடைய உண்மைப்பொருள் களைக்கண்டநுபவித்து மோக்ஷமடையத்தக்கதாகச் சகல வேதாந்த சம்மதப்படிக்குத் தம்முடைய மனதிலே யிருக்கின்ற பிரமாநுபவத்தைப் பஞ்சதசப் பிரகரணத்திலே வெளிபண்ணவேண்டுமென்று பதினைந்து பிரகரணத்திற்குள் முந்தின பிரகரணத்திலே அத்தியாரோபம் அபவாதமென்கிற இரண்டு நியாயத்தையுந் தழுவிக்கொண்டு பரமாத்மாவினிடத்திலே ஆரோபிக்கப்பட்டிருக்கிற சகத்தினு

டைய லக்ஷணஞ் சித்திரமேயல்லாமல் உண்மையல்ல வெ ன்கிறதைச் சித்திரபட திருஷ்டாந்த மூன்னிலையாக வெளி பண்ணினபடி;

புடவையினிடத்திலே சித்திரமாரோபிக்கப் பட்டாற் போலப் பரமாத்மாவாக விருக்கின்ற தன்னுடைய சொரூ பத்திலே சிவன் சகத்து ஈஸ்வரனென்னப்பட்ட சித்திரம் ஆரோபிக்கப்பட்டதென்றறிக.

(க) சித்திரபடந்தானே தானாகவிருந்தால் வெளுத்த படமென்றும், கஞ்சிபூசினால் பசைப்பட மென்றும், கரியா லே சித்திரம் அச்சுக்கட்டினால், லாஞ்சன படமென்றும், வர்ணமடைத்துத் தீர்ந்தால் ரஞ்சிதபடமென்றும், கண்டா ற்போல, பரமாத்மாவிற்குநாலவஸ்தையேது, அதற்குஉபா தியேதென்கிற சங்கைக்கு,

பரமாத்மா, ஒருபாதியுமற்றுத் தாமாயிருக்கும்போது சித்தென்றும், மாயையினுடனே கூடினால் அந்தரியாமியெ ன்றும், சமஷ்டிசூக்ஷ்மபூத சூக்ஷ்மசரீரத்துடனேகூடினால் இரண்யகர்ப்பனென்றும், சமஷ்டி ஸ்தூலபூத ஸ்தூலசரீர த்துடனே கூடினால் விராட்புருஷனென்றுஞ் சொல்லப் படுமென்றுத்தரம்.

(உ) பரமாத்மாவே சித்திரபடமானால், அதைப்பற்றி யிருக்கிற சித்திரபேதங்களேதென்கிற சங்கைக்கு,

பிரமாதிஸ்தம்ப பரியந்தம் உத்தமம் மத்திமம் அதம மாய்க் காணப்படுகிற பிராணிகளும் மலையாறு கோபுரமுத லான சடங்களும் சுபாவசைதன்னியத்தி னிடத்திலே மா யையாகிற வர்ணத்தினாலே கற்பிக்கப்பட்ட சித்திரமென் றே உத்தரம்.

(௩) இதுவேசித்திரமானால், சேதனம் அசேதனமென்று இருவகுப்பா யிருப்பானேனென்கிற சங்கைக்கு,

படத்துச் சித்திரசரீரங்களிலே அநேகபடாபாசமெழுதி யிருக்கிறாற்போலச் சைதன்னிய சித்திரத்திலே பிராணிகண் மாத்திரத்திற்குச் சிதாபாசர்கள் கற்பிக்கப்பட்டார்கள் இவர்கள் சாக்ஷாத்சைதன்னிய மல்லவென்றுத்தரம்.

(௪) மலையாறு கோபுரமுதலானவைகட்குச் சிதாபாசர்கள் ஏனில்லையென்கிற சங்கைக்கு,

சித்திரத்திற் பர்வதமுதலானவைகட்கு வஸ்திராபாசந் தேவையற்றதுபோலச் சிருஷ்டியிலே யகப்பட்ட மண்முதலானவைகட்குச் சிதாபாசர்கள் தேவையில்லையென்றுத்தரம்.

(௫) பிராணிகண் மாத்திரத்திற்குச் சிதாபாசர்கள் கற்பனைக்குப் பிரயோசன மேதெனகிற சங்கைக்கு,

நால்வகைச் சரீரங்களை யடைந்து செனனமரணாதி சம்சாரத்தைப் பாவிக்கிறதே பிரயோசனமென்றுத்தரம்.

(௬) இப்படிச் சிதாபாசனுக்கே சம்சாரமானாற் சகலவாதிகளும் லௌகிகரும் ஆத்மாவிற்கே சம்சாரமென்று சொல்லக் காரியமேதென்கிற சங்கைக்கு,

ஆபாசப்புடவையின் வர்ணத்தை அதிஷ்டானப்புடவையின் வர்ணமாகச் சொல்லுகிறாற்போல ஆபாசன் சம்சாரத்தை அதிஷ்டானத்திலே சுமத்துகிறதற்கு அஞ்ஞானமே காரணமென்றுத்தரம்.

(௭) அந்த அஞ்ஞானத்திற்கு லக்ஷணமேது அதைப் போக்குதற் குபாயமேதென்கிற சங்கைக்கு,

தன்னிடத்திற் கற்பிக்கப்பட்ட சிதாபாசனையும் அவன் சம்சாரத்தையுந் தன்னுடைய சுபாவமாக எண்ணுகிறமயக்கமே அஞ்ஞானம், தனக்கொருக்காலுஞ் சம்சாரமில்லை சம்சாரமுஞ் சம்சாரியுங் கற்பிதமென்றறிகிற விவேகமே அஞ்ஞானத்தைத் தள்ளுகிற உபாயமென்றுத்தரம்.

(அ) அந்தவிவேகம் எதுசெய்தால் வருமென்கிற சங்கைக்கு,

சீவன் சகத்து பரமாத்மாக்களைக் குருசந்நிதானத்திலே பலபடவிசாரித்தால் விவேகம்வருமென் றுத்தரம்.

(கூ) மோக்ஷாவஸ்தையிற் பலமாக மிஞ்சப்போகிற பரமாத்மாவை மாத்திரம் விசாரிக்கவேண்டுமே யல்லாமல் வந்தியாபுத்திரனைப்போல விருக்கிற சீவனையுஞ் சகத்தையும் விசாரிக்கக் காரியமேதென்கிற சங்கைக்கு,

சொரூபமாயிருக்கிற பரமாத்மாவினிடத்திலே ஒருவிசாரமுமில்லை விசாரமெல்லாஞ் சீவன் சகத்துக்களிற்றானே நுண்மையாக விசாரிக்கில் இருவகையும் வாதிக்கப்பட்டவுடனே பரமாத்மாவே தானாக மிஞ்சுமென்றுத்தரம்.

(க0) விசாரித்த ஞானிகட்குச் சீவன் சகத்துவாதிக்கப்பட்டாற் றிரும்பவும் விவகாரந் தோன்றுவானேனென்கிறசங்கைக்கு,

சுழுத்தியிலே சீவன் சகத்துத்தோற்றாம லிருக்கையிலும், முத்தியில்லாம லிருக்கையினாலே தோற்றாமற்போகிறது வாதையல்ல இந்த இருவகையும் மித்தையென்கிற நிச்சயமே வாதையென்றுத்தரம்.

(கக) இந்த இருவகையுந் தோற்றுமானாற் பரமாத்மா மாத்திர மிஞ்சப்போகிற தெப்படியென்கிற சங்கைக்கு,

பரமாத்மாமாத்திரமே அழிவற்ற உண்மைப்பொருளென்கிற நிச்சயமே மிஞ்சுகிறது, சகத்து மறைகிறதல்ல சகத்தில்லாதிருந்தாற் சீவன் முத்திகூடாதென்றுத்தரம்.

(கஉ) இந்த இருவகையும் எத்தனைகாலம் விசாரிக்க வேண்டுமென்கிற சங்கைக்கு,

விசாரத்தினாலேவந்த ஞானம் பரோக்ஷக்ஞானமென்றும், அபரோக்ஷக்ஞானமென்றும் இருவகையாகவிருக்கும் இதில் அபரோக்ஷக்ஞானம்வந்தால் விசாரத்திற்கு முடிவென்றுத்தரம்.

(கங) இந்த இருவகை ஞானத்திற்கும் லக்ஷணமேதென்கிற சங்கைக்கு,

பிரமமொன்றுண்டென்கிறது, பரோக்ஷக்ஞானம் நானே அந்தப் பிரமமென்கிற துணிவு அபரோக்ஷக்ஞானமென்றுத்தரம்.

(கச) இந்த அபரோக்ஷக்ஞானத்தை வருவிக்கிற விசாரமேதென்கிற சங்கைக்கு,

கடாகாசம் மஹாகாசம் சலாகாசம் மேகாகாசம் போலக் கூடஸ்தனையும் பிரமத்தையும் சீவனையும் ஈசுரனையும் பகுத்தறிகிறதே விசாரமென்றுத்தரம்.

(கரு) கடாகாசமும் மஹாகாசமுங் கண்டோம் சலாகாசத்திற்கும் மேகாகாசத்திற்கும் லக்ஷணமேதென்கிற சங்கைக்கு,

கடசலத்திற் பிரத்தியக்ஷமாக மேகநக்ஷத்திரங்களுடனே காணப்படுகிற ஆகாசம் சலாகாசம் மஹாகாசத்தின் மேகசலத்திலே அநுமானத்தினாற் கண்ட பிரதிவிம்பமே மேகாகாசமென்றுத்தரம்.

(கசு) கூடஸ்தர்முதலான நாலுசைதன்னியத்தையும் பகுத்துக்காட்டவேண்டுமென்கிற சங்கைக்கு,

நிர்விகாரமாக விருக்கின்ற அதிஷ்டான சைதன்னியமே சரீரத்தில்வளைபட்டது கூடஸ்தரென்றும் மற்றது பிரமமென்றும் கூடஸ்தரிடத்திற் கற்பிதமான அந்தக்கரணப்பிரதிவிம்பன் சீவனென்றும் பிரமத்திற் கற்பிதமான மாயாப்பிரதிவிம்பன் ஈசுரனென்று முத்தரம்.

(கஎ) சரீரத்திலே நானென்று விவகரிக்கிற சீவனைத்தவிர வேறே கூடஸ்தரெங்கேயென்கிற சங்கைக்கு,

சலாகாசத்தினாலே கடாகாச மறைபட்டாற்போலச் சீவனாலே கூடஸ்தருமறைபட்டு இரண்டும் ஒன்றாகத் தோற்றுகிறதென்றுத்தரம்.

(கஅ) இந்தச்சீவன் கூடஸ்தரை யேன்பகுத்தறிய வில்லையென்கிற சங்கைக்கு,

இதுவே மூலாஞ்ஞானமென்றுத்தரம்.

(ககூ) இந்த மூலாஞ்ஞானமாகிற அவித்தை யெத்தனை விதமா யிருக்குமென்கிற சங்கைக்கு,

ஆவரணமென்றும், விக்ஷேபமென்றும் இரண்டுவகையாயிருக்குமென் றுத்தரம்.

(உ0) இந்த இருவகைக்கும் லக்ஷணமேதென்கிற சங்கைக்கு,

நான் கூடஸ்தரைக்காணேனென்கிற அறிவாகவிருந்தும் கூடஸ்தர் தோற்றவில்லையென்கிற மயக்கமே ஆவரணம் கிளிஞ்சிலை வெள்ளியென்று பார்க்கிறாற்போலச் சுபாவசைதன்னியமாயிருக்கிற தன்னைக் கற்பிதமாயிருக்கிற அகங்காரியாய்க் காண்கிறதே விக்ஷேபமென்றுத்தரம்.

(உக) ஆதித்தனிடத்திலே இருட்டிராததுபோலச் சுயம்பிரகாசமாயிருக்கிற ஆத்மாவினிடத்திலே அப்பிரகாசமாயிருக்கிற அஞ்ஞானம் வரக்கணக்கில்லையே இது நமக்குச்சம்மதமென்றாலும் அஞ்ஞான காரியமான ஆவரண மெப்படி வந்தது இதுவுமில்லையென்றால் ஆவரணத்தைப்போக்குகிற வேதாந்தத்தைப் படிக்கவுங் கணக்கில்லை யென்கிற சங்கைக்கு,

நான் அஞ்ஞானியென்கிற அநுபவம் சடத்தினிடத்திலே காணப்படாமற் சித்தினிடத்திலே காணப்படுகிற திருஷ்டமென்றே யுத்தரம்.

(உஉ) அநுபவங்கண்டாலும் யுத்திகூடாதென்கிற சங்கைக்கு,

திருஷ்டமாய்க் கண்டகாரியத்திற்கு யுத்திதேவையில்லை, காணுதகாரியத்திற்கே யுத்திவேண்டுமென் றுத்தரம்.

(உங) தூணுகன நியாயம்போலச் சங்கித்தாலல்லவோபுத்தியிலே திடப்படுமென்கிற சங்கைக்கு,

அநுபவத்தைக்கடந்து சங்கிக்கலாகாது ஆகையினாலே கூடஸ்தருக்கும் அஞ்ஞானத்திற்கும் விரோதமில்லைக் கூடியிருக்கலாமென் றுத்தரம்.

(உச) ஆனலிந்த அஞ்ஞானத்தைத்தள்ளுகிற விரோதியேது, அதெங்ஙனே காணலாமென்கிற சங்கைக்கு,

சாஸ்திரவிசாரக்ஞானமே அஞ்ஞானத்திற்கு விரோதி இதை ஞானிகளிடத்திலே காணலாமென் றுத்தரம்.

(உரு) விக்ஷேப மென்னப்பட்ட அகங்காரியாவதார் இவனெதினுற்கற்பிக்கப்பட்டான் இவனுக் கதிஷ்டானமேதென்கிற சங்கைக்கு,

காரணகாரிய சரீரத்தையுடைத்தான சைதன்னியமே அகங்காரி அஞ்ஞானகாரியமான விக்ஷேபத்திஞலே கற்பிக்கப்பட்டான் இவனுக்கதிஷ்டானங் கூடஸ்த சைதன்னியமென்றுத்தரம்.

(உகூ) இப்படிக் கற்பிதமாயிருக்கிற அகங்காரிக்கும் சுபாவமாயிருக்கிற தனக்கும் சுபாவசித்தமாயிருக்கிற பேதமெப்படி பிராந்திசித்தமாயிருக்கிற அபேதமெப்படியென்கிற சங்கைக்கு,

ஈதென்னப்பட்ட அதிஷ்டானக்கிளிஞ்சில் உண்மைவெள்ளியென்கிற ஆரோபம் மித்தையென்கிறதுபோலச்சுபாவசித்தபேதம் இதுவெள்ளியென்கிற ஒருமை மயக்கம்போல நான்தானென்கிற ஒருமை மயக்கமே பிராந்தி சித்தமாயிருக்கிற அபேதமென்றுத்தரம்.

(உஎ) ஈதென்கிற சாமான்யம்போலவும் வெள்ளியென்கிற விசேஷம்போலவும் ஆத்மாவும் அகங்காரியும் எங்குங் காணப்படவில்லையேயென்கிற சங்கைக்கு,

தேவதத்தன்தான் போனவன் யக்ஞதத்தன்தான்கண்டவன் நீதான்சொன்னவன் நான்தான் கேட்டவனென்கிற விவகாரத்திஞலே இது வெள்ளி இது புடவை இது கடமென்றாற்போலச் சாமான்ய விசேஷமிரண்டுங் காணப்படுகிறதென்றுத்தரம்.

(உஅ) இந்தப்பேதக்ஞானத்திஞ லுமக்குப் பிரயோசனமேதென்கிற சங்கைக்கு,

தானென்கிற சொல்லுக்கர்த்தம் நானென்கிறஅகங்காரிக்கன்னியரான கூடஸ்தரென்றேசித்தாந்தமென்றுத்தரம்.

(உகூ) கடந்தான் படந்தான் கோபுரந்தானென்னுமிட த்தில் அசேதனத்தினிடத்திலே தானென்கிற சொல்லுவர லாமோ வென்கிற சங்கைக்கு,

சிதாபாச னில்லாதபடியினாற் சடமென்று சொல்லப்ப ட்ட கடபடாதிகளும் சிதாபாசனுண்டானபடியினாற்சேதன மென்று காணப்படுகிற பிரமாதிஸ்தம்பபரியந்தமான பிரா ணிகளும் ஆத்மா ஒருவரிடத்திலே இருவகைக்கற்பிதங்களா னபடியினாலே எல்லாவற்றிலுந் தானென்றுவழங்குகிறசொ ல் எங்கும் ஆத்மாவுண்டென்கிறதைக்காட்டுகிறது ஆகையி னாற் றானென்கிறசொல் எங்கும்வரலாமென்றேயுத்தரம்.

(௬௦) தானென்கிற சொற்போல இதுவது வென்கிற சொல்லும் எல்லாவற்றிலுஞ் சாமான்யமாக விருக்கையினா ல் இவைகளும் ஆத்மாவாக விருக்கட்டுமென்கிறசங்கைக்கு.

இதுவதுவென்கிறசொல் நல்லதுபொல்லாததென்கிற சொற்போலப் படிபாதியிலே சாமான்யங்கண்டதேயல்லா மல் முற்றுங்காணவில்லை ஆகையினால் இதுதான் அதுதான் நல்லதுதான் பொல்லாதுதானென்று சர்வத்திரசாமான்ய மாகத் தோற்றுகிறதுதானே ஆத்மாவென்றும் மற்றவிசே ஷமெல்லாம் மாயாகற்பிதமென்றுஞ் சித்தாந்தமென்றுத் தரம்.

(௬க) இது எல்லார்க்கும் ஏன்றெரியவில்லை யென்கிற சங்கைக்கு,

முன்சொன்ன அஞ்ஞானத்தினாலே தாதான் மியாத்தி யாசத்தையடைந்த அஞ்ஞானிகள் சாமான்ய விசேஷமிர ண்டும் வெட்டவெளியாய் வேறுபட்டிருக்கினும் ஒன்றாய்க் கண்டார்களென் றுத்தரம்.

(௯௨) இந்த அத்தியாசமெப்படிப் போமென்கிற சங்கைக்கு,

விசாரக்ஞானத்தினலே அஞ்ஞானமும் ஆவரணமும் போமென்று முன்சொன்னதே யுத்தரம்.

(௯௩) இந்தஞானிக்குக் காரணமான அஞ்ஞானம் போயுங் காரியமான விக்ஷேப மிருப்பானேனேன்கிற சங்கைக்கு,

விக்ஷேபத்திற்குக்காரணம் அஞ்ஞானமென்றுங் கர்மமென்றும் இருவகுப்பு அவற்றில் அஞ்ஞான நசித்தும் கர்ம நசியாதபடியினல் பிராரத்தகர்மந் தொலையுமட்டும் இருக்குமென் றுத்தரம்.

(௯௪) காரணநஷ்டமாயுங் காரியம் இருக்குமென்கிற து நியாயமல்லவேயென்கிற சங்கைக்கு,

உங்கள் தர்க்கமதத்திலே காரணநஷ்டமாயுங் காரியஞ்சற்றுப்போ திருக்குமென்றது நமக்குஞ் சரியல்லவோ வென் றுத்தரம்.

(௯௫) அப்படியானலுங் காரணத்திற்குப்பின் காரியஞ்சற்றுநேரமல்லவோ இருக்கவேண்டும் ஒரு புருஷாயுவுள்ளமட்டு மிருக்குமென்கிறது கூடாதென்கிற சங்கைக்கு,

இரண்டொருநாளி லுண்டான காரணத்திரவிய மென்னப்பட்ட நூல்வெந்தும் ஒருசாமங் காரிய தாமச முண்டென்றல் அநந்த கற்பத்திலே யிருக்கிற அஞ்ஞானப்பிராந்தி நஷ்டமானலும் அதின் காரியமானவிக்ஷேபம் பிராரத்தத்தோடே போமென்றது சொற்பமல்லாமல் விஸ்தாரமல்லவென் றுத்தரம்.

(௩௬) இப்படி வாயடி கையடியடிக்கிறதே யல்லாமல் இதற்குப் பிரமாண மில்லையோவென்கிற சங்கைக்கு,

வாயடி கையடி யடிக்கிறது உங்கள் தர்க்கமதத்திலே யே யல்லாமல் நமக்குச் சுருதி யுத்தி யநுபவ மூன்றுமுண் டென்றே யுத்தரம்.

(௩௭) தார்க்கிகன் சண்டைபோதும் சித்தாந்தமேதெ ன்கிற சங்கைக்கு,

அஞ்ஞானிகள் நான்தானென்கிற இருவரையும் ஒருவ ரைக்கண்டு கலங்கிச் சம்சாரத்திலே யடிபடுவார்களென் றும் இந்த இருவகையும் வேதாந்தஞானிகள் பகுத்தறிந்து முத்தராவார்களென்கிறதே சித்தாந்தமென் றுத்தரம்.

(௩௮) வேதாந்தமல்லாத சாஸ்திரத்தினாலே முத்தியி ல்லையோவென்கிற சங்கைக்கு,

மற்றைச் சாஸ்திரமெல்லாம் பிராந்தர்களாலே பண் ணப்பட்ட சாஸ்திரமானபடியினாலே கலக்கத்தின்மேற்கல க்கமாய்க் குழம்புமேயல்லாமற் பிராந்தியைத் தெளிவிக்க மாட்டாதென் றுத்தரம்.

(௩௯) இன்ன இன்ன சாஸ்திரகர்த்தாக்கள் இன்ன இ ன்னதைப் பொருளென்று கலங்கினார்களென்றதையும் இவ ர்களுக்குப் பரம்பரையாகத் தெளிவுவரும் வழியையும் இன் னபடியென்று பகுத்துச் சொல்லவேண்டு மென்கிற சங் கைக்கு,

---

(க) பாமரரும், லோகாயுதரும், விரோசனன்சித்தாந்த யுத்தியினாலே ஸ்தூலசரீரமே ஆத்மாவென்பார்கள்.

(உ) சார்வாகன், ஜீவன்போனவுடனே சரீரமரித்துப் போகிறபடியால் நான்கண்டேன் கேட்டேனென்கிற யுத்தியினால் தேகம் ஆத்மாவல்ல இந்திரியமே ஆத்மாவென்று சொல்லுவன்.

(ந) இரணியகர்ப்ப வுபாஸிகளான பிராணாத்மவாதிகள், பிராணன்போனால் இந்திரியங்க ளிராதபடியினாலே பிராணனே ஆத்மாவென்பார்கள்.

(ச) * உபாசகர், மனதில்லாதபோது பிராணன்றெரியாதபடியினாலே மனதே ஆத்மாவென்பார்கள்.

(ரு) க்ஷணிகவாதிகள், புத்தியில்லாவிட்டால் மனதாரவிக்கிறபடியினாலே புத்தியே ஆத்மாவென்பார்கள்.

(சா) பௌத்தர்களானமாத்தியமிகர், சுழுத்தியிலே புத்திமுதலாக ஒன்றுங் காணாதபடியினாலே சூன்யமே ஆத்மாவென்பார்கள்.

(எ) பட்டர் † முதலினோர், சுழுத்தியிலே சூன்யமாயிருந்ததென்று கண்டுசொல்ல வருகிறபடியினாலே ஆத்மா சத்தென்பார்கள்.

{ இவ்வார் ஆத்தநிர்ணயஞ்செய்து இனி ஆத்ம பரிமாணத்தில் விவாதம். }

(அ) அந்தராளர், சூக்ஷ்மநாடிவழியே சஞ்சரிக்கிறபடியினாலே ஆத்மா அணுவென்பார்கள்.

(கூ) திகம்பரர், பாதமஸ்தகபரியந்தம் அறிவு கலந்திருக்கிறபடியினாலே ஆத்மா புருஷப்பிரமாணமென்பார்கள்.

---

* உபாசகரென்றது, நாரத பஞ்சராத்திர வநுசாரிகள்.

† முதலினோரென்றது, பிரபாகரரையும் தார்க்கிகரையும்.

(கo) பிரபாகரரும், தார்க்கிகரும், ஆத்மா பரிச்சின்னமாயிருந்தால் அழிந்துபோமென்று பரிபூரணமாய்ச் சடமாயிருக்குமென்பார்கள்.

(கக) பட்டர்மதத்திலே, சுழுத்தியிலே சடமாயுஞ் சாக்கிரத்திலே அறிவாயுங் காணப்படுகிறபடியினாலே ஆத்மா சடசித்தா யிருவகையுமா யிருக்குமென்பார்கள்.

(கஉ) சாங்கியர், பரிபூரணத்திற்கு இரண்டுலக்ஷணங்கூடாது ஆத்மா சித்தாய்ப் பரிபூரணமாயிருப்பார் அவரவர்களிடத்தில் சுழுத்தியிற் காண்கிறசடம் அந்த ஆத்மாக்களுக்குச் சுகதுக்கங் கொடுக்கவந்த பிரகிருதியென்பார்கள்.

(கரு) யோகி, பிரகிருதிதானும் புருஷனொருவனில்லாவிட்டாற் சேஷ்டிக்கமாட்டாதென்றும் அடக்கியாளுவாரில்லாதிருந்தா லாத்மாக்களுக்குப் பந்தமோக்ஷமில்லையென்றபடியினாலே இந்த ஆத்மாக்களைத்தவிர ஈசுரனொருவனுண்டென்பன்.

{ இனி இதில் உளதாகுங்
கலக்கங்களைக் கூறுகின்றார். }

(கச) பதஞ்சலிபகவான் * கிலேச † கர்ம ‡ விபாகங்களோடும் அவற்றின் § ஆசயங்களோடுங்கூடாத புருடவிசே

---

* கிலேசம் என்றது, அவித்தை, அஸ்மிதை, இராகம், துவேஷம், அபினிவேசம், என்பனவாம்.

† கர்மம் என்றது, அசுக்ல கிருஷ்ணகர்மம், யோகிக்கு இதரர்க்குப் புண்ணியபாவமிசிரம்; அசுக்லகிருஷ்ணமென்றது சகாமரூப சுபகர்மம்; அசுபகர்மம்; இரண்டின் விலட்சணமானயோகானந்தத்திற்கு ஏதுவான புண்ணியவிசேஷம். ‡ விபாகம் என்றது, ஜாதி, ஆயுள், போகம், என்னும் பலவிசேஷங்கள். § ஆசயம் என்றது, சமஸ்காரம்.

டனே ஈசனும், அவன் சிவன்போலும் அசங்க சித்தாகுமெ ன்று சொல்லுவர்.

(கரு) தார்க்கிகன், அசங்கனுகிய ஈசுரனுக்கு நியந்திரு த்துவங் கூடாது நித்தியமான இச்சாஞானக்கிரியைகளை உடைத்தாயிருப்பனென்று சொல்லுவன்.

(கசு) இரண்யகர்ப உபாசகர், ஈசுரன் நித்தியஞானுதிக ளையுடையனேல் சதாசிருஷ்டியுளதாதல்வேண்டும். ஆகலி ன் இரண்யகர்ப்பனே ஈசுரனென்பார்கள்.

(கஎ) விஸ்வரூபமதம், ஸ்தூலசரீரத்தைவிட்டுச் சூக்ஷ மசரீரந் தனியேயில்லை கிருஷ்ணன் விஸ்வரூபங் காட்டுகிற போது எங்குங் காலெங்குங் கையாகக் காட்டினபடியினு லே விராட்புருஷனே ஈசுரன் இரண்யகர்ப்பனல்லவென்று சொல்லும்.

(கஅ) பிரசாபத்தியமதம், எங்குங்காலெங்குங்கையாக விருக்கிறதே ஈசுரனுனல் மரவட்டையும் ஈசுரனுகவேண் டும் ஆகையினுலே பிரம்மாவே ஈசுரனல்லாமற் மற்றது ஈசுரனல்லவென்று சொல்லும்.

(கசு) வைஷ்ணவமதம், இந்தப்பிரம்மாவும் விஷ்ணுவி னுடைய நாபியிலே பிறந்தபடியினுலே விஷ்ணுவே ஈசுர னென்று சொல்லும்.

(உ0) சைவாகமம், சிவனுடையபாதம் விஷ்ணு காணு தபடியினுலே சிவனே ஈசுரனென்று சொல்லும்.

(உக) காணுபத்தியமதம், திரிபுரசங்காரத்திலே சிவ னும் கணபதியைப் பூசைபண்ணினபடியினுலே விக்நேசுர னே ஈசுரனென்றுசொல்லும்.

(௨௨) புராணிகமதம், இப்போதுசொல்லப்பட்ட தேவதைகளெல்லாம் புண்ணியஸ்தலங்களிலே விளங்குகையினாலே ஸ்தலங்களை ஈசுரனென்று சொல்லும்.

(௨௩) தர்மசாஸ்திரன், ஸ்தலங்களும் மரங்களினாலே விளங்குகையினாலும் மூங்கில் அரசு எருக்கு முதலானவைகளை அவரவர் குலதேவதைகளாகப் பூசைபண்ணுகையினாலும் மரங்களை ஈசுரனென்றுசொல்லுவன்.

(௨௪) இப்படி யின்னம் அநேகம் மதவாதிகள், தங்கள் தங்கள் மதாபிமானத்தினாலே மந்திரவாதம் ரசவாத முதலான சாஸ்திரங்களைத் தொடுத்துக்கொண் டலைந்தார்கள் இப்படி அஞ்ஞானசாஸ்திர கர்த்தாக்களலைந்த வழிசொன்னோமென்றுத்தரம்.

(௪௦) இப்படி யெல்லாச்சாஸ்திரகர்த்தாக்களும்வஸ்து நிர்ணயம் பண்ணமாட்டாம லலைந்தார்களானால் வஸ்து நிர்ணயம் பண்ணப்போகிற தெப்படியென்கிற சங்கைக்கு,

பிரமமொன்றே பொருள் மற்றுள்ளவெல்லா மாயாமயமென்கிற வேதாந்த விசாரத்தினாலே வஸ்து நிர்ணயம் பண்ணவேண்டுமென் றுத்தரம்.

(௪௧) அப்படியானால் இந்த வாதிகளுக்கெல்லாம் விரோதமல்லவோ வென்கிற சங்கைக்கு,

ஒன்றே பொருளென்கிற வேதாந்திற்கும் அதைத்தானே குருடர் யானைகண்டாற்போலக் கண்டிருக்கிற இந்த வாதிகளுக்குஞ் சற்றும்விரோதமில்லையென்றேயுத்தரம்.

(௪௨) பிரமமொன்றே உண்மைப்பொருளென்கிறதற்கும் மற்றுள்ளவெல்லா மாயாமய மென்கிறதற்கும் பிரமாணமேதென்கிற சங்கைக்கு,

இப்படிச்சொல்லுகிற முப்பத்திரண் டுபநிஷத்துமே பிரமாணமென்றுத்தரம்.

(சங) இவ்வளவுஞ் சித்துலக்ஷணம் வேதாந்தத்திலே மாயைக்கு லக்ஷணமெப்படியென்கிற சங்கைக்கு,

மோகலக்ஷணமும் சடலக்ஷணமுமா யிருக்குமென் றுத்தரம்.

(சச) இந்தப்பிரபஞ்சத்திலே மாயாலக்ஷணமிருவகையும் பகுத்துக்காட்டவேண்டுமென்கிற சங்கைக்கு,

கடமுதலான பூதபௌதிகமெல்லாம் சடமாயிருக்கக் கண்டோம் சத்தென்றும் அசத்தென்றும் பகுத்தறியப்படாதபடியினாலே மோகமாயிருக்கக்கண்டோமென்றுத்தரம்.

(சரு) சீவன் சகத்து ஈசுரனென்பவை யெல்லாரும் உண்மையாகக்கண்டு வருகிறதை மாயையென்கிறதெப்படியென்கிற சங்கைக்கு,

இந்த மாயாகற்பிதமெல்லாம் லௌகீகதிருஷ்டியிலே உண்மையாகவும் யுக்தியினாலே அநிர்வசநீயமாகவும் வேதாந்தக்ஞானிக்குக் காலத்திரயத்திலும் இல்லாததாகவும் இப்படி மூன்றுவிதமா யிருக்குமென்றுத்தரம்.

(சசு) இந்தமாயாகற்பிதப் பிரபஞ்சமெல்லாம் எந்தக் காலத்தில் உண்டு எந்தக்காலத்தில் இல்லையென்கிறசங்கைக்கு,

சாக்கிரத்திலும் சொப்பனத்திலும் விரித்தசித்திரபடம் போலே உண்டாயிருக்கிற காலமென்றும் சுழுத்தி மூர்ச்சை சமாதிகளிலே சுருட்டின சித்திரபடம்போலே இல்லாதகாலமென்று முத்தரம்.

(சஎ) இந்தமாயை சுதந்தரையோ பராதீனமோவென்கிற சங்கைக்கு,

சைதன்னியத்தை யன்றியிலே விளங்கமாட்டாதபடியி ஞற் பராதீனமுமாம் அசங்கமாயிருக்கிற கூடஸ்தசைதன் னியத்தைச் சடமாயிருக்கிற ஜகத்தாகவும் சிதாபாசர்களா யிருக்கிற ஜீவேசுரர்களாகவும் பண்ணுகையினுற் சுதந்தரை யுமா யிருக்குமென் றுத்தரம்.

(சஅ) இப்படியானுல் மாயையினுலே பிரமத்திற்குச் சொரூபலக்ஷணங் கெட்டதென்கிற சங்கைக்கு,

மாயை கூடஸ்தரைத்தொடாமற்றுனே சீவன் ஜகத் தையுண்டாக்குகையினுற் சொரூபலக்ஷணங் கெடவில்லையெ ன்றுத்தரம்.

(சக) முன்பிரமத்தைத்தானே சீவன் ஜகத்தாய்ப்பண் ணிற்றென்றீர் பின் பிரமத்தைத்தொடாமற் பண்ணிற்றென் ன்றீர் இந்த இருவகையுங் கூடாதென்கிற சங்கைக்கு,

கூடாததைக்கூட்டுவிக்கிறதே மாயைக்குச் சுபாவமெ ன்று வேதஞ்சொன்னபடியினுலே நீ இதிலே மயங்கவேண் டாமென்றுத்தரம்.

(ருO) இப்படி மாயைகற்பித்தவெல்லாங் கூடாததைக் கூட்டுவித்ததாக விருக்குமோ இப்படிக்கொத்த சத்தி இந் தமாயைக் கெங்கேயிருந்து வந்ததென்கிற சங்கைக்கு;

ஒருமாயையினிடத்திலே பிறந்தபூதங்களிலே ஒன்றி லே வெளியும் ஒன்றிலே சலனமும் ஒன்றிலே சூடும் ஒன்றி லே குளிரும் ஒன்றிலே கடினமுங் கண்டபடியினுலே இந்த மாயை கூடாததைக் கூட்டுவிக்கிறது சுபாவம் இந்தச்சத்தி மாயைக்குச் சுபாவமேயல்லாமல் ஒன்றினுல் வந்ததல்ல வென் றுத்தரம்.

(ருக) இந்தச் சகத்து மாயாமயமென்கிறதை யெல்லா ரும் ஏ னறியவில்லையென்கிற சங்கைக்கு,

இந்திரஜாலக்காரனைக் காணுமளவு மிந்திரஜால முண்மையாகத்தோற்றுகிறாற்போல மாயைக்கதிஷ்டானத்தை யறியுமளவு மாவை யுண்மையாகத்தோற்றும் அதிஷ்டானத்தையறிந்தாற் பொய்யாய்ப்போமென்றுத்தரம்.

(ருஉ) சகலவாதிகளு மாயையிற்குள்ளேதானே இது பொரு ளதுபொருளென்று சங்கிக்கக் காரியமேதென்கிற சங்கைக்கு,

சந்தேகசொரூபமாயிருக்கிற மாயைக்குப் பரிகாரந்தேடாமற் சங்கைக்குட் சங்கைபண்ணுகிறதற்கு அஞ்ஞானமே காரணமென்றுத்தரம்.

(ருங) ஆனால் இந்தமாயைக்குப் பரிகாரமேதென்கிற சங்கைக்கு,

இது பொருளல்ல மாயையென்றறிகிறதே பரிகாரமென்றுத்தரம்.

(ருச) கண்ணாரக்கண்டும் நிர்ணயமாகாத இந்திரஜாலம்போல இந்தஜகத்து மாயாமயமாயிருக்கவில்லையே உண்மையாகவல்லவோ விருக்கிறதென்கிற சங்கைக்கு,

சத்தசத்தென் றிருவகை நிர்ணயத்தினு மகப்படாத ஜகத்து உண்மையென்கிறது உன்னுடைய பக்ஷபாதமேயல்லாமற் சகத்துமாயைதானே யென்றுத்தரம்.

(ருரு) நீர்சொன்னதேயல்லாமல் வேதம் ஜகத்துமாயையென்று சொன்னபேருண்டோ வென்கிற சங்கைக்கு,

சடமாய்க் கர்ப்பவாசம்பண்ணின சுக்கிலமுஞ் சேதனம்போலே பிறப்பட்டுப் பெரியவன் சிறியவனென்று உண்டுடுத்துக் கண்டுகேட்டுத் திரிகிறதைப் பார்க்க வேறே இந்திரஜாலமேதென்று வசிஷ்டர் சொல்லியிருக்கிறார் இந்தத்தே

கம்போலே ஆலமர முதலானவைகளும் விதை யெங்கேவ ந்தது மரமெங்கேவந்ததென்று மயங்கவேண்டாம் சகலமு மாயையென்றே காணவேண்டுமென்று வியாசர் சொல்லியி ருக்கிறார் மனதினாலே சிந்திக்கில் நிர்ணயமாகாத பொரு ளைத் தர்க்கிக்கவொண்ணாதென்றும் நிர்ணயப்படாத ஜகத்தி லே இதுபொருளதுபொருளென்று சங்கிக்கத் தேவையில் லை சகலமு மாயையென்றே காணவேண்டுமென்று யாக்கிய வல்கியர் சொன்னார் இன்னபடியென்று சிந்திக்கப்படாத தை யுண்டாக்குகிற சத்தி மாயையென்றெல்லாருஞ் சொல் லியிருக்கிறார்களென்றுத்தரம்.

(௫௬) இந்தமாயைக்கு விதையெங்கே காணலாமென் கிற சங்கைக்கு,

மரத்தையடக்குகிற பீஜம்போலச் சாக்கிரசொப்பனப் பிரபஞ்சத்தை யடக்கியிருக்கிற மாயாபீசம் சுழுத்தியிலே யெல்லாருங் காணவில்லையோ வென்றுத்தரம்.

(௫௭) சகலபுத்திவாசனையும் மாயையிலே யடங்கியிரு க்கிறதற் கடையாளமேதென்கிற சங்கைக்கு,

மாயாப்பிரதிவிம்பர் மாயையிலே சகலவாசனையுங்க ண்டு சர்வக்ஞராயிருக்கிறதே அடையாளமென் றுத்தரம்.

(௫௮) ஈசுரவுபாதி யெப்படியிருக்கும் ஜீவவுபாதியெ ப்படியிருக்கும் ஜீவேசுரர்களெப்படியிருப்பார்கள் ஈசுரனை யறிகிற வடையெப்படியென்கிற சங்கைக்கு,

மேகம்போலவிருக்கு மாயை மேகத்தின்றி வலைபோல விருக்கும் புத்திவாசனைகள் திவலையிற் பிரதிவிம்பித்த ஆகா சம்போலவிருப்பர் சிதாபாசர்கள் மேகாகாசம்போல் ஈசுர னை அநுமானத்தினா லறியவேண்டுமென் றுத்தரம்.

(ருக) இந்தப்புத்திவாசனையிலே பிரதி விம்பித்த சிதாபாசனையும் மாயாப்பிரதி விம்பனுயிருக்கிற ஈசுரனையும் எந்தவடைவிலே பகுத்துக்காண்கிறதென்கிற சங்கைக்கு,

வாசனையானது சிதாபாசனுடனேகூடிப் புத்திரூபமாய் முளைக்கிறபோது சிதாபாசனை வெட்டவெளியாய்க் காணலாம் ஈசுரனைச் சர்வக்ஞன் அந்தரியாமி சர்வேசுரனென்று வேதஞ் சொல்லக்கேட்டறியலாமென் றுத்தரம்.

(சு0) இரண்டுபேருஞ் சிதாபாசர்களானல் இவர்களுக்குத் தாரதன்மிய மேதென்கிறசங்கைக்கு,

ஜீவர்கள் மாயையின் வசமாயிருக்கிறபேர்களென்றும் ஈசுரன் மாயையைத் தன்வசம் பண்ணிக்கொண்டிருக்கிறவனென்றுந் தாரதன்மியங் காணலாமென் றுத்தரம்.

(சுக) ஈசுரனைச் சர்வக்ஞன் அந்தரியாமி சர்வேசுரனென்பதெதனுலென்கிற சங்கைக்கு,

இவருக்குபாதியான மாயையி னிடத்திலே சகலமுமிருக்கிறபடியினுற்சர்வக்ஞனென்பது சகலஜீவர்களுடைய புத்திகளுக்குள்ளுமிருந்து ஆட்டுகிறபடியினுல் அந்தரியாமியென்பது இவருண்டாக்குகிற பிரபஞ்சத்தை யொருவராலுந் திருப்பப்படாததுகொண்டு சர்வேசுரனென் றுத்தரம்.

(சுஉ) ஈசுரனுக்குச்சர்வக்ஞத்துவமுண்டானுல் எல்லாராலும் ஏன் அநுபவிக்கப் படவில்லை என்கிற சங்கைக்கு,

வாசனைகளெல்லாம் பரோக்ஷமானபடியினு லநுபவிக்கப்படவில்லை யென்றுத்தரம்.

(சுங) ஆனுல் அந்தச் சர்வக்ஞத்தன்மையின் ஞானம் யெப்படியுளதா மென்னுஞ் சங்கைக்கு,

சர்வபுத்திகளினும் அந்தச்சர்வக்ஞத்தன்மையைக்கண்டு வாசனையின்கண்ணே அநுமானிக்கத்தக்கதென் றுத்தரம்.

(கச) அந்தரியாமிக் கித்தனைகுணமுண் டென்கிறத ற்குப் பிரமாணமேது இவர்க்குச் சரீரமேது இவர்கற்பித்த தே பிரபஞ்சத்திற்கு வழியென்கிறதற்குப் பிரமாணமேதெ ன்கிற சங்கைக்கு,

அந்தரியாமிக்கு வெகுகுணமுண் டென்கிறதற்கு அந்த ரியாமிப் பிராமணமென்கிற வேதம் பிரமாணம் புடவை யினிடத்திலே நூலுபாதானமாயிருக்கிறாற்போலச் சகலத் திலு மிவரு பாதானமாக விருக்கிறபடியினாலே சகலமும் இவர்க்குச் சரீரம் ஈசுரன் சகல பூதங்களிலுமிருந்து தேகா திப்பாவைகளை அபிமானக் கயிற்றைப்பூட்டி விதிநிஷேத வழியே ஆட்டுவிக்கிறானென்கிற கீதாவசனமும் இதுதர்மமெ ன்றறிவேன் இதிலே மூளவுமில்லை இது அதர்மமென்றறி வேன் இதைவிட்டுத் திரும்பவுமில்லை ஆரோ ஒருவராட்டுவி க்கிறானென்கிற பாண்டவகீதையுங் கற்பித்ததே வழியென்ற தற்குப் பிரமாணமென் றுத்தரம்.

(கரு) சகலமுமிப்படி ஈசுரனே ஆட்டுகிறதானாற் புரு ஷனுடைய முயற்சி தேவையில்லையோ வென்கிற சங் கைக்கு,

முயற்சியும் அவரவர் கர்மத்திற்கீடாக ஈசுரசங்கற்ப மே யானபடியினால் முயற்சியே பண்ணவேண்டுமென் றுத் தரம்.

(கசு) கர்மத்தின்வழியே முயற்சியானால் ஈசுரசங்கற் பந் தேவையில்லையென்கிற சங்கைக்கு,

ஈசுரப்பிரசாதங் கொண்டுதான் அசங்கனென்கிற க்ஞா னம் வரவேண்டியபடியினாலே ஈசுரானுக்கிரகமும் வேண் டுமென் றுத்தரம்.

{ இஃது இரண்டாவதுசங்கை உத்தரசமாதானம் மூலசுலோகப்படி தவறின சங்கை. }

[புருடப்பிரயத்தனம் ஈசுரரூபமானல் ஆரோ ஒருவர் ஆட்டுவிக்கிருரென்ற அந்தரியாமிப் பிரோரணை வியர்த்தமாமென்னுஞ் சங்கைக்கு,

ஈசன் புருடமுயற்சி வடிவாயிருக்கிருனென்னும் ஞானத்தால் தான் அசங்கனென்னும் ஞானம் வருவதால் அந்தரியாமிப் பிரோரணை வியர்த்தமல்லவென் றுத்தரம்.]

(கூஎ) ஈசுரானுக்கிரகங்கொண்டு தான் அசங்கனென்கிற க்ஞானம்வந்ததனுற் பிரயோசனமேதென்கிற சங்கைக்கு,

அவ்வளவுகொண்டு மூத்தியென்று வேதஞ்சொல்லுகிறதென் றுத்தரம்.

(கூஅ) அந்த அந்தரியாமி சிருஷ்டிக்கிற அடைவேது அழிக்கிற அடைவேதென்கிற சங்கைக்கு,

சித்திரபடத்தை விரித்தாற்போலத் தம்மிடத்திற் பிரபஞ்சத்தை அவரவர் கர்மவசத்திலே தோற்றுவிக்கிறதே சிருஷ்டியென்பது சுருட்டின சித்திரபடம்போல அவரவர் கர்மத்தின்வழியே பிரபஞ்சத்தை தம்மிடத்திலே அடக்குகிறதே பிரளயமென் றுத்தரம்.

(கூகூ) ஒருஈசுவரனே * சித்துக்குஞ் சடத்துக்குங் காரணமெப்படி யாவனென்கிற சங்கைக்கு,

† சைதன்னியமானபடியினலே சித்திற்குங் காரணமாவர் தம்முடைய வுபாதியைத்தொட்டே சடத்திற்குங் காரணமாவனென்றே யுத்தரம்.

---

* சித்து என்றது, சிதாபாசர்கள்.

† சைதன்னிய மானபடியினல் சிதாபாச அம்சத்தினல்.

(எ0) இப்படியானாற் பிரமந்தானே ஜகத்காரணமென்றாசுரேசுராசாரியார் சொல்லுவானேனென்கிற சங்கைக்கு,

கூடஸ்தனையுஞ் சீவனையும் அன்னியோன்னியாத்தியாசத்தினாலே ஒருமைப்பாடாய்க்கண்டாற்போல ஈசுரனையும் பிரமத்தையும் ஒன்றாகக்கண்டுசொன்னாரென்றுத்தரம்.

(எக) அன்னியோன்னியாத்தியாசமெப்படிக்கூடுமென்கிற சங்கைக்கு,

ஈசுரனுடைய ஜகத்காரணத்வம் பிரமத்தினிடத்திலும் பிரமத்தினுடைய சச்சிதாநந்தலக்ஷணம் மாயாப் பிரதிவிம்பரிடத்திலும் அத்தியாசப்பண்ணப்பட்டுக்கஞ்சிபூசின படம்போலே ஒன்றாயிற்றென்றுத்தரம்.

(எ௨.) இந்தவுளவு தீரறிந்தவகை யெப்படியென்கிற சங்கைக்கு,

ஆறு லிங்கத்தாலும் வேதாந்தவிசாரம்பண்ணிப்பிரமம் அசங்கமென்றும் மாயாப்பிரதிவிம்பரே சிருஷ்டிக்கிறவரென்றும் அறிந்தோமென்றுத்தரம்.

(எ௩) சிருஷ்டிபண்ணின அடைவெப்படி யென்கிற சங்கைக்கு,

சுழுத்தியினிடத்திலே சொப்பனமுண்டாகிறாற்போல ஆநந்தமயராயிருந்த ஈசுரனும் மாயையை விரியப்பார்த்து இரண்ணிய கர்ப்பராறொன்றுத்தரம்.

(எச) ஒரு வேதத்திலே ஒன்றிலே ஒன்றுண்டாயிற்றென்கிற சிருஷ்டிசொல்லுகிறது ஒருவேதத்திலே ஒருமித்த சிருஷ்டிசொல்லுகிறது இதிலே எது பிரமாணமென்கிற சங்கைக்கு,

இந்த இரண்டுவகைச்சிருஷ்டியாகிய சொப்பனமும் உண்மையானபடியினாலே இரண்டும் பிரமாணமென்றுத்தரம்.

(எரு) இரண்யகர்ப்ப சொரூப மெப்படி யிருக்குமென்கிற சங்கைக்கு,

சூக்ஷமசரீர சமஷ்டி யபிமானியாய்ப் படத்திலே சூத்திரமிருக்கிறாற்போல எங்கு மிருக்கிறவராய் இச்சாஞானக்கிரியையென்று சொல்லப்பட்ட மூன்றுசத்திகளை யுடையவர் இரண்யகர்ப்பனொன்றுத்தரம்.

(எசு) இந்த இரண்யகர்ப்பம் எப்படிக்காணப்படுமென்கிற சங்கைக்கு,

சந்தியாகாலத்திருட்டிலே காணப்படுகிற லோகம்போலவும் கரியினு லச்சுக்கட்டின சித்திரபடம்போலவும் எங்குமொக்கக் குறுமுளையாயிருக்கிற பயிர்வகைபோலவும் ஈசுரனுடைய சூக்ஷமசரீரமும் அழகாகவெங்கும் ஒக்கலாஞ்சனை பண்ணப்பட்டுத் தோற்றுமென்றுத்தரம்.

(எஎ) இந்த சூக்ஷமசரீரந் தூலாவஸ்தையை யடைந்து தோற்றுகிறதெப்படி இதற்குப் பிரமாணமேது இவர்க்கு அவயவங்களேது அந்த அவையவங்களைப் பூசித்தாற்பலனேதென்கிற சங்கைக்கு,

பஞ்சீகரணம் பண்ணப்பட்டு வெய்யிலிலே விளங்குகிற லோகம்போலவும் தீர்ந்த சித்திரபடம்போலவும் பழுத்த பயிர்வகைபோலவும் வெட்டவெளியாகக் காண்கிற ஸ்தூல சரீராதிப்பிரபஞ்சமே விராட்டென்பது விஸ்வரூப அத்தியாயமும் புருஷசூத்திரவேதமும் பிரமாணம் பஞ்சமூர்த்திகள் வர்ணாச்சிரமமுடையபேர்கள் தேவாசுராதிகள் சராயுஜாதிகள் மயிலார்மாரி வாச்சி உளி முதலானவெல்லாம் ஈசுரனுடைய அவயவங்களானபடியினால் உபாசித்தமூர்த்தியதிகாரிக்குத்தக்கதாய்ப் பலனும் வருமென்றுத்தரம்.

(எஅ) எல்லாரும் பூசிக்கிற தீசுர அவயவமானால் எல்லாருக்கும் மோக்ஷ மேன்வரவில்லையென்கிற சங்கைக்கு,

மாயீகத்தை யுபாசித்தால் மாயீகபலமே யல்லாமல் மோக்ஷம் வாராதென் றுத்தரம்.

(எகூ) பின்னை யெதனால் மோக்ஷம் வரவேண்டுமென்கிற சங்கைக்கு,

பிரமத்துவவிசாரத்தினால் மோக்ஷம் வரவேண்டுமே யல்லாமல் மற்றொன்றினாலும் வாராதென் றுத்தரம்.

(அ0) பிரமக்ஞான மன்றியிலே மற்றொன்றினாலுஞ் சம்சாரம் போகாதோவென்கிற சங்கைக்கு,

தான்விழித்தா லல்லாமற் றன்னுடைய சொப்பனம் போகாததுபோல அத்துவிதப் பிரமத்துவத்தில் அஞ்ஞான கற்பிதமான ஜீவேசுர ஜகத்தென்கிற சொப்பனமும் அதிஷ்டானக்ஞானத்தினாற் போகவேண்டுமென் றுத்தரம்.

(அக) பிரமத்திற் கபின்னமாயிருக்கிற ஜீவேசுரர்களையுங் கற்பிதசகத்துடனே கூட்டலாமோவென்கிறசங்கைக்கு,

அவர்களும் மாயாகற்பிதமானபடியினாற் கூட்டலாமென் றுத்தரம்.

(அஉ) இவர்களாற் கற்பிதமேதென்கிற சங்கைக்கு,

ஈக்ஷணமுதற் பிரவேசாந்தவரைச் சிருஷ்டியெல்லாம் ஈசுரன் கற்பித்தது சாக்கிரமுதல் மோக்ஷபரியந்தமுள்ள சம்சாரமெல்லாஞ் சீவன்கற்பித்ததென் றுத்தரம்.

(அஙு) இப்படிப் பிரமமாத்திரமே யுண்மைப்பொருளானால் வாதிகளெல்லாஞ் ஜீவேசுரவிஷயத்திலே வாதம் பண்ணி மாயக்காரண மேதென்கிறசங்கைக்கு,

அவர்களைப்பிடித்த அஞ்ஞானமே காரணமாக வீணிலே மாய்கிறார்களென்றுத்தரம்.

(அச) நீரொருத்தரிருக்க இந்தவாதிகள் கெட்டுப்போகலாமோ இந்தத்தத்துவத்தை அவர்களுக்குப் போதித்தருளுமேயென்கிற சங்கைக்கு,

பிராந்தர்களுக்குப் பக்குவம் வாராததற்கு முன்னே போதித்தால் இளைப்புமாத்திரமேமிச்சமல்லாமல் அவர்கள் புத்தியிலே யேறாதென் றுத்தரம்.

(அரு) எந்தவாதிகள் எதனாலே பிராந்தர்களா யிருக்கிறார்களென்கிற சங்கைக்கு,

லோகாயுதன்முதல் சாங்கியன்பரியந்தஞ் சீவப்பிராந்தியிலே யலைந்தபேர்கள் யோகிமுதல் விருக்ஷார்ச்சனன்பரியந்தம் ஈசுரப்பிராந்தியிலே யலைந்தபேர்களென் றுத்தரம்.

(அசு) பெரியோர்களாயிருக்கிற சாஸ்திரகர்த்தாக்களையும் பிராந்தர்களென்று சொல்லலாமோவென்கிறசங்கைக்கு,

அத்வைதபிரமத்தை அறியாதபடியினாலே இவர்களும் பிராந்தர்களே இவர்களுக்கு இகபரமிரண்டுமில்லையென் றுத்தரம்.

(அஎ) சீவவாதிகளோடே ஈசுரவாதிகளையும் பிராந்தர்களென்று சொல்லலாமோவென்கிற சங்கைக்கு,

சொப்பனத்திலே பிக்ஷையெடுக்கிறவனிலும் இராஜாவாயிருக்கிறவன் அதிகமானாலும் விழித்தபின்பு இரண்டு சொப்பனமும் பொய்யாய்ப் போகிறாற்போல இந்தவிருவகை வாதிகளுங் கற்பிதத்திலே தாரதன்மியமானாலும் ஞானம்வந்தவனைக் குறித்து இரண்டுபேரும் பிராந்தர்கள் தானேயென் றுத்தரம்.

(அஅ) மோக்ஷம்வரவேண்டு மென்கிறவனும் இந்த வாதங்களை விசாரிக்கத் தேவையில்லையோ வென்கிற சங்கைக்கு,

பூர்வபக்ஷமாய் விசாரித்துத் தள்ளிவிடுகிறதே யல்லா மற் சித்தாந்தமாய் விசாரிக்கவேண்டியது வேதாந்தமென் றுத்தரம்.

(அக) சாங்கியம் யோகம் இந்த இருவகையிலுஞ் சொன்ன சிவனும் ஈசுரனும் சுத்தசைதன்னிய மானபடியினால் இந்த இருவகையும் தள்ளப்படாது வேதாந்தத்திற் கூட்டலாமென்கிற சங்கைக்கு,

ஜீவேசுரர்களுக்குப் பேதஞ் சித்தமானபடியினால் நம் முடைய சித்தாந்தத்திற்குக் கூடாதென் றுத்தரம்.

(கூ0) உம்முடைய சித்தாந்தத்திலே தொம்பதத்திற் குந் தற்பதத்திற்கும் பேதமில்லையோவென்கிற சங்கைக்கு,

அத்துவிதத்தைப் போதிக்க வேண்டுமென்கிறதற்காக ஒரு பகுப்புப் பகுத்துக்காட்டினதேயல்லாமல் அர்த்தபேத மில்லையென் றுத்தரம்.

(கூக) இப்படியானால் லக்ஷணையினாற் பதார்த்தசோதனை பண்ணுவானேனென்கிற சங்கைக்கு,

அஞ்ஞானத்தினாற்ஜீவேசுரர்களை வேறாகக்கண்டிருந்த பிராந்தர்களுக்கு அந்த பிராந்தியைப் போக்கவேண்டிப் பதார்த்தசோதனைபண்ணிக் காட்டினதென் றுத்தரம்.

(கூஉ) பதார்த்தசோதனையினா லிருவரையும் ஒருவராய்க்காண்கிற தெப்படியென்கிற சங்கைக்கு,

உபாதி கற்பிதமாயிருக்கிற சலாகாசத்தையும் மேகாகாசத்தையும்விட்டு இவைகளுக் கதிஷ்டானமாயிருக்கிற

கடாகாசத்தையும் மஹாகாசத்தையும் ஒன்றென்று காண்கிறாற்போலத் தொம்பத தற்பதங்களிலும் உபாதிகற்பிதமான ஜீவேசுரர்களைத்தள்ளி இவர்களுக் கதிஷ்டானமான கூடஸ்தனையும் பிரமத்தையும் ஒன்றாகக் காண்கிறதே லக்ஷணையினாற் பதார்த்தஞ் சோதிக்கிறதென் றுத்தரம்.

(கங) இந்தப்படிக்குச் சாங்கியமதத்திற் சீவனையும்யோகமத்திலீசுரனையும் இரண்டு பதங்களுக்கும் அர்த்தமாக்கலாமோவென்கிற சங்கைக்கு,

இப்படியானால் வேதவிரோதிகளாயிருக்கிற லோகாயுதன் பரியந்தங் கூட்டலாமென் றுத்தரம்.

(கச) அப்படிசாங்கிய யோகமதத்திலே விரோதமேதென்கிற சங்கைக்கு,

ஆத்மா அநேகமென்றதும், ஜகத்துச்சத்தியமென்றதும், ஈசுர னொருவனுண்டென்றதும், அத்துவிதத்திற்கு விரோதமென் றுத்தரம்.

(கரு) அத்துவிதத்திற் கொத்து வராவிட்டாலென்ன ஜீவன் அசங்கசைதன்னியமென்றறிந்ததுகொண்டு முத்தியில்லையோவென்கிற சங்கைக்கு,

ஜகத்தும் ஈசுரனு நித்தியமென்றதனாற் றானசங்கனென்றறிந்தாலு முன்போலப் பிரகிருதியுந் திரும்பவுங் கூட்டும், பின்பிருக்கிற ஈசுரனுஞ் சிக்ஷைபண்ணுவர் ஆகையால் மோக்ஷமெப்படிவருமென் றுத்தரம்.

(கசு) அசங்கனாயிருக்கிற ஆத்மாவிற்கு அவிவேகத்தினாற் பிரகிருதி சங்கம்வந்தது விவேகம்வந்தபிற்பாடிவனையெப்படிக்கூட்டுமென்கிற சங்கைக்கு,

இப்படியானால் உன்னுடைய சித்தாந்தங்கெட்டு மாயாவாதத்தினால் வேதாந்தத்திலே வந்தாயென் றுத்தரம்.

(கூஎ) உம்முடைய அத்துவிதத்திற்கு ஆத்மாக்கள் நானுவிதமாகாதபோது இவன்முத்தன் இவன் பெத்தனென்கிற நிர்ணயமெப்படி வந்ததென்கிற சங்கைக்கு,

இந்த நிர்ணயமெல்லாம்மாயைதானே கற்பிக்குமென்றுத்தரம்.

(கூஅ) ஆத்மா ஒன்றேயொழிய இரண்டில்லாதவிடத்திலே மாயை எப்படி விகற்பத்தைக் கற்பிக்குமென்கிற சங்கைக்கு,

கூடாததைக் கூட்டுவிக்கிறதே மாயைக்குச் சுபாவமாகையினுற் சகலத்தையுங் கற்பிக்கும் சுபாவத்திலே பெந்தம் முத்தி பெத்தன் முத்தனில்லையென்று வேதஞ்சொல்லுகிறதென் றுத்தரம்.

(கூகூ) ஈதெல்லாஞ் சுபாவத்திலே யில்லாவிட்டாற் பின்னை யெப்படி யுண்டாமென்கிற சங்கைக்கு,

மாயையாகிற காமதேனுவுக்குச் சிவேசுரர்களென்று இரண்டுகன்றுண்டு, வேண்டியபடி தொய்தப்பாலுங் கறக்கும் ஆகையினுல் அத்துவிதம் ஒன்ருெழிய இரண்டில்லையென்றுத்தரம்.

(க00) இப்படிப்பேதமெல்லா மித்தையென் றறிந்து பரமாத்மா ஒருவரோ உள்ளபொருளென் றறிந்திருக்கிற ஞானிகளும் விவகாரம் பண்ணக்கண்டோம் அதுகூடுமோவென்கிற சங்கைக்கு,

முன்போலப் பரமார்த்தமாக விவகாரம் பண்ணுமல் மித்தையென்று காண்பார்களென் றுத்தரம்.

(க0க) அஞ்ஞானியெப்படி விவகரிப்பன், ஞானியெப்படி விவகரிப்பனென்கிற சங்கைக்கு,

இகபரவியாபாரங்களெல்லாம் உண்மையென்றும் அத்துவிதம் இல்லையென்றும் விவகரிப்பன் அஞ்ஞானி, அத்துவிதமாத்திரம் உண்மைப்பொருளென்றும் மற்றுள்ளவெல்லா மித்தையென்றுங்கண்டு விவகரிப்பன் ஞானி, அந்தந்த நிர்ணயப்படிக்குப் பலனும்வருமென் றுத்தரம்.

(கO௨) அத்துவிதம் பிரத்தியக்ஷமாமோவென்கிற சங்கைக்கு,

நீ ஞானவடிவா யிருக்கிறாயோ இல்லையோவென் றுத்தரம்.

(கO௩) * உள்ளபடி தோற்றவில்லையென்கிற சங்கைக்கு, அது துவிதத்திலுஞ்சரியல்லவோ துவிதத்தில் † ஸ்தாலி ‡ புலாக § நியாயப்படிக்கு அத்துவிதமுஞ் சித்திக்குமென் றுத்தரம்.

(கO௪) துவிதமழிந்தல்லவோ அத்துவிதஞ் சித்திக்க வேண்டுமென்கிற சங்கைக்கு,

துவிதமிருக்கையிலே துவிதத்தைக்காண்கிற அறிவாகத்தானே அத்துவிதஞ் சித்திக்குமென் றுத்தரம்.

(கO௫) ஞானம்வந்தும் இரண்டும்நிற்கிறதுதானோ வென்கிற சங்கைக்கு,

அவற்றையறிந்துஞ் சாக்ஷிமாத்திரமாக மிஞ்சுகிறபடியினாலே துவிதம் மாயாமயம் அத்துவிதமே நித்தியமென்றுத்தரம்.

(கO௬) திரும்பவு மொருவேளையிலே துவிதஞ் சத்தியமாய்த் தோற்றினால் எப்படியென்கிற சங்கைக்கு,

---

* உள்ளபடி என்றது, சம்பூரணமாக.

† ஸ்தாலி என்றது, பானை.

‡ புலாகம் என்றது, சோறு.

§ நியாயம் என்றது, திருஷ்டாந்தம்.

நிரம்பவும் அத்துவிதத்தைப் பரிசீலனம் பண்ணென் றுத்தரம்.

(க0எ) எத்தனைகாலம் பரிசீலனம் பண்ணவேண்டுமெ ன்கிற சங்கைக்கு,

இந்தத்துக்கத்தைத் துவிதத்திலேபண்ண அத்துவிதத் திலே பண்ணவேண்டாமென் றுத்தரம்.

(க0அ) பசிதாகமுதலானது முன்போலவே காணப்படு கிறதே யென்கிறசங்கைக்கு,

எனக்கென்கிற வகங்காரிக்கேயல்லாமற் சாக்ஷியாகிற நமக்கில்லையென்று பகுத்தறியென் றுத்தரம்.

(க0௯) அத்தியாசத்தினாலே சித்திரூபத்திலுங் காணப் படுகிறதென்கிற சங்கைக்கு,

இன்றுமுதல் அத்தியாசத்தைக் கைவிட்டு ஆத்மா வக ங்காரங்களை வேறுகண்டிருவென் றுத்தரம்.

(கக0) அத்தியாசஞ் சீக்கிரத்தில்வருகிறது விவேகம் ஏன்வரவில்லையென்கிற சங்கைக்கு,

அத்தியாசம்போலே விவேகத்தையுந் திடப்படுத்தி னால் வாராதோவென் றுத்தரம்.

(ககக) துவிதமித்தையாய்ப் போகிறாற்போல அத்துவி தமும் மித்தையாய்ப்போகாதோவென்கிற சங்கைக்கு,

இன்னபடிவரும் இன்னபடிபோமென்று நிர்ணயப்ப டாமல் மாயாமயமாயிருக்கிறது துவிதமோ அத்துவிதமோ வென் றன்னநுபவத்தைப்பாரென் றுத்தரம்.

(ககஉ) துவிதம்போலே அத்துவிதமும் அநித்தியமென் கிற சங்கைக்கு,

துவிதம் முன்னில்லையென்கிறதை அத்துவிதங் கண்டாற் போல அத்துவிதம் முன்னில்லையென்கிறதை யொன்றினாலுங்

காணப்படாதபடியினாலே அத்துவிதமே நித்தியாபரோக்ஷமென் றுத்தரம்.

(௧௧௩) இப்படி யறிந்துஞ் சிலபேர்கள் திருப்தியடைந்து கவலைகெட்டுச் சந்தோஷியாமலிருப்பானேனென்கிற சங்கைக்கு,

சாஸ்திரார்த்தத்தைத் தனக்காக்கிக்கொண்டு விசேஷித்து நம்பாமல் மேலெழுந்தபுத்தினாலென் றுத்தரம்.

(௧௧௪) யாதொருக்கால் இருதயத்திலிருக்கிற ஆசையெல்லாம் பற்றறவிட்டுப் போயிற் றன்றைக்கிவன் முத்தனென்று வேதஞ்சொல்லுகிறது ஞானிகளிடத்திற் காணேமென்கிற சங்கைக்கு,

அகங்காரத்தையும் ஆத்மாவையும் ஒன்றாகக் கண்டுவருகிற ஆசையாகாதென்று அந்த வேதத்திற் கர்த்தம் அகங்காரக்கிரந்திவிட்டு ஆத்மாவை வேறாகண் டிருக்கிறவனுக்கு அகங்காரத்தினிடமாய்க் கோடியாசை வந்தாலும் ஆனியில்லையென் றுத்தரம்.

(௧௧௫) அகங்காரக்கிரந்தி விட்டுப்போனபின்பு அகங்காரத்தினிடமாய் ஆசைவரலாமோவென்கிற சங்கைக்கு, பிராரத்தபலத்தினால் வருமென் றுத்தரம்.

(௧௧௬) ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் பிராரத்தபலஞ் சரியானால் இரண்டுபேருக்கும் பேதமேதென்கிறசங்கைக்கு,

இவன் வித்துவான் இவன் மூடனென்கிறதை வேதப்பரீக்ஷையினாலே கண்டுபோகிறதே யல்லாமற் சொரூபங்கொண்டு காணாததுபோல அகங்காரக்கிரந்தி விட்டுப்போனதுகொண்டு ஞானியெனறறிகிறதேயல்லாமற் பிராரத்தசேட்டையினாலே பேதந்தெரியாதென் றுத்தரம்.

(கக௭) அகங்காரக்கிரந்தி போகாதிருந்தாலும் ஆத்மாவுக்குச் சம்சாரமில்லையென்கிற சங்கைக்கு,

இப்படி யறிந்தபோதே நீயே கிருதார்த்தனென் றுத்தரம்.

(கக௮) அகங்காரக்கிரந்திவிட்டுப் போனவனுக்கு அடையாளமேதென்கிற சங்கைக்கு,

பிரவிருத்தி நிவிருத்திகளிலே ஒன்றைத் துவேஷிக்கிறதுமில்லை ஒன்றை வாஞ்சிக்கிறது மில்லையென்ற கீதாவசனப்படியே யிருப்பனென் றுத்தரம்.

(கக௯) ஆனால் உபேக்ஷைபண்ணுகிறதே ஞானமென்கிற சங்கைக்கு,

கைகால் செத்துப்போனாற் கர்மத்தி லுபேக்ஷை வரும் இப்படி வியாதியே தத்துவக்ஞானமென்றால் உன் புத்தியல்லவோ தெளிவென்கிற பரியாசமே யுத்தரம்.

(க௨௦) இப்படிப் பரியாசம்பண்ணத் தேவையில்லை சடபரதர் முதலானபேருபேக்ஷையாயிருந்தது புராணத்திற் கேட்டோமென்கிற சங்கைக்கு,

ஸ்திரீகள் வாகனங்களோடேகூடி விளையாடினாலும் ஞானி சரீரத்தைத் தானென்றெண்ணானென்று சாமவேதஞ் சொல்லுகிறதென் றுத்தரம்.

(க௨க) சடபரதர் காட்டிற்போனது ஞானநிமித்தமல்லவோவென்கிற சங்கைக்கு,

அஞ்ஞானிகளுடைய சங்கத்தைத் துறந்ததேயல்லாமல் கல்லு கண் மரங்கள்போலப் பிரவிருத்தியற் றிருக்கவில்லையென் றுத்தரம்.

(௧௨௨) இப்படி ஒவ்வொரு குணங்களைப்பிடித்து இது வேஞானமென்று லோகத்தார் சொல்லுவானேனென்கிற சங்கைக்கு,

சாஸ்திரசித்தாந்த மறியாதமூடர்கள் ஒன்றுகிடக்க ஒன்று சொல்லுவார்கள் அறிந்தவன் அப்படிச் சொல்லானென்றுத்தரம்.

(௧௨௩) சாஸ்திரசித்தாந்தந்தான் ஏதென்கிற சங்கைக்கு,

சகலசன்மார்க்கமுங்கூடி வைராக்கியம் உபரதிஞானமென்று மூன்றுவிதமாயிருக்கும் இந்தமூன்று வகைக்கும் ஏது, சொரூபம், காரியம், அவதி, பலம், என்கிற ஐந்தும் வெவ்வேறுயிருக்கும் இவைகளை இன்னதின்னபடியென்று பகுத்தறியாத அவிவேகி எல்லாவற்றையும் ஞானமென்று தடுமாறிச் சொல்லுவன் பகுத்தறிந்தவன் அப்படிச்சொல்லானென்றுத்தரம்.

(௧௨௪) வைராக்கியமுதலான மூவகைக்கும் ஏதுமுதலான ஐந்தவஸ்தையும் எப்படியென்கிறசங்கைக்கு,

வைராக்கியத்திற்கு ஏது, விஷயத்திலே தோஷதிருஷ்டி. சொரூபம், ஒக்காளம். காரியம், திரும்ப ஆசைவராமலிருக்கிறது. அவதி, பிரமலோகபரியந்தந் துரும்பாயெண்ணுதல். பலம், பிரமலோகம்.

உபரதிக்கு ஏது, அஷ்டாங்கயோகம். சொரூபம், சித்தநிரோதம். காரியம், விவகாரக்ஷயம். அவதி, சுழுத்தியைப்போலச் சரீரத்தைமறத்தல். பலம், பிரமலோகசாமீபம்.

ஞானத்திற்கு ஏது, சிரவணமனன நிதித்தியாசனம். சொரூபம், * தத்வமித்தியாபாவனை. காரியம், திரும்ப அகங்காரக்கிரந்தி வாராமலிருக்கிறது. அவதி, முன்தேகமே தானென்று நின்றாற்போல பிரமமே தானென்கிற திடம். பலம், மோக்ஷமென்றுத்தரம்.

(கஉரு) இந்தமூன்றும் ஒருமிக்கவேண்டாமோ வென்கிற சங்கைக்கு.

இந்த மூன்றுங்கூடினால் திடசௌக்கியமுண்டென்கிற தேயல்லாமல் மோக்ஷத்திற்கு ஞானமாத்திரம் போதும் கர்மவசத்தினாற் சிலபேரிடத்திற் கூடியிருக்கும் சிலபேரிடத்திற் பிரிந்திருக்கும் கலங்கத்தேவையில்லையென் றுத்தரம்.

(கஉசு) இப்படிக்கலங்காமல் நிலைநின்றவனுக்குச் செய் காரியமேதென்கிற சங்கைக்கு,

சின்மாத்திரமாயிருக்கிற தன்னிடத்திலே மாயை கற்பித்த ஜகச்சித்திரத்தை யுபேக்ஷித்துச் சதாகாலமுஞ் சின்மாத்திரமாகவே காண்பன்.

இந்தச்சித்திரதீபிகையை அநுசந்தானம் பண்ணிவருகிறவன் ஜகத்தைச்சித்திரமாகவே காண்பனல்லாமல் முன்போல உண்மையென்று மயங்கான்.

முதலாவது சித்திரதீபம் முற்றிற்று.
ஆகச்சங்கை - கஉசு.

---

* தத்வமித்தியாபாவனை - என்றது - கூடஸ்த அகங்காரங்களின் பேதஞானம்.

# இரண்டாவது திருப்திதீபம்.

சகலலோகங்கட்குஞ் சகலவேதார்த்தத்தை வெளிபண்ணிறைலும் புருஷார்த்தத்தைப்பூரியிட்ட ஸ்ரீவித்யாரண்ணிய ஸ்வாமிகளுக்கு நமஸ்காரம்.

புருஷனானவன் ஆத்மாவை யிவரேதானென்றறிந்தாற் பின்னையாருக்குப் போகநிமித்தமா யெந்தப் போகத்தை வேண்டிச் சரீரதாபப்படுவனென்கிற பிரகதாரண்ணிய உபநிஷத்திற் கர்த்தஞ்சொல்லுகிறோம்.

(க) இந்த உபநிஷத்து என்னத்தைச் சொல்லுகிறதென்கிற சங்கைக்கு,

சித்திரதீபிகையிலே சொன்னபடி சகத்து மித்தையென்றும் உண்மையான சின்மாத்திரமேதானென்றுந் திடப்பட்ட சீவன் முத்தனுடைய திருப்தியைச் சொல்லுகிறதென்றுத்தரம்.

(உ) இந்தவேதத்திலே புருஷனானவனென்கிற சொல்லுக் கர்த்தமேதென்கிற சங்கைக்கு,

சுபாவத்திலே சித்தைத்தவிர வேறுபொருளில்லாவிட்டாலும் விவகாரத்திலே மாயாகற்பிதமாகச் சீவேசுரர்களென் றிரண்டுபேருண்டு இவரிற் சிருஷ்டிமுதலானவையைப்பண்ணுகிறவன் ஈசுரன் சாக்கிரமுதல் மோக்ஷபரியந்தமுள்ள சம்சாரநிருவகிக்கிறவன் சீவன் இதில் அதிஷ்டான சைதன்னியத்துடனே கூடச் சீவனைப் புருஷனென்று சொல்லுகிறதென் றுத்தரம்.

(௩) அதிகாரியைச் சொல்லுகின்ற புருஷசத்தத்திற்கு அதிஷ்டானத்தையுங் கூட்டி யர்த்தமாக்கலாமோ வென்கிறசங்கைக்கு,

அதிஷ்டானத்தைத்தவிர ஆரோபத்திற்கு வேறுசொரூபமில்லாதபடியினாலும் விவகாரத்திலிருவரும் ஒருவராகத் தோற்றுகையினாலும் முத்தியிலே ஆரோபமும் அதிஷ்டானமாத்திரமாய்ப் போகிறபடியினாலும் இரண்டையுங்கூட்டிச் சொன்னானென்றுத்தரம்.

(ச) இந்தப்புருஷன் அதிஷ்டானப்பிரதானமா யெப்படிப் பேசுவான ஆரோபப்பிரதானமா யெப்படிப்பேசுவானென்கிற சங்கைக்கு,

அதிஷ்டானம் ஆரோபத்திலடங்கியிருக்குங்காலத்தில் ஒருமைப்பாடாக நான் சம்சாரியென்றே பேசுவான் ஆரோபத்தைத்தள்ளி அதிஷ்டானமே தானாய்க் காணும்போது நான் அசங்கன் சின்மாத்திர மென்றே பேசுவானென்றுத்தரம்.

(ரு) நான் அசங்கனென்னும்போது அசங்கனிடத்திலே அகங்காரங்கூடுமோவென்கிற சங்கைக்கு,

முக்கியவகங்காரமொன்றும் அமுக்கிய வகங்காரமிரண்டுமாக அகங்காரமூன்றுண்டு அதிஷ்டான வகங்காரங்களைப்பகுத்துக்காணாத மூடனொருமைப்பாடாக நான் வந்தேன்போனேனென்று சிதாபாசனைப்பேசுகிறது முக்கியவகங்காரம் லக்ஷணாவிருத்தியினாலே பகுத்துக்கண்டஞானி நான் அசங்கன் சின்மாத்திரமென்றே பேசுகிறதும் விவகாரத்தில் நான்வந்தேன் போனேனென்று சிதாபாசனைப் பேசுகிறதும் அமுக்கிய வகங்காரமாம் ஆகலின், இலக்கணையால் அகஞ்சத்தார்த்தமாக நானென்னுமுணர்ச்சிக்கு இடமாதலால் அசங்கனாகின்றேனென்னும் ஞானங்கூடுமென்றுத்தரம்.

(சு) அஞ்ஞானி ஞானியென்னு மிருவருஞ் சிதாபாசரல்லவோ இவர்களில் ஞானி தனக்கன்னியமாயிருக்கிற சாக்ஷியை நானென்னக்கூடுமோவென்கிற சங்கைக்கு,

முகாபாசத்திற்கெப்படியானால், கண்ணாடியிலே பிரதிவிம்பிக்கிற முகஞ்சுபாவமல்ல அதைப்பார்க்கிற முகமே சுபாவமானாற்போலச் சிதாபாசனுக்குஞ் சிதாபாசனாயிருக்கிறதான் மித்தையானபடியினாலும் சாக்ஷியாக மிஞ்சுகிற தான் சுபாவமானபடியினாலும் தன்னுடைய சுபாவ சைதன்னியத்தை நானென்னக்கூடுமென் றுத்தரம்.

(எ) சிதாபாசனாகவிருக்கிற சிதாபாசன் மித்தையானலவனனுசந்தானம்பண்ணுகிற ஞானமு மித்தையாகவேண்டும் அதுசம்சாரத்தைப்போக்கமாட்டாதென்கிறசங்கைக்கு,

இந்த ஞானமித்தையானாலும் இதனாற்சிதாபாசனுக்கு முன்னிருந்த சம்சாரம் பொய்யானபடியினாலே அதைப்போக்குதற்கிந்தஞானமே போதுமென் றுத்தரம்.

(அ) புருஷசத்தத்திற் கர்த்தங்கேட்டோம் இனி ஆத்மாவை யிவரோ நானென் றறிகிற தெப்படியென்கிறசங்கைக்கு,

சந்தேக விபரீதமறத் தேகமே தானென் றிருந்தாற்போலச் சாக்ஷியே தானென் றறிகிற திடக்ஞானமே இவரோ தானென்கிறதென் றுத்தரம்.

(கூ) இவரோ தானென்கிற சொற்பிரத்தியக்ஷத்தை யல்லவோ சொல்லுகிறது அவர் கெதத்திற்குப் பரோக்ஷமாயிருக்கக்கூடுமோவென்கிற சங்கைக்கு,

பத்தாமவனுக்குத் தன்னிடத்திலேதானே அஞ்ஞானம் ஆவரணம் விக்ஷேபம் பரோக்ஷம் அபரோக்ஷம் துக்கநிவிருத்தி தடையற்ற வானந்தமென்கிற ஏழவஸ்தையுங்கண்டாற்

போல ஆத்மாவினிடத்திலும் ஏழவஸ்தையுங் கூடுமென்றத்தரம்.

(௧0) தசமனிடத்திலும் ஆத்மாவினிடத்திலும் இந்த ஏழவஸ்தையும் அநுபவமாகக் காட்டவேண்டுமென்கிற சங்கைக்கு,

தசமன் ஒன்பதுபேரையும் எண்ணினவுடனே பத்தாமவனைக் காணுமற் றிடுக்கிட்டுக் கலங்கினதே அஞ்ஞானம்,

பத்தாமவனைக்காணேம் அவனெங்கே போனுனென்கிற பராமரிசையே ஆவரணம்.

ஆற்றிலேபோனுனென் றழுகிறதே விக்ஷேபம்.

ஆப்தனுபதேசத்தினுற் சுவர்க்காதி லோகம்போலப் பத்தாமவனிருக்கிறுனென்கிறது பரோக்ஷக்ஞானம்.

நீயே பத்தாமவனென்று ஆப்தனெண்ணிக் காட்டவறிந்ததே அபரோக்ஷக்ஞானம்.

முன்செத்தானென் றழுதவழுகை போனதே துக்கநிவிருத்தி.

பத்தாமவனைத் தானுகக்கண்ட சந்தோஷமே தடையற்றவானந்தம் இப்படிப்போல ஆத்மாவினிடத்திலேயுங்காட்டும்படி.

சிதாபாசன் அநாதிசம்சாரத்திலழுந்தித் தன்னுடைய சுபாவத்தைவிசாரியாம லுபேக்ஷித்திருக்கிறதே அஞ்ஞானம்

அமார்க்கத்திலே விசாரித்து ஆத்மாவுண்டானுற்றுற்றுரோ இல்லையென்கிறதே ஆவரணம்.

சரீரத்திரயத்தையுஞ் சிதாபாசனையுந் தானுகக்கண்டதே விக்ஷேபம்.

ஆப்தனுபதேசத்தினுற் பிரமமுண்டென் றறிகிறதே பரோக்ஷக்ஞானம்.

வேதாந்த விசாரத்தினு லந்தப்பிரமம் நாமென்றறிகிற தே அபரோக்ஷக்ஞானம்.

நான் கர்த்தா போக்தா வல்லவென்றுபோனதே துக்க நிவிருத்தி.

செய்யத்தக்கதெல்லாஞ் செய்துமுடிந்தது அடையவேண்டியதெல்லா மடைந்து முடிந்ததென்கிற சந்தோஷமே தடையற்ற வாநந்தம் இப்படிச் சிதாபாசனுக்கு ஏழவஸ்தை யுண்டென் றுத்தரம்.

(கக) இதிலே பந்தப்படுத்துகிற அவஸ்தையேது மோக்ஷத்தைக்கொடுக்கிற அவஸ்தையேதென்கிற சங்கைக்கு,

முந்தின மூன்றும் பந்தத்தைக்கொடுக்கும் பிந்தின நான்கு மோக்ஷத்தைக்கொடுக்குமென் றுத்தரம்.

(கஉ) முந்தின மூன்றிற்கு ளெந்தெந்த அவஸ்தையெந்தெந்தவநர்த்தங்கொடுக்குமென்கிற சங்கைக்கு,

ஆத்மாவை நானறியேனென்கிற வுதாசீனமே அஞ்ஞானத்தில்வந்த அநர்த்தம்.

அமார்கத்திலே விசாரித்துக்கூடஸ்தரிருந்தாற்றோற்றுரோ இல்லையென்கிற விபரீதவார்த்தையே ஆவரணத்தில் வந்த அநர்த்தம்.

இகபரத்தைக்குறித்துச் செய்தொழிலெல்லாநம்முடைய தொழில்தானே புண்ணியபாவபலமும் நம்மைவிடாதென் கிற நடுக்கமே விக்ஷேபத்தில் வந்த வநர்த்தம்.

இப்படி யிந்த மூன்றவஸ்தையும் அநர்த்தங்கொடுக்குமென் றுத்தரம்.

(கங) அஞ்ஞானமும் ஆவரணமும் விக்ஷேபத்திற்கு முந்தினதானபடியினால் ஏழவஸ்தையுஞ் சிதாபாசனுக்கென்று சொல்லக்கூடாது விக்ஷேபங் காரியப்படுகிறதற்குமுன்

காரணரூபமாய்ப் பிரமத்தினிடத்திலே யிருந்ததென்கிற சங்கைக்கு,

பிரமம் நிருவிகாரம் அதனிடத்திலே யிருக்குமென்னக்கூடாது சிதாபாசனிடமாய்த் தானே முந்தின இரண்டவஸ்தையும் வாசனரூபமாயிருந்தது ஆகையினால் ஏழவஸ்தையுஞ் சிதாபாசனுக்கே ஆத்மாவுக்கில்லையென்றுத்தரம்.

(௧௪) பூர்வாசாரிகளெல்லாரும் அஞ்ஞானத்திற்காதாரஞ் சிதாபாசனென்று சொல்லாமற் பிரமமென்று சொல்வானேனென்கிற சங்கைக்கு,

ஆரோபத்திற் கதிஷ்டானம் பிரமமானபடியினாலே யெல்லாம் பிரமத்திலாரோபமென்று சொன்னார்கள் நாமநுபவத்தினாலே அவஸ்தையெல்லாஞ் சிதாபாசனுக்கென்று சொன்னோமென்றுத்தரம்.

(௧௫) இந்த ஏழவஸ்தையுஞ் சிதாபாசனிடத்திலே யநுபவமாய்க் காட்டவேண்டுமென்கிற சங்கைக்கு,

நான் சம்சாரி நான் பரோக்ஷக்ஞானி நான் விக்ஞானி நான் துக்கமற்றவன் நான் கிருதகிருத்தியனென்கிறவிக்ஷேபமுதலைந்தவஸ்தையுஞ் சிதாபாசனே யநுபவிக்கக் கண்டாற்போல நான் அஞ்ஞானியென்கிற திருஷ்டிக்குப் பிரமமில்லையென்கிற முந்தின இரண்டவஸ்தையுஞ் சிதாபாசனே யநுபவிக்க அநுபவங்கண்டோமென்றுத்தரம்.

(௧௬) இனி, மேலவஸ்தைநாலும் மோக்ஷங்கொடுக்கிறதெப்படியென்கிற சங்கைக்கு,

பரோக்ஷக்ஞானத்தினால் அசத்தாவரணமும் அபரோக்ஷக்ஞானத்தினால் அபித்தாவரணமும் மூலாக்ஞானத்துடனேநஷ்டமானபடியினாற்பிரமமேநாமென்று வெட்டவெளி

யாய்த் தோற்றுகையினுல் ஆரோபிக்கப்பட்ட ஜீவத்துவம நஷ்டமானவுடனே கர்த்தத்துவமுதலான சகலதுக்கமும் விட்டுப்போம் சகலசம்சாரமும்நிவிருத்தியானவுடனேநான் நித்தியமுத்தனென்கிற கெம்பீரங்கொண்டு தடையற்ற வானந்தம்வரும் இப்படி நாலவஸ்தையும் மோக்ஷங்கொடுக்கிறவடையென் றுத்தரம்.

(கள) பிரமம் சுயம் பிரகாசமானுற் பரோக்ஷக்ஞான விஷயமா யெப்படி யிருந்ததென்கிற சங்கைக்கு,

பிரம முண்டென்று பிரகாசிக்கையினுற் குற்றமில்லை யென் றுத்தரம்,

(கஅ) சுயம்பிரகாசமானுல், தானுய்விளங்கவேண்டுமே யல்லாமற் பிரமமுண்டென்று விளங்கலாவதேது ஆகையினுலே அந்தப் பரோக்ஷக்ஞானம் பிரமாணமல்ல வென்கிற சங்கைக்கு,

முந்தினநிர்ணயத்திற் கழிவுவந்ததுகொண்டும் கண்ணுரக்காணுததுகொண்டும் தாறுமாருயறிந்ததுகொண்டும் ஏகதேசமாய்க் கண்டது கொண்டும் அப்பிரமாண மென்ருல் இந்த நாலுவகையிலே ஒன்ருகிலுங்கண்டு அப்பிரமாண மென்னவேண்டும் ஆகையினுற் பரோக்ஷக்ஞானத்திற்கு இந்தநாலுவகையு மில்லையென் றுத்தரம்.

(கக) இந்த நாலுவகைத் தூஷணமு மில்லையென்கிற தெப்படியென்கிற சங்கைக்கு,

பிரமமில்லையென்ருெருபிரமாணங் காணுதபடியினுலே முந்தின நிர்ணயத்திற்கழிவில்லை கண்ணுரக் காணுததுகொண்டு பரோக்ஷக்ஞானம் அப்பிரமாணமென்ருல் சுவர்க்காதிக்ஞானமும் அப்பிரமாண மாகவேண்டும் பிரத்தியக்ஷமாகப் போகிறதைப் பரோக்ஷமென்றதுகொண்டு பிராந்தியெ

ன்னக்கூடாது, ஏகதேசங் கண்டதுகொண்டு அப்பிரமாண மென்றால் கடக்ஞானமுதலாகப் பிராந்தியாக வேண்டும் ஆகையினாற் பரோக்ஷக்ஞானத்திற் கொருதாஷணமுமில் லையென் றுத்தரம்.

(உ0) நிரம்ஸ வஸ்துவினிடத்திலே அம்ஸகற்பனை யெப்படி வந்ததென்கிற சங்கைக்கு,

தன்னைத் தொட்டில்லாவிட்டாலுந் தள்ளப்பட்ட வுபாதியைத் தொட்டுண்டென் றுத்தரம்.

(உக) உபாதியைத்தொட் டெப்படியுண்டென்கிற சங்கைக்கு,

பரோக்ஷக்ஞானத்தினால் அசத்தென்கிற அம்சந் தள்ளப்பட்டது பிரத்தியக்ஷக்ஞானத்தினால் அபானம்ஸந்தள்ளப் பட்டதென் றுத்தரம்.

(உஉ) பிரத்தியக்ஷக்ஞானத்திற் காணியில்லையோவென் கிற சங்கைக்கு,

பத்தா மவன்தானேயென்று கண்டபிற்பாடு முன் கண்ட வொன்பதுபேருக்கு ளில்லையென்று கண்டாற்போல ஆத்மாவேபிரமமென்று கண்டபின்பு முன்தானாகவழங்கின அகங்காரத்தைத் தானல்லவென்று தள்ளுமேயல்லாமல் நான் பிரமமென்கிற பிரத்தியக்ஷக்ஞானத்தைக் கெடுக்கமாட்டாதென் றுத்தரம்.

(உ௩) இப்படிப் பரோக்ஷக்ஞானம் அவாந்தர வாக்கியத்தினால் வருமென்றும் பின்மஹாவாக்கிய விசாரத்தினாற் பிரத்தியக்ஷக் ஞானம்வருமென்றும் எங்கே சொல்லியிருக்கிறதென்கிற சங்கைக்கு,

உத்தாலகர் சுவேதகேதுவுக்கு முந்திப் பரோக்ஷக்ஞானஞ்சொல்லிப் பின்பொன்பதாந்தரம் பிரத்தியக்ஷக்ஞான

ஞ்சொன்றொன்று சாமவேதத்திலும் வருணன் பிருகுவுக்குமுந்திப் பரோக்ஷக்ஞானஞ்சொல்லிப் பின்பைந்தாந்தரத்திலே பிரத்தியக்ஷக்ஞானஞ் சொன்றொன்று எசுர்வேதத்திலும் தேவேந்திரன்முந்தி அவாந்தரவாக்கியத்திறை் பிரமத்தைப்பரோக்ஷமாயறிந்து பின் அபரோக்ஷக்ஞானத்தையறிந்தானென்று இருக்குவேதத்திலுஞ் சொல்லியிருக்கிறது, இந்தப்படி ஸ்ரீ சங்கராசாரியசுவாமிகளும் வாக்கியவிருத்தியிலே வெளிபண்ணியிருக்கிறொன் றுத்தரம்.

(உச) மஹாவாக்கிய விசாரத்திறைல் அபரோக்ஷக்ஞானம்வருமென்கிறது வாக்கியவிருத்தியிலே யெப்படி வெளிபண்ணிறொன்கிற சங்கைக்கு,

அகங்காரமுங் கூடஸ்தருந் தொம்பதத்திற் கர்த்தமென்றும் பரோக்ஷமாய் மாயாவுபாதியை யுடைத்தாயிருக்கின்ற செகத்காரண சைதன்னியமும் பிரமமுந் தற்பதத்திற் கர்த்தமென்றும் இரண்டும் விருத்தமாவதால் பாகத்தியாகலட்சணையிறைலே அவனே யிவன் இவனே யவனென்கிற லக்ஷணம்போலக் கூடஸ்தரோ பிரமம் பிரமமே கூடஸ்தரொன்றறிந்தவுடனே இற்றைவரைக்கும் நாம் பிரமமல்லவென்கிற புத்தியும் ஈசுர சைதன்னியம் பரோக்ஷமென்கிற புத்தியும் இன்னவிடமென்று காணுமற்போம் ஆகையிறைல் அபரோக்ஷக்ஞானத்திற்கு மஹாவாக்கியமே காரணமென்று சொன்றொன் றுத்தரம்.

(உரு) வாக்கியத்திறைற் பிறந்த அறிவெல்லாம் பரோக்ஷமேயல்லாமற் பிரத்தியக்ஷயல்லவென்கிற சங்கைக்கு,

வட்டிக்காசைப்பட்டு முதலு மிழந்தானென்கிற சொற்போலப் பிரமமாக வேண்டுமென்றிருந்த சீவனுக்குச் சுதசித்தமாகவிருந்த பிரத்தியக்ஷமும் போமென்கிற தாசியமா

யக்காணும் நீயே தசமனென்கிறசொல்லும் அவனைப்பிறத்தி யக்ஷமாய்க் காட்டவில்லையோவென்றுத்தரம்.

(உகு) அந்தக்கரண வுபாதியிருக்கையினாலே சீவனைப் பிரத்தியக்ஷமாகக்காணலாம் நிருபாதியாயிருக்கிற பிரமம் பிரத்தியக்ஷமாகாதென்கிறசங்கைக்கு,

இரும்பு பொன்னென்கிறதுகொண்டு விலங்கென்கிறது போகாததுபோல அந்தக்கரணக்கூட்டரவே சீவவுபாதியா னாற்போல அதனைத்தவிருகிறதே பிரம வுபாதியாமென் றுத்தரம்.

(உஎ) நானென்கிறது முற்றுந்தள்ளப்பட்ட பின் நான் பிரமமென்கிற க்ஞானம்வரக் கணக்கில்லையே யென்கிறசங் கைக்கு,

நானென்கிறது முற்றுந்தள்ளப்படாமல் உபாதிமாத்தி ரந்தள்ளப்பட்டுச்சைதன்னியந்தள்ளப்படாதபடியினால்நான் பிரமமென்கிற அறிவுவரலாமென்றுத்தரம்.

(உஅ) சாக்ஷிசுயம்பிரகாசமானால் விருத்திக்குவிஷய மாகக்கூடாது கூடுமென்றாற் பிரமம்விருத்தியிற்சிதாபாசனா லு மறியப்பட்டுச்சடமென்று வருப்பருமென்கிற சங்கைக்கு,

கடத்தைப்பார்க்கில் விளக்குங்கண்ணும்வேண்டும் விளக் கைப்பார்க்கிற் கண்மாத்திரம் போதும்போல அப்பிரகாச மான விஷயத்தை யறியுமிடத்தில் விஷயாக்ஞானத்தைப் போக்க விருத்தியும் அதனை யறியச்சிதாபாசனும்வேண்டும் சொப்பிரகாசமான பிரமத்தை யறியுமிடத்தில் அஞ்ஞானத் தைப்போக்க விருத்திபோதும் சிதாபாசன் தேவையில்லை இருந்தாலும் வெய்யில் விளக்குப்போலக் குன்றிப் பிரமத் தில், லயமாய்ப்போவன் விருத்திவியாப்தியுண்டு சிதாபாச

னுக்குப்பல * வியாப்தியில்லையென்று வேதமுஞ்சொல்லு கிறது இந்த அபரோக்ஷக்ஞானமே யிவரோ நானென்கிற வேதத்திற் கர்த்தமென்றுத்தரம்.

உக) ஸ்ரீசங்கராசாரியர் பலகாலுஞ்சிரவணம்பண்ணச் சொல்லி விதித்தபடியினாற் பிரத்தியக்ஷக்ஞானந்திடமல்ல வென்கிற சங்கைக்கு,

வேதபேதங் காமபேதங்கொண்டு கர்மபேதங்கண்டாற்போல ஞானபேதம்வாராதென்கிறதை ஆறுலிங்கத்தினாலுஞ்சகலவேதத்திற்கும் அர்த்தவிசாரம்பண்ணச்சொன்னார் எல்லாவேதத்திலும் ஒருபடித்தாய்க்கண்ட இந்தஞானத்திற்கு விபரீதபாவனை போகத்தக்கதாக மனனம்பண்ணச் சொன்னாரென் றுத்தரம்.

(௩௰) விபரீதபாவனை ஏதென்கிறசங்கைக்கு,

தகப்பனிடத்திற் சத்துருபுத்தி பண்ணுகிறாற்போலத் தேகமே நான் பிரபஞ்சம் சத்தியமென்கிறதென் றுத்தரம்.

(௩க) இந்தவிபரீதபாவனைக்குக் காரணமேதென்கிற சங்கைக்கு,

வெகுசென்மத்திலே பிடித்துச்செய்த சென்மாந்தரவாசனையே காரணமென் றுத்தரம்.

(௩உ) இந்த விபரீத பாவனை யெதனாற் போமென்கிற சங்கைக்கு,

நானே சத்தியமாயிருக்கிற பிரமம்தேகாதிப்பிரபஞ்சம் மித்தையென்கிற தத்துவபாவனையாற் போமென் றுத்தரம்.

(௩௩) தத்துவபாவனை பண்ணுகிற வடைவேதென்கிற சங்கைக்கு.

---

* வியாப்தி - என்றது - விஷயத்தன்மை.

பிரமத்தைப் பலகாலும் ஏகாந்தத்திலிருந்து சிந்தனை செய்வதும் ஒருமுமுட்சுவரில் அவனுக்கு அதைத்தானே போதிப்பதுஞ் சமானப்பியாசிவரி லொருவருக்கொருவர் அதையே போதிப்பதுமான இதை பிரமாப்பியாசமென்று பெரியோர்சொல்லுவரென் றுத்தரம்.

(௯௪) எந்நேரமும் இதே வேலையாயிருந்தால் நிருவாக மெப்படி நடக்குமென்கிற சங்கைக்கு.

தத்துவவிசாரம் பண்ணுகிறவனுடைய கர்மமெல்லாம் ஈசுரனே நிருவகித்துக்கொள்வானென் றுத்தரம்.

(௯௫) தத்துவபாவனைக்குக் காரணமேதென்கிற சங்கைக்கு.

ஏகாக்கிரசித்தமே காரணமென் றுத்தரம்.

(௯௬) அந்த ஏகாக்கிர மெதனால் வருமென்கிற சங்கைக்கு,

ஈசுரவுபாசனையினால் வருமென் றுத்தரம்.

(௯௭) மந்திர செபம்போலவும் மூர்த்தித் தியானம் போலவும் தத்துவபாவனைபண்ணுகிறதற்கு நியமமுண்டோ வென்கிற சங்கைக்கு,

மந்திரசெபமுதலானவைகட்குத் திருஷ்டபலமல்லாத படியினால் நியமமும்நியமந்தப்பினாற்பிரத்தியபாயமுமுண்டு அசனம்பண்ணுகிறது பசியைப்போக்குகிறாற்போலத் தத்துவபாவனையும் விபரீதபாவனையைப்போக்குகிறது திருஷ்டபலமானபடியினால் நியமந்தேவையில்லையென் றுத்தரம்.

(௯௮) பிரமாப்பியாசம் பலபடப்பண்ணச்சொன்னபோதே பிரயாசமல்லவோவென்கிற சங்கைக்கு,

சஞ்சலமாக விருக்கின்ற மனதிற்கு நியமம்பூண்ட செபமும் வேறொன்றைச் சற்றேநினைத்தாலுங் கெட்டுப்போகி

ன்ற மூர்த்தித்தியானமுமே பிரயாசமல்லாமற்கூத்துப்பார்க்கிறதுபோல வெருவாயெடுத்துக்காட்டு முச்சாகக்கதைக ளோடே கூடியிருக்கிற பிரமாப்பியாசம் பிரயாசமல்ல மனதிற்கு விநோதமென்றே யுத்தரம்.

(கூக) மனது சஞ்சலமென்றதற்குப் பிரமாணமேதென்கிற சங்கைக்கு,

தான்போனதேவழியாய்ச் சஞ்சலமே சுபாவமாயிருக்கிற மனதை நிறுத்துகிறது வாயுவை நிறுத்துகிறதற்குச் சரியென்கிற கீதாவசனமுஞ் சமுத்திரத்தைக் குடித்தாலும் நெருப்பை விழுங்கினாலும் மேருவைப் பிடுங்கினாலும் மனதை நிறுத்தக்கூடாதென்கிற வாசிஷ்டமும் பிரமாணமென்றுத்தரம்.

(சo) இப்படி விக்ஷேபமாயிருக்கிற மனதிற்குச் சின்மாத்திரமே ஆத்மா, மற்றுள்ளதெல்லா மித்தையென்கிறநித்தியாசனங்கூடாதென்கிற சங்கைக்கு,

காவியந் தர்க்கஞ் செட்டு வெள்ளாண்மைகளிலேவிழுந்தமனதிற்குக் கூடாதென் றுத்தரம்.

(சக) இப்படியானால் போசனாதிகளும் விக்ஷேபமல்லவோவென்கிற சங்கைக்கு,

சொற்பவிக்ஷேபமாகிய போசனாதிக ளநுசந்தானத்தைக்கெடாதபடியினால் விக்ஷேபமல்லத் தானேபிரதானமாயிழுத்துக்கொண்டுபோகிற தர்க்கமுதலானவைகள் தத்துவத்தைக் கெடுக்கையினால் இவைகளே கனவிக்ஷேபமாகையினால் இதரவித்தைக் கிடங்கொடுக்கவொண்ணாதென் றுத்தரம்.

(சஉ) இப்படி யெல்லாவித்தையையும் விட்டாற் சீவிக்கப்போகிற தெப்படியென்கிற சங்கைக்கு,

அசனத்தை விடச்சொன்னாற் சீவிக்கப்படாதே யல்லாமல் இதரசாஸ்திரத்தை விடச்சொன்னால் எப்படிச் சீவிக்கிறதென்கிற துராக்கிரத்தை விட்டுவிடென் றுத்தரம்.

(சங) ஞானியாகவிருந்த சனகன் ராச்சியபாரம்பண்ணவில்லையோ வென்கிற சங்கைக்கு,

சனகன் திடஞானத்தினால் ராச்சியபாரம்பண்ணினான் உனக்குந் திடஞானமுண்டானால் பிராரத்தவசத்தினாற்றார்க்கபாடமுதவானவைகளைச் செய்யலாமென் றுத்தரம்.

(சச) இப்படிப் பிராரத்தமென்று தானே அகாசாரத்தைப் பண்ணலாமோவென்கிற சங்கைக்கு,

கர்மத்தையொருவராலு மறிக்கப்படாதென் றுத்தரம்.

(சரு) ஆனால் ஞானிக்கும் மூடனுக்கும் பேதமேதென்கிற சங்கைக்கு,

வழிப்போக்கரிருவருக்குந் தங்குமூர்சரியானாலும் அறிந்தவன் திடமாய்ப்போக அறியாதவன் ஏங்கிக்கொண்டுபோகிறாற்போல ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் பிராரத்தஞ் சரியானாலும் ஞானி தான் அகர்த்தாவென்று திடமாயிருப்பன். அஞ்ஞானி யேங்கிச்சாவன் இதுவே பேதமென் றுத்தரம்.

(சசா) இவரோ நானென்கிற அபரோக்ஷஞானமறியப்பட்டது ஆருக்குப் போகநிமித்தமா யெந்தப்போகத்தைக்குறித்துச் சீரதாபப்படுவனென்கிற வாக்கியத்திற் கர்த்தமேதென்கிற சங்கைக்கு,

சாக்ஷாத்காரம் வந்தவனுக்கு விஷயமும் புசிப்பானுமில்லையென்கிறதென் றுத்தரம்.

(சஎ) பிரார்த்தபோகம் புசிக்கையிலே இந்த இருவகையு மில்லையென்கிற தெப்படி யென்கிற சங்கைக்கு,

இந்திரசாலத்திற் கந்தர்வ நகரத்தைப் பார்க்கிறவன் ஒருபோகத்தையும் இச்சியாமற் சிரித்துப்போட்டுப் போகிறாற்போலச் சாக்ஷாத்காரம் வந்தவனுக்குச் சகத்துப்பொய்யாய்ப்போனபடியினால் விஷயமும் புசிக்கிறவனுமில்லாமல் எண்ணெயற்ற விளக்குப்போல ஆசை சங்கற்பமெல்லாமணைந்துபோமென் றுத்தரம்.

(சஅ) பிராரத்தபோகத்தைப் புசித்தால் ஆனியேதென்கிற சங்கைக்கு,

ஆனியொன்றுமில்லை தோஷதிருஷ்டியினாலே திடப்படப் புசிக்கவுமாட்டானென் றுத்தரம்.

(சகூ) விஷயத்திலே எந்தெந்தத்தோஷ மிருக்கிறதென்கிற சங்கைக்கு,

அர்த்தத்தைத் தேடுகையிலும் ரக்ஷிக்கையிலுந் துக்கமேயொழியச் சுகமில்லை மலமூத்திர நரம்பென்பு தசையினால் நிருமிதமான ஸ்திரீபிண்டத்தில் எது நல்லது பசித்தாலும் விஷத்தைத்தின்னாததுபோல் ஞானியு மிதனை விரும்பான் தோஷவிஷயம் பிராரத்தத்தினாற் புசிக்க மூண்டாலுங் கிலேசத்துடனே புசிப்பானேயல்லாமற் சந்தோஷத்துடனே புசியானென் றுத்தரம்.

(௫௦) புசிக்கையிலே கிலேசமேதென்கிற சங்கைக்கு

இன்ன மிந்தக்கர்மந் தொலைந்ததில்லையோ வென்கிறதே கிலேசமென் றுத்தரம்.

(௫க) உம்முடைய பிரமக்ஞானமு மிப்படிக்கிலேசமாயிற்றோ வென்கிற சங்கைக்கு,

இந்தச் சம்சாரதாபம் விரத்தியேயல்லாமற்கிலேசமல்லவென் றுத்தரம்.

(ருஉ) இந்தவிரத்தியெதனால்வந்ததென்கிற சங்கைக்கு,

சகத்துப்பிராந்தியென்கிற திடக்ஞானத்தினால் வந்தது ஆகையினால் ஞானிகிடைத்ததுகொண்டு திருப்தியடைவன் அஞ்ஞானி யெத்தனைபோகங்கிடைத்தாலுந் திருப்தியடையானென் றுத்தரம்.

(ருங) அஞ்ஞானிக்குப் போகமெல்லாம் புசித்தபிற்பாடாகிலுந் திருப்திவாராதோவென்கிற சங்கைக்கு,

மேன்மேலும் நெய்யைவிட்டதனா லக்கினி யணைந்ததானால் அஞ்ஞானிக்கும் போகத்திலாசையடங்கும் மற்றப்படி வைராக்கியத்தினா லாசையடங்குமென் றுத்தரம்.

(ருச) ஞானியுங் கர்மவசத்தினாற் கிடைக்கிற போகம் புசிக்கிறவழியே யழுந்திப்போகானோவென்கிற சங்கைக்கு,

பிடித்துவிட்ட ராசா வொருகிராமங்கொண்டு சந்தோஷிக்கிறாற்போல ஞானியுங்கிடைத்ததுகொண்டு சந்தோஷிப்பன் அறிந்து திருடுகிற திருடன் விநோதமாகிறாற்போல அந்தப்போகம் மேன்மேலுங் காமசங்கற்பத்தை யுண்டாக்கமாட்டாதென் றுத்தரம்.

(ருரு) இப்படிக்கொத்த விவேகமனதிலே யுறைத்திருந்தாற் பிராரத்தகர்மம் மேலெழுந்த வாசையை யெப்படி யுண்டாக்குமென்கிற சங்கைக்கு,

இச்சையநிச்சை பரவிச்சையென் று பிராரத்த மூன் றுவிதமானபடியினாலே இச்சையும் வரலாமென் றுத்தரம்.

(ருசு) இது ஆகாதென்கிறதிலே யாருக்காகிலும்ஆசை வருமோவென்கிற சங்கைக்கு,

அபத்தியம் பண்ணுகிறவனுக்குந் திருடுகிறவனுக்கும் ராச்ஸ்திரீயை இஷ்டம்பண்ணுகிறவனுக்குந் தனக்காகாதென்றறிந்திருந்தும் ஆசையேன்வந்தது ஆகையினாலிதை ஈசுவரனாலு மறிக்கப்படாது ஞானம்வந்தாலும் அவனவன் பிரகிருதிபோகாதென்கிறகீதாவசனமேபிரமாணமென் றுத்தரம்.

(ருஎ) நீர் ஏழைகளுக்காகப் பரிகரித்துச் சொல்லுகிறீர் சாமர்த்தியமுண்டானா லந்தக்கர்மத்தை மறிக்கலாமென்கிற சங்கைக்கு,

அப்படியாமானால் நளன் ரகுநாதன் தர்மபுத்திரர்முதலானவர்கள் துக்கப்படக்கணக்கில்லை ஈசுரனும் பஞ்சகிருத்தியத்தி லுழலக் கணக்கில்லை ஆகையால் ஈசுர கற்பனையை ஒருவராலுந் தள்ளப்படாதென் றுத்தரம்.

(ருஅ) இச்சாப்பிராரத்த பலமறியப்பட்டது இனி அநிச்சாப்பிராரத்தமாவதேது அதற்குப் பிரமாணமேதென்கிற சங்கைக்கு,

நாம்மனதிலே பண்ணவொண்ணாதென்றிருக்கிற காரியத்தைப் பலவந்தத்தினாலே நம்மைக் கொண்டுபண்ணுவிக்கிறவனார் நாம் வேண்டுமென்கிற காரியத்தை விலக்குவிக்கிறவனொன்றுகேட்ட அர்ச்சுனனுக்கு அவனவன்கர்மந்தானே செய்விக்கிறதென்ற கிருஷ்ண வாக்கியமே பிரமாணமென் றுத்தரம்.

(ருக) இனிப்பரவிச்சாப்பிராரத்த மாவதேதென்கிற சங்கைக்கு,

தனக்கு இச்சையநிச்சை இல்லாதிருந்தாலுஞ் சேர்ந்தபோதைத் தொட்டுவருகிற சுகதுக்கங்களே பரவிச்சாப்பிராரத்தமென் றுத்தரம்.

(சுo) இப்படியானால் எதை யிச்சிக்கப் போகிறானென்கிற வேதவாக்கியம் ஆசையைமறுக்கச் சொல்வானேனென்கிற சங்கைக்கு,

இந்தவேதம் இச்சையைவிலக்கவில்லை மற்றென்னெனில் வறுத்தவிதைபோல வாதிக்கிறதென் றுத்தரம்.

(சுக) வாதிக்கிற தாவதேதென்கிற சங்கைக்கு,

வறுத்தவிதை முளையாவிட்டாலுந் தீனிக்குதவுகிறாற்போல ஞானியினுடைய வாசையும் அகப்பட்ட போகத்தோடேதிரும்புமல்லாமல் மேன்மேலும்வினைகொண்டு காமசங்கற்பங்களைப் பண்ணாததே வாதையென் றுத்தரம்.

(சுஉ) இவனுக் கிப்படி விஷயத்திலே சிரத்தையெதனாலே வரவில்லையென்கிற சங்கைக்கு,

விஷயஞ்சத்தியமென்கிற பிராந்தியில்லாதபடியினால் இதிலேசிரத்தை வரவில்லையென் றுத்தரம்.

(சுரு) விஷயப்பிராந்திக்கு லக்ஷணமேதென்கிற சங்கைக்கு,

நமக்கிருக்கிற போகமெல்லாம் நாளுக்குநாளுத்தரோத்தரமாகவேண்டும் ஒருக்காலுமாறாத ஐஸ்வரியமாயிருக்கவேண்டும் இடையிலே விக்கினங்கள் வராதிருக்கவேண்டுமென்கிற காங்க்ஷையே பிராந்தியென் றுத்தரம்.

(சுச) இஃதெதனாற் போமென்கிற சங்கைக்கு,

வருகின்றவினை வாராதிருக்கப்போகிறதுமில்லை வாராதவினை வரப்போகிறது மில்லையென்கிற போதமே அந்தப் பிராந்தியைத் தள்ளுமென் றுத்தரம்.

(சுரு) ஞானிக்கு மஞ்ஞானிக்கும் பொதுவாயிருக்கிற விஷயம் ஒருத்தருக்குப் பிராந்தியைக் கொடுப்பானேன்

ஒருத்தருக்குப் போகத்தைக் கொடுப்பானே னென்கிற சங்கைக்கு,

தனக்குப்பிராப்தியில்லாததை யடையவேண்டுமென்று சங்கற்பித்த பிராந்தனுக்குத்துக்கத்தைக் கொடுக்கும் இது மாயாமயமல்லவோ உள்ளபடி முடியுமென்கிற ஞானிக்குச் சங்கற்பத்தையே உண்டாக்கமாட்டாதது துக்கத்தை யெப்படிக் கொடுக்குமென் றுத்தரம்.

(கூகூ) இந்தச் சகத்தை மாயாமயமென்று பார்க்கிறதெப்படி இதில் ஆசக்தியெப்படிப்போமென்கிற சங்கைக்கு,

சொப்பனம்போலவும் இந்திரசாலம்போலவும் இன்னபடி வரும் இன்னபடிபோமென்று நிர்ணயப்படாமற் றோற்றியழிந்துபோகையினுல் மாயாமயமென்று பார்க்க அப்போது சொப்பனத்திற்குச் சமானம் சாக்கிரமென்கிற நிலைமையுறைத்தால் இதில் ஆசக்திபோமென் றுத்தரம்.

(கூஎ) இந்தத்தத்துவக்ஞானத்திற்கு ஆக்கிரகமெதிலே பிராரத்தகர்மத்திற்காக்கிரகமெதிலே யென்கிறசங்கைக்கு,

ஞானத்திற் காக்கிரகம் இந்திரசாலம்போல சகத்தின் மித்தையாத்தன்மையை அனுசந்தானம்பண்ணுவதிலே பிராரத்தத்திற் காக்கிரகஞ் சீவனுக்குச் சுகதுக்கங் கொடுக்கிறத்திலேயென் றுத்தரம்.

(கூஅ) பிராரத்தகர்மம் ஞானத்தைக் கெடாதோவென்கிற சங்கைக்கு,

சகத்தைச் சத்தியமாகத் தோற்றுவித்துப் பிராரத்தகர்மம் போகங்கொடுத்தால் அப்போது ஞானத்திற்கு விரோதமென்றறிக சகத்துமித்தையென்கிற விவேகத்தைக் கெடாமற்சொப்பனமிந்திரசாலங்கள்போலப்போக தரிசனங்கொ

டுக்கிறபடியினுற் பிராரத்தம் ஞானத்தைக்கெடாதென்றுத்தரம்.

(சுக) ஞானந்தான் பிராரத்தத்தைக் கெடாததோவென்கிற சங்கைக்கு,

ஞானம்வந்தவுடனே சகத்துத் துடைபட்டுப்போனுற் பிராரத்தத்தைக் கெடுக்குமென்றறிக அப்படிக்கெடாமல் மாயாமயமென்று தோற்றுகையினுல் ஞானத்திற்கும் பிராரத்தத்திற்கும் விரோதமில்லையென் றுத்தரம்.

(எ0) யாதோரவஸ்தையிலே எல்லாம் ஆத்மாவாய்ப் போம்போது எவன் எந்த இந்திரியத்தினுல் எந்த விஷயத்தைப்புசிக்கப்போகிருனென்கிற வேதம் ஞானம் வந்தவுடனே சகலமும் துடைபட்டுப்போமென்றல்லவோ சொல்லுகிறது ஆகையினுல் ஞானிக்குப் பிராரத்தபோக மெப்படிக் கூடுமென்கிற சங்கைக்கு,

இந்தவேதஞ் சுழுத்தியையும் விதேககைவல்லியத்தையுஞ்சொல்லுகிறதேயல்லாமல் சீவன்முத்தியைச்சொல்லவில்லையென்று வியாசர் சூத்திரஞ்சொல்லுகிறதென் றுத்தரம்.

(எக) நான்சொன்னதே யர்த்தம் மற்றப்படிக் கூடாதென்கிற சங்கைக்கு,

யாக்கியவல்கியர் முதலான பூர்வாசாரிகளுக்குத் துவித திருஷ்டி யிருந்தபடியினுலே ஞானமில்லையாக வேண்டுமென் றுத்தரம்.

(எஉ) அவர்களுக்குத் துவிதிருஷ்டி யில்லையென்கிற சங்கைக்கு,

அப்போது சிஷ்யனைக்குறித்தவர்கள் ஞானஞ்சொல்லாம லிருக்கவேண்டும் அப்படியல்லாமல் அவர்களுபதேசம்பண்ணின சாஸ்திரங்களிருக்கிறதென் றுத்தரம்.

(௭௩) அவர்களுக்குப் பிரபஞ்சந்தோற்றாத நிருவிகற்பசமாதியிலே ஞானமுண்டென்கிற சங்கைக்கு,

இந்தப் பக்ஷத்திற்குச் சுழுத்தியு ஞானமாகவேண்டுமென் றுத்தரம்.

(௭௪) சுழுத்தியிலே நான் பிரமமென்கிற ஞானமில்லையென்கிற சங்கைக்கு,

ஆகையினாலே நான்பிரமமென்கிற சீவன் முத்தியே ஞானம் சகத்துமறைகிறதல்லவென் றுத்தரம்.

(௭௫) இந்தவிரண்டுங்கூடியே ஞானமென்கிற சங்கைக்கு,

அவிதந்தோற்றாததே ஞானமென்கிற வுன்னுடையபக்ஷங்கடங்களுக்குமுண்டு கொசுகுகூப்பிடுகிறதுள்படக் கேட்கையினால் நிருவிகற்பஞானமுங் கடக்ஞானத்திற் கீடல்லவென் றுத்தரம்.

(௭௬) ஆகையினால் ஆத்மவிசாரமே ஞானமல்லாமற்றொய்த மறைகிறதல்லாதுபோல்வே யிருக்கிறதென்கிற சங்கைக்கு,

இந்தச்சித்தாந்தந் தெரிந்தபோதே நீயே கிருதகிருத்தியனென் றுத்தரம்.

(௭௭) பொல்லாதமனதை நிறுத்தத்தேவையில்லையோவென்கிற சங்கைக்கு,

நாட்டமானவிஷயத்தை மாயாமயமென்று பார்க்கிறதுதானே மனதை நிறுத்துகிறதென் றுத்தரம்.

(௭௮) எந்தப்போகத்தை யிச்சிக்கப்போகிறானென்கிற சொல்லுக்கு அர்த்தந்தெரிந்தது ஆருக்குப்போகநிமித்தமென்கிற சொல் எதைச்சொல்லுகிறதென்கிற சங்கைக்கு,

புசிக்கிறவனே யில்லையென்று சொல்லுகிறதென் றுத்தரம்.

(எக) புசிக்கிறவ னெதனாலில்லையென்கிற சங்கைக்கு,

கூடஸ்தர் நிருவிகாரியானபடியினாலே சுகதுக்கபோக விவகார நமக்கில்லை சிதாபாச னாரோபமானபடியினா லவனு ஞ்சுகதுக்கம் புசிக்கிறவனல்ல அப்படியிருக்க அதிஷ்டான த்தைவிட்டு ஆரோபமிராதபடியினால் இருவரையு மொருவ னாகக்கண்டு தாதாத்மியத்தினால் இவனேபுசிக்கிறவனென்று லோகத்தார் சொல்லுகிறதேயல்லாமல் விவேகம்பண்ணினா ற் புசிக்கிறவனே யில்லையென் றுத்தரம்.

(அ0) எப்படியானாலும் ஆத்மாத்தானே புசிக்கிறவனெ ன்கிற சங்கைக்கு,

ஆத்மா வாரென்று விசாரிக்குமிடத்திற் சகலவேதங்க ளும் இந்த லௌகீகாத்மாவைத் தொடங்கி ஆநந்தமய கோ சபரியந்தங் கழித்துப்போட்டுக் கூடஸ்தரை யல்லவோ ஆத் மாவென்று சொல்லுகிறதென் றுத்தரம்.

(அக) சிதாபாசனில்லாதவனானால்அஞ்ஞானதிசையிலே தான் எப்படி புசிக்கிறவனானா னென்கிறசங்கைக்கு,

கூடஸ்தருடைய சத்தையைத் தன்னிடத்திலு மிறக்கிக் கொண்டு நமக்குப்போகமுண்மையென்று கலங்கி விஷயங் களைக் காங்க்ஷித்தானென் றுத்தரம்.

(அஉ) இப்படியானால் இவ்விடத்திலே பண்ணவேண் டிய வநுசந்தான மேதென்கிற சங்கைக்கு,

லௌகீகத்திலே புசிக்கிறவன் பிரியமாயிருக்கிற விஷ யங்களைப்பார்க்கிலுந் தன்னைப் பிரியமாய்க்காண்கிறாற்போ ல விவேகியுங் கூடஸ்தருக் கன்னியமெல்லா மப்பிரியமென் றுதள்ளிக் கூடஸ்தரையே பிரியமாய்க் காணவேண்டுமென் றுத்தரம்,

(அ௩) பிரியமாய்க்காண்கிற தெப்படி யென்கிற சங்கைக்கு,

பாமரனாக விருக்கிறவன் மாலை சந்தனமுதலான விஷயத்திலேபண்ணுகிற இச்சையையுஞ் சாவதானமாகவே வாதம்பண்ணவேண்டு மென்கிறவன் காவிய நாடகங்களிலே பண்ணுகிற நிரந்தர விசாரத்தையும் கர்மியுபாசகர் செபம் யாக முபாசனாதிகளிலே பண்ணுகிற விசுவாசத்தையும் யோகியானவன் மனதை நிறுத்தப்படுகிற வருத்தத்தையுங் கூடஸ்தரிடத்திலே பண்ணவேண்டுமென் றுத்தரம்,

(அச) இப்படிப்பண்ணினால் வரப்போகிற பலனேதென்கிற சங்கைக்கு,

போகம்வித்தை புண்ணியலோகம் அணிமாதி அஷ்டமாசித்தி இந்நாலுபேருக்கும் வருகிறாற்போலக் கூடஸ்தராயிருக்கிறதன்னை மூன்றவஸ்தையுங் கடந்தவராய் ஏகராய்ச் சத்சிதானந்தராய்ச் சதாசிவமாய்க் கண்டவனுக்குச் சொப்பனம்போலப் புண்ணியபாவ கர்மத்தொடக்கற்று முத்தனாவானென் றுத்தரம்.

(அரு) இப்படிக் கண்டவனுக்குப் புசிக்கிறவனொன்று வகுப்பற்றதென்கிற சங்கைக்கு,

ஞானியாயிருக்கிற சிதாபாசனுக்கென் றுத்தரம்.

(அசா) இவன் சாக்ஷியைவிட் டிராதபடியினால் இவனைப் பற்றிப் போகங்கள் சாக்ஷியிடத்திலும் ஆரோபிக்கப்படாதோவென்கிற சங்கைக்கு,

சிதாபாசன் ஓரவஸ்தையிலே கண்டதோ ரவஸ்தையிலே காணாத மாயாமயத்திற் குட்பட்டவனான படியினாலேதானில்லாமற் போகிறவனைக்கண்டு ஏங்கிச் சாகக்கிடக்கிறவன் பெண்கொள்ள வாஞ்சியாததுபோலத் தனக்குட்பட்ட போ

கம் வேண்டான் முன்போலத்தானே புசிக்கிறவனென்று சொல்லுதற்கு மூக்கறையன்போலே குன்றிப் பிராரத்த போகம் புசிக்கிறபடியினு லிதையெப்படிச் சாக்ஷியிடத்தி லாரோபிக்கப்படும் ஆகையினால் வேதமும் புசிக்கிறவனில் லையென்று சொல்லுகிறதென் றுத்தரம்.

(அள) சரீரா நுதாபமில்லையென்கிற வேதத்திற் கர்த்த மெப்படியென்கிற சங்கைக்கு,

ஞானிக்கு மூன்றுசரீரத்தி லத்தியாசம் போனபடியினு லே மூன்றுசரீரத்துச் சுரங்களு மிவனைத் தாபப்படுத்தாதெ ன் றுத்தரம்.

(அஅ) மூன்றுசரீரமேது அதுகளில் எந்தெந்தச் சுரமி ருக்கிறது அஃதிவனை யெப்படித் தாபப்படுத்தாதென்கிற சங்கைக்கு,

ஸ்தூலசூக்ஷ்மகாரணமென்று சரீரமூன்று யிருக்கும் இதிலே வாதபித்த சிலேற்பனமுதலான வியாதியும் இடி சூடு முறிச்சல் முதலானபீடையும் ஸ்தூலசரீரத்துச் சுரம் காமக்குரோத லோபமோக மதம் லச்சை பயமுதலான வையுஞ் சமை தமை சிரத்தை பத்தி முதலானவையுஞ் சூ க்ஷ்மசரீரத்துச்சுரம் பலபடக்காரிய சரீரத்தை யுண்டாக்கு கிறதே காரணசரீரத்துச்சுரம் நூலைவிட்டுப் புடவையில்லா ததுபோலவும் மயிரைவிட்டுக் கம்பளியில்லாததுபோலவும் மண்ணைவிட்டுக் கடமில்லாததுபோலவும் அதற்குச்சொன் ன சுரங்களைவிட்டுச் சரீரங்களில்லை இம்மூன்று சரீரங்களுக் குஞ் சொன்ன சுரமே சுபாவசித்தம்போலச் சிதாபாசனுக் குப் பிரகாசமே சுபாவமல்லாமல் அவனுக்கொரு சுரமுஞ் சுபாவமல்ல இப்படிச் சிதாபாசனுக்கு முதலாயில்லாத சுர ஞ் சாக்ஷிக்கு வரப்பிரசித்தியில்லை ஆகையினால் வேதமும்

ஞானிக்குச் சரீராநு தாபமில்லையென்று சொல்லுகிறதென்றுத்தரம்.

(அ௯) இப்படியில்லாதசுர முன்னெப்படித் தபிப்பித்ததென்கிற சங்கைக்கு,

அஞ்ஞானத்தினுற் புத்திரதாராதிகள் தபிக்கிறதைத் தான் தபிக்கிறேமென்கிற மூர்க்கன்போலச் சரீரத்திரயத்தையுஞ் சாக்ஷியையுங்கூட்டித் தன்னுடைய ரூபமாயெண்ணிக்கொண்டு சரீரந்தபிக்கிறதைத் தான் தபிக்கிறதாகப் பிரமிப்பனென்றுத்தரம்.

(௯௦) ஞானம் வந்தபின்பாகிலுந் தபியாம லிருக்கவேண்டுமேயல்லாமற் றிரும்பத் தபிப்பானேனென்கிற சங்கைக்கு,

விவேகத்தினுற் பிராந்தியைத்தள்ளித் தன்னைச்சாக்ஷியாகவறிந்தபின் முந்தினதாபம்போய்விட்டது இத்தப்பழுதைக்காக வேதுக்கோடி இடுப்பு முறித்துக்கொண்டோமென்கிறதுபோல இல்லாதசம்சாரத்தை யென்மேற்போட்டுக்கொண்டோமென்கிற வெறுப்பைத் தாபமென்கிறுயென்றுத்தரம்.

(௯௧) சாக்ஷிநாமென்றறிந்தாற்போதாதோ பலபட அநுசந்தானம் பண்ணுவானேன் பலபடத்தேக நானல்லவென்று பாவிப்பானேனென்கிற சங்கைக்கு,

இல்லாத சம்சாரத்தை யும்முடையபேரிலே யாரோபித்தேன் அதனைப்பொறுத்துக்கொள்ளுமென்று சாக்ஷியைச் சரணமாயடைகிறதாகவும் பண்ணின பாவம்போகப் பிராயச்சித்தம் பண்ணிக்கொள்ளுகிறுற்போலச் சஞ்சிதகர்மம்விட்டுப்போகத்தக்கதாகவும் அநுசந்தானம் பண்ணுகிறது பறங்கிகையிலே யகப்பட்ட பிராமணன் வெகு பிராயச்

சித்தத்தினால் பிராமணருடனேகூடினபின் பறங்கியைக்கண்டாலோடுகிறாற்போலத்தேகநானல்லவென் றனுசந்தானம் பண்ணுகிறதென் றுத்தரம்.

(கஉ) ஞானியாயிருக்கிறவன் முன்போலப் பிரபஞ்ச விவகாரம்பண்ணாமல் நாணுவானேனென்கிற சங்கைக்கு,

குய்யத்திலே குஷ்டம்பிடித்தவேசி அறிந்தவர் முன்னாடக நடிக்க நாணுகின்றாற்போலச் சிதாபாசனுந்தன்னை மாயாமயமென்றறிந்தபின் றன்னைக்கர்த்தாவென்று சொல்ல நாணுவானென் றுத்தரம்.

(கங)ஞானம்வந்தபின் றணமு நடுக்கமும் வரலாமோ வென்கிற சங்கைக்கு,

வாலிபனாகவிருக்கிறவன் ராச்சியத்திற்காக ராஜாவை யாசிரயம்பண்ணுகின்றாற் போலப் பிரமத்தை யறிந்தவன் பிரமமேயாவனென்கிற வேதங்கேட்டுப்பிரமத்தைக் கெம்பீரமாக வநுசந்தானம் பண்ணுகின்றதேயால்லாமற் பீதியில்லையென் றுத்தரம்.

(கச) பிரமக்ஞானம் சிதாபாசனைக் கொல்லவந்த படியினால் எவனாகிலுந் தான்சாகமருந்து குடிப்பானோவென்கிற சங்கைக்கு,

தேவனாகலாமென்கிற சந்தோஷத்தினாற் கங்காப்பிரவேசம் பண்ணுகிறாற்போலப்பிரமமாகலாமென்கிறசந்தோஷத்தினால் ஞானமப்பியாசிப்பனென் றுத்தரம்.

(கரு) கங்காப்பிரவேச மாரம்பித்தவுடனே தேவனாகிறாற்போல ஞானிகளுடனே பிரமமாகவில்லையே யென்கிற சங்கைக்கு,

ஆரம்பித்த கர்மமுடிந்து சரீரநசிக்கும் பரியந்தம் மநுடனென்கிறபேர் நிற்கிறுற்போலப்பிராரத்ததேகம்விழும்பரியந்தமுஞ் சிதாபாசனென்கிறபேர் போகாதென்றுத்தரம்.

(௧௬) பழுதையென்றறிந்தவுடனே பாம்பென்கிறது போகவில்லையோவென்கிற சங்கைக்கு,

பழுதையென்றறிந்தபின் சர்ப்பபீதிகிரமத்திற் றணிகிறுற்போலவும் பத்தாமவனுக்கிடித்துக்கொண்ட புண்வேதனைகிரமத்திற்றணிகிறுற்போலவும் பிராரத்தகர்மபோகமும் புசித்தே தொலையவேண்டுமென் றுத்தரம்.

(௧௭) ஞானம்வந்தும் பிராரத்ததுக்க மிருந்தாற்றுக்க நிவிருத்தியென்கிற ஆறுமவஸ்தை யெப்படிக் கூடுமென்கிற சங்கைக்கு,

பத்தாமவனைச் சாகாமற்கண்ட சந்தோஷம் புண்வேதனையைத் தெரியவொட்டாததுபோலத் தானேபிரமமென்றுமுத்தனனசந்தோஷம் பிராரத்ததுக்கத்தைத்தெரியவொட்டாது ஆகையால் ஆறுமவஸ்தை கூடுமென் றுத்தரம்.

(௧௮) சிதாபாசனுடைய ஆறுமவஸ்தையுந் தெரிந்தது இனித் தடையற்ற வானந்தத்தை விரளமாய்ச் சொல்லுமென்கிற சங்கைக்கு,

இகலோக பரலோகத்தைக் குறித்துப் பண்ணவேண்டிய கர்மமெல்லாம் பண்ணி முடிந்தபடியினுல் மோக்ஷமும் பிரமமும் நாமென்றறியப்பட்டபடியினுல் மனதிலே ஒரு குறையுமில்லையென் றறிந்ததுகொண்டு தடையற்ற வாநந்தமுண்டென் றுத்தரம்.

(௧௯) காண்டத்திரயத்திலுஞ் சொன்ன அநுஷ்டானத்தில் ஒன்றும்பண்ணுமலிருக்கையினும் எல்லாம் பண்ணிமுடிந்ததென்கிறதெப்படியென்கிற சங்கைக்கு,

எல்லாந் தீர்ந்தமுதியாக வகுப்பற்ற தென்கிறதை ஞானியினுடைய வநுசந்தானத்தினு லறியலாமென் றுத்தரம்.

(௧௦௦) பண்ணவேண்டிய தறியவேண்டிய தெல்லாந் தேவையற்றுப்போன வநுசந்தானத்தை யெனக்குத் தெரியச்சொல்லுமென்கிற சங்கைக்கு,

நான் முக்கியென்றிருக்கிற அஞ்ஞானிக்குப் பூமிதனம் புத்திரமித்திர களத்திரம் வேண்டுமென்று இகலோக சம்சாரத்திலே யலையவேண்டும் பரமாநந்த பூரணமாயிருக்கிற நமக்கந்த மாயாமயத்தைக்குறிக்கத் தேவையில்லை. பரலோகத்தையடைய வேண்டியவனுக்கு அதற்கேற்ற கர்மாநுஷ்டானம் பண்ணவேண்டும் சர்வலோகமு மாயாமயமாய்ப் பார்க்கின்ற நமக்கு ஒருகர்மமுந் தேவையில்லை. பிரமலோகத்தை யடையவேண்டியவனுக்கு வேதசாஸ்திரங் கற்கவேண்டும் நிரதிகாரியா யிருக்கிற நமக்குத் தேவையில்லை. தத்துவத்தை யறியவேண்டியவனுக்கு வேதாந்தசிரவணம் பண்ணவேண்டும் அறிந்தவனுக்குத் தேவையில்லை. சந்தேகமுள்ளவனுக்கு மனனம் பண்ணவேண்டும் தேகநாமென்றொருக்காலுமெண்ணேம் சந்தேகமற்ற பிரமமாயிருக்கிற நமக்குத் தேவையில்லை. விபரீதபாவனையுள்ளவனுக்கு நிதித்தியாசனம் பண்ணவேண்டும் தேகாதிவிலக்ஷணனான நமக்குத்தேவையில்லை. விக்ஷேபமுள்ளவனுக்குச் சமாதியிருக்கவேண்டும் சின்மாத்திரமாயிருக்கிற நமக்குத்தேவையில்லை. விக்ஷேபமுஞ் சமாதியும் அந்தக்கரணத்திற்கே யாகையால் பண்ணவேண்டியதெல்லாம் பண்ணி முடிந்ததென் றுத்தரம்.

(௧௦௧) விவகார மிருக்கிறபோதே உமக்குவிபரீத மெய்ப்படியில்லை நித்திரைபிக்ஷை மூழுக்கு சௌசம் இந்நான்கும் நீர்பண்ணக்கண்டோமென்கிற சங்கைக்கு,

விவகாரங் குலாலசக்கரம்போல வாசனையினல் நடக்கிறதேயல்லாமல் நமக்கு விபரீதபாவனையில்லை பிறத்தியானெருப்பென்றது கொண்டு குன்றிமணிச்செடி வேகாதது போல நீநம்மைக் கர்த்தாவென்றதுகொண்டு நாம்நித்திரை முதலானவையைப்பண்ணினவனுகோமென் றுத்தரம்.

(௧௦௨) இப்படி வாசனையினல் வருகிற விவகாரமும் போகவேண்டாமோவென்கிற சங்கைக்கு,

பிராரத்த கர்மந்தொலைந்தா லொழியப்போகா தென்றுத்தரம்.

(௧௦௩) ஆனல் உம்முடைய விவகாரத்திற்கு விதியே தென்கிற சங்கைக்கு,

லௌகீகமாகிலும் வைதீகமாகிலும் உத்தண்டமாகிலும் பிராரத்தமுள்ள்படி நடக்கிறதே விதியென் றுத்தரம்.

(௧௦௪) இப்படியானல் உம்மிடத்திற் சகலருக்கு மப்பிரமாண புத்திவரும் உம்மைப்பெரியவரென்று ஞானங்கேட்பாருமில்லை உம்முடைய ஞான முமக்கே பிரயோசனம் பரனையீடேற்றமாட்டாதென்கிற சங்கைக்கு,

ஆனல் நான் கிருதகிருத்தியனுனலும் லோகானுக்கிரகார்த்தமாய்த் தேவார்ச்சனை சௌசமுதலானவைகளைக்காயம்பண்ணட்டும் பிரணவசெபம் வேதாந்தபாட முதலானவைகளை வாக்குப்பண்ணட்டும் மூர்த்தித்தியானம் பிரமத்தியானத்தை மனதுபண்ணட்டும் இவைகளை நாம்பண்ணினவனுமல்ல பண்ணச்சொன்னவனுமல்ல இப்படி நாமிருந்தால் கர்மிகளுக்கும் நமக்குஞ் சண்டையில்லையே நம்முடைய ஞானமும் பலருக்கு முபகாரமாமென் றுத்தரம்.

(௧௦௫) கர்மத்திற்கு நிர்ப்பந்தமெதினலே ஞானத்திற்கு நிர்ப்பந்தமெதிலே யென்கிற சங்கைக்கு,

ஞானியினாற் பொய்யென்று தள்ளப்பட்ட திரிவிதகரணத்தில் கர்மத்திற்கு நிர்ப்பந்தமல்லாமற் சாக்ஷியினிடத்திலே நிர்ப்பந்தமில்லை அந்தத்திரிவிதகரணத்தினாலே கர்மிகர்மத்தை முடிக்கட்டும் நமக்கு ஆனியேது ஞானத்திற்கு நாம் அசங்கனென்கிறதிலே நிர்ப்பந்தமல்லாமற் றிரிவிதகரணத்தினிடத்திலே நிர்ப்பந்தமில்லை திரிவிதகரணத்திற்குங் கர்மத்தைவிலக்கத் தேவையில்லை ஞானிதன்னைப் பிரமமென்றறிந்தது கொண்டு கர்மிக்கானியேதென் றுத்தரம்.

(கOசு) இப்படி யெல்லாரு மறியாமல் ஆத்மாவைத்திரிவித கரணத்தோடே கூடக் கர்த்தாவென்கிற கர்மிகளும் ஞானம்வந்தவுடனே திரிவிதகரணத்திற்கும் ஒருகர்மமும் வேண்டாமென்றிருக்கிற ஞானிகளும் ஒருவருக் கொருவர் சண்டைக்கு நிற்பானேனென்கிற சங்கைக்கு,

அவர்களஞ்ஞானத்தினாலே செவிடர் கதைகேட்டாற்போலச் சண்டைக்கு நிற்கிறார்களென் றுத்தரம்.

(கOஎ) ஞானம்வந்தவனுக்குப் பரனைக்குறித்தாகிலுங் கர்மப்பிரவிருத்தியுசிதமல்ல நிவிருத்தியாகச் சன்மார்க்கத்திலேயிருக்க வேண்டுமென்கிற சங்கைக்கு,

ஞானிக்குப் பிரவிருத்தியினாற் பிரயோசன மில்லாவிட்டால்நிவிருத்தியினாலும்பிரயோசனமில்லையென் றுத்தரம்.

(கOஅ) நிவிருத்தி ஞானத்திற்குச் சாதனமல்லவோவென்கிற சங்கைக்கு,

அறிந்தபின் சாதனமேதுக்கென் றுத்தரம்.

(கOகூ) தோற்றுகிற சகத்தினா லின்னம் அஞ்ஞானப்பிராந்திவந்தாலுஞ் சாதனத்தையநுஷ்டித்தாற்றாழ்வில்லையேயென்கிற சங்கைக்கு,

உயிரோடிருக்கிறஎலியே பூனையைக்கொல்லாதென்றால், செத்துப்போன எலி பூனையைக் கொல்லப்போகிற தென்று ற்போலவும் பாசுபதத்தினால் கொல்லப்படாதவனை நாணற் கழியினாலே கொல்லப்படுமென்றாற் போலவும்அநாதியிலே அஞ்ஞானதற்காரியங்க ளெல்லாங் கூடிக்கொல்லப்படாத போதமேதானாகிய திடஞ்ஞானத்தினாலேகொல்லப்பட்டிரு க்கிற அஞ்ஞான தற்காரியங்கள் திரும்பவும் பந்தப்படுத்து மென்கிறது உன்னுடைய புத்தித் தாழ்வேயொழிய வேறல் லவென் றுத்தரம்.

(௧௧௦) அஞ்ஞானதற்காரியந்துடைபட்டுப் போனாலும் சகத்துத் தோற்றுகிறதைக்கண்டு சொன்னே னென்கிறசங் கைக்கு,

தோற்றினாலென்ன இத்தனையு நாமல்லவோ கொன் றோமென்று படுகளம்பார்க்கிற போதராசாவுக்கதனாற் திரு ப்தியே யொழியப் பீதியில்லை இப்படிக்கொத்த போதசூர னுக்குத் தேகாதிகளிடமாய் வருகிற பிரவிருத்தியினாற்றான் நிவிருத்தியினாற்றான் பிரயோசனமேதென் றுத்தரம்.

(௧௧௧) பிரவிருத்தியாகாது நிவிருத்தியாமென்கிற தா ருக்கென்கிற சங்கைக்கு,

சுவர்க்க மோக்ஷத்தைக்குறித் தெத்தனம் பண்ணுகிற அஞ்ஞானிக்கென் றுத்தரம்.

(௧௧௨) அப்படிக்கொத்த அஞ்ஞானிகளோடு ஞானி கூ டியிருக்கும்போது செய்காரியமேதென்கிற சங்கைக்கு,

குழந்தைகள் தகப்பனையடித்தாலும் வைதாலும் மன திலே கிலேசமில்லாமற் சீராடுகிறாற்போல அஞ்ஞானிகள் தூஷித்தாலும் பூஜித்தாலுந் திரும்பத் தானப்படிச்செய்யா மல் அவர்களுக்குச்சம்மதமாகத் திரிவித கரணத்தினாலும்

கர்மத்தைப் பண்ணிக்கொண்டு அவர்களுக்கு ஞானமேற்று விக்கிறதே செய்காரியமென் றுத்தரம்.

(ககங) ஞானிக்கு ஞானுப்பியாசம் பண்ணுகிறபேர்களுடனே கூடியிருக்கும்போது செய்காரியமேதென்கிற சங்கைக்கு,

ஞானங்களைப் போதித்துக் கர்மாதிகளைத் தூஷித்துக் கர்மாதிகளைத்துறந்து காட்டவேண்டுமென்றுத்தரம்.

(ககச) ஞானி தனித்திருக்கும்போது செய்காரிய மேதென்கிற சங்கைக்கு,

தன்னுடைய கிருதகிருத்தி யாநந்தத்தைக்கண்டு களித்து மகிழ்ந்து பிரமமே நாமென்றறிய வென்ன பாக்கியம் பண்ணினேமோ நம்முடைய அஞ்ஞானம் எந்தவழி போயிற்றோ நாம் பண்ணின அதிஷ்ட வெத்தனத்தினாலே நமக்கொரு சம்சாரமுமில்லாமற் போயிற்றே நமக்குப் பிரமானந்த நிலை வெட்டவெளியாகத் தோற்றக்கிடைத்ததே உலகத்திலே யெல்லாரையும்பிடித்த கர்த்தவ்வியங்களிலே நமக்கொன்றுந் தேவையற்றுப்போன பாக்கியமேதோ எல்லாராலு மடையவேண்டுமென்கிற பிரமநாமானேமே நமக்கித்தனை பாக்கியத்தையுங் கொண்டுவந்துவிட்ட சாஸ்திரத்தைப் புகழ்வோமோ இந்தசாஸ்திரத்தை யநுபவத்திற்கு வரப்பயிற்றுவித்த குருவைப் புகழ்வோமோ என்ன புண்ணியத்தினுலிப்படிப் பலித்ததோ நம்முடைய புண்ணியத்திற்கும் நம்முடைய ஞானத்திற்கும் நம்முடைய ஆநந்தத்திற்கும் ஒப்புக்காணேமென்று எந்நேரமும் தன் சுபாவாநந்தத்திலே யநுபவமா யநுபவிக்கிறதே செய்காரியமென் றுத்தரம்.

இந்தத் திருப்திதீபிகையை அநுசந்தானம் பண்ணிவருகிறவன் பிரமாநந்தத்திலழுந்தி நித்தியதிருப்தனுயிருப்பன்.

திருப்திதீபம்-முற்றிற்று.

ஆகச்சங்கை-உசഠ.

## மூன்றாவது - கூடஸ்ததீபம்.

வித்தியாரண்ணியஸ்வாமிகள் வேதாந்தார்த்தம் விரிவிலே விசாரிக்கமாட்டாதபேருக்குக் கூடஸ்த தீபிகையினாலே துவம்பதார்த்த விவேகம்பண்ணும்படி.

(க) துவம்பதத்திற்கு வாச்சியார்த்தமார் லக்ஷியார்த்தமார் இந்த விருவரையும் பொருந்தியிருக்கிறதற்குத் திருஷ்டாந்தமேதென்கிற சங்கைக்கு,

துவம்பதத்திற்கு வாச்சியார்த்தம் சிதாபாசன் லக்ஷியார்த்தங் கூடஸ்தர் திருஷ்டாந்தமேதென்றால் கண்ணாடியிற் பிரதிவிம்பவெய்யிலும், சுபாவவெய்யிலும் ஒருமைப்பாடாய் ஒருசுவரை விளக்குவிக்கிறாற்போலக் கூடஸ்தருஞ் சிதாபாசனும் ஒருமைப்பாடாய் ஒருதேகத்தை யறிகிறார்களென்றுத்தரம்.

(உ) இவர்களிருவரும் எதனால் ஒருமைப்பாடாய்த் தோற்றுகிறார்கள் இவர்களைப் பகுத்தறியும் வழி யெப்படியென்கிற சங்கைக்கு,

அவிவேகத்தினா லொருவனாகத் தோற்றுகின்றது. ஓரவஸ்தையில், ஏகதேசமாகத்தோற்றி மறைகிற சிதாபாசனையும் நித்தியப்பிரகாசமா யிருக்கிற கூடஸ்தனையும் ஏகதேசத்திலே உபாதியினாலுலைகின்ற வெய்யிலையும் அகண்டவெய்யிலையும்போலக் குறிப்பினா லறிகவென்றுத்தரம்.

(ங) சரீரத்திற்குப்புறம்பே விஷயக்ஞானம்வரும்போது கூடஸதனையுஞ்சிதாபாசனையும் பகுத்தறியும்வழி யெப்படியென்கிற சங்கைக்கு,

* கடக்ஞானம்வருகிறது சிதாபாசனாகவிருக்கிற தனைக்கு கடோவிருத்திக்ஞானம்வருகிறது கூடஸ்தராயிருக்கிற

---

* கடோவிருத்திக்ஞானமென்றது கடமறியப்பட்டதெனுந் தன்மை.

தனக்கு கடமென்றறிந்தவுடனே அணைந்தவன் சிதாபாசன் அதனைக்கண்டவன் கூடஸ்தனென் றுத்தரம்.

(௪) கடக்ஞானம் வருகிறதற்கு முன்னும்பின்னும்கடத்திலேகூடஸ்தரிருந்ததற் கடையாளமேதென்கிற சங்கைக்கு,

கடக்ஞானம்வருகிறதற்குமுன் அறியப்படாததாகவும் பின் அறியப்பட்டதாகவுங் காண்கிற தன்னநுபவமே அடையாளமென் றுத்தரம்.

(௫) கடம் ஒருகாலத்தி லறியப்பட்டதாகவும் ஒருகாலத்தி லறியப்படாததாகவுஞ் சாக்ஷியிடத்தி லிருவகையுந்தோற்றுவானேனென்கிற சங்கைக்கு,

எக்காலத்தினும் எங்குமிருக்கின்றசுபாவசைதன்னியத்தினிடத்திலே கற்பிக்கப்பட்டகடம் அஞ்ஞானத்துடனே கூடியிருந்தபோதறியப்படாததாகவும் ஞானத்துடனே கூடியிருந்தபோதறியப்பட்டதாகவுந் தோற்றிற்றென் றுத்தரம்.

(௬) ஞானமாவதேது அஞ்ஞானமாவ தேதென்கிறசங்கைக்கு,

லோகாந்த குந்தம்போலச் சிதாபாசாந்தபுத்திவிருத்தியேஞானம் * தோற்றரவற்றதே யஞ்ஞானமென் றுத்தரம்.

(௭) விருத்திக்குமுன் சிதாபாச னில்லாதபடியினால் அறியப்படாத கடம் சாக்ஷிதானே அறியவேண்டும் விருத்திக்குப் பின்னறியப்பட்டது. கடமென்கிறது சிதாபாசனாலறியலாம். சாக்ஷியறிவொன்கிறது வேண்டாமென்கிற சங்கைக்கு,

---

* தோற்றரவற்றதென்றது சாட்டியமென்று மூலபாடம் - சாட்டியம் - என்றது - தனக்கெனத்தோற்றமில்லாமை.

கடமென்றறிந்தவுடனே சிதாபாசன் விருத்தியிலே நஷ்டமாய்ப்போனபடியினாலும் அந்தவவசரத்திற்கூடஸ்தனைத் தவிர வேறு சைதன்னிய மில்லாதபடியினாலும் விருத்திக்கு முன்னறியப்படாததையறிந்திருந்தகூடஸ்தர்தானே விருத்திக்குப்பின்னறியப்பட்டதென்கிறதையுந் தோற்றுவிக்கிறதற்குச் சந்தேகந்தேவையில்லை ஆகையாலிரண்டுகாலத்திலுங் கடத்தையறிகின்றவர் கூடஸ்தர்தானேயென் றுத்தரம்.

(அ) கடக்ஞானம் வந்தவுடனே சிதாபாசன் நஷ்டமாய்ப்போனாலும் அவனோடுகூட நஷ்டமாகாமலிருக்கின்றவிருத்தியினாற் கடமறியப்பட்டதென்கிறதுதோற்றலாம்சாக்ஷியினாலென்கிறது தேவையில்லையென்கிற சங்கைக்கு,

சிதாபாசனில்லாதவிருத்தி பிரகாசத்திரவியமானாலும் வெள்ளைமண்போலச்சடமானபடியினால் அறியப்பட்டதைத் தோற்றுவிக்கமாட்டாது.சாக்ஷிதானே தோற்றுவிக்கிறானென் றுத்தரம்.

(௯) சாக்ஷியினிடத்திற்கற்பிக்கப்பட்டகடம் அஞ்ஞானத்துடனே கூடினாலும் விருத்தியுடனே கூடினாலும் அறியப்பட்டதென்னக்கூடாமற்போனால் அறியப்பட்டதென்கிறபேரெதனால்வந்ததென்கிற சங்கைக்கு,

சிதாபாசன் பிரதிவிம்பித்ததைத்தொட்டே கடமறியப்பட்டதாயிற்றென் றுத்தரம்.

(௧௦) சைதன்னியத் தொடக்குத்தானே அறியப்பட்டதற்கு மூலமானால் முன்சாக்ஷி சைதன்னியத்துடனே கூடினதுகொண்டு அறியப்பட்டதாக வொண்ணாதோவென்கிற சங்கைக்கு,

விருத்திக்குப்பின் பிரதிபலின சைதன்னியத்திற்கேபிரயோசனமாகவேண்டுமே யல்லாமல் முன்னிருந்த கூடஸ்தருக்குப் பிரயோசனமென்னக்கூடாதென் றுத்தரம்.

[இவை மூலசுலோகப்படி.]

[அ] அறியப்படாததைச் சனிப்பிக்குநிமித்தம் அஞ்ஞானமிருப்பதுபோல அறியப்பட்டதைச் சனிப்பிக்குநிமித்தம் புத்திபோதும் சிதாபாசனால் என்ன பிரயோசனமென்னுஞ் சங்கைக்கு,

சிதாபாசனில்லாத விருத்தி வெள்ளைமண்போலே சடமாவதால் அறியப்பட்டதைச் சனிப்பித்தற்குக் காரணமாகாதென் றுத்தரம்.

[கூ] சித்தாந்தமேதென்னுஞ் சங்கைக்கு,

கடத்திலே சிதாபாசரூப பலவுற்பத்தியினாலே அறியப்பட்டதென்று ஞாததை பிரசித்தமாயுள்ளதென் றுத்தரம்.

[கo] ஆயினுஞ் சிதாபாசனைக் கற்பிக்கிறது யோக்கியமல்ல எதனாலெனில் பிரமசைதன்னியரூபமாகவே பலமிருத்தலாமென்னுஞ் சங்கைக்கு,

பிரமசைதன்னியம் - பிரமாணத்தின் பிரவிர்த்திக்குமுன்னே யிருப்பதாலும் பலமோ பிரமாணத்தின் பிரவிர்த்திக்குப் பின்னே உண்டாவதாலும் பிரமசைதன்னியம் * பலமல்லவென் றுத்தரம்.

{ பிரமசைதன்னியத்தைக் கூடஸ்தரொன்று விவகரித்தற்கு விபரம். }

மொழிபெயர்த்தவாசிரியர் கூடஸ்தபிரமங்கட்குப் பேதமில்லாமை பற்றி மூலசுலோகத்தில் கடத்தில் பிரமசைதன்னியம் முன்னும் பின்னும் உள்ளது என்பதை கூடஸ்தரொன்றே விவகரித்தனர்.

(கக) இப்படியானாற் சாக்ஷிக்கும் சிதாபாசனுக்கும் பேதமேதென்கிற சங்கைக்கு,

* பலம் - என்றது - இது கடமென்னும் ஸ்பூர்த்தி.

கடமாத்திரத்தைக் காண்கிறவன் சிதாபாசனென்றும். சிதாபாசன், விருத்தி, கடம், இம்மூன்றையுங் காண்கிறவர் கூடஸ்தரென்று முத்தரம்.

(கஉ) இப்படியானால் எல்லாச் சாஸ்திர கர்த்தாக்களும் விஷயக்ஞானத்தி லிரண்டு சைதன்னியத்தையும் ஏன்பகுத்தறியவில்லையென்கிற சங்கைக்கு,

கூடஸ்தரென்று சொல்லாமல் * அநுவியவசாயக்ஞானமென்று பேரிட்டுப் பகுத்தறிவொன்றுத்தரம்.

(கங) தேகத்திற்குப்புறம்பே ஆபாசனையும் கூடஸ்தரையும் பிறித்தறிந்தாற்போலத் தேகத்திற் குள்ளாகவும், இவர்களிருவரையும் பகுத்தறியும்வழி யெப்படியென்கிற சங்கைக்கு,

வெளியிலே ஈதென்கிறவிருத்தியும் கடபடாதிகளதற்கு விஷயமும் அவைகளின் அந்வய வெதிரேகத்தையும் அறிகிறவரே சாக்ஷியென்று மறிகிறதுபோலத் தேகத்திற்குள்ளும் அகமென்கிறவிருத்தியும் காமக்குரோதாதிகளதற்கு விஷயமும் இவைகளின் அந்வய வெதிரேகத்தையு மறிகிறவர் சாக்ஷியென்றுத்தரம்.

(கச) உள்ளே சிதாபாசத்தோற்ற மெப்படி சாக்ஷித்தோற்ற மெப்படியென்கிற சங்கைக்கு,

காய்ச்சினவிரும்பிலிருக்கிற வக்கினி யந்த விரும்பைமாத்திரந் தோற்றுவிக்கிறதே யல்லாமல் மற்றொன்றையுந் தோற்றுவியாததுபோலக் காமக்குரோதாதியாகிற அகவிருத்தியிற் கலந்திருக்கிற சிதாபாசனுந் தான்மாத்திரந் தோற்றுகிறதேயல்லாமல் அன்னியமாயிருக்கிறதைத் தோற்றுவிக்கமாட்டான். சாக்கிரசொப்பனத்தில் விருத்திகளையும்

* அநுவியவசாயக்ஞானம் என்றது ஞானத்தின் ஞானம்.

விருத்திகளினிடை தண்டியையும் சுழுத்தி மூர்ச்சை சமாதி களி லிவைகளில்லாததையுந் தோற்றுவிக்கிற நிர்விகார சைதன்னியமே கூடஸ்தனென்றுத்தரம்.

(கரு) வெளியில் விருத்தியிலறியப்பட்டதையும் அறியப்படாததையுங் காண்கிறவழியாகக் கூடஸ்தனைக் காண்பித்தால் உள்ளில் விருத்தியிலும் அந்தவழியாகக் காண்பியாமல் வேறொருவழியாகக் காண்பித்ததேதென்கிற சங்கைக்கு,

உள்ளில் விஷயமான விருத்தியானது கடம்போல ஞான மஞ்ஞான மிரண்டோடுங் கூடாததுகொண்டு அந்த வழி தேவையில்லையென் றுத்தரம்.

(கசு) விருத்தியில் அஞ்ஞானவியாப்தி ஞானவியாப்தி யிரண்டுமேனில்லையென்கிற சங்கைக்கு,

விருத்தியானது கடம்போலத்தனக்கன்னியமாகாதபடியினால் ஒருக்கால் ஞானவியாப்தி வந்ததென்னக்கூடாது அன்னியபதார்த்தத்திலே யஞ்ஞானத்தைப் போக்குகிறபடியினலிந்த விருத்தியி லஞ்ஞானவியாப்திவரக் கணக்கில்லையென் றுத்தரம்.

(கஎ) இப்படி உள்ளிலும் புறம்பிலும் நானென்றுதோற்றுகிற சைதன்னியம் இருவகையென்று சாதித்ததற்குப் பிரயோசனமேதென்கிற சங்கைக்கு,

இந்தச் சைதன்னிய மிரண்டிற்குள்ளே கற்பிதமாகவிருக்கிறவன் ஜனன மரண சம்சாரியென்றும் கூடஸ்தராய்ச் சுபாவமாயிருக்கிற தனக்கு ஒருக்காலுஞ் சம்சாரமில்லையென்கிறதும் பிரயோசனமென் றுத்தரம்.

(கஅ) புத்தியிலே விளைபட்ட கூடஸ்தசைதன்னியஞ் சம்சாரியாகட்டுஞ் சிதாபாசன் வேண்டாமென்கிற சங்கைக்கு,

அசங்கசைதன்னியத்திற் கோருபாதியிலே வளைபட்டதுகொண்டு சம்சாரம் வருமேயானாற் குடங்குதிர்களிலே வளைபட்ட சைதன்னியத்திற்குச்சம்சாரம் வரக்காணுமே யென்றுத்தரம்.

(கக) கடம்போல அந்தக்கரணம்மலினமல்லவே சொச்சத்திரவியத்திலே வளைபட்டாற் சம்சாரம்வருமென்கிற சங்கைக்கு,

வெண்கல மரக்காலா லளந்ததுகொண்டு ஓட்டியிரட்டி ஒன்று மூன்று காணுததுபோலச் சொச்சத்தினு லதிசயமில்லையென் றுத்தரம்.

(உ0) மரக்காலும் வெண்கலக்காலுஞ் சரியானாலும் வெண்கலத்திலே பிரதிபிம்பங் கண்டாற்போலக் கடத்திலும் புத்தியிலே பிரதிபிம்பம் அதிசயமல்லவோ வென்கிற சங்கைக்கு,

அப்படியானு லிந்தப் பிரதிவிம்பந்தான் சிதாபாச னிவனுக்கே சம்சாரம் ஆத்மாவிற் கில்லையென் றுத்தரம்.

(உக) உபாதியைத்தவிர ஆபாசனுக்கு வேறுசொரூபமில்லாதபடியினு லந்தக்கரணத்திற்கேசம்சாரமாகட்டுஞ்சிதாபாசனுக்குச் சம்சாரம் வேண்டாமென்கிற சங்கைக்கு,

இப்படியானாற் சரீரத்தைத்தவிர அந்தக்கரணத்தைப் புறம்பாகக் காணப்படாதபடியினாற் சரீரத்திற்கே சம்சாரமாகவேண்டுமென் றுத்தரம்.

(உஉ) சரீரமரித்தாலும் புத்திமரியாதென்கிற சாஸ்திரத்தினாலே சரீரத்தைத்தவிர அந்தக்கரணம் வேறாகவேண்டுமென்கிற சங்கைக்கு,

இப்படியானாற் புத்தியைவிடச் சிதாபாசனும் வேறேயுண்டென்று பிரவேசவுபநிஷத்திலே சொன்னபடியினாற்

சிதாபாசனுக்கே சம்சாரம் அந்தக்கரணத்திற்குத் தேவையி ல்லையென் றுத்தரம்.

(உ௩) பிரவேச வுபநிஷத்திலே புத்தியோடே கூடின வனுக்கே சரீரப்பிரவேசஞ்சொல்லுகிறது புத்திக்கப்பாற்ப ட்டவனுக்கு சொல்லவில்லையேயென்கிற சங்கைக்கு,

சடந் தேகமென்கிறவாக்கியம் நாமில்லாவிட்டாற் சரீ ரங்களும் இந்திரியங்களும் ஜீவிக்கமாட்டாதென்றும் ஆத் மாப் பிரவேசித்தா ரென்கிறபடியினால் அந்தக்கரணத்திற் கன்னியனா யிருந்தவனுக்கே பிரவேசஞ் சொல்லுகிறதென் றுத்தரம்.

(உ௪) அந்தக்கரணத்திற் கப்பாற்பட்டவன் அசங்கனல்லவோ அவனுக்கெப்படிப் பிரவேசங் கூடுமென்கிற சங்கைக்கு,

இவருக்குப் பிரபஞ்சசிருஷ்டி யெப்படிக் கூடுமென் றுத்தரம்.

(உ௫) அசங்கனுக்குப் பிரபஞ்ச சிருஷ்டி யில்லையே மாயாகற்பிதனுக் கல்லவோ சிருஷ்டியென்கிற சங்கைக்கு,

பிரவேசந்தானும் அவித்தையா கற்பிதனுக்கேயல்லாம ல் அசங்கனுக்கில்லையென் றுத்தரம்.

(உ௬) சிருஷ்டித்தவரும் பிரவேசித்தவருங் கற்பிதமெ ன்கிறதற்குப் பிரமாணமேதென்கிற சங்கைக்கு,

மாயையவித்தையென்கிற விரண்டுஞ்சீவேசுரரென்கிற ஆபாசரைக் கற்பித்ததென்கிற வேதமும் இவர்களை யுற்று விசாரித்தா லில்லாமல் நஷ்டமாய்ப்போகிற அநுபவமுமே பிரமாணமென் றுத்தரம்.

(உ௭) இப்படிச் சீவேசுரர் மாயாகற்பிதமென்றும் இவ ர்கட்கப்பாற்பட்டவ ராத்மாவென்றும் வேதத்திலே பகுத் துச்சொல்லுகிறதோவென்கிற சங்கைக்கு,

சிவேசுரர் பூதபௌதிகப் பிரகிருதிகளோடே கூடத் தோற்றிக் கூடவழிவார்களென்றும் அப்பாற்பட்டிருக்கிற கூடஸ்தர் அவிநாசியென்றும் மயித்திரிக்கு யாக்கியவல்கியர் சொன்னாரென் றுத்தரம்.

(உஅ) இப்படியானாற் சரீரமரிக்குஞ் சீவன் மரியானென்கிற வேதத்திற்கு விரோதமல்லவோவென்கிறசங்கைக்கு,

இந்தவேதம் பூதபௌதிக மோக்ஷத்தைச்சொல்லுகிறதல்ல அஞ்ஞானவஸ்தையில் லோகாந்தரகமனத்தைச்சொல்லுகிறது ஆகையால் ஆத்மாவிற் கன்னியமெல்லாம் அநித்தியமென்றே யுத்தரம்.

(உகூ) இப்படிச்சீவனே அநித்தியனானால் நித்தியமாயிருக்கிற பிரமத்தோடே அகம்பிரமமென்கிற சமானாதிகரணமெப்படிக்கூடுமென்கிற சங்கைக்கு,

முக்யசமானாதி கரணங் கூடாவிட்டாலுந் தாணுப் புருஷக்ஞானம்போல வாதசமானாதிகரணங் கூடுமென் றுத்தரம்.

(௩௦) இப்படியானால் விவரணாசாரியர் வாதசமானாதிகரணத்தைக் கண்டிப்பானேனென்கிற சங்கைக்கு,

நானென்கிற சத்தத்திற்குக் கூடஸ்தனை யர்த்தமாகப் பண்ணிக்கொண்டு கண்டித்தாரென் றுத்தரம்.

(௩க) இப்படிக்கூடஸ்தனே தானாய்க்கண்டாற்றற்பதத்திற்குந் தொம்பதத்திற்கும் அர்த்தமேதென்கிற சங்கைக்கு,

தேகேந்திரியாதிகளை யுடைய சீவப்பிராந்திக்கதிஷ்டானப் பிரத்தியக்ஷமுஞ் சகசரீரம்படைத்த ஈசுரப்பிராந்திக்கதிஷ்டானப் பிரத்தியக்ஷமும் அர்த்தமென் றுத்தரம்.

(௧௨) தற்பதத்தினுந் தொம்பதத்தினும் ஒருபிரமத்தைத்தானே யேகதேசங்களாகச் சொன்ன விரண்டுபதங்களுக்கும் அர்த்தபேதமுண்டோ வென்கிற சங்கைக்கு,

ஆரோபமானசரீரத்தையுஞ் சகத்தையுந் தொட்டுப்பேதமேயல்லாமல் அதிஷ்டானசைதன்னிய மொன்றேயொழிய விரண்டில்லையென் றுத்தரம்.

(௧௩) பிரத்தியக்ஷமாய் நிர்ணயப்பட்டிருக்கிற ஜீவேசுரர்களைப் பிராந்தியென்னக்கூடாதென்கிற சங்கைக்கு,

சைதன்னியம்போல ஏகலக்ஷணமாய்நிர்ணயமாகாதபடியினாலும் சித்தாகவுஞ் சடமாகவும் நித்தியமாகவும் அநித்தியமாகவுங் குழம்பிக்கிடக்கிறபடியினாலும் பிராந்தியென்கிறதற்குத் தப்பில்லையென் றுத்தரம்.

(௧௪) பிரபஞ்சத்தில் ஏகரீதியாய்த்தோற்றுகிற பிராந்தனுக்கும்விவேகிக்குந்தாரதன்மியமேதென்கிற சங்கைக்கு,

புத்தியாவதேது சிதாபாசனாகின்றவனார் ஆத்மாவாவதார் சகத்தாவதெப்படித் தோற்றுமென்கிற கலக்கமுடையவனே பிராந்தன் இவனுக்கே சம்சாரம் இவைகளைத் தன்றன்சுபாவத்துடன் பகுத்தறிந்து தான் சச்சிதானந்தமென்று நிச்சயிக்கின்றவனே முத்தனென்கிறதற் கடையாளமென்று வேதாந்தஞ் சொல்லுகிறதென் றுத்தரம்.

(௧௫) தான் எப்போதுஞ் சச்சிதானந்தமாயிருக்கிறதற் கடையாளமேதென்கிற சங்கைக்கு,

மாயாவிருத்திகள் மனோவிருத்திகள் உண்டாகிறதற்கும் இருக்கிறதற்கும் அழிகிறதற்குஞ் சாக்ஷியாயிருக்கிற ஆத்மா சத்தென்பதுகூடும் எல்லாவற்றையும் அறிகையினாலே

சித்தென்பதுகூடும். பஞ்சகோசங்களைக்கைவிட்டாலுந்தான் கைவிடப்படாத வஸ்துவானபடியினாலே ஆநந்தமென்பது கூடும். ஆகையினாலே இவரோபரமசிவனென்கிற புராணவசனமே பிரமாணமென் றுத்தரம்.

(௯௬) இந்தக்கூடஸ்தருக் கன்னியமாயிருக்கின்றசீவேசுரர் மாயாகற்பிதமான பூதபௌதிகங்கள்போலச் சடமாயிருக்கவில்லையே சைதன்னியமாயிருக்கின்ற இவர்களை மாயாகற்பிதமென்று சொல்லக்கூடாதென்கிற சங்கைக்கு,

சகலமான பாண்டங்களெல்லா மண்ணிலே பிறந்தாலுங் காசகும்பங்கள் நிர்மலமாயிருக்கிறாற்போலமாயாகற்பிதங்களுக்குள்ளே சீவேசுரர்களுஞ் சொச்சத் திரவியமென் றுத்தரம்.

(௯௭) காசகும்பங்கள் பிரகாசமானாலுஞ் சடமாயிருக்கிறாப்போலச்சீவேசுரர்களுஞ் சடமாயிருக்கக்காணோமென் கிற சங்கைக்கு,

அசனத்திற்பிறந்த சரீரவிந்திரியாதிகளுக்குள்ளே மனது போதரூபமாயிருக்கிறாற்போல மாயாகற்பிதங்களுக்குள்ளே சீவேசுரர்களும் போதரூபமா யிருப்பார்களென் றுத்தரம்.

(௯௮) மாயை சடத்தைக் கற்பிக்கிறதேயல்லாமற் சைதன்னியத்தையுங் கற்பிக்குமோ வென்கிற சங்கைக்கு,

ஒரு சீவனிடத்திலே யிருக்கிற நித்திராமோகம் அநேகஞ் சேதனாசேதனங்களைக் கற்பிக்கக்கண்டாற் சீவேசுரர்களை மஹாமாயை கற்பிக்குமென்றதிலே ஆச்சரியமேதென் றுத்தரம்.

(௩௯) கிஞ்சிக்ஞத்துவமுதலான சீவகுணங்களை மாயை கற்பிக்குமல்லாமற் சர்வக்ஞத்துவ சர்வேசுரத்துவம் பஞ்ச கிருத்தியத்துவ முதலான கல்யாணகுணங்களை மாயை கற்பிக்கமாட்டுமோ வென்கிற சங்கைக்கு,

பிள்ளைபெற்றவன் பேரிடுகிறாற்போல ஈசுரனைக்கற்பித்த மாயை அவற்கேற்ற தொழிற் கற்பிக்கிறதில் எது பாரமென் றுத்தரம்.

(௪௦) இத்தனை வல்லபமா யிருக்கிறமாயைக்கு ஒருகூடஸ்தரைக் கற்பிக்கச் சத்தியில்லையோவென்கிற சங்கைக்கு,

ஜீவேசுரர்கள் கற்பிதமென்று வேதப்பிரமாணங் கண்டாற்போல கூடஸ்தரு மாயாகற்பிதரென்று ஒருவேதப்பிரமாணமுமில்லை. இவரே உண்மைப்பொருள் ஆதிவஸ்துவென்று சகலவேதங்களுங் கொண்டாடுகிறது. ஆகையினால், உன்னுடைய சங்கைக் கிடமில்லையென் றுத்தரம்.

(௪௧) இப்படி மாயாகற்பிதமான ஜீவேசுரர்களா லென்ன காரிய முடியுமென்கிற சங்கைக்கு,

மாயையை விரியப்பார்க்கிற பார்வைமுதல் சிருஷ்டி பிரவேசாந்தபரியந்தம் ஈசுரகிருத்தியஞ் சாக்கிரசொப்பன சுழுத்தி முத்திபரியந்தமுள்ள சம்சாரமெல்லாம் ஜீவகிருத்தியமென் றுத்தரம்.

(௪௨) கூடஸ்தருக்குக் கிருத்தியமேதென்கிற சங்கைக்கு,

அவர் அசங்கரேயல்லாமல் அவரிடத்தில் ஒரு கிருத்தியமு மில்லையென் றுத்தரம்.

(௪௩) இப்படிப்பகுத்தறிந்தவ னெப்படி யிருப்பானென்கிற சங்கைக்கு,

பெத்தன் முத்தன் பெந்தமோக்ஷம் உற்பத்திநாசஞ் சகலமு மாயாகற்பிதமேயல்லாமற் றனக்குச் சுபாவமாகவொன்றுமில்லையென்று கலக்கமறத் தெளிந்திருப்பனென் றுத்தரம்.

(சச) இப்படியொன்று மில்லாவிட்டாற் சீவேசுரர் ஜகத்து மரியாதையெல்லாம் வேதத்திற் சொல்லியிருப்பானேனென்கிற சங்கைக்கு,

அதிசூக்ஷமமா யிருக்கின்ற ஆத்மாவைக் காட்டும்பொருட்டுத் தூலாருந்ததி நியாயமாகச் சொல்லுகிறதென் றுத்தரம்.

(சரு) இப்படியறிந்த விவேகிபிராரத்தத் தோற்றரவையெப்படிக் காண்பனென்கிற சங்கைக்கு,

சாஸ்திரமறியாதவன் கலங்குகின்றாற்போலக் கலங்காமல் மாயையாகிற மேகம் பிரபஞ்சமாகிற மழையை வேண்டியபடிபெய்தாலுஞ் சிதாகாசமா யிருக்கிற நமக்கானியேது லாபமேதென்று கவலைகெட்டிருப்பனென் றுத்தரம்.

இந்தக்கூடஸ்த தீபிகையை நித்தியம் அநுசந்தானம் பண்ணினவன்றானே கூடஸ்தருமாய் விளங்குவன்.

மூன்றாவது கூடஸ்ததீபம்-முற்றிற்று.

ஆகச்சங்கை - உஅரு.

---

## நான்காவது - தியானதீபம்.

(க) சாதனசதுஷ்டயமுள்ள அதிகாரிக்குச்சிரவணமுத லான அநுஷ்டானக்ஞானத்தினாலேவருகிற வாக்கியார்த்த க்ஞானத்தையுஞ் சீவன் முத்தி நிலையையுங் கீழ்க்கிரந்தத்தி லே சொல்லிப் பிரக்ஞாமந்தமுதலான பிரதிபெந்தங்களினா ற் கேதஞ் சொன்ன நிலை திடப்படாதபேருக்குமோக்ஷார்த் தமாய்ச் செய்யவேண்டிய அநுஷ்டான மேதென்கிற சங் கைக்கு,

பிரமோபாசனையே பண்ணவேண்டியது சகுணோபாச னைபோல இதற்குக்கிரியையுண்டோவென்னில் இந்தத்தியா னதீபிகையிலே சொன்னபடி பிரமத்தைத் தியானம்பண்ணு கிறதேயல்லாமல் வேறொருகிரியையுமில்லையென் றுத்தரம்,

(உ) இதற்குப் பிரமாணமேதென்கிற சங்கைக்கு,

தாபநீயமென்கிற வுபநிஷத்தே பிரமாணமென் றுத் தரம்.

(ங) தானாயிருக்கிற வஸ்துவை அன்னியமாயிருக்கிறவ ஸ்துவைப்போல வுபாசிக்கக்கூடாதென்கிற சங்கைக்கு,

சம்வாதிப் பிரமைபோலக் கண்டுங் காணாம லிருந்தப டியினால் உபாசனைகூடுமென் றுத்தரம்.

(௪) சம்வாதிப் பிரமையாவதேது விசம்வாதிப் பிரமை யாவதேதென்கிற சங்கைக்கு,

மணிப்பிரபையைக்கண்டு மணியென்று நாடுதல் சம்வா திப்பிரமை தீபப்பிரபையைக்கண்டு மணியென்று நாடுதல் விசம்வாதிப் பிரமையென் றுத்தரம்.

(ரு) பிராந்தியாய் நாடினவனுக்குப்பலன்கொடாதென் கிற சங்கைக்கு,

விசம்வாதிப்பிரமை பலன்கொடாது சம்வாதிப்பிரமை நாடின பொருளைக்கொடுக்கும் ஆகையினாற் பிரமோபாசனையுஞ் சம்வாதிப்பிரமைபோல முத்தியாகிற பலன்கொடுக்குமென் றுத்தரம்.

(௬) இந்தப் பிரமத்துவ வுபாசனைக்கு அதிகாரியாரென்கிற சங்கைக்கு,

பரோக்ஷக்ஞானியே அதிகாரியென் றுத்தரம்.

(௭) உபாசனை பண்ணுகிற கிரமமெப்படி யென்கிற சங்கைக்கு,

அகண்டாகார போதமே தானென்கிறதே கிரமமென் றுத்தரம்.

(௮) இந்த வுபாசனைக்குத் திருஷ்டாந்த மேதென்கிற சங்கைக்கு,

கண்ணாரக் காணாவிட்டாலுஞ் சாஸ்திரஞ்சொன்னபடி பாவிக்கின்ற மூர்த்தித் தியானமே திருஷ்டாந்தமென் றுத்தரம்.

(௯) பரோக்ஷக் ஞானத்திற்கு லக்ஷண மேதென்கிற சங்கைக்கு,

பிரமம் தானென்றறியாமற் பிரமமொன் றுண்டென்று நிச்சயித்ததே பரோக்ஷக்ஞானமென் றுத்தரம்.

(௧௦) பரோக்ஷக்ஞானஞ் சந்தேகமானபடியினாற் பலனெப்படிக் கொடுக்குமென்கிற சங்கைக்கு,

மூர்த்தித்தியான வுபாசனைபோலப் பரோக்ஷக்ஞானத்திலே ஒருவருக்குஞ் சந்தேகமில்லை ஆகையால் சம்வாதிப் பிரமைபோலப் பலன்கொடுக்குமென் றுத்தரம்.

(௧௧) பிரமத்தைத் தானாகச்சொல்லுகிற வேதாந்தத்தைப்படித்தும் இவனுக் கந்தஞானம் பரோக்ஷமாகக் காரணமேதென்கிற சங்கைக்கு,

தேகமேதானென்கிற விபரீதபாவனை பிரமத்தைத் தா னாகத் தோற்றவொட்டாதென் றுத்தரம்.

(௧௨) பரோக்ஷமாயிருக்கிற அத்தொய்த புத்தியைப் பிரத்தியக்ஷமாயிருக்கிற தொய்தபுத்தி யென்கெடாதென் கிற சங்கைக்கு, .

பிரத்தியக்ஷமாயிருக்கிற சிலாபுத்தி பரோக்ஷமாயிருக் கிற ஈசுரபுத்தியைத் தள்ளாதது போலப் பிரத்தியக்ஷமாயி ருக்கிற தொய்தபுத்தியும் பரோக்ஷமாயிருக்கிற அத்வைத புத்தியைக் கெடுக்கமாட்டாதென் றுத்தரம்.

(௧௩) சிரத்தையில்லாதவனுக்குச் சிலையிலே ஈசுரபுத்தி வரக்கானோமென்கிற சங்கைக்கு,

சிரத்தையுள்ளவனே யதிகாரியல்லாமற் சிரத்தை யில் லாதவனைச் சாஸ்திரத்தி லெடுத்துக்காட்டத் தேவையில்லை யென் றுத்தரம்.

(௧௪) வேதாந்தம் படித்தாலல்லாமற் பரோக்ஷக்ஞா னம் வாராதோவென்கிற சங்கைக்கு,

மூர்த்தி யுபதேசம்போலப் பிரமத்தை யுபதேசம் பண் ணிக்கொண் டறியலாமென் றுத்தரம்.

(௧௫) சாஸ்திரவிசாரம்பண்ணுமற் பிரமத்தையுபதேச மாகக் கேட்டறிகிற தெப்படியென்கிற சங்கைக்கு,

கர்மசூத்திரத்தைப் படியாமற் கர்மாநுஷ்டானஞ் சித் தித்தாற்போலவும் ஆகமபுராணம் படியாமல் உபாசனை ய நுஷ்டிக்கிறாற்போலவும் சாஸ்திரவிசாரம் பண்ணச் சத்தி யில்லாதவன் மஹாத்மாக்களிடத்திலே பிரமம் இன்னபடி யிருக்குமென்கிறதைக் கேட்டுக்கொண் டுபாசிக்கலாமென் றுத்தரம்.

(கசு) சாக்ஷாத்காரம் உபதேசங்கொண்டு வாராதோ வென்கிற சங்கைக்கு,

சாஸ்திரவிசாரமில்லாதவனுக்குச் சாக்ஷாத்காரம் வாராதென் றுத்தரம்.

(கஎ) பரோக்ஷக்ஞானத்திற்குப் பிரதிபந்தமேதென்கிற சங்கைக்கு,

சிரத்தையில்லாததே பரோக்ஷக்ஞானத்திற்குப் பிரதிபந்தமென் றுத்தரம்.

(கஅ) அபரோக்ஷக்ஞானத்திற்குப் பிரதிபந்தமேதென்கிற சங்கைக்கு,

விசாரமில்லாததோஷமே அபரோக்ஷக்ஞானத்திற்குப் பிரதிபந்தமென் றுத்தரம்.

(க௯) சாஸ்திரவிசாரம்பண்ணினாலுஞ்சிலர்க்குச்சாக்ஷாத்காரம் ஏன்வரவில்லையென்கிற சங்கைக்கு,

விபரீதபாவனையினாலே சாஸ்திரம்படித்தும் சாக்ஷாத்காரம் வாராதிருக்குமென் றுத்தரம்.

(உ௦) சாஸ்திரம்படித்தும்சாக்ஷாத்காரம்வாராதவனுக்குச் செய்காரியமேதென்கிற சங்கைக்கு,

விசாரபலமான சாக்ஷாத்காரம் வருமளவுஞ்சாஸ்திரத்தைத்திரும்பத்திரும்ப விசாரிக்கப்பயிர் செயல்வகையினாற் கெர்ப்பநாளிலே பரிபக்குவமாகிறதுபோல ஞானமுந்தீர்க்க கால விசாரத்தினால் வருமென் றுத்தரம்.

(உக) மரணபரியந்தம் விசாரம்பண்ணினவாமதேவர் சடபரதர் இவர்களிருவருக்கும் அந்தசென்மத்திலே ஏன் ஞானமுதயமாகவில்லையென்கிற சங்கைக்கு,

பிரதிபந்தத்தினாலென் றுத்தரம்.

(உஉ) பிரதிபந்தமாவதேது அஃதெத்தனைவிதமாயிருக்குமென்கிற சங்கைக்கு,

பூதப்பிரதிபந்தம் பௌஷியப்பிரதிபந்தம் வர்த்தமானப்பிரதிபந்தமென்று திரிவிதமாகவிருக்கும் இதிற்பூதப்பிரதிபந்தம், கைவிட்ட எருமையிற்பற்றுஞ் சந்நியாசியாரிடத்திற் கண்டகதை. * பௌஷியப் பிரதிபந்தமாவது, சங்கற்பத்துடனே கூடியிருந்து வேதாந்தவிசாரம்பண்ணின வாமதேவருக்கொரு சென்மமும் சடபரதருக்கு மூன்றுசென்மமாகவும் காணப்பட்டது. வர்த்தமானப் பிரதிபந்தமாவது, விஷயாசக்தி பிரக்ஞாமந்தம் குதர்க்கம் விபரீதபாவனை துராக்ராகந்தையென் றுத்தரம்.

(உ௩) இந்தப் பிரதிபந்தத்தைத் தள்ளுமுபாய மேதென்கிற சங்கைக்கு,

பூதப்பிரதிபந்தம் அவனவன்புத்தியை யநுசரித்துப் போதிக்கத்தீரும், பௌஷியப் பிரதிபந்தம் சென்மமெடுத்துத் தீரும். வர்த்தமான பிரதிபந்தத்திற்கு விஷயாசக்தி சாதன சதுஷ்டயத்திற்றீரும். பிரக்ஞாமந்தம் பலகாலுஞ் சிரவணம்பண்ணத்தீரும். குதர்க்கும் மனனத்திற்றீரும். விபரீதபாவனை நிதித்தியாசனத்திற்றீரும். துராக்ராகந்தை சமாதியிற்றீருமென் றுத்தரம்.

(உ௪) வேதாந்தவிசாரம்பண்ணியும் பௌஷியப் பிரதிபந்தத்திற்சென்மம்வருமென்றால் விசாரக்ஞானமும்வியர்த்தமாமோ பிரதிபந்தத்திற் சென்மம்வருமென்கிறதற்குப் பிரமாணமேதென்கிற சங்கைக்கு;

விசாரத்திற் பிறந்த ஞானம் பிரதிபந்தந் தொலைந்தவுடனே மோக்ஷத்தைக் கொடுக்கையிற் சாஸ்திரவிசார

---

* பௌஷியப் பிரதிபந்தம் என்றது - சென்மாந்திர வேதுவான பிராரத்தசேஷம் - இஃது வாமதேவர் - சடபரதரிடத்திற் காண்க.

ம் ஒருக்காலும் பாழாய்ப்போகாது யோகப் பிரஷ்டனும் இரண்டொரு சென்மத்திலே கிருதார்த்த னுவானென்கிற கீதாவசனம் பிரமாணமென் றுத்தரம்.

(உரு) பிரதிபந்தந் தீரத்தக்கதாக வுபாசிக்கச்சொன்னது சகுணமோ நிர்க்குணமோவென்கிற சங்கைக்கு,

நிர்க்குணமென் றுத்தரம்.

(உசு) சகுணமானால் உபாசிக்கலாம்நிர்க்குணத்தையெப்படித் தியானம்பண்ணலாமென்கிற சங்கைக்கு,

கேட்டவண்ணந் தியானிக்கின்ற திருவகைக்குஞ்சரியென் றுத்தரம்.

(உஎ) வாக்குக்கு மனதுக்கு மெட்டாத நிர்க்குணத்தையெப்படித் தியானம்பண்ணலாமென்கிற சங்கைக்கு,

வாக்குக்கு மனதுக்கு மெட்டினதைக்கேட்டுச் சாக்ஷாத்காரம் பண்ணுகிறாற்போல இதுவுங்கேட்டுச்சிந்திக்கலாமென் றுத்தரம்.

(உஅ) யாதொன் றன்னியமா யுபாசிக்கப்பட்டதோ அதுவெல்லாம் பிரமமல்ல பிரமந்தானேயென் றறியவேண்டுமென்று ஒருவேதஞ் சொன்னபடியினாற் பிரமோபாசனை நிஷித்தமென்கிற சங்கைக்கு,

அறியப்பட்டதற்கும் அறியப்படாததற்கும் அன்னியமாயிருக்கும் பிரமமென்று ஒருவேதத்திலே ஞானத்தைநிஷேதிக்கிறதென் றுத்தரம்.

(உகூ) பிரமோபாசனையிலே யுமக்கித்தனைபத்தி யேதென்கிற சங்கைக்கு,

உனக்குத்தா னித்தனை துவேஷமேதென் றுத்தரம்.

(௩௰) நிர்க்குணத்தை யுபாசிக்கின்றதற்குப் பிரமாணமேது விதியேதென்கிற சங்கைக்கு,

தாபநீயம் சயிப்பியம் காடகம் மாண்டூக்கியம் என்கிற உபநிஷத்து நாலும் பிரமாணம் பஞ்சீகரண மஹாவாக்கியமே அநுஷ்டானவிதியென் றுத்தரம்.

(கக) பஞ்சீகரணம் ஞானசாதனமல்லவோ எல்லாரும் அநுஷ்டிக்கவில்லையேயென்கிற சங்கைக்கு,

ஞானசாதனமென்கிறது நமக்கும் சம்மதம் அநுஷ்டியாதவன்றானே கெட்டான். அதனாலே பிரமோபாசனைக்குத் தூஷணமில்லையென் றுத்தரம்.

(கஉ) எல்லாரு மநுஷ்டியாத வுபாசனையை நீரேன் சொல்லவந்தீரென்கிற சங்கைக்கு,

சிலமூடன் இதனிலும் அதிகமென்று வசியமந்திரத்தை செபிக்கக்கடவன் இதனிலும் அதிகமூடன் கிருஷியாதியை பண்ணக்கடவன் அந்த மூடரைக்குறித்துச் சொல்லவில்லை முமுக்ஷுக்களின் பொருட்டு நிர்க்குண வுபாசனை சொன்னேமென் றுத்தரம்.

(கங) இப்படி யுபாசிக்கப்படுகிறது நிர்க்குணமானால் இந்தவஸ்துவிற்கு ஆநந்தாதிகுணங்களும் அதுலாதிகுணங்களு முண்டென்னக் கூடாதென்கிற சங்கைக்கு,

சுருதிசம்மதமாக இந்த லக்ஷணசூத்திரஞ் சொன்ன வியாசரைக்கேளென் றுத்தரம்.

(கச) சச்சிதாநந்தமே நானென்கிறதே யுபாசனையானால் ஞானத்திற்குந் தியானத்திற்கும் பேதமே தென்கிற சங்கைக்கு,

வஸ்து தந்திரம் ஞானமென்றுங் கர்த்ததந்திரம் உபாசனையென்றும் பேதமென் றுத்தரம்.

(கரு) வஸ்துதந்திரமாயிருக்கிற ஞான மெதனால் வருமென்கிற சங்கைக்கு,

அக்கினியை அக்கினியென்கிறாற்போலச் சுபாவஞ்சொல்லுகிறது வஸ்துதந்திரஞ்ஞானம் விசாரத்தினால் வருமென்றுத்தரம்.

(௩௬) இந்த ஞானம் வந்தால் ஏது செய்யுமென்கிற சங்கைக்கு,

சகல சம்சாரத்தையுஞ் சுடுமென் றுத்தரம்.

(௩௭) அந்த ஞானத்தை மறந்தால் ஆனியேதென்கிற சங்கைக்கு,

மறந்தாலுஞ் சம்சாரதைக் கொடாதென் றுத்தரம்.

(௩௮) அந்த ஞானமுள்ளவன் எப்படி யிருப்பானென்கிற சங்கைக்கு,

இவன் முத்தனாய்த் திருப்தியடைந்து பிராரத்த க்ஷயத்தைப் பார்த்திருப்பனென் றுத்தரம்.

(௩௯) கர்த்ததந்திரமென்கிற வுபாசனை யெதனால் வருமென்கிற சங்கைக்கு,

உபசாரமாக ஸ்திரீயை அக்கினியென்றதுபோலக் கர்த்ததந்திரமாயிருக்கிற வுபாசனை குருபதேசத்தினால் வருமென் றுத்தரம்.

(௪௦) அந்தவுபாசனை வந்தா லென்னசெய்யுமென்கிற சங்கைக்கு,

தியானித்தபோது நாம் பிரமமாவோமென்கிற புத்தியைக் கொடுக்குமென் றுத்தரம்.

(௪௧) அந்த உபாசனையை மறந்தா லென்னசெய்யுமென்கிற சங்கைக்கு,

விக்ஷேபத்தின் கையிலே காட்டிக் கொடுக்குமென் றுத்தரம்.

(௪௨) அந்த வுபாசனுக் ஞானமுள்ளவனெப்படியிருக்கவேண்டுமென்கிற சங்கைக்கு,

நித்திரை வருமளவும் மரணம்வருமளவும் தியானம் விடாமற் பண்ணிக்கொண்டிருக்கவேண்டுமென் றுத்தரம்.

(சங) இந்த உபாசனை முதிர்ந்ததற்குப் பிரத்தியக்ஷமேதென்கிற சங்கைக்கு,

பிக்ஷையெடுக்கிறவன் சொப்பனத்திலும் பிக்ஷையெடுக்கக் காண்கிறாற்போலவும், வேதமோதுகிறவன் வேதமோதக் காண்கிறாற்போலவும், இந்தவுபாசகன் நினைந்தோறுஞ் சொப்பனத்திலுந் தியானம்பண்ணக் கண்டானானால் உபாசனைக்கு முடிவென் றுத்தரம்.

(சச) ஞானம் வஸ்து தந்திரமென்கிறதில் யுத்தியேதென்கிற சங்கைக்கு;

கூடஸ்த சைதன்னியத்தை வேதஞ்சொன்னபடி யிருக்கிறதோ இல்லையோவென்று லக்ஷணாவிருத்தியினாலே ஒரு பிரகாரம் சோதித்துப் பார்த்துக்கொள்ளுகிறதே யல்லாமற் றான்வேண்டியபடி சிந்திக்கப்படாததே யுத்தியென் றுத்தரம்.

(சரு) தியானங் கர்த்த தந்திரமென்கிறதில் யுத்தியேதெனகிற சங்கைக்கு,

தான்வேண்டியபடி தியானிக்க தியானிக்காமலிருக்க மாறுபாடாய்த் தியானிக்கப்படுகிறதே யுத்தி ஆகையினால் எந்நேரமுந் தியானஞ் சாவதானமாகப் பண்ணவேண்டுமென் றுத்தரம்.

(சசா எந்நேரமுந் தியானத்திலே மனதாயிருக்கிறவனுக்குச் செய்காரிய மெப்படி நடக்குமென்கிற சங்கைக்கு,

பரபுருஷனையடைகிற நாரி எந்நேரமும் அவனிடத்திலே ஆரூடமனதாகவிருந்தாலும், மேலெழுந்தவாரி செய்காரியஞ் செய்தொப்புவிக்கிறாற்போலச்செய்வனென் றுத்தரம்.

(சஎ) சாக்ஷாத்கார ஞானிக்குச் செய்காரிய மெப்படி நடக்குமென்கிற சங்கைக்கு,

கூத்தாடி பாசாங்கடிக்கிறாற்போலச் சீவன்முத்தனுஞ் செய்காரியம் ஒன்றுந்தப்பாமற் செய்வனென் றுத்தரம்.

(சஅ) உபாசனை லோகவிவகாரத்திற்கு விரோதமென்கிற தெதனாலென்கிற சங்கைக்கு,

மனதிலே தியானமுந் தேகேந்திரியாதிகளிலே செய்தொழிலுமாக விருக்கின்றபடியினாலே விவகாரம் விரோதமென்றுத்தரம்.

(சக) ஞானத்திற்கு விவகார விரோதமில்லையென்கிற தெதனாலென்கிற சங்கைக்கு,

ஆத்மாமாத்திரஞ் சின்மாத்திரம் மற்றுள்ள வெல்லாம், மாயாமயமென்கிற ஞானத்திற்கு விவகாரசாதனமான திரிவிதகரணத்தில் ஒன்றும் வேண்டாதபடியினால் விவகார விரோதமில்லையென் றுத்தரம்.

(ருO) சாக்ஷாத்காரம் உள்ளவனுக்கு லக்ஷணமேதென்கிற சங்கைக்கு,

கடத்தைப் பார்க்கிறவன் புத்தியைத் தண்டியாதது போலத் தத்துவம் உள்ளபடி கண்டு களித்துக் கவலை கெட்டிருப்பனென்றுத்தரம்.

(ருக) தியானம் பண்ணுகிறவனுக்கு லக்ஷணமேதென்கிற சங்கைக்கு,

பிரபஞ்சத்தை நினைத்தாற் றியானங் கலைந்து கெட்டுப் போமென்கிற விவேகத்துடனே புத்தியை மறித்துத் தண்டித்துக்கொண்டிருப்பனென் றுத்தரம்.

(ருஉ) ஒருக்காலறியப்பட்ட கடத்தை வேண்டிய போதறிகிறதற்குஞ் சிந்திக்கிறதற்கும் இப்படியிருக்கு மென்று சொல்லுகைக்கும் யத்தனமில்லையே இப்படிகூடுமோ பிரமக்ஞானிக்கென்கிற சங்கைக்கு,

அப்பிரகாசமாயிருக்கிற கடமே ஒருக்கால் கண்டது உடனே யிப்படித் தெரிந்தாற் சோப்பிரகாச சைதன்னியத் திற்குக் கேட்கவேண்டுமோ வென்றுத்தரம்.

(ருங) நான் பிரமமென்கிற விருத்திக்ஞானம், க்ஷண ப்போதிலே நஷ்டமாய்ப்போமென்கிற சங்கைக்கு,

அது கடக்ஞானத்திலுஞ் சரியல்லவோவென்றுத்தரம்.

(ருச) இப்படித்தத்துவக்ஞானிக்கொருசிந்தனையு மில்லாவிட்டால் எந்நேரமும் மனது வெளியிலே நாடுமென்கிற சங்கைக்கு,

கற்பிதவஸ்துப் பிரவிருத்தித்ததுகொண்டு ஆனியேதென்றுத்தரம்.

(ருரு) இப்படியானால் உம்முடைய சித்தாந்தம் அவமரியாதையாமென்கிற சங்கைக்கு,

விதிநிஷேத சாஸ்திரமரியாதை தத்துவக்ஞானியின் பொருட்டுச் சொன்னதல்லவென் றுத்தரம்.

(ருசு) விதிநிஷேத சாஸ்திரம் ஆனைக்குறித் துண்டாயிற்றென்கிற சங்கைக்கு,

வர்ணாச்சிரமம் வயதவஸ்தையென்கிற அபிமானியின் பொருட்டுண்டாயிற்றென்றுத்தரம்.

(ருஎ) ஞானிக்கு வர்ணாச்சிரமாதிகள் தேவையில்லையோவென்கிற சங்கைக்கு,

வர்ணாச்சிரமாதிகள் மாயாகற்பித வுபாதி மாத்திரத்திலே கண்டதல்லாமல் ஆத்மாவினிடத்திலே யில்லையென்றுத்தரம்.

(ருஅ) முன்னக்ஞானவஸ்தையில நுசரித்தவிதிகள் மற்றேநவஸ்தையிற் கைவிட்டாற் றோஷமில்லையோவென்கிற சங்கைக்கு,

கர்மிகளுக்குப் பால்யாவஸ்தையில் விதி நிஷேதந்தே வையற்றதுபோல ஞானவஸ்தைக்குந் தேவையில்லை யென்றுத்தரம்.

(ருக) குழந்தை ஒன்றுமறியாத அஞ்ஞானியல்லவோ ஞானியும் அப்படித்தானேயோ வென்கிற சங்கைக்கு,

ஒன்று மறியாதவனுக்கும் எல்லாமறிந்து சர்வேஸ்வரனாயிருக்கிற ஞானிக்கும் விதி நிஷேதபேதந் தேவையில்லை யென்றுத்தரம்.

(சுo) பின்னையாருக்கு விதிநிஷேதபேதமென்கிற சங்கைக்கு,

சொற்பமறிந்தும் அறியாமலுமாகவிருக்கிற நடுநாடனுக்கென்றுத்தரம்.

(சுக) ஞானியாயிருக்கிறவன் ஜெகதீசுரனைப்போற்சாபானுக்கிரகம் பண்ணவேண்டுமென்கிற சங்கைக்கு,

சாபானுக்கிரக சாமார்த்தியந் தபோபலமேயல்லாமல் ஞானபலமல்லவென் றுத்தரம்.

(சுஉ) தபோமூலமாகப் பிரமத்தை யறியவேண்டுமென்று தைத்திரிய வுபநிஷத்திலே சொன்னபடியினாற் றபோபலமல்லவோ க்ஞானமென்கிற சங்கைக்கு,

ஞானகாரணமான தபசு சாபானுக்கிரகத்திற்குக் காரணமல்லவென் றுத்தரம்.

(சுங) பூர்வாசாரிகளாயிருக்கிற வியாசர் முதலானபேருக்கு இருவகையுங் காணப்பட்டிருக்கிறதே அப்படியிருக்கவேண்டாமோ ஞானமுள்ளபேர்களுக் கெல்லாமென்கிற சங்கைக்கு,

மந்திரவாதசித்தியும் ஞானமும், ஒருவரிடத்திலேயிருக்கக்கண்டாற்போலவும், சோதிரிஷமும் ஞானமும் ஒருவரிடத்திலேயிருக்கக்கண்டாற்போலவும், ரசவாதமும் ஞான

மும் ஒருவனிடத்திலே யிருக்கக்கண்டாற் போலவும், சாபா நுக்கிரகசாமார்த்தியமும் ஞானமும்வியாசாதிகளிடத்திலே காணப்பட்டது. இந்தச் சாபாநுக்கிரக சாமார்த்திய மெல்லாம்ஞானமல்ல ஞானமாத்திர மப்பியாசித்தவனிடத்திலே ஜீவன்முத்தி யனுபவமாத்திரமிருக்குமென் றுத்தரம்.

(௬௪) சாபாநுக்கிரக சாமர்த்தியமில்லா திருந்தால் இவனென்ன ஞானியென் றெல்லாரும் நிந்திப்பார்களென்கிற சங்கைக்கு,

விதிநிஷேத சாஸ்திரத்தைக் கைவிட்ட சந்நியாசிகளை யெல்லாரும் பூஜிக்கின்றதேயல்லாமல் நிந்திக்கக் காணே மென் றுத்தரம்.

(௬௫) போகலம்படராயிருக்கிற அார்த்தர்களெல்லாம் நிந்திக்கிறார்களென்கிற சங்கைக்கு,

இந்தப் பிரகாரத்தில் வர்ணாச்சிரமமுடைய பேர்கள் தேகாபிமானிகள் ஞானியை நிந்திக்கட்டும். மாடுகள், புலிகள், ஞானியைப் பாயட்டும், அதனாலே ஞானிக் கானியேது. ஆனபடியினாலே இப்படி வேண்டியவண்ண மிருக்கலாமென்றபடியினாலே ஞானிக்கு இராச்சியபாரம் பண்ண இச்சையுண்டாயினும் பண்ணலாமென் றுத்தரம்.

(௬௬) மாயாகற்பிதமாயிருக்கிற சகத்து மித்தையென்கிற புத்திவந்தபின் இராச்சியபாரம்பண்ண இச்சைவந்தால் ஞானம் அப்பிரயோசனமாமென்கிற சங்கைக்கு,

மித்தியாபுத்தியினு லாசையற்றுப்போனால் கர்மந்தான் உபாசனைதான் தியானந்தான் இராச்சியந்தான் பிராரத்த முள்ளபடி பண்ணிவருவன் ஞானியென் றுத்தரம்.

(௬௭) தியானிக்கு மிப்படி வேண்டியவண்ண மிருக்கலாகாதோ வென்கிற சங்கைக்கு,

மூர்த்தித் தியானம்போலத் தியானத்தினால் நான் பிரமமென்கிற நிலை தியானம்விட்டாலில்லாமற் போகிறபடியினால் நிரந்தரஞ் சாவதானமாய்த் தியானம்பண்ணிக்கொண்டிருக்கவேண்டும் ஞானியைப்போல வேண்டியவண்ணமிருக்கக்கூடாதென் றுத்தரம்.

(சுஅ) ஞானிக்கு ஞானத்தைமறந்திருக்கிறவேளையிலே பிரமத்துவமில்லாமை சரியல்லவோ வென்கிறசங்கைக்கு,

பிராமணனுக்கு நான் பிராமணனென்கிறது நினையாவிட்டாலுஞ் சுபாவசித்தமா யிருக்கிறாற்போல லக்ஷணாவிருத்தியினாலே ஆத்மாவைச் சோதித்திருக்கிற ஞானிக்கு நான் பிரமமென்கிறது மறந்திருந்தாலுஞ் சுபாவசித்தமாயிருக்குமேயல்லாமற் றியானம்பண்ணுகிறவனைப்போலமறந்துகெட்டோமென்கிற பீதியில்லையென் றுத்தரம்.

(சுகூ) இந்தப்பிரகாரத்திற்கு உபாசகனுக்கும் நான்பிரமமென்கிறது மறந்திருந்தாலும் சுபாவசித்தமாயிருக்கிற பிரமத்துவமுண்டோ இல்லையோவென்கிற சங்கைக்கு,

இந்த வுபாசகன்மாத்திரமல்ல பாமரர் நாற்கான்மிருகங்கண் முதலான செந்துக்களுக்கெல்லாம் பிரமத்துவஞ் சுபாவசித்தந்தானேயென் றுத்தரம்.

(எ0) பாமரர் மிருகங்கண் முதலான செந்துக்களுக்கு நான் பிரமமென்கிற அறிவில்லாதபடியினாலே சுபாவசித்தமாயிருக்கிற பிரமத்துவத்தினாற் பிரயோசனமேதென்கிற சங்கைக்கு,

அப்படி யறிவில்லாதது இந்த வுபாசகனுக்குஞ் சரியானபடியினால் சுபாவசித்தப் பிரமத்துவத்தினாற் பிரயோசனமற்றுப்போனது இவனுக்குஞ் சரியென் றுத்தரம்.

(எக) ஆனால் பிரமத்தியானமும் இப்படிப் பிரயோசன மற்றதோவென்கிற சங்கைக்கு,

பட்டினியே கிடக்கிறவனினும் பிக்ஷைபுகுந்தாகிலும் புசிக்கின்றது தாழ்வில்லையென்றாற்போல விருதாவியாபாரத்திலே கிடந்து விக்ஷேபப்படுகிறதிலும் பிரமத்தியான மதிகமென் றுத்தரம்.

(எஉ) எந்தெந்தச் சாதனங்களிற் பிரமத்தியானம் அதிகமென்கிற சங்கைக்கு,

பாமர வியாபாரத்திலுங் கர்மாநுஷ்டான மதிகம் அதனிலுஞ் சகுணோபாசனை யதிகம் அதனிலும் நிர்க்குணத்தியான மதிகமென் றுத்தரம்.

(எங) இவைகளெல்லாம் ஒன்றுக்கொன்று தாரதன்மியமா யிருப்பானேனென்கிற சங்கைக்கு,

இராஜாவைக் கிட்டக்கிட்டப் பௌஷதிகமும் பிரயாசங் கொஞ்சமு மாகிறாற்போல பிரமத்தைக் கிட்டக்கிட்ட ஆதிக்கமதிகமென் றுத்தரம்.

(எச) பிரமத்தியானத்திற்குமேல் ஞானக்கிரமம் எப்படி யடையப்படுமென்கிற சங்கைக்கு,

சம்வாதிப்பிராந்தி முடிந்தவிடத்திலே ரத்தினத்தைக் கொடுக்கிறாற்போல நிர்க்குணத்தியான முதிர்ந்தவிடத்திற் பிர்மக்ஞான சமாதியாகிறதேயல்லாமல் வேறுசாதனமில்லை ஆகையால் அறிந்தவர்கள் அறியாதவர்கள் எல்லாருக்குங் குறுக்குவழியாக மோக்ஷத்தைக் கொடுக்கையினால் நிர்க்குணத்தியானத்தைச் சொல்லவந்தோம் சித்தநிரோதமேசமாதியென்றும் அதுவே சாத்தியமென்றும் அமுதவிந்துபநிஷத்துச்சொல்லுகிறதென் றுத்தரம்.

(எரு) இது ஒன்று மறியாதவனுக்குத் தியானத்தினு லெப்படிச் சித்திக்குமென்கிற சங்கைக்கு,

தியானமாத்திரங்கொண்டு நான் பிரமமென்கிற புத்தி திடப்பட்டவுடனே நிர்விகாரத்தினுடைய லக்ஷணமும் புத்தியி லெளிதாயேறும் இது காரியத்தினுற் சமாதியென்று சொல்லப்படும் ஆகையினுற் சகலசாதனங்களிலும் பிரமத்தியான மதிகமென் றுத்தரம்.

(எகா) இப்படி மூர்த்தித்தியான தீர்த்தாடன செபங்களும் மோக்ஷசாதனங்க ளாகாதோவென்கிற சங்கைக்கு,

பிரமத்தியானத்தை யுபேக்ஷித்து மூர்த்தித்தியான தீர்த்தாடன செபங்களைச்செய்கிறது உள்ளங்கையிலிருக்கிற பாற்றிரளையை யெறிந்து போட்டு எட்டப்படாத முழங்கையை நக்குகிறதற்குச் சரியாகையால் பிரமத்தியானத்திற்குச் சரியானசாதனம் ஒன்றுமில்லையென் றுத்தரம்.

(எஎ) இந்தக்கிரமம் சாக்ஷாத்கார விசாரத்தைவிட்டுத் தியானம்பண்ணுகிறவனுக்குஞ் சரியல்லவோ வென்கிற சங்கைக்கு,

நீசொன்னது உண்மைதானே இந்தப்படி * யோகமானது † சாக்ஷாத்கார விசாரானுசந்தானம் பண்ணமாட்டாதவனுக்கு விதியென் றுத்தரம்.

(எஅ) சாக்ஷாத்கார விசாரம்போல யோகஞ் சாக்ஷாத்காரத்திற்குக் கிட்டின பூமியென்கிற தெதனுலென்கிற சங்கைக்கு,

யோகத்தினுல் விக்ஷேபமெல்லாந் தடைபட்டுச் சித்தநிரோதம்வரும் அந்தச் சித்தத்திலே சாக்ஷாத்கார விசாரம்

---

* யோகம்-என்றது-உபாசனை.

† சாட்சாத்காரம் - என்றது - அபரோட்சஞானம்.

எளிதாக வேரும் ஆகையினல் யோகம் முக்கியமென் றுத்தரம்.

(எக) இப்படியாளுல் சாங்கியத்திற்கும் யோகத்திற்கும் விரோதமேதென்கிற சங்கைக்கு,

சிதாபாசனையும் ஆத்மாவையும் பகுத்துக்காண்கிறதும் ஒருமையாய்க்காண்கிறதுமே விரோதமென் றுத்தரம்.

{ இவை மூலசுலோகப்படி இரண்டாம் சமாதானம். }

[எக] யோகம் சாங்கியம் என்னும் இரண்டும் தத்துவ ஞான வாயிலாக மோட்சத்திற்கு சாதனமாமென்பதிற் பிரமாணமேதென்னுஞ் சங்கைக்கு,

சாங்கியர்களா லியாதொருபதம் அடையப்படுகிறதோ அந்தப்பதமே யோகிகளாலும் அடையப்படுகிறது. இப்படியாதொரு புருஷன் சாங்கியயோகங்கள் இரண்டிற்கும் பலன் ஒன்றென்று பார்க்கிருனே அவன் சாஸ்திரார்த்தத்தை நன்ருகப் பார்த்தவனுமென்னும் கீதாவாக்கியமும் சாங்கியமும் யோகமும் தத்துவஞானத்திற்குக் காரணமாமென்னுங் கீதைக்குமூலசுருதியும் பிரமாணமாமென் றுத்தரம்.

[அ0] சாங்கியயோகமிரண்டையும்தத்துவஞானவாயிலாக மோக்ஷசாதனமாக ஒப்பினல் சாங்கியயோக சாஸ்திரங்களிற் சொல்லிய தத்துவங்களையும் அங்கீகரிக்கவேண்டுமே என்னுஞ் சங்கைக்கு,

சாங்கியயோக சாஸ்திரங்களில் சுருதி விருத்தங்களான யாதொரு அம்சங்களுண்டோ அவை * ஆபாசங்களாதலால் அவை அங்கீகரிக்கத்தக்கனவல்லவென் றுத்தரம்.

(அ0) பிரமத்தியானத்தினாலே சாக்ஷாத்கார விசாரமல்லாமலும் மோக்ஷமுண்டென்கிறதற்கு யுத்தியேது பிரமாணமேதென்கிற சங்கைக்கு,

குளவியை நினைத்தபுழு குளவியாகிறாற்போல வென்கிறது யுத்தி மரணகாலத்தில் எதைநினைத்தான் அதுவாய்ப்போவனென்கிற கீதாவசனம்பிரமாணமென் றுத்தரம்.

(அக) தியானந் திடப்பட்டல்லவோ சரீரபதனகாலத்தி லுதவவேண்டும் மத்தியிலே சரீரம்விழுந்தாற் கெதியேதென்கிற சங்கைக்கு,

பிரமலோகத்திலேபோய்ப் பிரமாவிடத்திலுந் தத்துவக்ஞானத்தை யடைந்து மோக்ஷத்தை யடைவனென்று தாபநீய வுபநிஷத்துச்சொல்லுகிறது இதைத்தவிர மோக்ஷத்திற்கு வழியில்லையென்று யசுர்வேதத்திற் சொல்லுகிறது நசிகேதுவிற்கும் இயமன் இதுவே வழியாகச் சொன்னார் சத்தியகாமருக்கும் † பிப்பலாதர் இப்படியே சொன்னார்

* ஆபாசம் என்றது-வாதிக்கப்படுவது. அவை கேவலம்-பிரகிருதியே சகத்திற்குக் காரணம். ஈசுரன் அல்ல-அந்தப்பிரகிருதி. நித்தியம். ஆத்மா நானா. இவ்வள வம்சம் சாங்கிய சாஸ்திரத்தில் சுருதிவிருத்தம்.

ஈசுரன் - தடஸ்தம் - பிரதானம் - நித்தியம்-சீவர்கள்-வாஸ்தவம் - நானா - இவ்வளவம்சம் யோகசாஸ்திரத்தில் சுருதிவிருத்தம்.

† பிப்பலாதர் - என்றவர் - ஒருமுனிவர்.

கிருஷ்ணனும் ஆத்மகீதையிலே பூமியிற்குள்ளே யிருக்கிற புதையலை யெடுக்கிறதற்கு வெட்டுகிறதேயல்லாமல் வேறு வழியில்லாததுபோலப் பிரமத்தையடைகிறதற்குத் தியானமேயல்லாமல் வேறுவழியில்லையென்றும் தேகமாகின்றகல்லை புத்தியாகிற குந்தாலியாலே பொளிந்துதள்ளி நாம் பிரமமென்கிற தியானத்தினாற் பிரமமாகின்ற புதையலை யடையலாமென்றார் ஆகையாற் பிரமத்தியானத்திற்குச் சரியான சாதனமொன்று மில்லையென் றுத்தரம்.

(அஉ.) சாக்ஷாத்கரித் தறியவேண்டிய பிரமத்தை யப்படியடையாமற் றியானத்தினா லெப்படி யடையலாமென்கிற சங்கைக்கு,

அநுபவமில்லாவிட்டாலும் அசத்தாயிருக்கிற வஸ்துவையுந் தியானத்தினா லடையலாயிருக்கையினாலே யுற்று விசாரித்தாற் றானே யுண்மைபொருளாயிருக்கிற பிரமம், நாம் பிரமமென்கிற தியானத்தினாலே அடையலாமோவென்றொருவரையுங் கேட்கத்தேவையில்லை பூதமாயிருக்கிற காசியை யுபாசிக்கையினாற் றாரகப்பிரமஞ்சித்திக்கிறாற்போலவும் சம்வாதிப் பிராந்தியிலே பிரவிருத்திக்க, ரத்தினமகப்படுகிறாற்போலவுந் தேகாபிமானத்தைத் தவிர்ந்து தியானத்தினால் அத்துவிதமாயிருக்கின்ற ஆத்மாவே தானென்று தியானிக்கிறவன் இங்கேதானே மோக்ஷத்தையடைவனென்று வேதஞ்சொல்லுகிறதென் றுத்தரம்.

இந்தத் தியானதீபிகையை அநுசந்தானம்பண்ணி வருகிறவன் பிரமத்தியானத்தை யடைந்து மோட்சத்தை யடைவன்,

நான்காவது தியானதீபம் முற்றிற்று.

ஆகச்சங்கை - ௩௯௭.

## ஐந்தாவது - நாடகதீபம்.

வித்தியாரண்ணியஸ்வாமிகள் வேதாந்தார்த்தம் விரிவிலே பார்க்கமாட்டாதவருக்கு ஆத்மக்ஞானம் வருகிறவழியை நாடகதீபிகையிலே சங்கிரகித்துச் சொல்லும்படி.

ஆத்மாவாவதாரொன்கிற சங்கைக்கு,

மாயாசத்திக் காதாரமாயிருக்கின்ற அத்துவிதாநந்த சைதன்னியமே ஆத்மாவென் றுத்தரம்.

(உ) இவருக்குச் சிருஷ்டி யெதனுல் வந்ததென்கிற சங்கைக்கு,

நிர்விகார சைதன்னியமாயிருக்கிற இவர்க்குத் தம்முடைய மாயா வுபாதியினுல் வந்ததென் றுத்தரம்.

(ங) சீவனுவதாரொன்கிற சங்கைக்கு,

உபாதிகளிலே பிரதிவிம்பித்துச் சரீரங்களிலே பிரவேசித்து விவகரிக்கிற சிதாபாசன் சீவனென் றுத்தரம்.

(ச) சம்சாரபந்த மாவதேதென்கிற சங்கைக்கு,

சிதாபாசத் தோற்றரவான துவிதமே பந்தமென் றுத்தரம்.

(ரு) இந்தப்பந்தம் விடுகிற முத்தி யேதென்கிற சங்கைக்கு,

விசாரத்தினுல் மாயை நஷ்டமானபின்சித்திக்கிற அத்துவிதமே முத்தியென் றுத்தரம்.

(சா) முத்திக்குச் சாதனமேதென்கிற சங்கைக்கு,

விசாரத்தினுற் பிறந்தஞானமே முத்திக்குச் சாதனமென் றுத்தரம்.

(எ) இந்தவிசாரம் எதனுல்வருமென்கிற சங்கைக்கு,

அநேகசென்மம் ஈசுரனை யுபாசித்தபேருக்கு வருமென் றுத்தரம்.

(௯) குருவைவழிபட்டு விசாரம்பண்ணுகிறவ னாரோன் கிற சங்கைக்கு,

தேகாபிமானியாயிருக்கிற சைதன்னியமே விசாரகர்த் தனென் றுத்தரம்.

(௧) குருமுன்னிலையாய் ஞானங்கொடுக்கிறவ ராரோன் கிற சங்கைக்கு,

செகதீசுரனே குருமூர்த்தமாகவந்து ஞானங்கொடுக் கிறவரொன் றுத்தரம்.

(௧௦) அந்த ஈசுரன் எதுசெய்தால் ஞானங்கொடுப்பா ரொன்கிற சங்கைக்கு,

நிஷ்காம அநுஷ்டானபத்தியினால் ஞானங்கொடுப்பா ரொன் றுத்தரம்.

(௧௧) ஈசுரனாவதாரொன்கிற சங்கைக்கு,

சாத்வீகவுபாதியிலே பிரதிபிம்பித்துத் திரிமூர்த்திரூப மாய்த் தோற்றின சைதன்னியமே ஈசுரனென் றுத்தரம்.

(௧௨) ஒரு சைதன்னியத்திற்கு இருவகைத் தாரதன்மி யமெதனால் வந்ததென்கிற சங்கைக்கு,

மாயையவித்தையென்கிற வுபாதியினாலே வந்ததேயல் லாமற் சைதன்னியத்தைத்தொட்டு வரவில்லையென் றுத் தரம்.

(௧௩) இவர் மாயையினாற் சிருஷ்டிபண்ணுகிற வகை யெப்படியென்கிற சங்கைக்கு,

சாத்வீகவுபாதியினால் ஈசுரனையும், இராசத வுபாதியி னாற் சீவர்களையும், தாமதவுபாதியினால் மனது முதலான பூதபௌதிகப் பிரபஞ்சத்தையுஞ் சிருஷ்டித்தார் பிரகிருதி குணத்திரயம், மனமென் றுத்தரம்.

(௧௪) சிருஷ்டிக்குச் சாதனபாரம்பரை யேதென்கிற சங்கைக்கு,

நான் என்னதென்கிறவிருத்தியேசாதனமென்றுத்தரம்.

(கரு) எத்தனைவகுப்பிலே சிருஷ்டியடங்கிற்றென்கிற சங்கைக்கு,

நானென்கிறவிருத்தியிலும், இதுவென்கிற விருத்தியிலும், கர்த்தாவும் விஷயமுமாயிருக்கிற சிருஷ்டி யடங்கிற்றென் றுத்தரம்.

(கசு) இந்த வகுப்பெல்லாந் தோற்றுவிக்கிறவ ராரொன்கிற சங்கைக்கு.

இத்தனையுந் தோற்றுவிக்கிறவ ராத்மாத்தானேயென்றுத்தரம்.

(கஎ) நானென்கிற விருத்தி கர்த்தா வொருவனைக் கற்பிப்பானேனென்கிற சங்கைக்கு,

நானென்கிறவிருத்தி ஏகாகாரமானபடியினுற் கர்த்தா வொருவனைக் கற்பித்ததென் றுத்தரம்.

(கஅ) இதுவென்கிறவிருத்தி சத்தாதிகளைந்தையுங்கற்பிப்பானேனென்கிற சங்கைக்கு,

இதுவென்கிற விருத்தி இந்திரியபேதங்களினுல் ஐந்தாகாரமாய்ப் பிரிந்தபடியினுற் பஞ்சவிஷயங்களையுங் கற்பித்ததென் றுத்தரம்.

(கக) கர்த்தா ஒன்றென்கிறதிலும் விருத்தி இரண்டென்கிறதிலும் விருத்தி கற்பிதமாமென்கிறதிலும் பிரமாணமேதென்கிற சங்கைக்கு,

நாடகசாலையின் விளக்கு, இராசா, பரிசாரகர், ஆடுகின்றவர்கள், தாளமத்தளக்காரர், இவர்களைத் தாரதம்மிய மறத்தோற்றுவித்து அவர்க ளில்லாதவேளையிலும் விளக்குத் தானேவிளங்குகிறுற்போலக் கர்த்தாமுதலானவை யுள்ளவேளையினும் இல்லாதவேளையினுங் கண்டிருக்கின்ற சாக்ஷியே தானென்கிற அநுபவமே பிரமாணமென்றுத்தரம்.

(௨0) நாடகசாலையின் விளக்கு இராசா முதலானதிருஷ்டாந்தத்தைச் சரீரத்திலே ஈதின்னதென்று பகுத்துக்காட்டுமென்கிற சங்கைக்கு,

அகங்காரமே பிரபு, விஷயங்களே பரிசாரகர், புத்தியேகூத்தாடிச்சி, இந்திரியங்களே தாளமத்தளக்காரர், இத்தனையுந் தோற்றுவிக்கின்ற சாக்ஷியே தீபமென்றுத்தரம்.

(௨௧) அசைவற்றிருக்கின்ற சாக்ஷிக்குத் தீவட்டிதிருஷ்டாந்தமாகாதென்கிற சங்கைக்கு,

அசையாமல் நாட்டிவைத்த பகல்வத்தி இருந்தவிருப்பிலே நாலுபுறமுந் தோற்றுவிக்கிறாற்போல அகண்டபரிபூரணமாய் அசைவற்றிருக்கிற ஆத்மாவே உள்ளும் புறம்புந்தோற்றுவிக்கிறானென் றுத்தரம்.

(௨௨) உள்ளாவதெதைக்குறித்து வெளியாவதெதைக்குறித்தென்கிற சங்கைக்கு,

உள்ளும் புறம்புமென்கிறது சரீரத்தைக் குறித்தல்லாமற் சாட்சியைக் குறித்தல்லவென் றுத்தரம்.

(௨௩) உள்ளேயிருக்கிறவனெவன் வெளியேயிருக்கின்றவை யெவையென்கிற சங்கைக்கு,

நானென்கிற அகங்காரி உள்ளே யிருக்கிறவன் வெளியேயிருக்கின்றவை விஷயங்களென் றுத்தரம்.

(௨௪) உள்ளும் புறம்புஞ் சஞ்சரிக்கிற தாரென்கிற சங்கைக்கு,

உள்ளும்புறம்புஞ் சஞ்சரித்துக் கூத்தாடுகிறது புத்தியென் றுத்தரம்.

(௨௫) உள்ளும்புறம்பு மசையாமலிருக்கிறவ ராரென்கிற சங்கைக்கு,

உள்ளும்புறம்பு மசையாமனின்று தோற்றுவிக்கிறவர் சாக்ஷியென் றுத்தரம்.

(உ௬) உள்ளும்புறம்புஞ் சஞ்சரிக்கிறதே புத்தியானல் அப்படியொருவருஞ் சொல்லக்காணோம் நான்போனேன் வந்தேனென்று சொல்லுகிறார்கள், இதிலே காரணமேதென்கிற சங்கைக்கு,

பலகணி வழியாயுள்ளே விழுந்த வெய்யிலிலே கையசைகிறதை வெய்யிலசைகிறதென்றாற்போல உள்ளேயிருக்கிற புத்தியும் இந்திரியதுவாரத்தின்வழியே வெளியிலே புறப்பட்டுலைந்த தன்னுடைய வுலைச்சலைத் தன்னைத்தோற்றுவித்த சாக்ஷியின்பேரிலே ஆரோபிக்கிறதாகையால் ஆத்மாவுக் கலைச்சலில்லையென் றுத்தரம்.

(உ௭) இப்போதின்னதத்துவம் இன்ன இன்னவிடத்திலேயிருக்கிறதென்று பகுத்துக்காட்டினாற்போல சாக்ஷியிருக்கிறவிடமும் பகுத்துக்காட்டவேண்டுமென்கிற சங்கைக்கு,

புத்திமுதலானதெல்லா மொழிந்திருக்கிற அவஸ்தையிலே சாக்ஷியிருக்கிறவிடத்தைக் காண்பாயென் றுத்தரம்.

(உ௮) அப்போதெனக்கொரு தேசமுங் காணப்படவில்லை சாக்ஷியிருக்கிறவிடம், நீர்தாமே சொல்லுமென்கிற சங்கைக்கு,

நிலத்திலே யிருக்கின்றார் நீரிலேயிருக்கின்றாரென்கிறதுபோலப் புத்திமுதலானவை யொழிந்தவேளையிலே காணப்படாததுகொண்டு ஒருதேசத்தையும் பற்றியிருக்கிறவரல்ல சகல சககற்பனைக்கும் அதிஷ்டானமாயிருக்கிற படியினாற் சர்வபரிபூரணரென் றுத்தரம்.

(உ௯) சகல சககற்பனையுங் கற்பிக்கிறதேதென்கிற சங்கைக்கு,

சொப்பனத்திலே யுட்பிரபஞ்சத்தையுஞ், சாக்கிரத்திலே வெளிப்பிரபஞ்சத்தையுங் கற்பித்தது புத்தியென் றுத்தரம்.

(௩௰) சாக்ஷியெப்படிக் காண்கிறுரென்கிற சங்கைக்கு,

இத்தனையும் அறிவாயிருந்தறிகிறவர் சாக்ஷியென் றுத்தரம்.

(௩க) அவரை நாமெப்படியறிகிறதென்கிற சங்கைக்கு,

அவருன்னாலறியப்படுகிறவரல்ல நீ தானாகவே யிருக்கிறவஸ்துவென் றுத்தரம்,

(௩உ) இப்படிக்கொத்த அறிவு வருகிறதற்குபாயமேதென்கிற சங்கைக்கு,

குருமுகமாய் வேதாந்தவிசாரம் பண்ணுகிறதே யுபாயமென் றுத்தரம்,

(௩௩) தானயிருக்கிற அறிவை யறியவொட்டாத பிரதிபந்தமேதென்கிற சங்கைக்கு,

தேகாதிகளே நாம், பிரபஞ்சமே சத்தியமென்கிற விருவகையும் பிரதிபந்தமென் றுத்தரம்.

(௩௪) இந்தப் பிரதிபந்தத்தைத் தள்ளுகிற தெப்படியென்கிற சங்கைக்கு,

இந்தப்புத்தியைத் தள்ளுகிற யுக்தியையும் புத்திகற்பித்த பிரபஞ்சத்தையுங் காண்கிற அறிவாயிருக்கிறதே தள்ளுகிறதென் றுத்தரம்.

இந்த நாடகதீபிகையை யநுசந்தானம் பண்ணச்சாக்ஷியே தானகவிளங்கும்.

ஐந்தாவது நாடகதீபம்-முற்றிற்று.

ஆகச்சங்கை - ௪௰க.

## ஆறுவது - தத்துவவிவேகம்.

### குருஸ்துதி.

வித்தியாரண்ணியஸ்வாமிகள், லோகாநுக்கிரகார்த்தமாகச் சகலவேதாந்த சித்தாந்தமாகிய தத்துவவிவேகத்தை வெளிபண்ணத்தக்கதாக ஆதியிலே சிஷ்டாசாரமான குருவுக்கு நமஸ்காரம்பண்ணும்படி,

அநேகவிதலக்ஷணவிஸ்தாரத்துடனேகூடியிருக்காநின்ற மஹாமாயாமோஹத்தை எந்நேரமும் எடுத்து விழுங்குகிறதே வேலையாயிருக்கின்ற ஸ்ரீசங்கராசாரிய குருமூர்த்திகளினது பாதாரவிந்தப்பொருட்டு நமஸ்காரம்,

அந்தக் குருமூர்த்திகளினது பாதாரவிந்தப் பொருட்டினுல் நிர்மலாந்தக் கரணுளுக்குப் பரமாத்மாவை யெளிதாய்க் கண்டறியும் வழி தத்துவ விவேகஞ் சொல்லும்படி சொல்லுகிறேம்,

(௧) தத்துவமாவதேது அதத்துவமாவதேது விவேகமாவதேதென்கிற சங்கைக்கு,

தத்துவமாவது. பரமாத்மா, அதத்துவமாவது, மாயாதற்காரியம். இதனைப்பகுத்தறிகிறதேவிவேகமென் றுத்தரம்.

(௨) பகுத்தறிகிறதெப்படியென்கிற சங்கைக்கு,

அறிவாயிருக்கிற தின்னது அறியப்படுகிறதின்னதென்று காண்கிறதே பகுத்தறிகிறதென் றுத்தரம்.

(௩) அறிவெத்தனை விதமாயிருக்குமென்கிறசங்கைக்கு,

அறிவாயிருக்கிற ஆத்மா, ஒன்றேயென் றுத்தரம்.

(௪) அறியப்படுகிறதெத்தனை விதமாயிருக்குமென்கிற சங்கைக்கு,

அறியப்படுகிறது, ஸ்திரமென்றும், அஸ்திரமென்றும், மூலாக்ஞான விருளென்றும், நிர்வீதமாயிருக்குமென் றுத்தரம்.

(௫) அறிவு ஒன்றென்கிறதையும், அறியப்படுகிறது மூன்றென்கிறதையும், தெரியச்சொல்லுமென்கிற சங்கைக்கு,

சாக்கிரத்திலிடத்திலே ஸ்திரமாயிருக்கும்விஷயங்கள் சொப்பனத்திலே அஸ்திரமாயிருக்கும் விஷயங்கள். சுழுத்தியிலே அந்தகாரமாக மூன்றுகவிருக்கும். இவைகளைத் தினந்தோறும், மாதந்தோறும், வருஷந்தோறும், கற்பந்தோறும், அறிந்துகொண்டிருக்கிற அறிவு, அந்த விஷயங்களைப்போல, வொருக்காலுந் தோன்றி யழியாதபடியினுல், ஆத்மா, ஒன்றேயொழிய இரண்டில்லையென் றுத்தரம்.

(௬) இவைகளில் ஆநந்தமாய் நாடவேண்டிய பொருளேது தள்ளவேண்டிய பொருளேதென்கிற சங்கைக்கு,

மூன்றவஸ்தையினுங் காணப்பட்ட பொருளெல்லாந் தனக்கன்னியமானபடியினுலே, தள்ளவேண்டியது, அறிவாயிருக்கிற தன்னைக் கைவிடப்படாதபடியினுலே, ஆநந்தமாக நாடவேண்டியதென் றுத்தரம்.

(௭) இப்படி அறிவாகயிருக்கிற பொருள் எக்காலத்திலுந் தானுக யிருக்குமானுல், அஞ்ஞானகாலத்தில் அறியப்படாம லிருப்பானேனென்கிற சங்கைக்கு,

சகாபாடிகளுடனேகூடி ஓதுகின்ற தன்பிள்ளைக் குரல் தெரியாததுபோல, அநாதிசித்த அஞ்ஞானத்துடனேகூடிக் குழம்பித்தோற்றுகையால், தோற்றுமலிருந்ததென் றுத்தரம்.

(அ) அநாதிசித்த அஞ்ஞானமாவ தேதென்கிற சங்கைக்கு,

அக்கினியிற் சூடுபோலவும், சலத்திற் சயித்தியம்போலவும், பிரமத்தினிடத்திலே, சீவன், சகத்து, ஈசுரனை, உண்டாக்குகிற மூலப்பிரகிருதியே அநாதிசித்த வஞ்ஞானமென்றுத்தரம்.

(௯) இந்த அஞ்ஞானம் எதிலுண்டாயிற்றென்கிற சங்கைக்கு,

ரச்சுவினிடத்திற் சர்ப்பந்தோன்றினாற்போல, பிரமத்தினிடத்திலுண்டாயிற்றென் றுத்தரம்.

(க0) இதற்குலக்ஷணமேதென்கிற சங்கைக்கு,

சத்துமல்ல, அசத்துமல்ல, சதசத்துமல்ல, ஒன்றுமல்ல, பலவுமல்ல, சாவயவமுமல்ல, நிரவயவமுமல்ல, சாவயவ நிரவயவமுமல்ல, பிரமாணமாகியுமிருக்கும், அப்பிரமாணமாகியு மிருக்கும், நிரூபித்துப்பார்க்குமிடத்தில், லக்ஷணசூன்யமாய்ப் போமென்று வேதஞ்சொல்லுகிறது இதுவே, லக்ஷணமென் றுத்தரம்.

(கக) இப்படி யுண்டாகிய பிரகிருதி, எதுசெய்யுமென்கிற சங்கைக்கு,

தன்னுடைய முக்குணத்தினாலே, சீவன், சகத்து, ஈசுரனை, உண்டாக்கிற்றென் றுத்தரம்.

(கஉ) இது, எதனாற் போமென்கிற சங்கைக்கு,

பிரமமே நாமென்கிற அத்துவிதக்ஞானத்தினாற் போமென் றுத்தரம்.

(கங) முக்குணத்தினால், சீவன், சகத்து, ஈசுரனை, உண்டாக்கின விதம். எப்படியென்கிற சங்கைக்கு,

மூலப் பிரகிருதியினுடைய சாத்வீககுணமான சுத்தமாயையினிடத்திலே பிரதிபலித்தவன் ஈசுரன். பஞ்சகிருத்தியபாராயிருக்கிற இந்த அந்தரியாமியை யுண்டாக்கின

மாயைதானே அவருக்குக் காரணசரீரம். இராசதகுணமென்னும் அசுத்தமாயையான அவித்தையிலே பிரதிபலித்த சைதன்னியம், சீவன். இந்தப்பிராக்ஞனுக்குக் காரண சரீரமான அவித்தை தாரதன்மியமாய் வெகுவிதமானபடியினாற் சிதாபாசர்களும் அநந்தம். தாமதகுணப் பிரகிருதியிலே யிருந்தும் இந்தச்சீவர்களுக்குப் போக்கிய போகவிதிகளை யுண்டாக்க ஈசுராக்கினையினால் ஆகாசம் வாயு அக்கினிஅப்பு பிருதிவிஎன்னப்பட்ட மூக்குணத்துடனே கூடிச்சூக்ஷமபூதமைந்தும் உண்டாயின இந்தப் பூதங்களினுடைய சாத்வீகாம்சத்திலே பூதத்திற் கோரொருமாத்திரை யெடுத்து ஒன்றாகக் கூட்டிவைத்தது அந்தக்கரணம். இது சஞ்சல வியாபாரத்தினால் மனமென்றும், நிச்சயவியாபாரத்தினாற்புத்தியென்றும், இரண்டுவிதமாகவிருக்கும் மற்றும், சாத்வீகாம்சத்தில், பூதத்திற்கோ ரொருமாத்திரை யெடுத்துத் தனித்தனியே வைத்தது சுரோத்திராதி ஞானேந்திரியம். பூதங்களினுடைய ராசதாம்சத்திலே பூதத்திற்கோரொருமாத்திரையெடுத்து ஒன்றாகக்கூட்டிவைத்தது வியானாதி பஞ்சவாயுக்கள். மற்றும் இராசதாம்சத்திலே பூதத்திற்கோரொருமாத்திரை யெடுத்துத் தனித்தனியே வைத்தது வாக்காதி கர்மேந்திரியம். ஆக இந்தப்பதினேழு தத்துவமும், லிங்கசரீரமென்றும், சூக்ஷமசரீரமென்றும், போகசாதனமென்றுஞ், சொல்லப்படும். இந்தச் சூக்ஷமசரீரத்துடனே கூடின் அவித்தையாப் பிரதிவிம்பருக்குப் பிராக்ஞனென்கிற பேர்மாறித் தைசதனென்கிற பேருண்டாயின. சகலசீவர்களுடைய சூக்ஷமசரீரமுஞ் சூக்ஷமபூதமுங்கூடினசமஷ்டிபுத்தியினால், இரண்யகர்ப்பமென்றும், ஈசுரசூக்ஷம சரீரமென்றும் சொல்லப்படும். இந்தச் சூக்ஷமசரீரத்துடனே கூடின

மாயாப்பிரதிவிம்பருக்கு அந்தரியாமியென்கிற பெயர்மாறிச் சூத்திராத்மாவென்கிற பெயர் வந்தது. எங்குந் தாதான்மியமாயிருந்தபடியினு லிவரைச்சமஷ்டியென்பது. அவனவன் சரீரமாத்திரந் தாதாத்மியமாக விருந்தபடியினுற் சீவர்களை வியஷ்டியென்பது. சீவர்களுக்குப்போகமும் போகத்துக்கிடமான ஸ்தூலசரீரமு முண்டாக்கும்பொருட்டு தாமதகுணமாயிருக்கிற வாகாசாதிகளைப் பஞ்சீகரணம் பண்ணினர். அதெங்ஙனெனின்ல், பஞ்சபூதம் ஒவ்வொன்றை யீரிரண்டாக்கி முதற்பாதியைந்தையும், ஒவ்வொன்றை நன்னான்காக்கிப் பூதங்களினுடைய விரண்டாம்பாதியைந்திற் றன்னம்ஸத்துடனே கூட்டாமல் மற்ற நாலுபூதங்களினுடனுங் கூட்டுகிறது பஞ்சீகரணம். இப்படிப்பஞ்சீகரணம் பண்ணின ஸ்தூல பஞ்சபூதங்களிலே அண்டங்களும் புவனங்களும் நால்வகைத்தூலசரீரங்களும் போகமுதலான வஸ்துக்களும் உண்டாயின. இந்தத்தூலபூத பௌதிகங்களெல்லாம் ஒருமைப்பாடாய் ஈசுரஸ்தூல சரீரமென்றும் விராட்டென்றுஞ் சொல்லப்படும் இதனுடனே கூடின ஈசுரனுக்குச் சூத்திராத்மாவென்கிற பேர் மாறி வைஸ்வாநரனென்கிற பேர்வந்தது தைசதர்களெல்லாந் தூலசரீரங்களுடனேகூடி விஸ்வர்களாய்த் தேவதைகளென்றும், மநுடர்களென்றும், திரியக்கென்றும், பேரையுடையரானுர்கள். ஈசுரவாக்கியமான கர்மம், பத்தி, ஞானம், என்கிற காண்டத்திரயாநுஷ்டானம் பண்ணி அந்தர்முகமாகாமற் பகிர்முகமானுர்கள். எல்லாருமிப்படி ராகத்துவேஷபரராய்ப் பண்ணின கர்மத்தின் வசத்தினுற் சென்மபந்தங்களிலே ஆற்றிற் சுழிவழியே சுற்றுகின்ற புழுப்போலச் சுழன்ருர்கள். தயாளுவா யிருக்கிறவன் அந்தப்புழுக்களைக் கரையேற்றினவுடனே மரத்தினீழலிலே

யிருந்து சுகமடைந்தாற்போல, சற்கர்மபரிபாகத்தினாற்குரு ரூபமாகவந்த ஈசுரனுடைய ஞானோபதேசத்தினால் அபூர்வமாக ஒருவன், பஞ்சகோச விவேகத்தைப்பண்ணி முத்தியுமடைவானென் றுத்தரம்.

(௧௪) பஞ்சகோசங்கள் யாவையென்கிற சங்கைக்கு,

ஸ்தூலசரீரமே அன்னமயகோசமென்றும், கர்மேந்திரியமும்பிராணவாயுவுங்கூடிப் பிராணமயகோசமென்றும், மனமும்ஞானேந்திரியமுங் கூடிமனோமயகோசமென்றும், புத்தியும்ஞானேந்திரியமுங்கூடி விக்ஞானமயகோசமென்றும், இந்தக்கோசத்திரயமே, சூக்ஷ்மசரீரமென்று சொல்லப்படும். இனிக்காரணசரீரமே, ஆநந்தமயகோசமென் றுத்தரம்.

(௧௫) இந்தப் பஞ்சகோசங்களுடனே ஆத்மாவுக்குத் தாதான்மியமெப்படியென்கின்ற சங்கைக்கு,

நீலாதிவஸ்துக்களுடனேகூடி அவ்வண்ணமாய்த் தோற்றினபடிகம்போல, ஆத்மாவாகவிருக்கின்றதானும் பஞ்சகோசங்களுடனேகூடி அவைகளேதானாகத் தோற்றுகிறது தாதான்மியமென் றுத்தரம்.

(௧௬) இந்தப் பஞ்சகோசங்களைத் தானல்லவென்று தள்ளுகிற விவேகமெப்படியென்கிற சங்கைக்கு,

அந்வயவெதிரேகமே அதனைத்தள்ளுகிற விவேகமென் றுத்தரம்.

(௧௭) அந்வயமாவதெது, வெதிரேகமாவதெது, விவேகத்தினாலே பஞ்சகோசத்தைத்தள்ளி யப்பாற்பட்டிருக்கிற பிரமமே நாமென்றறியும் வாறெங்ஙனமென்கிற சங்கைக்கு,

தானாகவழங்கின ஸ்தூலசரீரந்தோற்றாத சொப்பனாவஸ்தையிலே, தான்தோற்றுகிறதே அந்வயம். தான்தோற்றுகினுந் தூலசரீரந் தோற்றாததே வெதிரேகம் சூக்ஷ்மசரீரங்

தோற்றாத சுழுத்தியவஸ்தையிலே, தான்தோற்றுகிறதே அந்வயம். தான்தோற்றுகினும் லிங்கசரீரந்தோற்றாததே வெதிரேகம். இந்தச்சூக்ஷமசரீரந்தள்ளப்பட்டதே மூன்றுகோசமுந்தள்ளப்பட்டது. சுழுத்திதோற்றாத சமாதியிலே, தான்தோற்றுகிறதே அந்வயம். தான்தோற்றுகினுஞ் சுழுத்தி தோற்றாததேவெதிரேகம். முஞ்சிப்புல்லிலே பக்கத்துமட்டைகளைத்தள்ளித்தள்ளி நடுவிலாணியெடுக்கிறாற்போல அந்வயவெதிரேக யுத்தியினாலே தானாய்விளங்கின பஞ்சகோசங்களைத்தள்ளி அப்பாற்பட்டிருக்கிற பிரமமே நாமென்கிற அறுதிபுத்தியுள்ளவர்களே பேரறிவாளரொன்றுத்தரம்.

(கஅ) சீவனுக்கும், பரமாத்மாவிற்கும், இப்படியேகத்துவஞ் சாதித்ததற்குப் பிரமாணமேதென்கிற சங்கைக்கு,

சாமவேத மஹாவாக்கியமே பிரமாணமென்றுத்தரம்.

(கக) அந்த மஹாவாக்கியத்திற் கர்த்தமே தென்கிற சங்கைக்கு,

முன் சுயம்பாகியாக விருந்தவனுக்குக் காலாந்தரத்திலே துரைத்தனம்வந்து தண்டிகையிலே வரக்கண்ட விடத்திலே அவனென்கிற சொல்லிலே சட்டுவமுதலான வுபாதி லக்ஷணமும், இவனென்கிற சொல்லிலே தண்டிகைமுதலானவுபாதி லக்ஷணமும், விட்டு இரண்டு சொல்லினுஞ் சரீரமாத்திரம் அர்த்தமாகக்கொண்டு இவனே அவன் அவனே இவனென்று ஒருவனைப்புரையறக் காட்டுகிறாற்போலச் சகத்திற்கு உபாதானகாரணமான பிரமம், மாயாசபளிதமான ஈசுரன், தாமதபரிணாமமான அவருடைய சரீரம், இம்மூன்றையுங் காட்டும் தற்பதம். மலினத்துவமான அவித்தையாப் பிரதிவிம்பன், அவனுடைய சரீரஉபாதி, இவைகட்கு அதிஷ்டானங் கூடஸ்தர், இம்மூன்றையுங் காட்டுந் துவம்பதம்

இவர்களிருவரையும் ஒருவனென்றே மஹாவாக்கியம் இரண்டிடத்திலுமுள்ள வுபாதியும் உபாதியுடனே கூடின சைதன்னியங்களையும் விட்டு அகண்டமாயிருக்கிறசச்சிதானந்தம் ஒன்றைத்தானே புரையறக்காட்டும் பாகத்தியாக லக்ஷணையான விட்டுவிடாதலக்ஷணையென் றுத்தரம்.

(உ0) இப்படிக்கொத்த ஞானம் வரத்தக்கதாகக் குரு சந்நிதானத்திலே செய்காரியமேதென்கிற சங்கைக்கு,

சிரவணாதிகளே செய்காரியமென் றுத்தரம்.

(உக) சிரவணாதி செய்காரிய மெத்தனைவிதம், அவைகட்கு லக்ஷணமேதென்கிற சங்கைக்கு,

சிரவணாதி நாலுவிதம், அதெங்ஙனென்னிற் சகலவேதங்கட்கும் ஆறுலிங்கத்தினா லர்த்த விசாரம்பண்ணிப் பிரம தாற்பரியமாய்க் காண்கிறதே சிரவணம். அந்த யுத்தியினால் அனவரதஞ்சிந்திக்கிறதே மனனம். இப்படி யிருவகையினாலுந் தெளிந்தபொருளிலே, மனம், ஏகாக்கிரமாகிறதே நிதித்தியாசனம். தியானம்பண்ணுகிறவனையும், தியானத்தையும், இழந்து தியானிக்கப்படுகிற வஸ்துமாத்திரமாகவிருக்கிற சித்தமே, சமாதியென் றுத்தரம்,

(உஉ) இப்படிக்கொத்த சமாதிக்குப் பலனேதென்கிற சங்கைக்கு,

அநாதி காலசஞ்சிதகர்மநாசமும், தன்னை நிர்மலம்பண்ணுகிற தர்மமும், வாசனைக்ஷயமும், அபரோக்ஷக்ஞானமும், தனக்குப் பிரயோசனமென் றுத்தரம்.

(உங) இந்த அதித சுகசமாதியிலே யிருக்கிறவன் அப்படியேயிராமல் பிரபஞ்சத்திலே விழிப்பானேனென்கிற சங்கைக்கு,

அ

பிராரத்தசேஷத்திறைலென் றுத்தரம்.

இப்படித்தத்துவவிவேகத்தைப் பலபட விசாரம்பண்ணி மனதைச் சமாதியிலே லயம்பண்ணிச் சகலசம்சாரத்தையும் விட்டுப்பரப்பிரமமாகலாமென்று இந்தப்படித்தத்துவவிவேகஞ்சொல்லுகிறது,

ஆறுவது - தத்துவவிவேகம் - முற்றிற்று.
ஆகச்சங்கை - ௪௨௪.

---

## ஏழாவது-பஞ்சபூதவிவேகம்.

சிருஷ்டிக்குமுன் சத்தாகவே இத்தனையு மிருந்ததென்னும் சாமவேதார்த்தத்தைப் பஞ்சபூத விவேகத்திறைலே வெளிபண்ணும்படி.

(க) சத்தென்று சொல்லப்பட்டதேது இத்தனையுமென்று சொல்லப்பட்டதேதென்கிற சங்கைக்கு,

சத்தென்றுசொல்லப்பட்டது அத்துவிதப்பிரமம், இத்தனையுமென்று சொல்லப்பட்டது பஞ்சபூதமும், அவைகளின் குணங்களைந்தும், அவைகளையறிகிற இந்திரியங்களைந்தும், இவைக்குச் சகாயமாயிருக்கிற இந்திரியங்களைந்தும், அந்தக்கரணமொன்றும், நானென்கிறவனொருவனும், இத்தனையுங்கூடினதற்கு, இத்தனையென் றுத்தரம்.

(உ) இந்தப்பூதமைந்திற்குள்ளே ஒவ்வொரு பூதங்களுக்கு எத்தனையெத்தனைகுணங்க ளுண்டென்னுஞ் சங்கைக்கு,

ஆகாசத்திற்குக் குணம், ஒன்று. வாயுவிற்குக் குணம், இரண்டு. அக்கினிக்குக்குணம், மூன்று. அப்புவிற்குக்குணம், நான்கு. பிருதிவிக்குக்குணம் ஐந்தென் றுத்தரம்.

(௩) இந்தப்பூதங்களிலே இந்தக்குணங்களைப் பகுத்துக்காட்டவேண்டுமென்கிற சங்கைக்கு,

பிரதித்தொனியொன்றுமே, ஆகாசத்தின் குணம். சிறு சிறென்கிற சத்தமும், சீதோஷ்ணகடினங்கட்கு விலட்சண மான பரிசமும், வாயுவின் குணம். புகுபுகென்றொலிக்கிறசத் தமும், உஷ்ணபரிசமும், பிரகாசமென்கிற ரூபமும், அக்கி னியின்குணம். குளுகுளுவென்கிற சத்தமும், சயித்திய பரிச மும், சுக்கிலரூபமும், மதுரரசமும், அப்புவின்குணம். கட கடவென்னும் சத்தமும், கடின பரிசமும், பஞ்சவர்ணரூப மும், அறுசுவைரசமும், நற்கந்த துர்க்கந்தமும், பிருதிவி யின்குணமென்றுத்தரம்.

(ச) இதற்குப்பிரமாணமேதென்கிற சங்கைக்கு,

சுரோத்திராதி ஞானேந்திரியங்களா லநுபவிக்கிறதே பிரமாணமென் றுத்தரம்.

(ரு) இந்திரியங்களுக் கிப்படி வெளிநாட்டந்தானே யோ உண்ணாட்டமு முண்டோவென்கிற சங்கைக்கு,

செவியை அங்குலியினுன் மூடினுல் உள்ளிரைச்சல் கே ட்கையினுலும், குடிக்கையிற் புசிக்கையிற் சீதோஷ்ணபரி சம் அறிகையினுலும், கண்ணைமூடினவிடத்து உள்ளிருட்டு ரூபந்தோற்றுகையினுலும், வாந்திபண்ணுகிறபோது ரசங் களை அறிகையினுலும், ஏப்பம்விடும்போது நற்கந்தந் துர்க் கந்தங்களை யறிகையினுலும், உண்ணாட்டமு முண்டென் றுத்தரம்.

(சு) இதற்குச்சகாய விந்திரியமேது அதற்குத்தொழி லேதென்கிற சங்கைக்கு,

வாக்காதிசகாய விந்திரியமும் வசனுதிதொழிலுமென் றுத்தரம்.

(எ) அந்தரிந்திரியமான மனமும் அதன்றொழிலு மே தென்கிற சங்கைக்கு,

பத்திந்திரியத்திற்கு மிராசாவாய் இந்திரியத்தின் வழியே குணதோஷம் விசாரிக்கிறதாய், இருதயகமலத்தி னடுவேயிருக்கிறது மனது, வைராக்கியம் சமைமுதலான சாத்வீகப் பிரவிருத்தியும் காமக்குரோதமுதலான ராசதப்பிரவிருத்தியும் சோம்பல் நித்திரைமுதலான தாமதப்பிரவிருத்தியும் இதன் தொழிலென் றுத்தரம்.

(அ) இந்தமூன்றுவகைப் பிரவிருத்திக்கும் பலனேதென்கிற சங்கைக்கு,

சாத்வீகத்தி லுண்டாம் புண்ணியம். ராசதத்திலுண்டாம் பாவம். தாமதத்தி லிருவகையுமற்று வீண்காலம்போமென் றுத்தரம்.

(கூ) இப்படிப் பதினைந்திரியத்தினாலும், யுத்தியினாலும், சாஸ்திரத்தினாலும், அறியப்படுகிற சகலசகத்துஞ் சத்துத்தானே யென்பது கூடாதென்கிற சங்கைக்கு,

விஜாதீயம், ஸஜாதீயம், ஸ்வகதபேதம், இம்மூன்று மற்றது சத்துத்தானேயென் றுத்தரம்.

(க0) விஜாதீயம், ஸஜாதீயம், ஸ்வகதபேதமாவதேது இந்தச் சகத்து, இந்த மூன்றுமல்லவென்கிற தெப்படியென்கிற சங்கைக்கு,

மரத்திற்குக் கல்லுவிஜாதீயம், மறுமரம், ஸஜாதீயம், இலே, பூ, காய், ஸ்வகதபேதம், இந்தப்படி சத்திற்குச் சகத்து விஜாதீயமென்னவுங்கூடாது அசத்தில்லாத படியினால் சத்திற்குச் சகத்து, ஸஜாதீயமென்னவுங்கூடாது மறுசத்தில்லாதபடியினால். ஸ்வகதபேதமென்னவுங்கூடாது நிரவயவமானபடியினால். ஆகையாலிவையெல்லாம், சத்துத்தானே யென் றுத்தரம்.

(கக) அதுகூடாது. எல்லாம், அசத்தாகவே முன்னிருந்ததென்கிற சங்கைக்கு,

சூரியன் அந்தகாரத்துடனே கூடியுமிரான் அவன், அந்தகாரமு மல்லவென்கிறதுபோல சகத்துமுன் அசத்தாயிருந்ததானுற் சத்துடனே கூடியுமிராது சத்தாகவுமாட்டாதென் றுத்தரம்.

(கஉ) சத்தைத்தவிர வொன்றுமில்லாவிட்டாற் சிருஷ்டிக்கு முன்னெல்லாஞ் சத்தாயிருந்ததென்று வேதவாக்கியஞ் சொல்வானேனென்கிற சங்கைக்கு,

காலவாசனையுடனே கூடியிருக்கிற சிஷ்யனைக்குறித்துச் சொன்னதேயல்லாம லுண்மையல்ல ஆகையினுற் சங்கையும், உத்தரமும், துவிதத்திலேயல்லாம லத்துவிதத்திலே யில்லையென் றுத்தரம்.

(கங) அறியாமையினுற் சங்கித்தேன். உண்மையேதென்கிற சங்கைக்கு,

அசையாமல் கெம்பீரமாய்ப்பிரபையுமல்லாமல் அந்தகாரமுமல்லாமல் அவாங்மானச கோசரமாயிருக்கிற பிரமமேசத்தென் றுத்தரம்.

(கச) பிருதிவிமுதலானவை பரமாணுவாய்ப் போனபடியினுல் இல்லையென்கிறது சம்மதித்தேன்பிரளயத்திலே ஆகாசமுமில்லாமற் போமென்கிறது கூடாதென்கிற சங்கைக்கு,

அத்தியந்தம் நிர்ச்சகத்தாயிருக்கிற வாகாசம் உன்புத்தியிலே பட்டாற்போல நிராகாசமாயிருக்கிற சத்து நம்முடைய புத்தியிலே படுமென் றுத்தரம்.

(கரு) சத்தாயிருக்கிற சுத்தசைதன்னியத்தை எப்போதநுபவித்தீரென்கிற சங்கைக்கு,

{ இவை மூலசுலோகப்படி
இரண்டாம் சமாதானம். }

[உச] விசாரமாவதேதென்னுஞ் சங்கைக்கு,

சத்தென்னுஞ் சத்தமும் ஆகாசமென்னுஞ் சத்தமும் பரியாயமல்ல வாயுவாதிகளில் சத்தானது அநுவிர்த்தித்திருக்கிறது ஆகாசமப்படி யநுவிர்த்தித்திருக்கவில்லை ஆதலாலாகாசமித்தையென்பதே விசாரமென் றுத்தரம்.

(உரு) ஆகாசந்தோற்றுகிறபடியினு லில்லையென்பதெப்படியென்கிற சங்கைக்கு,

யாதொன்று சத்தைத்தவிர வசத்தாகவிருந்து தோற்றுகிறதோ அதெல்லாஞ் சொப்பனகஜமுதலியவைபோல மித்தையென்றறியென் றுத்தரம்.

(உசா) இப்படி ஆகாசத்திலே சத்தையுஞ், சத்தத்தையும், பிரித்துக் காண்கிறபோது ஆகாச மித்தை யாவானேனென்கிற சங்கைக்கு,

கற்பித மாயாகாரியமானபடியினுற் காரணம்போல மித்தையாக வருப்பற்றதென் றுத்தரம்.

(உஎ) பொய்யாயிருக்கிற வாகாசமும், மெய்யாயிருக்கிறசத்தும், ஏகமாகப் பொருந்திச் சகலர்க்குந் தோற்றுகையாற்பிரித்துக் காண்கிறவழி யெப்படியென்கிற சங்கைக்கு,

ஜாதிவியக்திபோலவும், குணத்திரவியம்போலவும், உடலுமுயிரும்போலவும், சத்து, மாகாசமும், வேறென்றறியென் றுத்தரம்.

(உஅ) இப்படியறிந்தாலும், சத்து,மாகாசமும், வேறென்றறியப்படவில்லை அதேதனுலென்கிற சங்கைக்கு,

பூர்வம்புத்தி யேகாக்கிர மாகாதபடியினாலும், சந்தே கத்தினாலு, மேறவில்லை, சாவதானமாய்ப் பிரமாணமூலமா ய் விசாரித்தாலேறுமென் றுத்தரம்.

(உக) விசாரித்தவனுக்குப் புத்தியிலெப்படியிருக்குமெ ன்கிற சங்கைக்கு,

சத்தாயிருக்கிற வஸ்து, அகண்டமென்றும், ஆகாசம்ப ரிச்சின்னமானபடியினால் மித்தையென்றும், புத்தியிலேதிட ப்பட்டிருக்குமென் றுத்தரம்.

(௯௦) இப்படியறிந்தவன் லோகத்தாருடனே யெப்படி ப்பேசுவானென்கிற சங்கைக்கு,

சத்தைத்தானே ஆகாசமென்று பேசுகிறவனையும் ஆகா சஞ் சின்மாத்திரமென்று பேசாதவனையுங் கண்டவுடனே யாச்சரியப்படுவானென் றுத்தரம்.

(௯க) இப்படி, ஆகாசம் மித்தையென்றும், சின்மாத்தி ரமே சத்தியமென்றும், பிரித்தறிந்தபின் செய்காரியமேதெ ன்கிற சங்கைக்கு,

இந்தஞானத்தின்படியே வாயுமுதலான பூதங்களினும், சத்துப் பரிபூரணமானபடியினா லெங்குங் காணப்படுமென் றும், ஆகாசாதிபரிச்சின்னமான படியினா லெங்குங் காணப் படவில்லையென்றும், பூதங்களெல்லா மித்தையென்றுந், திடப்படுத்தவேண்டுமென் றுத்தரம்.

(௯உ) பூதங்கள் பரிச்சின்னமா யெப்படிக் காணப்படு கின்றன. பூதங்கட்குச் சுபாவகுணமென்ன அன்னியகுண மேதென்கிற சங்கைக்கு,

சத்தினிடத்திலே. யேகதேசகற்பிதம் மாயை. மாயை யினிடத்திலே, யேகதேசகற்பிதம், ஆகாசம். ஆகாசனிடத்தி

லேகதேசகற்பிதம், வாயு. வாயுவுண்டென்கிறது, சத்தினுடைய வம்ஸம். சத்தைவிட்டுப்பார்த்தால், வாயு காணுமற்போகிறது, மாயையினம்ஸம். சத்தமாகாசாம்ஸம். ஆக இம்மூன்றும் வாயுவிற்குக் காரணகுணம். சுபாவகுணம், பரிசம். இத்தனைகளினுஞ் சத்தைப்பகுத்தாற் காணுமற்போகிறபடியினுல் வாயுமித்தையென் றுத்தரம்.

(௩௩) இப்படி வாயுமித்தையென்றறிந்தபின் செய்காரியமேதென்கிற சங்கைக்கு,

வாயுவிற்பத்திலொன்ருய்க் கற்பிக்கப்பட்ட வக்கினியுமித்தையென்றே காணவேண்டும். அக்கினியுண்டென்கிறது சத்தினுடைய வம்ஸம். சத்தைவிட்டுப்பார்த்தா லில்லாமற்போகிறது மாயையினம்ஸம். சத்தமாகாசத்தினம்ஸம். பரிசம், வாயுவினம்ஸம். ஆகக் காரணகுணம், நாலு. சுபாவகுணம், ரூபம்.இத்தனையுஞ் சத்தைத்தவிர வேறல்லவென்று காண்கிற வாசனை பண்ணவேண்டுமென் றுத்தரம்.

(௩௪) இப்படி யக்கினியு மித்தையென்றறிந்தபின் செய்காரியமேதென்கிற சங்கைக்கு,

அக்கினிக்குப் பத்திலொன்று கற்பிதம், அப்பு. அப்புவிற்கு ரசத்துடனே கூட ஆறுகுணம். அப்புவிற் பத்திலொன்று கற்பிதம் பிருதிவி. பிருதிவிக்குக் கந்தத்துடனே கூட ஏழுகுணமென்றும். பிருதிவியிற் பத்திலொன்று கற்பிதம் பிரமாண்டம் பிரமாண்டத்திற் கற்பிதம் புவனங்கள் புவனத்திற் கற்பிதம் சரீரங்களென்றறிந்து இத்தனைகளினுஞ் சத்தைவிட்டுப்பார்த்தால் இவைகட்கு சொரூபமில்லாதபடியினுஞ் சின்மாத்திரமென்று காண்கிறதே செய்காரியமென் றுத்தரம்.

(௬௫) இப்படித் துவிதமெல்லாம் மாயாகற்பிதமென்ற ஞதரவுபண்ணிஞற் ரேஷமில்லேயோவென்கிற சங்கைக்கு,

சகத்பேதத்தை நித்தியமென்று நிச்சய புத்திபண்ணி அத்துவிதத்தை யனுதரவுபண்ணின சாங்கியன் கணாதன பௌத்தன் முதலானபேருக்குப் பிரத்தியபாயமில்லேயென் றால் மாயாகற்பிதமாயிருக்கிற, துவிதத்தை யனுதரவுபண் ணிப்போட்டிருக்கிற நமக்குப் பிரத்தியபாயம், லேசமுமில் லேயென் றுத்தரம்.

(௬௬) இப்படித்துவிதத்தை யனுதரவுபண்ணிஞற் பிர யோசனமேதென்கிற சங்கைக்கு,

துவிதத்திலே யனுதரவுபண்ணிஞ லத்துவிதத்திலே புத்தி திடப்பட்டுச் சீவன் முத்தனுகலாமென் றுத்தரம்.

(௬௭) இப்படிச் சத்தையும், அசத்தையும், பகுத்தறிந் தால் சீவன் முத்தியெப்போது வருமென்கிற சங்கைக்கு,

திடப்படவறிந்தவன்றே முத்தியென் றுத்தரம்.

(௬௮) பிராணன்விடும்போ தந்தநிலேமை வரவேண்டா மோ வென்கிற சங்கைக்கு,

அன்றுடகங்கற்றபோதம் சொப்பனசுழுத்தி யவஸ்தை யிலே மறந்திருந்தாலும் சாக்கிரோதயத்திலே தன்னிலே முன்னிற்கிறுற்போலப் பிராணன்போகிற மூர்ச்சையிலே மறந்திருந்தாலும் ஞானம்போகாதென் றுத்தரம்.

(௬௯) கற்றபோதம் பின்னேயெதனுற் போமென்கிற சங்கைக்கு,

வேதாந்தத்திற்கு மேற்பட்ட பிரமாண மொன்றுண் டாஞ லதனுற்போகிறதேயல்லாமற் சுழுத்திமூர்ச்சையிலே போகிறதல்ல ஆகையிஞ லத்துவிதக்ஞானத்திற் கொன்றி ஞலும் வாதையில்லேயென் றுத்தரம்.

ஆகையினுல் இந்தப்பஞ்சபூத விவேகத்தை விசாரம் பண்ணிச் சகலபிரபஞ்சத்தையுஞ் சின்மாத்திரமாய்க் கண்டத்துவிதநிலை பெற்றவனே சீவன் முத்தன். இந்தப்பிரமாகார நிலைபெற்றவனை யொருமோகங்களுங் கிட்டாதென்று பகவானுங் கீதையிலே சொல்லியிருக்கிருர்.

ஏழாவது பஞ்சபூதவிவேகம்-முற்றிற்று.

ஆகச்சங்கை-௬௯௫.

---

## எட்டாவது-பஞ்சகோசவிவேகம்,

ஸ்ரீவித்தியாரண்ணியஸ்வாமிகள், ஏழைகளிடத்திற்கிருபையினுலே பஞ்சகோசவிவேகத்தினு லெளிதாய்ப் பிரமத்தை யறிவிக்கும்படி.

(௧) தைத்திரியமென்கிற உபநிஷத்திலே குகையிற்குள்ளிருக்கிற பிரமத்தை யறிந்தால் முத்தியுண்டென்று சொன்னதற்கர்த்தமேதென்கிற சங்கைக்கு,

தேகத்திற்குட்பட்டது பிராணன், பிராணனுக்குட்பட்டதுமனம். மனதிற் குட்பட்டது விக்ஞானம். விக்ஞானத்திற் குட்பட்டது ஆநந்தம். இந்தவைந்துங் குகை இதற்கன்னியமா யிருக்கிறவர் ஆத்மாவென் றுத்தரம்.

(௨) இந்தவைந்தையுந் தானே யாத்மாவென்று சகலவாதிகளும் லௌகீகருஞ் சொல்லுகையால், இவைகளைத் தள்ளுவதெப்படியென்கிற சங்கைக்கு,

பிதாபுசித்த அன்னவீரியத்தினு லுண்டாகையாலும், அன்னத்தினுல் வர்த்திக்கையாலும் அன்னமயமாகிற சரீர

த்தைத் தானென்னக்கூடாது. தேகத்திற்குள்ளிருக்கின்றவி
ந்திரியங்களை யேவுகின்றவனாய்ப் பலதாரதன்மியத்தினாற்
றிரிசயமாக விருக்கின்ற பிராணமயனையுந் தானென்னக்கூ
டாது. தேகத்திலே நானென்கிறபுத்தியும் வீடுமாடுகளிலே
எனதென்கிற வபிமானத்தையும் பண்ணிக்கொண்டுகாமக்கு
ரோதமுதலான வவஸ்தைகளினாலுழலக்கண்ட மனோமயனை
யுந்தானென்னக்கூடாது. காய்ச்சின விரும்பினுண்டைபோ
லச் சாக்கிரத்தில் நகசிகைபரியந்தங் கலந்துநின்று சுழுத்
தியிலனைந்துபோகின்ற விக்ஞானமயனையுந் தானென்னக்
கூடாது. புண்ணியபோகத்திலுஞ் சுழுத்தியிலும் அந்தர்
முகமாயானந்தப் பிரதிவிம்பத்துடனே கூடிச் சணப்பொழுதி
லே நஷ்டமாய்ப்போகின்ற வானந்தமயனையுந் தானென்
னக்கூடாதென் றுத்தரம்.

(ந) இப்படி யிந்த வைந்துமே யாத்மாவல்லவென்று
போனால் இதற்கன்னியமாக ஆத்மாவை வேறகாணோமெ
ன்கிறசங்கைக்கு,

பஞ்சகோசங்களை யதற்குச்சொன்ன லக்ஷணத்துடனே
தோற்றுவித்து அப்பாலினி, யொன்றுங் காணோமென்றிரு
க்கிற விம்பசைதன்னியமே ஆத்மாவென் றுத்தரம்.

(ச) இந்தப் பஞ்சகோசங்களை யாத்மாகண்டாலாத்மா
வைக்காண்கிறவராரென்கிற சங்கைக்கு,

சுதசித்த சைதன்னியமாயிருக்கிறவாத்மா, சடங்களை
யெல்லாமறிவர். தாம், சடமாகாதபடியினால் ஒன்றினாலுமறி
யப்படாரொன் றுத்தரம்.

(ரு) அறிவாயிருந்தும், ஒன்றினாலு மறியப்படாதபோ
தே ஆத்மாவறிவென்ப தெப்படியென்கிற சங்கைக்கு,

* வெல்லத்திற்குத்தன்னுடைய ரசந் தன்னாலநுபவிக்கப்படாதிருந்தாலும் அன்னியமாயிருக்கிற விந்திரியங்களினாலநுபவிக்கப்பட்டது கொண்டு மதுரஞ் சுபாவமென்றது போலச் சகலத்தையு மறிகின்ற வாத்மாவிற்குத் தானறிவென்பதற்குச் சந்தேகந் தேவையில்லையென் றுத்தரம்.

(கூ) அறியப்பட்டது பிரமமோ அறியப்படாதது பிரமமோவென்கிற சங்கைக்கு,

இந்தவிருவகையுமல்ல. இதற்கப்பாற்பட்டது பிரமமென் றுத்தரம்.

(எ) இப்படியிருந்தா லவனா யறிவதெப்படி யென்கிற சங்கைக்கு,

எனக்கு நாக்குண்டோ இல்லையோவென்கிற சொற்போல அறிவாயிருந்தும், அறிவெப்படி யிருக்குமென்றுகேட்டவுனக்கு லச்சையில்லையோவென் றுத்தரம்.

(அ) அஞ்ஞானியா யிருக்கிறவனுக்குப் பிரமநிச்சயம் வர வழிபாடேதென்கிற சங்கைக்கு,

அறிவினாற் காண்பித்தவெல்லாஞ் சடமாய்ப்போனாலும் நித்தியபோதமாயிருக்கின்ற வறிவே, பிரமமென்றுகாணவேண்டுமென் றுத்தரம்.

இந்த, அறிவாயிருக்கிற வாத்மாவே பிரமமானால் சச்சிதானந்தமெனகிற லக்ஷணத்திலே சித்தில்லாதலக்ஷணத்தை யேன்சொல்லவில்லையென்கிற சங்கைக்கு,

---

[இவை மூலபாடம்.]

* மதுரசுபாவமா யன்னியங்கட்கு மதுரங்கொடுக்கும் வெல்லத்திற்கு அன்னியங்களால் மதுரஞ் சம்பாதிக்கவேண்டுமென்னும் இச்சையின்றாம் அன்றியும் தனக்கு மதுரங்கொடுக்கும் மற்றோர் பொருளுமின்றாம். ஆயினும் வெல்லத்திற்கு மதுரம் சுபாவம்போல என்று மூலபாடம்.

இப்படி யறிவாயிருக்கிறதானெப்போது முண்டென் றிருக்கையினாலும், ஒருகாலத்திலுமில்லையென்று போகாத படியினாலும், ஆத்மா, சத்தென்பதுகூடும். மாயாகற்பிதமா யிருக்கின்ற காலதேசவஸ்துக்களை யாத்மா, கடந்தபொரு ளானபடியினா லிந்தமூன்றினாலும் வாதையற்றது ஆநந்த மென்பது கூடுமென் றுத்தரம்,

(கO) இப்படிக்கொத்தவாத்மா வெப்படிக்கொத்தவ னென்கிற சங்கைக்கு,

இந்திரியங்கட்கு விஷயமாகாதபடியினாலே இப்படிக் கொத்தவனென்று சொல்லக்கூடாது. தானாகவிருக்கிறபடியி னாலே அப்படிக்கொத்தவனென்று பரோக்ஷமாகவுஞ்சொல் லக்கூடாது. இப்படி யிருவகையினாலுஞ் சொல்லப்படாதவ னே ஆத்மாவென் றுத்தரம்.

(கக) இப்படியே நிர்ணயமானால் இவன் சீவனென்றும், இவன் ஈசுரனென்றும், மஹாவாக்கியத்தினா லிருவகைக்கு மைக்கியம்வந்தால் மோக்ஷமென்றுசொன்ன வேதவாக்கிய மெப்படிக் கூடுமென்கிற சங்கைக்கு,

ஒருபுருஷனுக்குப் புத்திரபவுத்திராதிகளைக்குறித்துத் தகப்பன் பாட்டனென்றுவந்த இரண்டுநாமமும், அந்தவுபா திக ளில்லாவிட்டா லில்லாமற்போகின்றாற்போல மாயை யவித்தை யென்னப்பட்ட இரண்டுபாதியினாலும், ஈசுரனெ ன்றுஞ், சீவனென்றுஞ், சொல்லப்பட்டது ஒருபிரமத்தைத் தானே உபாதிமித்தையென் றறிந்தவுடனே சீவனுமல்ல, ஈசுரனுமல்ல, நாம் பிரமந்தானே யென்கிறவைக்கியம் வரு மென் றுத்தரம்.

(கஉ) இப்படிக்கொத்த ஞானத்திற்குப் பலனேதென் கிற சங்கைக்கு,

இப்படி யாத்மாவே பிரமமென்று பஞ்சகோச விவேகத்திலுற் பகுத்தறிகிறவன் தானுகவிருக்கின்ற பிரமத்திற்குச் சம்சாரமில்லையென்கிற வேதவாக்கியப்படிக்கு முத்தனுய்ப் பிரமமாகவே யிருப்பன். இவனைக் காலத்திரயத்திலும் சம்சாரந்தொடராது. இதுவே பலனென்றுத்தரம்.

எட்டாவது பஞ்சகோசவிவேகம்-முற்றிற்று.

ஆகச்சங்கை- சஎரு.

---

## ஒன்பதாவது-துவிதவிவேகம்,

ஸ்ரீ வித்தியாரண்ணியஸ்வாமிகள் லோகாநுக்கிரக நிமித்தமாய்த் துவிதவிவேகஞ் சொல்லும்படி.

(க) துவிதமெத்தனைவிதமா யிருக்குமென்னில்.

ஈசுரனுற் சிருஷ்டிக்கப்பட்ட துவிதமென்றும், சீவனுற் சிருஷ்டிக்கப்பட்ட துவிதமென்றும், இரண்டுவிதமாக விருக்கும். இதனிற் பஞ்சீகரணம் பண்ணின ஸ்தூலபூத பௌதிகபரியந்த முண்டான தத்துவமெல்லாம் ஈசுரசிருஷ்டியென்று சொல்லப்படும். அதற்குமேற்பட்ட சாக்கிரமுதல், சீவன் முத்திபரியந்தமுள்ள அவஸ்தைகளுடைய கற்பனையும், அந்தந்த அவஸ்தையிலே யுள்ளஜாதி வர்ணுச்சிரமலௌகீகமுறைநைமமுதலான சகலகற்பனைகளுஞ் சீவசிருஷ்டியென்று சொல்லப்படும்.

இவைகளும் ஈசுர கற்பனையாலும் பிதாவினு லுண்டாக்கப்பட்ட பெண், அன்னியனுய்வந்த போகபற்தாவுக்குப்போககற்பனைக் கிடமானுற்போல நல்லது பொல்லாதென்று போககற்பனைக்கே யிடமாயின ஆகையா லிவையெல்லாஞ் சீவசிருஷ்டியென்று சொல்லப்படும்.

(உ) ஈசுரகாரியமுஞ் சீவனுடைய போகமும், ஈசுரசிருஷ்டியென்றும். சீவசிருஷ்டியென்றும், சொல்வதெப்படியென்னில்.

ஈசுரனாற் சிருஷ்டிக்கப்பட்ட மண், பொன், பெண், முதலானவைகளில் இவை யெனக்ககப்பட்டதென்று ஒருவன் சந்தோஷிக்கிறான். இது நமக்ககப்படாமற்போயிற்றென்று ஒருவன் கிலேசிக்கிறான். விரத்திவந்தவன் உபேக்ஷையாயிருக்கிறான் இப்படிப்பிரியம், அப்பிரியம், உபேக்ஷையென்று மண்முதலானவைகளிலே காணப்படுகிற மூன்றகங்காரங்களும், மனோகற்பிதமான சீவசிருஷ்டியேயல்லாமல் ஈசுரசிருஷ்டியல்ல. இந்த மூன்றகங்காரங்களு மற்றுத்தன் சுபாவத்திலிருந்ததே ஈசுரசிருஷ்டி. மாதா உடன்பிறந்தாள் பாரியென்று வெகு விதாகாரமாகத் தோற்றுகிற ஒரு பிண்டந்தானே ஈசுரசிருஷ்டி அதைக்குறித்துண்டான அநேகாகாரங்களும் அந்த வாகாரத்திற்கேற்க அவனவன் மனதிலேசங்கற்பித்த சமுசாரமுஞ் சீவசிருஷ்டியென்றறிக.

(௩) பிராந்தியினாலுஞ் சொப்பனத்தினாலும் மனோராசியமாகவுங் கற்பிக்கப்பட்ட அந்தக் கரணகற்பனை யெல்லாஞ் சீவசிருஷ்டியாகட்டும் சாக்கிறத்தில் பிரமாணத்தினாற் பிரமாண்யமாக வறியப்பட்ட பிரமேயங்களெல்லாஞ் சீவசிருஷ்டியென்பது கூடாதென்கிற சங்கைக்கு,

லோகத்திலே சகலபதார்த்தங்களையுந் தோற்றுவிக்கின்ற வெய்யில் அந்தப் பதார்த்தத்தின் பேரிலே விழுந்து அவைகளை யாவரித்து அந்தப் பதார்த்தத்தை யடைந்து அவைகளைத்தோற்றுவிக்கிறாற்போலச் சாக்கிரத்தில் * பிர

* பிரமாதா என்றது-சீவன்-பிரமாணம் என்றது-அந்தக்கரணத்தின் விருத்தி-பிரமேயம் என்றது - கடாதி.

மாதாவிடத்தி னின்று முண்டான பிரமாணம் பிரமேயத்தையடைந்து அவைகளினுகாரமாய் அவைகளினஞ்ஞானத்தைத்தள்ளி அவைகளைத் தோற்றுவிக்கையினு லிப்படிச் சங்கற்பிக்கப்பட்ட சித்தவிருத்திப் பிரபஞ்சமெல்லாஞ் சீவசிருஷ்டியே யல்லாமல் ஈசுரசிருஷ்டியென்று சொல்லக்கூடாது. இப்படிச் சித்தாந்தமா யுள்ளளவில் பார்க்கின்ற பார்க்கின்ற விஷயமெல்லாம் ஈசுரசிருஷ்டியும் சீவசிருஷ்டியுமாகக்கூடி இரண்டிரண்டாக விருக்கும். அதில் ஈசுரசிருஷ்டியானவிஷயம்,சிதாபாசனுலறியப்படும். சீவசிருஷ்டியான விஷயம், சாக்ஷிக்ஞானத்திஞற் பிரகாசிக்கப்படும். இப்படி ஈசுரசிருஷ்டியும், சீவசிருஷ்டியும், பிரிபட்டுத் தோற்றினவுடனே சீவசிருஷ்டியைத்துடைத்தடக்கவேண்டும். அதுவே மனோநாசமென்றும், வாசனுக்ஷயமென்றும், சீவன் முத்திவருகிறதற்குச் சாதனமாகவும், சொல்லப்படுமென் றுத்தரம்.

(ச) ஈசுரசிருஷ்டி சீவன் முத்திவந்தாலுந் துடைபடாமலிருக்கிறுற்போலச் சீவசிருஷ்டியுமிருந்ததனுற் சாக்ஷியாயிருக்கிற நமக்கு ஆனியேதென்கிற சங்கைக்கு,

சுகதுக்காதி சம்சாரமெல்லாஞ் சீவசிருஷ்டி மூலமேயல்லாமல் ஈசுரசிருஷ்டியினுற் சம்சாரம் அற்பமும் வருவதில்லையே இந்தவர்த்தத்திலே சம்சயமுண்டானுல் அந்வயவெதிரேகயுத்தியினுல் விளக்குவிக்கிறேம். அதெங்ஙனென்னில் ஈசுரசிருஷ்டியுண்டோ சம்சாரமுண்டென்கிறது அந்வயயுத்தி. ஈசுரசிருஷ்டி யில்லையோ சம்சாரமில்லையென்கிறது வெதிரேக யுத்தி. இரண்டும் ஒத்துவரவேண்டும். ஒத்துவராமல் எங்கே தடைபட்டதென்றுல், சமாதி, சுழுத்தி, முதலானவேளையிலே ஈசுரசிருஷ்டி யுண்டாயிருக்கையிலும்,

ருவருக்குஞ் சுகதுக்காதிசம்சாரமில்லை. ஆகையால் அந்வயயுத்தி தட்டுப்பட்டது. பிரளயத்தில் ஈசுரசிருஷ்டி யடங்கலும் வெதிரேகித்துப்போயிருக்கையிலும் ஒருத்தருக்குஞ் சீவன் முத்திவாராதபடியினால் வெதிரேகயுத்தி தட்டுப்பட்டது. ஆகையால் ஈசுரசிருஷ்டி சம்சாரத்திற்கு மூலமென்னக்கூடாது. சீவசிருஷ்டியே சம்சாரத்திற்கு மூலமென்கிறது அந்வயம். சீவசிருஷ்டி யொழிந்தவிடத்திலே சம்சாரமில்லையென்கிறது வெதிரேகம். இந்த விரண்டும் ஒத்துவந்ததே பிரமாணம். அதெங்ஙனெனனில், ஈசுரசிருஷ்டியான வெளிப்பிரபஞ்ச மொழிந்திருக்கையிலும் சொப்பனத்தில் சீவசிருஷ்டி அந்வயித்ததுகொண்டு சுகதுக்காதிசம்சாரமும் அவிடத்திலே அந்வயிக்கக்கண்டோம். சமாதிசுழுத்தி முதலானவேளையில் ஈசுரசிருஷ்டியான பிரபஞ்சமிருக்கையிலுஞ் சீவசிருஷ்டியான வந்தக்கரண கற்பனை வெதிரேகித்ததுகொண்டு சுகதுக்காதி சம்சாரமும் வெதிரேகித்துக் காணப்பட்டது. ஆகையால் சீவசிருஷ்டியே சகலசம்சாரத்திற்கு மூலமென் றுத்தரம்.

(ரு) இரண்டு சிருஷ்டியுங்கூடி விளங்குகிற சாக்கிராவஸ்தையில் சீவசிருஷ்டி யொழிந்தவனே சீவன் முத்தன். இன்னமொருயுத்தி யேதெனில்,

தன்கண்ணிற் காணாமற் றூரதேசத்திலே நெடுங்காலந் தன் பிள்ளை யிறந்துபோயிருக்கையிலும், நம்முடைய பிள்ளையிருக்கிறானென்கிற சீவசிருஷ்டி யிருந்து சுகத்தைக் கொடுத்தது. அந்தக்காலத்தில் ஒருவன்வந்து உன்பிள்ளை செத்தானென்று சொல்லக்கேட்டு நம்முடைய பிள்ளையை யிழந்தோமென்று சீவசிருஷ்டி மாறினவுடனே துக்கத்தைக் கொடுத்தது. அவன் செத்துப்போயிருக்கையிலும் அந்த

வார்த்தையைக்கேளாம லிருந்தகாலமெல்லாஞ் சீவசிருஷ்டியிருந்து சுகத்தைக்கொடுத்தது. ஆகையினாற் சகலபிராணிகளுக்கும் பந்தப்படுத்துகிறது. அந்தக்கரணப் பிரப்ஞ்சமே யல்லாமல் ஈசுரப்பிரபஞ்சமல்ல. ஆகையால் அந்தக்கரணப்பிரஞ்சமாகிய சீவசிருஷ்டியைத்துடைத்தடக்கவேண்டுமென் றுத்தரம்.

(சு) ஆனால், அந்தக் கரணப்பிரபஞ்சத்திற்கு முன்னிலையான மூலம், ஈசுரசிருஷ்டி யானபடியினால் ஈசுரசிருஷ்டியொழிந்தபின்பே அத்துவிதம் வரவேண்டுமென்கிற பரவாதி சங்கைக்கு,

சீவர்களுடையயுத்தியோகத்தினாலே ஈசுரப்பிரபஞ்சம் அழிப்பதுமல்ல, சிருஷ்டிப்பதுமல்ல, ஈசுரசங்கற்பத்தின்படியே உண்டாகிறது. அவருடைய சங்கற்பத்தின்படியே பிரளயத்திலே ஈசுரசிருஷ்டியெல்லாமொழிந்தவிடத்திலேயும் அத்துவிதமே ஒருவருக்குங் கூடாதபடியினாலே சாஸ்திரமுதலான மோக்ஷசாதனங்களைக்கொண்டு ஈசுரசிருஷ்டி நடக்கிறகாலத்திலேதானே அத்வைதஞானத்திற்குவிரோதியாயிருக்கிறசீவசிருஷ்டியைமாற்றி அத்துவிதம்பெறலாமானபடியினாலே அதுநமக்குச்சாதனமுமாம், அதுநம்மாலே துடைபடுகிறதுமல்ல. இப்படி ஈசுரத் துவிதத்திற்குஞ்சீவத்துவிதத்திற்கும் பிரித்தல் சொல்லப்பட்டது. ஆகையால் ஈசுர சிருஷ்டி நம்மாற் றுடைபடாதென் றுத்தரம்.

(எ) சீவத்துவிதம் பந்தப்படுத்துமென்றபடியினாற் சீவத்துவித மின்னபடியென்றும், அதனையழிப்ப தின்னபடியென்றும், பிரமாணமாகச்சொல்லவேண்டுமென்கிறசங்கைக்கு.

சாஸ்திரீயமென்றும் அசாஸ்திரீயமென்றும்சீவத்துவிதம் இரண்டுவிதமாகவிருக்கும். அதிலே சாஸ்திரீயமாவது

வேதாந்தசாஸ்திரஞ் சொன்னபடிகேட்டு மனதிலே நிர்ண யித்த தத்துவசித்தாந்தயுத்திக்கிரமமுதலான அந்தக்கரணப் பிரபஞ்சம். அசாஸ்திரீயமாவது, சாஸ்திரத்தைக்கடந்து பி ரபஞ்சத்தைப் பிரமாணமாக வெண்ணி அந்தக்கட்டின்படி யே நிர்ணயிக்கின்ற அந்தக்கரணப்பிரபஞ்சம். இது தீவிர மென்றும் மந்தமென்றும் இருவகையாக விருக்கும் இத னிற் காரியபரியந்த நடக்கிற காமக்குரோதாதிப் பிரபஞ் சந் தீவிரமென்று சொல்லப்படும். பிரவிருத்தியற்றுப் பிர பஞ்சத்தைக்குறித்துச் சங்கற்பிக்கிற மனோராச்சியப் பிர பஞ்சமெல்லாம் மந்தமென்று சொல்லப்படும். இந்த விரு வகையும் ஞானம் வேண்டுமென்கிறவன் சிரவணத்திற்கு வருமுன்பே சாதனமப்பியாசிக்கிற காலத்திலேதானே தவி ரவேண்டும். இல்லையோ கேள்வியில் ஒருமியாது சித்தம். ஆனாற் கேள்விமுடியுமட்டுந்தவிர்ந்து திடமானபிற்பாடுதான் அசாஸ்திரீயப் பிரபஞ்சம் வரலாமோவென்னில், வரலா காது. வந்தால் சீவன்முத்திகூடாது. ஆதியிலே தவிர்ந்தது ஞானம் வேண்டுமென்றும், அறிந்தபின் றவிருகிறது சீவன் முத்திக்காகவும், ஆகையால், ஞானம்வந்தபின் அந்தக்கர ணப் பிரபஞ்சத்தைத் தவிராதிருந்தால் காமாதிப் பிரவிருத் தியிலே முயன்று சுகதுக்காதிகளிலே பந்தப்படுகிறவனு க்கு நிரந்தரம், நித்தியமுத்தனாய் நிரதிசயானந்தமா யிருக் கிறவன் நானென்றுநில்லாமல் மறைபடுகையினாலே சீவன் முத்திகூடாது. சீவன் முத்தி வேண்டாம் பிரமசொரூபமா ன அவஸ்தாத்திரய சாக்ஷியே நாமென்று பிறித்தறிந்ததே முத்தியென்கிற சாஸ்திரமே போதுமென்னில், இப்படிவந் ததுகொண்டு சந்தோஷிக்கிறவனானால்குருசந்நிதானத்திலே வேதாந்தசாஸ்திர சிரவணமாத்திரம் பண்ணினதுகொண்டு

சுவர்க்கமுண்டென்கிற சாஸ்திரமே உனக்குப்போதுமென்றுத்தரம்.

(அ) அசுராதி பீடைகளும் புண்ணியக்ஷயம்வந்தெரிந்து வீழுகிறபேரையுங்கண்டு சுவர்க்கத்தி லிச்சை யில்லையென்கிறசங்கைக்கு,

எழுபத்தொரு சதுர்யுகம் ஆநந்தபோகம்புசிக்கிற சுவர்க்கத்தி லொவ்வொரு காலத்திலே வருகிற அசுர பீடைகண் டதிலே வெறுப்புவந்து சுவர்க்கம் வேண்டாமென்கிற உனக்கு அநந்தகோடி செனனமரணாதி சம்சாரத்திற்கு மூலமான அந்தக்கரணப்பிரபஞ்சமுந் தவிர்ந்து சீவன் முத்தியப்பியாசிக்கவேண்டும். இற்றைவரைக்குங் கேட்ட வேதாந்த சாஸ்திரங்களுக்கெல்லாந் தாற்பரியம், சாக்ஷியே நானென்று பற்றினபுத்தி வாங்காம லிருக்கவேண்டுமென்றும் சரீராதிகளிலே நானென்கிற புத்தி வாராமல் மறிக்கவேண்டுமென்றும் அதைத்தொட்டபிமானத்திற் கிடமான அகிலப்பிரஞ்சமும் மெய்யென்றுபாராமற் பொய்யென்று திடம்பண்ணவேண்டுமென்றுங்கூவிந்தபடியினால்,இப்படிக்கேட்டவர்த்தத்தைவிட்டுப்போட்டு இதற்கு விபரீதமான அசுத்தபுத்தியைப் பண்ணிக்கொண்டு அசாஸ்திரீயப் பிரபஞ்சந்தவிரமாட்டேனென்றால் அப்பியாசித்த சாஸ்திரம் வாக்கிலேமாத்திரங் கிளிப்பிள்ளைக்குச் சரியாய் அசுத்தப்பிரவிர்த்தியினாலே தத்துவக்ஞானியும் நாயுஞ் சரியென்றுவரும். இம்மாத்திரமுமல்ல முன்னாளிற்றைவரையுஞ் சம்சாரத்திலே பந்தப்படுத்தினது. தன்னந்தக்கரணதோஷமென்றே யுள்ளுவது இப்போது தத்துவக்ஞான மப்பியாசித்துஞ் சீவன் முத்தி வேண்டாம். அந்தக்கரணப் பிரபஞ்சமே கைவிடப்படாதென்றால் இவன் கற்றஞானமென்ன இவன்செய்கிற அக்கிரம

மென்னவென் றெல்லாருடைய வந்தக்கரணதோஷத்தி னுலும் பந்தப்படுவன் ஆகையால், அந்தக்கரண கற்பனையை நன்ருய்த்தவிர்ந்து சாக்ஷியே நானென்று நின்று அந்தக்கரணத்தைச் சாக்ஷியிடத்தி லூன்றிக்கொண்டு சரீராதி சகலசம்சாரத்தையுமறந்து சகலலோகத்திலும் பட்டணத்துப்பிள்ளையைப்போலப் பூசையடைந்து ஆநந்தாவரணத்தைத் தள்ளிச் சீவன் முத்தியான பரப்பிரம மாகலாமென் றுத்தரம்.

(கூ) இப்படிச் சீவசிருஷ்டி பந்தப்படுத்துமாறுற் றீவிரப்பிரபஞ்சத்தைக் கைவிடுகிறேம் காரியத்திற்குவாராத மந்தமிருந்ததுகொண் டானியேதென்கிற சங்கைக்கு,

மனோராச்சியம் சகலபிரபஞ்சவிருத்திக்குந் திடப்பட்ட வநுசந்தானமான பீசமானபடியினுற் செனனமரணத்திற்கு மூலமென் றறிந்து மனோராச்சியத்தை முந்தித் தவிரவேண்டும் இப்படி இரும்பைக்கொண் டிரும்பை ராவுகிறாற்போலச் சாஸ்திரீயப் பிரபஞ்சத்தைக்கொண் டசாஸ்திரீயப் பிரபஞ்ச மிரண்டையுந் தள்ளிப் பின்பு, பிணஞ்சுடுதடிபோலச் சாஸ்திரீயப் பிரபஞ்சத்தையுந் தவிர்ந்து தானே தானுய்த் திடப்பட்டதே சீவன் முத்தியென் றுத்தரம்.

இப்படிச் சாஸ்திரீய மசாஸ்திரீய மிரண்டையுந் தவிர்ந்து தானேதானுய் அலைச்சலற நின்றவிடஞ் சீவன்முத்தி ஆதலா லிந்தப் பிரகரணத்தில் சீவசிருட்டியை ஈசுரசிருட்டியினின்றும் விவேசனம்பண்ணிக்காட்டப்பட்டதென் றறிக.

ஒன்பதாவது துவிதவிவேகம் - முற்றிற்று.

ஆகச்சங்கை - சஅச.

## பத்தாவது - மஹாவாக்கியவிவேகம்.

ஸ்ரீவித்தியாரண்ணியஸ்வாமிகள், லோகோபகாரமாய் மஹாவாக்கிய விவேகஞ்சொல்லும்படி.

(௧) மஹாவாக்கியமென்பதெத்தனையென்கிறசங்கைக்கு,

நாலுவேதங்களினும், முடிந்தபொருளையே சொல்லுகிற நாலு மஹாவாக்கியமென்று சொல்லப்படுமென் றுத்தரம்.

(௨) அதற்கர்த்த மெப்படியென்கிற சங்கைக்கு,

ஞானவடிவாயிருக்கிறதே பிரமமென் றிருக்குவேதஞ் சொல்லாநின்றது. நானே யந்தப்பிரமமென்று யசுர்வேதஞ் சொல்லாநின்றது. நீயதுவாகின்றாயென்று சாமவேதஞ் சொல்லாநின்றது. இந்தவாத்மாவே பிரமமென் றதர்வண வேதஞ் சொல்லாநின்றதென் றுத்தரம்.

(௩) இருக்குவேதத்திற்சொன்ன வர்த்தமெங்கேயிருக்கிறதென்கிற சங்கைக்கு,

யாதோரறிவினாற்சத்தமுதலானவிஷயங்களையுமறியப்படுகிற தந்தப்போதமே பிரமமென் றுத்தரம்.

(௪) இப்படிக்கொத்த பிரமமெத்தனை யுண்டென்கிற சங்கைக்கு,

மும்மூர்த்திகண்முதலான தேவதைகளிடத்திலும் மநுடர் மிருகமுதலான விடங்களிலுஞ், சைதன்னிய மொன்றேயொழிய விரண்டில்லையென் றுத்தரம்.

(௫) இப்படி முந்திய வாக்கியத்தினால் ஞானநிர்ணயமானால் மற்ற மூன்றுவாக்கியத்திற்கு மர்த்தமேதென்கிற சங்கைக்கு,

பரிபூரணமாயிருக்கிற பரமாத்மாவே, இந்தத்தேகத்திலே புத்திக்குச் சாக்ஷியாயிருக்கிற சைதன்னியம். இப்ப

டித்தானாக விருக்கிற பிரமமே அஹமென்று யசுர்வேதஞ் சொல்லாநின்றது. சீவனுடையதேகேந்திரியாதிகட் கப்பாற்பட்டிருக்கிறவஸ்து, இந்தப்பிரமமானபடியினாலே, நீயே, சகத்காரணப் பிரமமென்று சாமவேதஞ் சொல்லாநின்றது இப்படிச் சுயம்பிரகாசமாக விருக்கிற வாத்மாத்தானே பிரம மல்லாமல் வேறொன்றுமல்லவென் றதர்வணவேதஞ் சொல்லாநின்றதென் றுத்தரம்.

பத்தாவது - மஹாவாக்கியவிவேகம் - முற்றிற்று.

ஆகச்சங்கை – ௪௮௧.

---

## பதினோராவது - யோகாநந்தம்.

ஸ்ரீவித்தியாரண்ணியஸ்வாமிகள், தீபிகாபஞ்சகம்,விவேகாபஞ்சகம்ஆகப் பத்துஞ்சொல்லி இந்தப்பத்திலுஞ்சொன்னபடி பிரமத்தைப்பகுத்தறிந்தவன்சகலதுக்கமும்போய்த் தடையற்றவானந்தத்தை யடைவனென்கிறதை ஆநந்தபஞ்சகத்தினாலே வெளிபண்ணும்படி.

(௧) பிரமக்ஞானத்தி லிந்த விருவகைப் பிரயோசனமுமுண்டென்கிறதற்குப் பிரமாணமேது? அந்தக்ஞானாநந்தமெத்தனைவிதம்? கெதமித்தையடைந்தவரார்? எப்படியடைந்தார்கள்? அந்தவடைகிறபிரமமெதனாலாநந்தமாயிருக்கும்? என்கிற வைந்து சங்கைக்கு,

---

(௧) பிரமவித்துப் பரத்தையடைவன். ஆத்மக்ஞானி சகல சோகமுங்கடப்பன். பிரமரசம் புசித்தவனுக்கேயாநந்தம். மற்றவனுக்கில்லை. சகலத்தையுந் தானாய்க்கண்டவனுக்கே பயம்போம். தொய்தமாய்க் கண்டவனுக்கே பயம். பிரமாநந்தத்தை யறிந்தால், ஒருக்காலு மொன்று நிமித்தமாயும்

பயமில்லை. ஞானியைக் கர்மாக்கினி கிட்டாது. பிரமத்தை யறிந்தவுடனே சகலபாசமு நசிக்கும். பரத்தையறிந்தால், இருதயக்கிரந்தியும் சகல சந்தேகங்களும் வெந்துபோம். ஞானிக்கொருக்காலும், செனன மரணாதிகளில்லை. பிரமத்தை யறிந்தவன் பிரமமே யாவனென்றிப்படி முழங்குகிற வேதபுராணங்களெல்லாம் பிரமாணம்.

(உ) பிரமாநந்தம் வித்தியாநந்தம் விஷயாநந்தமென்று ஞாநாநந்த மூன்றுவிதமாயிருக்கும்.

(ங) முன் வருணனிடத்தில் பிருகுகேட்டுப் பெற்றார். சனற்குமாரரிடத்திலும் நாரதர்பெற்றார்.

(ச) சகலமும் ஆனந்தத்திலே பிறந்து ஆனந்தத்திலே யிருந்து ஆனந்தமாத்திரமாய் மிஞ்சுகையினாலே, நாமே, அத்துவிதானந்த மென்கிறவழியாக வடைந்தார்கள்.

(ரு) திரிபுடியில்லாதபடியினால்,பிரமமேயானந்தமென்பதென் றுத்தரம்.

(உ) திரிபுடியாவதெது, திரிபுடியிலேயெப்படிச்சுகமில்லையென்கிற சங்கைக்கு,

விக்ஞான மயனென்கிற ஞாதுருவும், மனோமயனென்கிறஞானமும், விஷயங்களென்கிற ஞேயமும், திரிபுடியென்பது. விஷங்கலந்த தேன்போல இந்தத்திரிபுடியிலே வருகிற விஷயசுகம், ஆயிரந்துக்கத்தோடே கூடினதுகொண்டு சுகமல்லவென் றுத்தரம்.

(ங) அத்துவிதத்திலே யெப்படித் திரிபுடை யில்லையென்கிற சங்கைக்கு,

பூதோற்பத்திக்கு முன்னகண்டாநந்தமானது சமாதி சுழுத்தி மூர்ச்சைபோலத்திரிபுடியற்றிருக்குமென் றுத்தரம்.

(ச) இப்படியானுற் றெய்தத்திலே யாநந்தமில்லாதது போல அத்துவிதத்திலும், ஆநந்தமில்லை உண்டானு லநுப விக்கவேண்டும் அதற்கங்கே திரிபுடியு மில்லையென்கிற சங் கைக்கு,

திரிபுடியற்றவிடத்திலே அத்தொய்தமென்றும், அதி லானந்தமென்றும், இரண்டில்லை அத்தொய்தந்தானே ஆந ந்தசொரூபமென் றுத்தரம்.

(ரு) அப்படிக்கொத்த வாநந்த முண்டென்கிறதற்குப் பிரமாணமேதென்கிற சங்கைக்கு,

தானுகத்தோற்றின வஸ்துவிற்குப் பிரமாணந் தேவை யில்லையென் றுத்தரம்.

(சா) அத்தொய்தாநந்தந் தானுய்த் தோற்றுமென்கிறது சொல்லுமாத்திரமே யொழியக் காணப்படாதோ வென்கிற சங்கைக்கு,

சுழுத்திபோலே அறிகவென் றுத்தரம்.

(எ) சுழுத்தியிலே யத்துவிதாநந்தந் தானுக விளங்கு கிறதற்குப் பிரமாணமேதென்கிற சங்கைக்கு,

சுழுத்தியிலே யிந்திரியமும் * திருஷ்டாந்தமும் இல் லாம லிருக்கையிலும் நான் சுகமாயிருந்தேனென்கிற வுன் னுடைய வநுபவமே பிரமாணமென் றுத்தரம்.

(அ) சுழுத்தியாநந்தமல்ல, விக்ஷேப துக்கமில்லாதது கொண்டு சுகமென் றாரோபிக்கிறீரென்கிற சங்கைக்கு,

சுழுத்தியிலே சுகமேயில்லாவிட்டால், பாய்தலையணை முதலான சாதனமேன் றேடுகிறார்களென் றுத்தரம்.

(கூ) துக்கம்போகத்தக்கனவாகப் பாய் தலையணை தேடு கிறதே யல்லாமற் சுழுத்தியிலே சுகமில்லை யென்கிற சங் கைக்கு,

* திருஷ்டாந்தம்-என்றது-அன்னியன் சுழுத்தி.

அப்படியானால் வியாதிக்காரருக்கும் பாய் தலையணையைக் கண்டவுடனே துக்கம்போகவேண்டும் அப்படியுங் காணுமே ஆகையினாலே நித்திரைக்குச்சாதனமேயல்லாமலானந்தத்திற்குச் சாதனமல்லவென் றுத்தரம்.

(க0) ஆனால் சுழுத்தி யானந்தத்திற்குச் சாதனமேதென்கிற சங்கைக்கு,

ஜாக்கிரத்து முதலான விக்ஷேபத்திலே நொந்தமனது சுழுத்தியிலே ஆத்மாவை நாடின வுடனே அதிலே ஆநந்தம் பிரதிவிம்பிக்கும் அந்த வாநந்தத்தை யநுபவிக்கையினாலே ஒரு துக்கமுந் தோன்றாது. ஆகையினாலே, சுழுத்தி யாநந்தமாகவேண்டும். இல்லாதிருந்தாற்சகலருக்கு நாட்டமாகாது வேதத்திலே ஐந்து திருஷ்டாந்தமுஞ் சொல்லாதென் றுத்தரம்.

(கக) சுழுத்தி யாநந்தமென்கிறதற்குச் சுருதியிற்சொன்ன திருஷ்டாந்தமைந்து மேதென்கிற சங்கைக்கு,

வல்லூறு, பருந்து, குழந்தை, மஹாராஜா மஹாப்பிராமணனென் றுத்தரம்.

(கஉ) இந்த வைந்து மெந்தவிதத்திலே திருஷ்டாந்தமென்கிற சங்கைக்கு,

கயிற்றிலே கட்டுப்பட்ட வல்லூறு, எந்தத்திக்கிலோடினாலுந் தன்னிலையிலேவந் திளைப்பாறுமதுபோல, சீவவுபாதியான மனதும் புண்ணிய பாவங்களைப் புசிக்க சாக்கிரத்திலுஞ் சொப்பனத்திலுஞ் சுழன்று சுழுத்தியிலே வந்து சுகமடையவேண்டும் பருந்தானது கூட்டிலே விழுகிறபோதிவேகமாய் விழுகிறாற்போலச் சீவனும், ஒன்றினாலு மறிபடாமற் சுழுத்திச்சுகத்தை நாடுகையினாலே சுழுத்தி, ஆநந்தமாகவேண்டும். முலையுண்டு மஞ்சத்திற்கிடக்கிற குழந்தை

ராகத்துவேஷ மில்லாதபடியினால் ஆநந்தமா யிருப்பதுபோல ராகத்துவேஷ மில்லாத சுழுத்தியும் ஆநந்தமாகவேண்டும். சகல பூமியுந் தன் வசம்பண்ணிக்கொண்ட விராஜா, பின்பு திருப்தனாயிருக்கிறாற்போல திருப்தியாயிருக்கிற சுழுத்தியும் ஆநந்தமாகவேண்டும். ஜீவன்முத்தனாயிருக்கிற மஹாப்பிராமணன், இனி கற்கவேண்டியதில்லையென்று கவலை கெட்டிருக்கிறாற் போலக் கவலையில்லாத சுழுத்தியும் ஆநந்தமாகவேண்டுமென் றுத்தரம்.

(கங) இப்படிச் சீவன்முத்தியடைந்து பெந்தம்போனவனுக்குச் சுகமேயல்லாமல் மற்றப்பேருக்குச் சுகமில்லையோவென்கிற சங்கைக்கு,

நன்றாக விடுபட்டவனுக்கும் நன்றாகப் பெந்தப்பட்டவனுக்குஞ் சுகமுண்டு, நடுநாடனுக்குச் சுகமில்லையென் றுத்தரம்.

(கச) சுழுத்தியிலே யிதர வியாபாரமேன் றெரியவில்லையென்கிற சங்கைக்கு,

ஸ்திரீயாலே தழுவப்பட்டவனுக்கு வீட்டுக்குட்காரியமும் வெளியிற்காரியமுந் தெரியாததுபோலச் சுழுத்தியாநந்தத்தி லழுந்தினவனுக்கு நாடியிற்குட் சொப்பனமும் வெளியிற் சாக்கிரத்தும் இருவகையுந் தெரியாது. எழுந்திருந்தபின் சுகமாய்த் தூங்கினேன் ஒன்று மறியேனென்கிறதனாலே அந்த வஞ்ஞானமும் ஆநந்தமயமுங்காணப்படுகிறது. மனோமயனும் விக்ஞானமயனும் அஞ்ஞானத்திலே யழுந்தினவேளை ஆநந்தமயனென்று சொல்லப்படும் இப்படி அஞ்ஞானவிருத்தி சூக்ஷமமென்றும் மனோவிருத்தி ஸ்தூலமென்றும் வேதஞ்சொல்லுகிறதென் றுத்தரம்.

(கரு) இப்படிப் பிரமாநந்தத்திலேகமாயழுந்தியிருந்த ஜீவன் விக்ஷேபத்திலேன் விழிக்கிறனென்கிற சங்கைக்கு,

சென்மாந்தர கர்மத்தினாலே விழிக்கிறன் விழித்தும் அவிடத்துப் பக்ஷபாதம்விடாமற் சற்றுப்போது நிர்விஷயமாயிருக்கிறன் பின்பு கர்மங்களதை மறக்கடித்திழுத்துப் போகிறது ஆகையினால், நித்திரைக்கு முன்னும் பின்னும் பக்ஷபாதமிருக்கிறபடியினாலே ஆநந்தமே பிரமமாகவேண்டுமென் றுத்தரம்.

(கசு) சும்மாவிருக்கிறதும் பிரமாநந்தமானால் சோம்பலும் பிரமாநந்தமாகவேண்டுமென்கிற சங்கைக்கு,

வேதமறிந்தவனுக்குத் தானங் கொடுக்கிறார்களென்கிறதைக் கேட்டு வேதம் நாலென்றறிவேன் எனக்குத்தானந்தா வென்கிறவன்போல நீயும் பரியாசஞ் சொல்லுகிறாய் குருவையுஞ் சாஸ்திரத்தையுமன்றி யாராலே பிரமமறியப்படுமென் றுத்தரம்.

(கஎ) வேதாந்தமெல்லாம் படித்தாற் போதுமோவென்கிற சங்கைக்கு,

அர்த்தமறிந்தா லொழியப்போதாதென் றுத்தரம்.

(கஅ) வித்பத்தியினாலே அர்த்தம் பார்த்துக்கொண்டாற் போதாதோவென்கிற சங்கைக்கு,

சாக்ஷாத்காரம் வந்தாலொழியப் போதாதென் றுத்தரம்.

(கக) இனி, எப்போது சாக்ஷாத்காரம் வருமென்கிற சங்கைக்கு,

கிருதார்த்தனாகுமளவுங் குருவையுபாசித்தால் வருமென் றுத்தரம்.

(உ0) குருவையுபாசித்தா லெப்படி வருமென்கிற சங்கைக்கு,

அவர் விஷயநிமித்தமன்றியிலே வருகிற வாசனானந்தத்தையும், விஷயம் லபித்து விஷயவாசை யொழிந்தபின், அந்தர்முகமனோவிருத்தியிலே பிரதிபலிக்கிறவாநந்தங்களையும், உன்னுடைய சுபாவாநந்த வாசனையல்லாமல் வேறல்லவென்று காணச்சொல்லி யுபதேசிப்பாரென் றுத்தரம்.

(உக) சுபாவாநந்தமானது பிரதிவிம்பாநந்தத்தையும், வாசனாநந்தத்தையும், எப்படிச் செனிப்பிக்கிறதென்கிற சங்கைக்கு,

சுருதியுத்தி யநுபவத்தினாலே சுழுத்திகாலத்திலே தான் பிரமாநந்தமென்கிறது சுபாவசித்தமாயிருந்தாலு மவிடத்திலே பிரதிவிம்பாநந்தமாகிய வாநந்தம் இருதயத்தைவிட்டுக் கண்டத்திலேவந்து சொப்பனத்திலே விக்ஞானமயராவர். நேத்திரத்திலேவந்து சாக்கிரத்திலே காய்ச்சின விரும்பினுண்டைபோலத் தேகமெல்லாங் கலந்துநின்று உதாசினன், சுகி, துக்கி, என்று மூவகையாகவிருப்பன். இதிற்சுகி, துக்கி, இரண்டும், கர்மகாரியம். உதாசீனம், தன்சுபாவமாயிருக்கிறதென் றுத்தரம்.

(உஉ) சுகதுக்க மெத்தனைவிதம் இரண்டுமல்லாமற் சும்மாவிருக்கிற வேளையிலே யெது தோற்றுமென்கிற சங்கைக்கு,

வாகியபோகமென்றும், மனோராச்சியமென்றும், சுகதுக்க மிரண்டுவிதமாயிருக்கும் இவைகளின், இடை தண்டிகளி லெனக்கொரு சிந்தனையுமில்லை சுகமாயிருக்கிறேனென்றெல்லாருஞ் சொல்லுகையினால், ஆத்மாச் சுபாவாநந்தமென்கிறதிலே சந்தேகமில்லையென் றுத்தரம்.

(உங) தன்னுடைய சுபாவாநந்த மிதுதானோயோவென்கிற சங்கைக்கு,

நீரிருக்கிறகுடத்தைத் தொட்டவுடனே காணப்படுகிற குளிர்மை தண்ணீராகாவிட்டாலும், அதுகொண்டு குடத்திலே தண்ணீருண்டென் றறிகிறாற்போல, உதாசீனவேளையிலே காணப்படுகிற சுகமும், உள்ளே, அகங்காரத்தினாலே மறைபட்டிருக்கிற சுபாவாநந்தத்தின் வாசனையென்றேயுத்தரம்.

(உச) இப்படியானாற் சுபாவாநந்த மெப்போதோற்றுமென்கிற சங்கைக்கு,

பிரமாப்பியாசத்தினாலே, அகங்காரத்தை மறக்கமறக்கப் பிரமாநந்தசுபாவம் வெட்டவெளியாம். அகங்காரத்தை நன்றாய்மறந்தாற் சித்தமிருக்கிறபடியினாலே நித்திரையுமல்ல. தேகமும்விழாது. இப்படித்தொய்தமுந் தோற்றாமல்நித்திரையுமல்லாமலிருக்கிறபிரமாநந்த நிலைவெளியாமென்றேயுத்தரம்.

(உரு) இப்படிக்கொத்த நிலைவரத்தக்கதாகப் பிரமாப்பியாசம் பண்ணுகிற வடைவெப்படி, அதற்குப் பிரமாணமேதென்கிற சங்கைக்கு,

பிரபஞ்சவிஷயத்திலே விழாமற் புத்தியைத்திடம்பண்ணிக்கொண்டு பிரபஞ்சத்திலே நின்று மெள்ளமெள்ள வொழியவேண்டும். யாதொருவழியாலே புத்திபேதித்தது அந்த வழியெல்லாமறக்கவேண்டும். சஞ்சலமானமனதையாத்மாவினிடத்திலே யசையாம னிறுத்தவேண்டும். இப்படி நிறுத்தினால், இந்த யோகத்தினா லியாதொன்றில் மனதுநிற்கும், யாதொரு சுகத்திற் காதியு மந்தமுமில்லை. யாதொரு நிலைபெற்றால், இனியில்லையென்னப்பட்ட கர்மபெந்தங்களினாலுமசைக்கப்படாது, அந்தப் பிரமாநந்த மிவனை யடையுமென்கிறதே யடைவு. இப்படிச்சொன்ன கீதாவசனமே பிரமாணமென்றுத்தரம்.

(உகூ) இந்த வப்பியாச மெத்தத் துக்கமென்கிற சங்கைக்கு,

தெர்ப்பை நுனியாலே கிட்டுக்குருவி சமுத்திரத்தை யிறைத்தாற்போல மநோநிக்கிரகம் பண்ணுகிறதும், கிலேசப்படாமற் சிறுகச்சிறுகப் பண்ணவேண்டும். பிரபஞ்சவிருத்தி மறக்கிறபோது தெண்ணெயற்ற விளக்குப்போல வந்தக்கரணமுஞ் சின்மாத்திரமாக யழியுமென் றுத்தரம்.

(உஎ) சித்தம், ஆத்மாவில், லயித்ததுகொண்டு கர்மபெந்த மெப்படி விடுபடு மென்கிற சங்கைக்கு,

கர்ம சம்சாரங்களுக்குச் சித்தமே காரணமானபடியினால், அந்தச்சித்தத்தைத்தானே சோதிக்கிறபோது சகல கர்மமும் விட்டுப்போமென் றுத்தரம்.

(உஅ) சித்தத்தைச் சோதிக்கிற வடைவேது, இதைச் சோதித்தால் மோக்ஷமென்றும், சோதியாதிருந்தாற் பந்தமென்பதற்கும், பிரமாணமேதென்கிற சங்கைக்கு,

அந்தக்கரணத்தை விஷயத்திற் பற்றுப்போலப் பிரமத்திற் பற்றுவைக்கிறதே சோதிக்கிறது. அந்தக்கரணம் விஷயத்திற் பற்றின லசுத்தம் பிரமத்திற் பற்றினாற் சுத்தம் ஆகையினாலே, மனதே பந்தத்திற்குங்காரணம் முத்திக்குங் காரணமென்கிற வேதம் பிரமாணமென்றே யுத்தரம்.

(உகூ) சமாதியிலே யாநந்த மெப்படியிருக்கும், சமாதியில்லாத வேளையி லெப்படியிருப்பன், இப்படி யோகத்திலே மனது மூண்டவனுக் கடையாளமேது, இந்திரியங்கள் பலம்பண்ணிப் பிரபஞ்சத்தி லிழுத்தாற் செய்காரியமேது, இவனுக்கு விஷயானந்த மெப்படித் தோற்றுமென்ற, இந்த வைந்துசங்கைக்கு,

சமாதியில் நிர்மலாந்தக்கரணத்திற்கொரு சூசனைதெரியுமேயல்லாமல் வாக்காலே சொல்லப்போகாது. சமாதியிலே நிச்சயித்தபடிக்கு மற்றவேளையிலும், நம்பிக்கையாயிருப்பன். பரபுருஷனையடைகிற நாறிபோல, அநுசந்தானத்திலே கரிசனமல்லாமற் பிரபஞ்சத்தினிடத்திலே கரிசனமற்றிருப்பன். சுமையெடுக்கிறவன் சற்றுசற்றுவைத் திளைப்பாறுகிறாற்போலச் சிறுகச்சிறுக மறித்திந்திரியங்களைச் சமாதியிலிளைப்பாற்றுவன். அநுசந்தானத்திற்கு விரோதியாய்வந்த விஷயானந்தமும், நெருப்பிலேவிழப்போகிறவனுக்கு அதற்குத் தாமதகாரணமாகச் செய்யும் அலங்காராதிகளிற்போலத் தோற்றுமென் றுத்தரம்.

(௩௦) பிரமாநுசந்தானமும், பிரபஞ்சவியாபாரமும், ஒரு மனதிற்குச் செய்யக்கூடாதென்கிற சங்கைக்கு,

ஞானியினுடைய மனது காக்கைக்கண்போல இரண்டிலும் போக்குவரத்தாயிருக்குமென் றுத்தரம்.

(௩௧) சமாதியிலேவருகிற பிரமாநந்தத்தையும், அதற்கு * அவிரோதியாய்வருகிற விஷயாநந்தத்தையும், அநுபவிக்கிற ஞானி யெப்படி யிருப்பனென்கிற சங்கைக்கு,

இரண்டுபாஷையு மறிந்தவன்போல விருவகையாநந்தத்தையுங் கண்டுபுசித்துக் களித்திருப்பனென் றுத்தரம்.

இப்படிப் பிரமாநந்த கிரந்தத்திலே யோகிக்குப்பிரத்தியக்ஷமாயிருக்கிற யோகாநந்தஞ் சொல்லப்பட்டது.

பதினோராவது யோகாநந்தம் முற்றிற்று.

ஆகச்சங்கை-௩௨௦.

---

* அவிரோதி என்றது பகிர்முகமாதற் கேதுவல்லாத விடயசுகத்தை.

# பன்னிரண்டாவது ஆத்மாநந்தம்.

யாதொருத்தனுடைய மூச்சுக்காற்றுத்தானே வேதமாய் விளங்காநின்றது, யாதொருத்தர் வேதத்தினாலேசகல சகத்தையு முண்டாக்கினார், அந்த ஈசுரனாகிய ஸ்ரீவித்தியாரண்ணிய சுவாமியை நமஸ்காரம்பண்ணி, ஆத்மாநந்தத்திற் கர்த்தஞ்சொல்லும்படி.

(க) யோகியானவன் யோகத்தினாலே தன்னுடைய சுபாவாநந்தத்தை யறியட்டும், இனி மூடனாயிருக்கிறவர்களுக்கு கதி யேதென்கிற சங்கைக்கு,

தர்மா தர்மவசத்தினாலே லக்ஷஞ்சன்ம மெடுக்கட்டுமென் றுத்தரம்.

(உ) இப்படித் தள்ளிவிடலாமோ, எல்லாரிடத்திலும் தயவுபண்ணத் தேவையில்லையோ வென்கிற சங்கைக்கு,

நாமையோவென்று பிரயோசனமேது, அந்தமூடன் பகிர்முகனோ அந்தர் முகனோவென்று கண்டுகொண்டு அவனவனுக்கேற்ற வுபதேசம்பண்ணுகிறோமென் றுத்தரம்.

(ங) இந்த இருவகையிலே, எவனுக் கெத்தை யுபதேசம்பண்ணுகிற தென்கிற சங்கைக்கு,

பகிர்முகனாயிருக்கிற மூடனுக்குக் கர்மவுபாசனைகளை யுபதேசிக்க, அந்தர்முகனாயிருக்கிற மூடனுக்கு ஆத்மாநந்த மார்க்கத்திலே ஞானத்தை யுபதேசிக்கவென் றுத்தரம்.

(ச) கெதம், இப்படி மூடருக்காத்மாநந்த முபதேசித்த பேருண்டோ, ஆத்மாநந்த வுபதேசமாகிற தேதென்கிற சங்கைக்கு,

யாக்கியவல்கியர், தம்முடைய பெண்சாதி மைத்திரிக்குபதேசித்தார். ஆநந்தமாயிருக்கப்பட்ட வஸ்து ஆத்மாவென்று காட்டுகிற துபதேசமென் றுத்தரம்.

(ரு) இப்படியானால், விஷயங்களெல்லா மாத்மாவல்ல வோவென்கிற சங்கைக்கு,

பெண்சாதி, புருஷன், பிள்ளை, தனம், பசு, பிராமணச் சாதி, லோகங்கள், தேவதைகள், வேதங்கள், பூதங்கள், சகலமும், ஆத்மாவைக்குறித்துப் பிரியமல்லாமல், இவைக ளாநந்தமல்லவென்று வேதஞ்சொல்லுகிறதென் றுத்தரம்.

(சு) ஆநந்தமா யிருக்கிற விவைகளை யாநந்தமல்ல வென்ப தெப்படியென்கிற சங்கைக்கு,

பெண்சாதிக்குப் புருஷனிடத்லே விருப்பம்பிறந்தவே ளையிலே வியாதிபசியினாலே யவனிவளை யிச்சியாததுகொ ண்டு பர்த்தாவைக்குறித்துவந்த வாநந்தம் இவளுடைய சுபாவமேயல்லாமல் அவனை யாநந்த மென்னக்கூடாது. புருஷனுக்குப் பெண்சாதி யாநந்தமாய்த் தோற்றுகிறபோ து வியாதியினாலே யவளிவனை நத்தாதபடியினா லிந்தவாநந் த மிவனுடைய சுபாவமேயல்லாமல் அவள்பிரியவஸ்துவெ ன்பதல்ல. முள்ளுப்போல மீசைதைத்தழுகினும் குழந்தை யை முத்தமிட்டுக்கொள்ளுகிற வாநந்தம் பிதாவுக்குத் தன் னுடைய வாநந்தமேயல்லாமற் குழந்தையாநந்தமல்ல. சந் தோஷப்பட வறியாத, ரத்னகனகாதிகளைச்சாவதானமாய் ரட்சித்துக்கொண்டு மகிழுகிறது, இவனுடைய வாநந்தமே யல்லாமல், ஐசொரியமாநந்தமல்ல. காளைக ளிச்சியாவிட் டாலும் அதிலே பொதியெடுப்பிக்கிற சந்தோஷஞ் செட் டிக்கேயல்லாமற் காளையின்பொருட்டல்ல. நான் பிராமண னென்று சபையிலே பூசையடைகிற சந்தோஷந் தனக்கே யல்லாமல், அசேதனமான ஜாதிக்கல்ல. சுவர்க்கலோகம், பிரமலோகம், நமக்குவேண்டுமென்கிற வாஞ்சை தன்னு டைய சந்தோஷமேயல்லாமல், அந்தலோகத்திற் குபகா

ரமாக வல்ல. சிவன் முதலான தேவதைகளைப் பாவம் போகவேண்டுமென்று பூசிக்கிறது தான் பிழைக்கும்பொருட்டே யல்லாமற் றேவதைகளுக்காகவல்ல. வேதங்களை யோதுகிறது தனக்காகவேயல்லாமல் வேதங்களுக்காகவல்ல. இடம், தாகம், பாகம், உலர்த்தல், அவகாசங்களுக்காகப் பஞ்சபூதங்களை நத்துகிற சந்தோஷந் தனக்காகவேயல்லாமற் பூதங்களுக்காகவல்ல. இப்படி, ஆண்டவனடியானென்கிறது முதலானவைகளுந் தனக்காகவே யல்லாமற் பரருக்காகவல்ல. ஆகையினாற் சகலவிஷயத்தையுங் குறித்துத் தானே பிரியவஸ்துவல்லாமல் விஷயங்கள் பிரியவஸ்துவல்லவாகையால், ஆத்மாவே யாநந்தமென்கிறதற்குச் சந்தேகமில்லையென் றுத்தரம்.

(எ) இப்படிவருகிற சந்தோஷ மெத்தனை விதமாய்ச் சொல்லப்படுமென்கிற சங்கைக்கு,

பொன்முதலான விஷயத்திலே, ஆசையென்றும், கர்ம வுபாசனையிலே, சிரத்தையென்றும், கிடையாதவஸ்துவிலே, இச்சையென்றும், குருதேவதைகளிடத்திலே, பத்தியென்றும், நாலுவிதமாய்ச் சொல்லப்படுமென் றுத்தரம்.

(அ) இந்த விஷயங்களிலிருக்கிற பிரீதிபோல, ஆத்மாவினிடத்திலு மொரு பிரீதியிருக்கிறது அதுகொண்டு விஷயம் பிரியமல்ல வென்பானே னென்கிற சங்கைக்கு,

ஒரு விஷயத்தைவிட் டொருவிஷயத்தை நாடுகுறாற் போல, ஆத்மாவைக் கைவிடப்படாதபடியினாலே ஆத்மாவே யாநந்தம் மற்றவெல்லா மானந்தமல்லவென் றுத்தரம்.

(கூ) வாஞ்சை துவேஷமிரண்டிற்கு மிடமற்றவரோயாத்மாவானு லோட்டாங்கிளிஞ்சில்போல வுபேக்ஷைக்கிடமாமொன்கிற சங்கைக்கு,

உபேக்ஷிக்கிறவனுடைய சொரூபமானபடியினு லுபே க்ஷைக்கு விஷயமல்ல வாத்மாவென் றுத்தரம்.

(கo) வியாதி கோபங்களாலே மூடப்பட்டவன், ஆத் மத்தியாகம்பண்ண நினைக்கிறபடியினாலே ஆத்மா, துவேஷ த்திற்கு விஷய மாகட்டுமென்கிற சங்கைக்கு,

தியாகம்பண்ண யோக்கியமான தேகத்தைத் தியாகம் பண்ணுகிறானேயல்லாமற் றியாகம்பண்ணுகிறவனாயிருக்கிற தன்னை தியாகம்பண்ணவில்லையென் றுத்தரம்.

(கக) இப்படி யிருவகைக்கும் விஷயமாகாத வாத்மாப் பிரியத்திற்குத்தான் விஷயமாகட்டுமென்கிற சங்கைக்கு,

பிதாவுக்குப் புத்திரன்தானே சகல பந்துக்களைக்காட் டிலும் பிரியவஸ்துவா யிருக்கிறாற்போல வாத்மாவைக்கு றித்தே சகலவிஷயமும் பிரியமானபடியினால், அதிகப்பிரிய மானவஸ்துவே யாத்மாவல்லாமல் விஷயமல்லவென்றே யுத்தரம்.

(கஉ) இப்படி, அதிகப்பிரியவஸ்துவே யாத்மாவானால் ஆத்மாத்தானே பிள்ளையாகுனென்கிற வேதத்திலும், இவ ன்பண்ணின புண்ணியத்தினாலே ஆத்மாத்தானே பிள்ளையா குனென்றும், பிள்ளையில்லாதவனுக்குக் கதியில்லையென்று ம், வேதஞ்சொல்லுகையினாலே, புத்திரன்றானே யாத்மா வாகட்டுமென்கிற சங்கைக்கு,

கௌணாத்மா வென்றும், மித்தை யாத்மாவென்றும், முக்கியாத்மாவென்று மிப்படிமூன்றாத்மா வுண்டு, ஓரோர் வகையி லோரோ ராத்மாப்பிரதானமாயிருக்கும் புத்திரனை யாத்மாவென்கிறதிந்த மூவகையி லொருவகையிலேயல்லா மல் முக்கியமல்லவென்றேயுத்தரம்.

(கரு) இந்தமூவகை யாத்மாவாகச் சொல்லப்பட்டதே து, இதிலெந்தவாத்மாமுக்கியம், இவைகளை வகையுடனே சொல்லுமென்கிற சங்கைக்கு,

இந்தப்புருஷனைச்சிங்கமென்கிறதுபோலப் பிள்ளையை யாத்மாவென்கிறது கௌணம். கட்டையைக் கள்ளனென்கிறதுபோலப்பஞ்சகோசத்தைத்தானென்கிறதுமித்தை. கட்டையைக் கட்டையென்கிறதுபோலச் சாக்ஷியைத்தானென்கிறது முக்கியம். தான்செத்தாலும் பிள்ளைகள் பிழைத்தாற் போதுமென்கிறதினாலுங் குடும்பத்தை ரக்ஷிக்கிறதினாலுங் கௌணாத்மாவா யிருக்கிறபுத்திரனேமுக்கியம். நான் பருத்தேன் சிறுத்தே னென்னுமிடத்திற் றேகமே முக்கியமாய்க் கண்டாற்போல சுவர்க்கலோகம் வேண்டுமென்று காயக் கிலேசமான தவசுபண்ணுமிடத்தில் மித்தை யாத்மாவான வகங்காரமே முக்கியம். நான் சுயம்பிரகாசன் நிர்விகாரி யென்னுமிடத்தில் முக்கியாத்மாவான சாக்ஷியே முக்கியம். ஆகையினாலே, பஞ்சகோசங்களைத் தள்ளினாலுந் தள்ளப்படாத வாத்மாவே யாநந்தசொரூபனென் றுத்தரம்.

(கச) இவனைப் பிரித்தறிகிறவகை யெப்படி, தள்ளப்பட்ட பஞ்சகோசாதிகளும், ஒவ்வொருக் காலாநந்தமாய்த் தோற்றுவானேனென்கிற சங்கைக்கு,

அன்றாடக மூன்றவத்தைகளுடைய போக்குவரத்தைக் காண்கின்ற சுயம்பிரகாச சைதன்னியமே தானென்றறிய வேண்டும், மற்றபுத்ராதி பிராண பரியந்தங்களெல்லாம், ஆத்மாவைக் கிட்டினதற்குத் தக்கன வாநந்த தாரதன் மியங்காணுதென் றுத்தரம்.

(கரு) ஆத்மாவைக் கிட்டக்கிட்ட வாநந்த தாரதன்மியங் காணுகிற வகையெப்படியென்கிற சங்கைக்கு,

லோகத்திலே, ஐசொரியஞ் சுகசாதனமான படியினுலே கைவிடப்படாத வாநந்தமென்றுசொல்லப்படும். புத்திராதிகளுக்குப் பீடைவந்தபோ தைசொரியத்தைக் கைவிட்டாகிலும் பிள்ளையை ரக்ஷிக்கையினுல் ஐசொரியத்தைக்காட்டிலும்பிள்ளையேயாநந்தமாகவேண்டும். தீப்பற்றினவீட்டிலும் புத்திரனைக் கைவிட்டாகிலுந் தானேடிப்போகையினுலே புத்திரனைகாட்டிலுஞ்சரீரமேயாநந்தமாகவேண்டும். கொசுகு தாளிக்காற்றடிக்கும்போது சரீரத்தையுபேக்ஷித்து, இந்திரியங்களைப்பதனம்பண்ணுகையினுலே சரீரத்தைக்காட்டிலுமிந்திரியமேயாநந்தமாகவேண்டும். வெட்டக்கொண்டுபோகிறபோது, இந்திரியங்களையுபேக்ஷித்தாலும்பிராணுதிகளை ரக்ஷிக்கையினு லிந்திரியங்களைக்காட்டிலும் பிராணுதிகளே யாநந்தமாகவேண்டும். பிராணன்போகிறபோ திந்தப்பிராணுதிகளெல்லா மினிநமக்குத் தகாதென்று நிச்சயித்துக்கைவிட்டுப் பிராணுதிக ளுண்டாகிறபோது கூடவு முண்டாகாமல் பிராணுதிக ணசிக்கிறபோது கூடவுநசியாமல், அசங்கசைதன்னியமாயிருக்கிற தான்றனே யொருக்காலுங் கைவிடப்படாத பரமாநந்த சொரூபனென் றுத்தரம்.

(கரு) தகப்பனுக்குப் பின்னந்த வாதீனத்திலேயிருந்து புசிக்கமாட்டாத சாக்ஷியை யாத்மாவென்கிறது செவ்வையல்ல, பாடும், பழியும், ரணமும், தன்னதாக வொப்புக்கொண்டு புசிக்கிற புத்திரனே யாத்மாவாகவேண்டும் இவனுக்குமேற்பிரிய வஸ்துவுமில்லையென்கிற சங்கைக்கு,

முன்சொன்ன விவேகமெல்லாம் விட்டுப்போட்டுத்திரும்பவுமிப்படிச் சங்கித்தவன் சிஷ்யனே பிரதிவாதியோவென்றறிந்து, இருவகைக்கேற்ற வுத்தரஞ் சொல்லவேண்டும், அதெப்படியென்றுல், சிஷ்யனுக்குச் சொல்லுகிற வுத்தரம்

பிள்ளை வருகிறதற்கு முன்னும் பிள்ளையில்லையென்று துக்கம். கர்ப்பத்திலே வந்தாலும் விழுந்துபோமென்று துக்கம். நிர்ணயப்பட்டாலும் பெற்றுப் பிழைத்தபோதல்லவோ வென்று துக்கம். பிறந்தபின்பு கணங்கள் பறவைதோஷமுதலானவைகளாற்றுக்கம். குமாரனுனால் மூர்க்கத்தனத்தினுலே துக்கம். பூணநூலிட்டாற் படிக்கிறுனில்லையென்கிறதுக்கம். வித்துவாஞனல் வேட்பிக்கவேண்டுமென்று துக்கம். எவ்வனம்வந்தாற் பரதாரகமனம் பண்ணுகிறுனென்று துக்கம், குடும்பியாஞற் றரித்திரப்படுகிறுனென்று துக்கம். அவன் றனவாஞனல் நாம்காணுமற் செத்துப்போகிறேமோவென்று துக்கம். இப்படிப் புத்திரன் முதலானவைகளிலே பகுத்துப்பார்க்கிற் றுக்கந்தானே பிரதிபாதிக்கிறது சுபாவந்தானே யென்றுத்தரம்.

பிரதிவாதிக்குச்சொல்வது, குதர்க்கசங்கையினு லிகபரமிரண்டுமில்லாமற் கெட்டுப்போவாயென்கிற சாபந்தானென்றுத்தரம்.

(கஎ) இவர் கோபித்ததினுலே பிரதிவாதிக் கானியேதென்கிற சங்கைக்கு,

பிரமவித்தாயிருக்கிறவன் பிரமசொரூபமானபடியினுற்சிஷ்யனுக்கும் பிரதிவாதிக்கும் அவன்பண்ணின வநுக்கிரகமும் நிக்கிரகமு மந்தப்படியே பலிக்குமென்கிறதினுலும் பிரமவித்துக்களை விஷமசங்கைபண்ணினவன், ஆயிரஞ்சதுர்யுகம் ரவுரவ நரகத்திலே கிடப்பனென்கிற புராணவசனத்திஞலும் பிரதிவாதிக் கநர்த்தம் வருமென் றுத்தரம்.

(கஅ) இப்பாற்சித்தாந்த மேதாயிற்றென்கிற சங்கைக்கு,

இப்போது சொன்னபடி பகுத்தறிந்து சாக்ஷியாயிருக்கிறதானே சகலத்திலும் பிரியவஸ்துவென் றாத்மாநந்தத்தி

லென்னேரமுங் களித்திருக்கிறவனுக்கே முத்தியென்று சித்தாந்தமென் றுத்தரம்.

(கக) இந்த வாத்மாவுக்குச் சைதன்னியம்போலச் சுகமுஞ் சுபாவமேயானு லந்தக்கரணவிருத்திகளிலே சித்துமாத்திரந் தோன்றி யாநந்தந்தோன்ரு திருப்பானேனென்கிற சங்கைக்கு,

உஷ்ணமும் பிரகாசமுஞ் சுபாவமா யிருக்கிற அக்கினியினுடைய உஷ்ணந்தண்ணீரிலும் பிரபைவீட்டிலும் பிரிந்து காண்கிறுற்போலவுந் தாமரைப்பூவிற்குச்சுபாவமாயிருக்கிற ரூபரசகந்தங்கள் ஒவ்வொரு விந்திரியத்தி லொவ்வொரு குணந் தோற்றுகிறுற்போலவும் ஆத்மாவினுடைய சிதாநந்தங்களும் ஒவ்வொரு விருத்தியி லொவ்வொரு சுபாவந் தோற்றுமென் றுத்தரம்.

(உ0) எந்தவிருத்தியி லெந்தச்சுபாவந் தோற்றுமென்கிற சங்கைக்கு,

நிர்மலமாயிருக்கிற சாத்வீகவிருத்தியி லாத்மாவினுடைய சித்து மாநந்தமுந்தோற்றும். மலினமாயிருக்கிற ராசதவிருத்தியி லாநந்தவம்ஸந் தோற்றுதென் றுத்தரம்.

(உக) இப்படிக்கொத்த ஆத்மாநந்தத்தை முந்தினவத்தியாயத்திலே சொன்ன யோகமன்றியிலே இந்தவத்தியாயத்திலே சொன்ன விவேகத்தினுற்றுனே சாதிக்கப்படுமோ, இதற்குப் பிரமாண மேதென்கிற சங்கைக்கு,

யோகத்தி லியாதொரு பிரம மடையப்படுகிறதோ ஞானத்தினுலும், அதுவே, யாத்மாநந்தமாக வெளிப்பட்டது இதற்குச் சாங்கியத்தி லடையப்படுகிற பதமே யோகத்தினு மடையலாமென்கிற கீதாவசனம் பிரமாணமென் றுத்தரம்.

(உஉ) சாங்கியம் யோகமென் றிரண்டுவழியாய்ப் பகு த்துச் சொல்வானேன், இரண்டுபேருக்கும் பலன் சரியாய் வருவானேனென்கிற சங்கைக்கு,

ஒருத்தனுக்கு யோக மெளிதாயிருக்கும்,ஒருத்தனுக்கு ஞானநிச்சய மெளிதாய் வருமென்கிறதை மனதிலே கண்டு கொண்டு கிருஷ்ணனு மிரண்டுவழியுஞ்சொன்னார். யோகி ஞானியென்கிற விருவருக்குஞ் சின்மாத்திரமென்கிற ஞான மும், ராகத்துவேஷமில்லாமையும், விஷயத்தை வர்ச்சிக் கிறதும், பிரதியோகியாயிருக்கிற தேகாதிகளிலத்தியாசந்த விருகிறதும், சரியானபடியினாலே மோக்ஷமுஞ் சரியாகவரு கிறதென் றுத்தரம்.

(உ௩) தொய்தமெல்லாந் தோற்றுகையினா லதெப்ப டிப் புத்தியிலே படாமலிருக்குமென்கிற சங்கைக்கு,

புத்திக்கேற்கத் தொய்தமேயில்லையென்று போகத்தக் கனவாக,அத்துவிதாநந்தமென்கிற மே * லத்தியாயத்திலே வெளிபண்ணுகிறோமென் றுத்தரம்.

(உச) எந்நேரமுமிந்த வாத்மாநந்தத்தை யநுசந்தா னம்பண்ணிக்கொண்டு பிரபஞ்சத்தைப் பாராமலிருக்கிறவன் காரியத்தினால் யோகியுமாவன். எளிதாகவும் மோக்ஷங் கிடைக்குமென்று மந்தனுக் கநுக்கிரகம் பண்ணினோம்.

பன்னிரண்டாவது ஆத்மாநந்தம்-முற்றிற்று.

ஆகச்சங்கை - ௫சச.

---

* அத்தியாயமென்றது பிரகரணம்.

# பதின்மூன்றாவது - அத்துவிதாநந்தம்.

(க) முந்திச் சொல்லப்பட்ட யோகாநந்தந்தானே; ஆத்மாநந்தமாகட்டும், தொய்தத்தோடே கூடியிருக்கிறவனுக்குப் பிரமத்துவமெப்படிச் சித்திக்குமென்கிற சங்கைக்கு,

ஆகாசமுதலாகத்தன்னுடைய தேகபரியந்தமுள்ள சகத்தெல்லாம், தனக்குபாதானகாரணமாயிருக்கிற ஆநந்தத்திலேதோன்றி யாநந்தத்திலேயிருந்து ஆநந்தத்திலே, லயமாகிறபடியினாலே மண்ணைத்தவிரக் கடமில்லையென்கிறாற்போல, ஆநந்தத்தைத்தவிர வேறல்லவென்று வேதஞ்சொன்னபடியினால். அத்தொய்தம் பிரமமென்கிறது கூடுமென்றுத்தரம்.

(உ) குயவனா லுண்டாக்கப்பட்ட கடங் குயவனாலேயுடைந்த தென்கிறாற்போலச் சகத்திற்குப் பிரமம், நிமித்த காரண மாகட்டுமென்கிற சங்கைக்கு,

மண்ணைவிட்டுக் கடங்காணாதது போலப் பிரமத்தைவிட்டுச் சகத்திராதபடியினாலே நிமித்தகாரண மென்னக்கூடாது. உபாதானகாரணமாக வேண்டுமென் றுத்தரம்.

(ந) காரணத்தினு நின்று சகத்துண்டானது, ஆரம்பமாகவோ, பரிணாமமாகவோ, விவர்த்த மாகவோ, என்கிற சங்கைக்கு,

பிதாவும் புத்திரனும் வேறுபட்டிருக்கக்கண்டாற்போல, காரணத்தைவிட்டுக் காரியம்வேறுபட்டுக் காணாதபடியினாலே நிரம்சவஸ்துவிலே ஆரம்பபக்ஷங்கூடாது. பால்தயிரானாற்போல,காரணந் தன்னுருக்கெட்டு வேறுருவாகாதபடியினாலே பரிணாமபக்ஷமுங் கூடாது. பழுதையே பாம்பாகத் தோற்றுகிறாற்போல இங்கும், தன்னுருக்கெடாமல்வே

றுருப்போலே தோற்றுகையினாலே விவர்த்தபக்ஷமே சித்தாந்தமென் றுத்தரம்.

(௪) நிரம்ச வஸ்துவிலே விவர்த்தந்தானுங் கூடாதென்கிற சங்கைக்கு,

நிரம்சமாயிருக்கிற வாகாசத்திலே தலம் நீலாதிகளைக் கற்பிக்கிறாற்போல நிரம்சமாயிருக்கிற பிரமத்திலுஞ் செகத்து விவர்த்த மென்பது கூடுமென் றுத்தரம்.

(௫) அசங்கமாயிருக்கிற பிரமஞ் சகத்தை யெப்படிச் சிருட்டிக்குமென்கிற சங்கைக்கு,

இந்திரஜாலக்கார னிடத்திலிருக்கிற மாயை, இந்திரஜாலத்தைக் கற்பிக்கிறாற்போலப் பிரமத்தினிடத்தில் ஒரு மாயாசத்தியுண்டு அதுவே சகத்தைக்கற்பிக்கிறது. பிரமமல்லவென் றுத்தரம்,

(௬) மாயாசத்தி யொன்றுண் டென்றதோடே அத்தொய்தங் கெட்டுதென்கிற சங்கைக்கு,

அந்தச்சத்தியும் பிரமத்தைத்தவிர வேறல்ல வாகையினால், அத்தொய்தத்துக் கானியில்லையென் றுத்தரம்.

(௭) அப்படியானால், அந்தச் சத்தியு மில்லை யென்கிற சங்கைக்கு,

காரியங் கண்டபடியினா லந்தச்சத்தியுண்டென் றுத்தரம்.

(௮) இந்த வசங்கதமெங்கேயாகிலுங் கண்டதுண்டோவென்கிற சங்கைக்கு,

அக்கினியிலிருக்கிற தாகசத்தி, அக்கினிதானாகவும் மணி மந்திரங்களினா லக்கினிக்கன்னியமாகவுங் காணவில்லையோவென் றுத்தரம்.

(௯) இப்படிப் பிரமமுமல்ல, பிரமத்தைத் தவிரவுமல்லவென்கிற மாயாசத்தி யுண்டென்கிறதற்குப் பிரமாணமேதென்கிற சங்கைக்கு,

அநந்தசத்தியுண்டு பிரமத்துக்கென்கிற வேதமும், வாசிட்டமும், பிரமாணமென் றுத்தரம்.

(௧௦) வாசிட்டத்தி லெப்படிச் சொல்லியிருக்கிறதென்கிற சங்கைக்கு,

வாரீர், ரகுநாதரே, பிரமத்திலே, அநந்தசத்தியுண்டு. அந்தவநந்தசத்தியினாலே பிரமந்தானே, பிரபஞ்சமாய்த் தோற்றுகிறது. சரீரங்களிலே, சிற்சத்தியும், ஆகாசத்திலே, நிரவயவசத்தியும், வாயுவிலே, சலனசத்தியும், கல்லிலே, கடினசத்தியும், சலத்திலே, சீதசத்தியும், அக்கினியிலே, உஷ்ணசத்தியும், இவைமுதலான வநந்தசத்தியும் பிரமத்தினிடத்திலே காரியத்தினாலே காணப்படுகிறதென்றும், சிருஷ்டிக்குமுன்னிந்தச்சத்தி, முட்டையிலே சூக்ஷமமாய்ப் பாம்பிருக்கிறாற்போலவும், விதையிலே மரமிருக்கிறாற்போலவும், காணப்படாமற் பிரமத்திலே யிருந்ததென்றும் தேசகால விசித்திரத்தினாலே பூமியிலே பயிர்கள் முளைக்கிறாற்போலப் பிரமத்திலே சத்தியும், ஒவ்வொருக்காற் சகத்தென்கிற ரூபமாய் விளங்குமென்றும், ஆதியிலே மனதுண்டாயிற்று. பின்பு பந்தமோக்ஷமுண்டாயிற்று. பின்பாகாசாதி சிருஷ்டியுண்டாயிற்றென்கிற கிரமமெல்லாம் பாலகாக்ஞாயிகைபோல மூடனுக்குச் சொன்னதேயல்லாம லுண்மையல்லவென்று சொன்னானென் றுத்தரம்.

(௧௧) பாலகாக்ஞாயிகையாவதேதென்று கேட்ட விராமருடைய சங்கைக்கு,

அசத்தென்கிறபட்டணத்திலே மூன்று ராஜகுமாரர்களுண்டு இரண்டுபேர் இனிமேற்பிறக்கப்போகிறார்கள். ஒருத்தன் இனிமேற் கெர்ப்பத்திலே வரப்போகிறான். புண்ணியவான்களாயிருக்கிற இந்தமூன்று ராஜகுமாரர்களும் வேட்டைக்குப்போனவிடத்திலே ஆகாசத்தில் நல்ல தோப்பிருக்கிறதென் றாமைகள் சொல்லக்கேட் டாகாசத்திலேபோய்த் தோப்பைக்கண்டார்கள் அவிடத்திலே முயற்கொம்பை வெட்டிச் சிங்காரதமா பூதிக்கொண் டினிமேல் வரப்போகிற பட்டணத்தி லின்றைக்குப் பிரவேசித்தாரென்று முலைத்தாதிசொன்ன கதையைக்கேட்டு விசாரமற்ற குழந்தையும், மெய்யென்றே நம்பினான். இந்தச் சம்சாரகற்பனையும் விசாரமில்லாத மூடனுக் குண்மைபோலச் சொல்லியிருக்கிறதென் றிதுமுதலான வுபகதைகளோடே மாயாசத்தியினுடைய விஸ்தாரத்தைவசிஷ்டர், ரகுநாதருக்குச்சொன்னார் அந்தமாயாசத்தியைத் தானே நாமும் நிரூபிக்கிறோமென் றுத்தரம்.

(கஉ) மாயாசத்திக்கு லக்ஷணமேதென்கிற சங்கைக்கு,

காரியத்திற்கும் ஆதாரத்திற்கும் விலக்ஷணமாயிருக்குமென் றுத்தரம்.

(கங) காரியமென்பதேது, ஆதாரமென்பதேது, சத்தி இவைக்கு விலக்ஷணமென்ப தெப்படி, இம்மூன்றையு மொரு திருஷ்டாந்தத்திலே பகுத்துக் காட்டுமென்கிற சங்கைக்கு,

வாய்குவிந்து பண்டியண்டாயிருக்கிற கடமே காரியமென்பது. ஐந்து குணமுடைய மண்டானே யாதாரமென்பது கடசத்தி இந்த விரண் டிலக்ஷணமு மில்லாததாயிருக்குமென் றுத்தரம்.

(கச) இந்த விரண்டிலக்ஷணமு மில்லாதசத்தியையெப் படியிருக்குமென் றறிகிற தென்கிற சங்கைக்கு,

அநிர்வசநீயமென்றே யுத்தரம்.

(கரு) இந்தக்கடசத்தி, இன்னபடியென் று கூற்றறுக்க ப்படாதபடியினாலே அதுவேயில்லை யென்கிற சங்கைக்கு,

காரியவுற்பத்திக்குமுன்னிந்தச்சத்திதனக்காதாரமாயி ருக்கிற மண்ணிற்குள்ளே யொளித்திருந்தது நிமித்தகாரண மாயிருக்கிற குலாலாதிகள் சகாயமாய்வந்துகூடினவுடனே விகாரமாயிருக்கிற கடவடிவையடைந்து தனக்காதாரமாயி ருக்கிறமண்ணிற்குமண்ணென்கிறபேரையுமாற்றிக்கடமென் னகிறதனாலே சத்தியில்லை யென்னக்கூடாதென் றுத்தரம்.

(கசு) மண்ணிற்சத்தி காரியமாகிறதற்குக்குலாலன் வே ண்டினாற்போலப் பிரமத்திற் சத்தி சகத்தாகிறதற்கு நிமித்த காரணமா ரென்கிற சங்கைக்கு,

கடசத்தியுடைத்தான மண், சுயஞ்சடமானபடியினாலே சைதன்னியமாயிருக்கிற குலாலன்வேண்டிற்று மாயாசத்தி யுடைத்தான பிரமம், சுயஞ்சுத்தசைதன்னிய மானபடியினா லேவேறேநிமித்தகாரணந் தேவையில்லையென் றுத்தரம்.

(கஎ) மண்ணென்றும், சத்தியென்றும், அதன்விகாரங் கடமென்றும், லோகத்தி லொருவருஞ் சொல்லக்காணோம் எல்லாவற்றையுங்கூட்டிக் கடமென்றே சொல்லுகிறார்க ளிதிலே காரணமேதென்கிற சங்கைக்கு,

விசாரியாதவஞ்ஞானமே காரணமென் றுத்தரம்.

(கஅ) விசாரமாவதேது விசாரித்தவ னெத்தைக் கட மென்ப னென்கிற சங்கைக்கு,

குலாலவியாபாரத்திற்குமுன் மண்ணென்கிற பெயரோ வழங்குகிறபடியினலே கடசத்தத்திற்கு மண்ணர்த்தமல்ல. குலாலவியாபாரத்திற்குப் பின் கடமென்று வழங்கினபாண்டமும், மண்ணைத்தவிரவில்லாதபடியினலே கடசப்தத்திற்கர்த்தம் மண்ணைத்தவிரவுமல்லவென்று பார்க்கிறதே விசாரம் இப்படி விசாரித்தவன் கடமுஞ்சத்தியைப்போலே அநிர்வசநீயமானபடியினலே அந்தச்சத்தியின் காரியமென்றறிவனென்றுத்தரம்.

(கக) அநிர்வசநீயத்தைச் சத்தியென்று சொல்லவேண்டுமேயல்லாமற் கடமென்று நிருவகிக்கிறதெப்படியென்கிற சங்கைக்கு,

இந்திரஜாலக்காரனிடத்திற் சத்தி, காண்பியாதபோது மாயையென்றுங் காண்பிக்கிறபோது கந்தர்வசேனையென்றுஞ் சொல்லப்படுகிறாற்போல் மண்ணிற் சத்திகாரியமாய்க் காண்பியாதபோது சத்தியென்றுங் காண்பித்தபோது கடமென்றுஞ் சொல்லப்படுமென்றுத்தரம்.

(உ௦) இந்த யுத்திக்குப் பிரமாண முண்டோவென்கிற சங்கைக்கு,

இப்படி மாயாமயமா யிருக்கிறதெல்லாம் வாக்கினலே சொல்லு மாத்திரமேயல்லாம லர்த்தமில்லையென்றும், அவிகாரமாயிருக்கிற மண்மாத்திரமே பொருளென்றும், வேதஞ்சொல்லுகிறதென்றுத்தரம்.

(உக) ஒருகாலத்திலே சத்தியென்றும், ஒருகாலத்திலே காரியமென்றும் காணப்படுகிற கடஞ் சத்தியமென்றங்கீகரியாவிட்டால் விவகாரமெப்படிக் கூடுமென்கிற சங்கைக்கு,

இருவகைக்கு மாதாரமாயிருக்கிற மண்ணைவிடாதிருந் தபடியினாலே விவகாரங்கூடும். மண்ணைவிட்டுப்பார்த்தால் வாக்குமாத்திரமே யல்லாம லிரண்டுகாலத்தினு மொருப டித்தாயிருக்கிற மண்போலே பொருளாகாதென் றுத்தரம்

(உஉ)விகாரமென்றுங் கடமென்றுஞ் சொல்லப்பட்ட பொருளே பொய்யானால் மண்ணென்றறிந்தவுடனே ஏன், காணாதேபோகவில்லையென்கிற சங்கைக்கு,

விகாரம் பொருளுமல்ல வுண்மையு மல்லவென்று காணப்பட்டதே தோற்றமற்போனதென் றுத்தரம்.

(உங) காரியம் பொய்யென்றறிந்ததுகொண்டு பிரயோ சனமேது காணாமற் போகவேண்டாமோ வென்கிற சங் கைக்கு,

புருஷனிழற் றண்ணீரிற்குள்ளே தலைகீழாய்த்தோற்றி னாலு மவனில்லைப் பொய்யென்றறிகிறதுபோலக் காரியந் தோற்றினாலும், பொய்யென் றறிகிறதேயில்லையென்றுபோ னது. காணாமற் போகிறதல்ல. அத்தொய்தவாதிகளுக்கிப் படிக்கொத்த வறிவுதானே புருஷார்த்தமென் றுத்தரம்.

(உச) இந்தத் திருஷ்டாந்தப்படிக்குச் சகத்தையும் பொய்யென்றான்றிப்பார்த்துக்கொள்ளச்சொல்லி யெங்கே யாகிலுஞ் சொல்லியிருக்கிறதோவென்கிற சங்கைக்கு,

மண், பொன், இரும்பென்று மூன்றுதிருஷ்டாந்தமூம் காரியமெல்லாம் பொய்யென்று பகுத்தறிகிறதும், சாமவே தத்திலே சொல்லியிருக்கிறதென் றுத்தரம்.

(உரு) கடம்பூஷணங் கத்தியென்று பரிணமித்ததுவே விவர்த்தத்திற்கெப்படித் திருஷ்டாந்தமாமென்கிற சங்கை க்கு,

பால்தயிராளுற் போலே பரிபாகப் பட்டுப்போகாமல் மண் முதலானதின் விகாரமழிந்தாற் காரணரூபமா யிருக்கையினாலே விவர்த்தத்திற்குத் திருஷ்டாந்தமாய்ச் சொல்லாமென் றுத்தரம்.

(உசு) இந்தப்படிக்குச் சகத்தை யெதாய்க்காணவேண் டுமென்கிற சங்கைக்கு,

காரியமெல்லாங் காரணமாகவே காணவேண்டுமென் றுத்தரம்.

(உஎ) சத்தியத்தை யறிகிறவிடத்திலே அசத்தியமென் கிற வறிவெப்படி வருமென்கிற சங்கைக்கு,

மண்ணென் றறிகிறவிடத்திலே, விகார மசத்தியமென் றறிகிறாற்போலவென் றுத்தரம்.

(உஅ) மண்ணென் றேனுக்காக வறியவேண்டும் விகாரத்தை யேன் மறக்கவேண்டுமென்கிற சங்கைக்கு,

உள்ளதையுள்ளபடி பார்க்கிறதே புருஷார்த்தம் இல்லாததையுண்டென்று பார்க்கிறதே அநர்த்தமென் றுத்தரம்.

(உகூ) ஆனால், சகலபிரபஞ்சத்தையும், சோதித்துப் பார்க்கவேண்டுமேயென்கிற சங்கைக்கு,

ஒருகடத்தை மண்ணென் றறிந்ததுகொண்டு லோகத்திலேயுண்டான பாண்டமெல்லாம், மண்ணென்று வகுப்பற்றாற்போல, வொருவிஷயத்தை யூன்றிப்பார்த்துப் பிரமமென் றறிந்தாற் சகலபிரபஞ்சமும் பிரமமென்று வகுப்பறுமென் றுத்தரம்.

(ௐ) பிரமத்திற்கு லக்ஷணமேது, சகத்திற்கு லக்ஷணமேதென்கிற சங்கைக்கு,

சத்துச் சித்தாநந்த மூன்றும், பிரமலக்ஷணம். நாமரூப மிரண்டும், சகத்துலக்ஷணமென் றுத்தரம்.

(நக) கடசிருஷ்டாந்தத்தைப்போலே யிவடத்திலும், சத்தி யின்னது சத்திக்காதாரமின்னது சத்தியின் காரிய மான விகார மின்னதென்கிறதைப்பகுத்துக்காட்டுமென்கிற சங்கைக்கு,

இன்னபடியென்று நிரூபிக்கப்படாத மாயைதானே சத்தி. பிரமந்தானே சத்திக்காதாரம். நிர்விகாரமாயிருக் கிற பிரமத்தினிடத்திலே கற்பிக்கப்பட்ட நாமரூபந்தானே சத்தியின் காரியமான விகாரமென் றுத்தரம்.

(நஉ) இந்தமாயை யெந்தவடைவிலே விகாரத்தை யடைந்ததென்கிற சங்கைக்கு,

சிருஷ்டிக்குமுன், இன்னதென்றுகாணப்படாமல், அவ் வியாகிருதமாக விருந்த விந்தமாயை, முந்தமுந்த வாகாச மென்கிற விகாரத்தை யடைந்ததென் றுத்தரம்.

(நந) கடவிகாரத்திற்கு மண்ணே சொரூபமாய்க் காணப்பட்டாற்போல வாகாசவிகாரத்திற்கும் பிரமமே சொரூபமென்கிறதைப் பகுத்துக் காட்டவேண்டுமென்கிற சங்கைக்கு,

அஸ்திபாதிப் பிரியத்தைத்தவிர அவகாசமென்கிற சொரூபத்திற்கும் ஆகாசமென்கிற நாமத்திற்குஞ் சொரூப மில்லாதபடியினாலே நாமரூபம் சிருஷ்டியிலே யுண்டாய்ப் பிரளயத்திலே அழிகிறதுகொண் டிந்தவிரண்டு மித்தையெ ன்றும், மண்போலே சச்சிதானந்த மெப்போதும் நிலைபெற் றிருக்கையினாலே பிரமமே சத்தியமென்றும், பகுத்தறியெ ன் றுத்தரம்,

(கச) ஆகாசத்திற்குப்பிந்தினவிகாரங்களேது, அதிலே சச்சிதாநந்தத்தைக் காண்கிறதெப்படியென்கிற சங்கைக்கு,

வாயு, அக்கினி, அப்பு, பிருதுவி, ஓஷதிகள் அன்னம் புருஷன், மிருகாதிகளெல்லாம் விகாரமென்பது. இப்படி, வெகு விதமாயிருக்கப்பட்ட நாமரூபங்களெல்லாம், சச்சிதாநந்தத்தைவிட்டுக் காணுதபடியினாலே யித்தனையுஞ் சச்சிதாநந்தமென்கிறதிலே சந்தேகமில்லையென் றுத்தரம்.

(கரு) சச்சிதாநந்தத்தை விடாதிருக்கிறபடியினாலே நாமரூபமும் நித்தியமாகட்டுமென்கிற சங்கைக்கு,

உற்றுப்பார்த்தா லில்லாத நாமரூபங்கள் சத்தியமாயிராமற் பிரமத்தினிடத்திலே தோற்றி யழிந்துபோகிறதை விவேகம்பண்ணி யநுபவித்துக்கொள்ளென் றுத்தரம்.

(கசு) விவேகம்பண்ணிப் பார்க்கிறதெப்படியென்கிற சங்கைக்கு,

அலைநுரைகள்சமுத்திரத்திலேயுண்டாய் சமுத்திரத்திலேயிருந்து சமுத்திரத்திலே லயமாகிறதுபோலவென் றுத்தரம்.

(கஎ) எப்படிப்பார்த்தாலும் நாமரூபமே முன்னிற்கிறது அதுபோகிறதற்குபாயமேதென்கிற சங்கைக்கு,

வழியிற்றுரும்பு போல நாமரூபத்தைக் கூர்மையாய்ப் பாராமல் அவமதி பண்ணிப்போட்டுப் பார்க்குந் திசையெல்லாம், சச்சிதாநந்தமா யாதரவோடே கூட வப்பியாசிக்கிறபோது நாமரூப மின்னவிடமென்று காணுமற்போ யத்துவித நிலை திடப்பட்டுச் சீவன்முத்தனுவனென் றுத்தரம்.

(கஅ) நாமரூபம் பொய்யென்கிற வுறைப் பெதனாலே திடப்படுமென்கிற சங்கைக்கு,

நாமரூபத்தைக்கண்டவுடனே மண்ணிற் சத்தி யநேகம் பொய்களைச் சிருஷ்டித்தாற்போலவும் நித்திராசத்தி யானது கூடாத சொப்பனங்களைச் சிருஷ்டித்தாற்போலவும் பிரமத்தினிடத்திலே மாயை சிருஷ்டித்த பொய்யல்லவோ வித்தனையுமென் றெந்நேரமும்பார்த் ததிசயப்படாமலிருக்கில் நாமரூபம் பொய்யென்று விடப்படுமென் றுத்தரம்.

(௩௯) நித்திராசத்தி யெப்படிக்கூடாத சொப்பனத்தைச் சிருஷ்டிக்கு மென்கிற சங்கைக்கு,

சொப்பனத்திலே தானாகாசத்திலே பறக்கவுந்தன் தலையைவெட்டித்தன்கையிலே தூக்கிப்போகவும் ஒருநாழிகைக்குள்ளே யநேகவருஷம் வந்துபோகவும் செத்துப்போன புத்ராதிகள் திரும்ப வந்திருக்கவுங் காண்கிறதெல்லாங் கூடாதகாரியமல்லவோவென் றுத்தரம்.

(௪0) இதனாலே பிரமவிசாரமேதாயிற்றென்கிற சங்கைக்கு,

நித்திராசத்திக்கேயித்தனைசத்தியுண்டானால், மாயாசத்தியானதுநிர்விகாரமாயிருக்கிற பிரமத்தினிடத்திலே சடங்களையுஞ் சிதாபாசர்களென்கிற விகாரங்களையுங் கற்பிக்கிற ததிசயமல்லவென் றுத்தரம்.

(௪௧) இந்த விகாரமும் பிரமமுங்கலந்து தோற்றுகிற விடத்திலே, ஒன்று சத்தியமும், ஒன்று மித்தையுமாகப் பார்க்கிற தெப்படியென்கிற சங்கைக்கு,

எங்குஞ் சரியாயிருக்கிற புடவை சத்திய மென்றும், அதிலே தனித்தனியே காணப்படுகிற சித்திரமித்தையென்று மறிகிறாற்போல, எங்குஞ் சரியாய்த்தோற்றுகிற சச்சிதானந்தத்தைச் சத்தியமென்றும், அதிலே தனித்தனியே

தோற்றுகிற நாமரூபத்தை மித்தையென்றுங் கண்டுபேக்ஷி க்க வேண்டுமென் றுத்தரம்.

(௪௨) தொழிலுடன்பட்டவனே, தானாகத்தோற்றுகை யினாலே தன்னை யசங்கனென்றறிகிற தெப்படியென்கிற சங்கைக்கு,

கிணற்றிலே தலைகீழாய்த்தோற்றினாலும், அதைத்தா னல்லவென்று தள்ளிக் கரைமேலேயிருக்கிற தன்னைத்தா னென்று சந்தேகமறவிருக்கிறாற்போல, மூன்றவஸ்தையிலு ங்கர்த்தாவாயோடித்திரிகிற தன்னைத் தானல்லவென்றுபே க்ஷித்துச் சாக்ஷியாயிருக்கிற சித்தைத் தானென்று சந்தேக மறக்கண்டிருக்க வேண்டுமென் றுத்தரம்.

(௪௩) மனதிலே ஆவசியமாய் மூண்டிருக்கிற பிரபஞ்ச காரியத்தை யுபேக்ஷைபண்ணுகிறதெப்படி யென்கிற சங் கைக்கு,

க்ஷணத்திற்கொருக்கால் வெவ்வேறாய்வருகிற மனோ ராச்சியத்தைச் சகலரும், அம்மட்டிலே யுபேக்ஷிக்கிறாற் போல வாலிபத்திலே யெவ்வனம் வேண்டுமென்றாலும் வாராமல், எவ்வனத்திலே வார்த்திகம் வேண்டுமென்றாலும் வாராமல், நேற்றுச் செத்தவனை யின்றைக்கு வேண்டுமென் றாலும் வாராமல், நேற்றைத்தின மின்றைக்கு வேண்டு மென்றாலும் வாராமல், மனோராச்சியம்போலே யங்ஙனே கண்டதங்ஙனே யழிந்து போகிறபடியினாலே நாமரூபந் தோற்றினாலும் பொய்யென் றுபேக்ஷிக்க வேண்டுமென் றுத்தரம்.

(௪௪) இப்படிச்சர்வாத்மனாய்ப் பிரபஞ்சத்தை யுபே க்ஷிக்கச்சொன்னாற் சரீர நிருவாகமெப்படி நடக்குமென்கிற சங்கைக்கு,

கூத்தாடிபோலே வாசனைதானே நிருபவிக்குமென்றுத்தரம்.

(சுரு) ஒருக்காற் பாலனென்றும் ஒருக்காற் கிழவனென்றும், நானாவிதமாக வழங்குகிறதே தானாகக்காணப்படுகையினாலே, தான், ஏகரீதியாயிருக்கிற சைதன்னிய மென்கிறது மனதிலெப்படித் திடப்படுமென்கிற சங்கைக்கு,

வெவ்வேறே சலப்பிரவாகங்களெடுத்தாலும் நடுவிலிருக்கிற பருங்கல்லசையாததுபோல நாமரூபங்கள்வெவ்வேறே பரிபாகப்பட்டாலும், ஏகரீதியாயிருக்கிற சின்மாத்திரமே நாமென்றறிகவென் றுத்தரம்.

(சுசு) இந்தப் பாவனைமுதிர்ந்தால் நிலையெப்படியிருக்குமென்கிற சங்கைக்கு,

கண்ணாடியிலேதோற்றின பட்டணம்போலே சச்சிதாநந்தத்திலே சகத்துக்காணுமென் றுத்தரம்.

(சுஎ) நாமரூபமல்லவோ முந்தித்தோற்றுகிறது அதையெப்படி யுபேக்ஷிக்கிற தென்கிற சங்கைக்கு,

கண்ணாடியைக்காணாமற் பிரதிவிம்பந் தோற்றாததுபோலச் சச்சிதாநந்தந் தோற்றாமற் பிரதிவிம்பந் தோற்றமாட்டாது ஆகையாலே முந்தித்தோற்றுகிற சச்சிதாநந்தத்தைப் பார்த்து மேல் நாமரூபத்திலே புத்தி நாடாமல் நிறுத்தினாற் றடைபட்டது தொய்தமாக வத்துவிதப் பிரமநிலை தானாகவே மிஞ்சும். இந்தநிலையிலேதானே யெல்லாரு நின்றிளைப்பாறக்கடவர்களென் றுத்தரம்.

பதின்மூன்றாவது அத்துவிதாநந்தம் முற்றிற்று.

ஆகச்சங்கை - ருகக.

---

## பதினன்காவது - வித்தியாநந்தம்.

யோகத்தினலும், ஆத்மாநந்தவிவேகத்தினலும், தொய்தமித்தையென்கிற சிந்தனையினலும், பிரமாநந்தம் கண்டவனுடைய வித்தியாநந்தத்தை நிரூபிக்கிறேம்.

(க) வித்தியாநந்தமேது, அதெத்தனைவிதமா யிருக்குமென்கிற சங்கைக்கு,

விஷயாநந்தம்போல வித்தியாநந்தமும், அந்தக்கரண விருத்தி ரூபமாயிருக்கும். அது, துக்கநிவிருத்தியென்றும், காமியலாபமென்றும், கிருதகிருத்தியமென்றும், அடையவேண்டியதெல்லா மடைந்த சந்தோஷமென்றும், நாலுவிதமா யிருக்குமென் றுத்தரம்.

(உ) துக்கமெத்தனைவிதம், அதுஞானத்தி லெப்படிப்போயிற்று. காமியமெத்தனைவிதம், அது ஞானத்தி லெப்படி யடையப்பட்டது. கிருத்தியமெத்தனைவிதம், அது ஞானம்வந்ததுகொண் டெப்படிச்செய்து முடிந்ததாயிற்று. அடையப்போகிற புருஷார்த்தமேது, அது ஞானத்தி லெப்படி யடையப்பட்டதென்கிற வெட்டுச் சங்கைக்கு,

இகலோகதுக்கமென்றும், பரலோக துக்கமென்றுந், துக்க மிரண்டுவிதமாயிருக்கும். ஆத்மாவே நாமென்றறிந்தாற் புசிக்கிறவனில்லாமற் போகிறபடியினலும், நாமரூபம் பொய்யென்றறிந்தாற் போக்கியமில்லாதபடியினலும் போகபோக்கியங்களைக் குறித்து வருகிற விகலோகதுக்கம்போயிற்று. தாமரையிலையிற் றண்ணீரொட்டாததுபோல ஞானியை ஆகாமியகர்மம் பற்றுதபடியினலும் அக்கினியி லிட்ட பஞ்சுபோல ஞானிக்குச் சஞ்சிதகர்மம் வெந்துபோனபடியினலும்,புண்ணியபாவசிந்தனையாய்வருகிற பரலோகதுக்கம்

போயிற்றென்று துக்கநிவிருத்திசொல்லப்பட்டது. காமியம் பதினொருவிதமுண்டு. அதேதென்றால், அழகிளமை யுடையவனாய் அரோகதிடகாத்திரனாய்ப் பஞ்சாசத்கோடி பூமண்டலமு மொருகுடைக்கீழாயாண்டு புசிக்கிறதொரு மநுடாநந்தம். இந்தக்கற்பத்திலே புண்ணியபலத்தினாலே கந்தர்வனானவன் மநுடகந்தர்வன் இவனாநந்தம், மநுடாநந்தத்திலும்நூறத்தனையதிகம். பூர்வகற்பத்துப் புண்ணியத்தினாலே கந்தர்வபதத்தை யடைந்தவன், தேவகந்தர்வன். இவனாநந்தம், மநுடகந்தர்வ னாநந்தத்திலும் நூறத்தனை யதிகம். இதிலும் நூறத்தனை, பிதிர்லோகத்தி லொருவ னாநந்தம். கற்பாதியிலே தேவனாய்ப் பிறந்தவன், ஆசானதேவன். இவனாநந்தம், பிதிர்லோகத்திலொருவனாநந்தத்திலும் நூறத்தனையதிகம். இந்தக்கற்பத்திலே அசுவமேதமுதலானவைகள் பண்ணி யுன்னதபதத்தை யடைந்தவன் கர்மதேவன். இவனாநந்தம்ஆசானதேவாநந்தத்திலும் நூறத்தனையதிகம். இதிலும் நூறத்தனை யதிகம் முக்கிய தேவாநந்தம், இதிலும் நூறுகொண்டது இந்திராநந்தம். இதிலும் நூறுகொண்டது பிரசோற்பதியாநந்தம். இதிலும் நூறுகொண்டது விராட்புருடாநந்தம். இதிலும் நூறுகொண்டது ஒரு * சூத்திராத்மாவாநந்தம். ஆக இந்தப்படி வாக்குக்கும் மனதிற்கு மெட்டினவாநந்தம் பதினொன்று சொல்லப்பட்டது. வாக்குக்குமனதிற்கு மெட்டப்படாத ஆத்மாநந்தத்தை யடைந்த ஞானி ராகத்துவேஷாதிகளோடே கூடியிருக்கிற விந்தப் பதினொருவகையாநந்தத்தையும் நாய்கக்கினசோறுபோலே தோஷங்கண்டு வெறுத்தபடியினாலும், இத்தனையு மிந்திரஜாலமாய்க் காண்கையினாலும், இத்தனை பேராயிருந்து

* சூத்திராத்மா - என்றது - பிரம்மா.

புசிக்கிறது நாமொருவன்றானே யென்கிற வநுசந்தானத்தினாலும், அவர்களைப்போலே கிரமமன்றியிலே ஞானிக்குச்சகலபோகமு மொருமிக்கவந்தது. இகலோகத்தைக் குறித்தும், பரலோகத்தைக்குறித்தும், மோக்ஷத்தைக்குறித்தும், கிருத்தியம் மூன்றுவிதமுண்டென்றும், இதெல்லாம், ஞானிக்குத்தீர்ந்த முறியாகப்பண்ணி முடிந்ததென்றும், அடையப்போகிற புருஷார்த்தம் பிரமமென்றும், அது, அபரோக்ஷஞானத்தினாலடைந்து வருப்பற்றதென்றும், இப்படியிந்தநாலுவகையுந் திருப்திதீபத்திலேவெட்டவெளியாகச்சொல்லப்பட்டிருக்கிறது. அதையு மிவடத்திலே கண்டுகொள்ளவேண்டுமென் றுத்தரம்.

இப்படி வித்தியாநந்தஞ் சொல்லப்பட்டது. நித்திரை வருமளவும், பிரமாப்பியாசம் பண்ணவேண்டியது.

பதினொன்றாவது - வித்தியாநந்தம் - முற்றிற்று.

ஆகச்சங்கை - ருகூஅ.

---

## பதினைந்தாவது - விஷயாநந்தம்.

பிரமாநந்தத்திலேகதேசமாய்ப் பிரமாநந்தத்திற்கு வழியாயிருக்கிற விஷயாநந்தத்தை நிரூபிக்கிறோம்.

(க) விஷயாநந்தமாவதேது, அதெந்தவிதத்திலே காணலாமென்கிற சங்கைக்கு,

விருத்தியிலே பிரதிவிம்பித்தவாநந்தம் விஷயாநந்தம். அதை விவேகத்தினாலே காணலாமென் றுத்தரம்.

(உ) எல்லாவிருத்தியிலும், ஆநந்தமேன் பிரதிவிம்பிக்கவில்லையென்கிற சங்கைக்கு,

சலத்திலே பிரதிவிம்பித்த சந்திரன் குழம்பின சலத்திலே சாமான்யமாகத்தோற்றுகிறுற்போலவும், நிர்மலசலத்திலே தெளிவாய்த் தோற்றுகிறுற்போலவும், சிறிதுவிருத்திகளிலாநந்தந்தோற்றுஞ் சிறிது விருத்திகளிற் ரேற்றுதென்றுத்தரம்.

(ங) ஆனுல், அந்தக்கரணவிருத்தியெத்தனைவிதம், அந்தவிருத்திக்கு லக்ஷணமேதென்கிற சங்கைக்கு,

அந்தக்கரணத்திற்குச் சாந்தவிருத்தியென்றும், கோரவிருத்தியென்றும், மூடவிருத்தியென்றும், விருத்திமூன்றுவிதமாயிருக்கும். வைராக்கியம், பொறுமை, உதாரமுதலானவை, சாந்தவிருத்தி. காமக்குரோதலோப முதலானவை கோரவிருத்தி. மயக்கங்கலக்கம் பயமுதலானவை, மூடவிருத்தியென் றுத்தரம்.

(ச) பிரமம், இந்தவிருத்தியிலெப்படிப் பிரதிவிம்பிக்குமென்கிற சங்கைக்கு,

கோரவிருத்தி, மூடவிருத்தி, இரண்டும், கலங்கின விருத்தியானபடியினுலே, சித்துமாத்திரம் பிரதிவிம்பிக்குமேயல்லாமல், ஆநந்தம் பிரதிவிம்பிக்கமாட்டாது. சாந்தவிருத்தி, நிர்மலமானபடியினுல், அதிலே சித்தோடேகூடவாநந்தமும் பிரதிவிம்பிக்குமென் றுத்தரம்.

(ரு) இதற்குப்பிரமாண மேதென்கிற சங்கைக்கு,

கோரமூடவிருத்திகளில், ஆநந்தாநுபவங் காணப்படவில்லை. சாந்தவிருத்தியில், ஒருசுகாதிசயங் காணப்படுகிறதென் றுத்தரம்.

(சா) கோரமூடவிருத்தியிலே சுகாநுபவமில்லையென்கிறதெப்படி யென்கிற சங்கைக்கு,

கிரகக்ஷேத்ராதி விஷயத்திலே யாசைசூழ்கிறபோது இதுநமக்குக் கிடைக்குமோ கிடையாதோவென்கிறதுக்கங் கூடவருகையினாலுங் கிடையாதே போனாற்றுக்கமதிகமான படியினாலுங்கெடுத்தவன்பேரில் வயிரம்வளர்க்கையினாலும் அவனை நிக்கிரகிக்கக்கூடாவிட்டா லழுகையாய் முடிகையினாலுங் கோரமூடவிருத்தியிலே துக்கமேயல்லாமற் சுகம், லேசமுமில்லையென் றுத்தரம்.

(எ) சாந்தவிருத்தியிலே சுகாதிசயமெப்படி யென்கிற சங்கைக்கு,

காமியம் லபித்தவுடனே சாந்தமானவிருத்தியிலேசுகப் பிரதிவிம்பம் மிகுந்து போகத்திலும் விருத்திசாந்தமான படியினாலேசுகாதிசயந்தோற்றுகிறது. இப்படிவிஷயங்கிடைத்ததற்குத்தக்கனவாநந்தம்பிரதிவிம்பிக்கிறது. ஆகையினாலே சாந்தவிருத்தியுள்ள விடமெல்லாம் ஆநந்தந் தோற்றுகிறதிலே சந்தேகந் தேவையில்லையென் றுத்தரம்.

(அ) இப்படிப் பிரதிவிம்பிக்கிற பிரமத்திற்குச்சுபாவமெத்தனை விதமாயிருக்கும், எந்தவுபாதியி லெந்தச்சுபாவங் காணப்படுமென்கிற சங்கைக்கு,

சத்தென்றும், சித்தென்றும், ஆநந்தமென்றும், பிரமத்திற்குமூன்றுசுபாவமுண்டு. மண், கல், முதலானசடங்களிலேசத்துமாத்திரந் தோற்றுமேயல்லாமல், மற்றவிரண்டுந் தோற்றாது. கோரமூடவிருத்திகளிலே சத்துஞ்சித்துந்தோற்றும். ஆநந்தந்தோற்றாது. சாந்தவிருத்தியிலே சச்சிதாநந்தமூன்றுந்தோற்றுமென் றுத்தரம்.

(கூ) மாயைக்கெத்தனை சுபாவமுண்டு, எந்தச்சுபாவமெதிலே தோற்றுமென்கிற சங்கைக்கு,

அசத்தென்றும், சடமென்றும், துக்கமென்றும், மாயா சொரூபம் மூன்றுவிதமாயிருக்கும் அசத்து, மநுடக்கொம்பு முயற்கொம்பிலே காணப்படும். மண், கல், முதலானவைகளில், சடங்காணப்படும், கோரமூட விருத்திகளிலே, துக்கங்காணப்படும், சாந்தவிருத்தியிலே சடமும் போதமுமிருக்கிறபடியினாலே மாயை பிரமத்தோடே கலந்து காண்பிக்குமென் றுத்தரம்.

(௧௦) இப்படித் தோற்றுகிற மாயாசொரூபங்களைப்பிரமமாகக் காண்கிறதெப்படியென்கிற சங்கைக்கு,

அசத்தை, முயற்கொம்பைமநுடக்கொம்பைப்போலே, யுபேக்ஷிக்க. சடங்களை, நாமரூபத்தைவிட்டுச் சத்துமாத்திரமாய்ப்பார்க்க, கோரமூடவிருத்திகளை, துக்கத்தைத்தள்ளிச் சத்துஞ் சித்துமாய்ப்பார்க்க. சாந்தவிருத்திகளை, சச்சிதாநந்தமாய்க்காண. இப்படி விஷயாநந்தத்தின் வழியே மூடனுக்கும் பிரமாநந்தத்தை யடையலாமென் றுத்தரம்.

(௧௧) மாயாரூபத்தை யிப்படிப் பகுத்துத் தியானித்துகொண்டு பிரமாநந்த மெப்படிக் கிடைக்குமென்கிற சங்கைக்கு,

இந்தத்தியானத்திலே சித்தமேகாக்கிரமானவுடனே பிரமவித்தை திடப்படும். இந்தப்பிரமவித்தையிலே பேதமாயிருக்கிற வுபாதிகளெல்லாந் துடைபட்டபடியினாலே சச்சிதாநந்தம், அகண்டாகாசமாகத் தோற்றுமென்றுத்தரம்.

(௧௨) பேதத்திற்குபாதிகளேது, அந்தவுபாதிகளெதனாற் றுடைபட்டது. பிரமம், நிருபாதியாய்த் தோற்றுகிறதெதனாலென்கிற சங்கைக்கு;

சாந்தவிருத்தி கோரமூடவிருத்தி முதலான சடங்கள் இவைகளெல்லாம் பேதத்திற்குபாதி; யோகத்தினாலும், விவேகத்தினாலும் இந்த வுபாதிகளெல்லாந் தள்ளப்படும் பின்னைத் திரிபுடியில்லாதவடியினாலே நிருபாதியாய்ச் சுயம் பிரகாசமாயிருக்கிற பிரமத்துவம், அகண்டாநந்தவடிவாய்த் தானாகவே விளங்குமென் றுத்தரம்.

இப்படிப் பிரமாநந்தத்திற்கு வழிபாடாகத்தானேவிஷ யாநந்தத்தை நிரூபித்தோம். இந்தவழியே, எல்லாரு மோ க்ஷமடையக்கடவர்கள்.

பதினைந்தாவது விஷயாநந்தம்-முற்றிற்று.

ஆகச்சங்கை- சுளரு.

பஞ்சதசப்பிரகரணம் சமாப்தம்.

---

# பரிசோதனபத்திரம்.

## பஞ்சதசப்பிரகரணம்.

| பக்கம். | சங்கையுத்தரம். | வரி. | பிழை. | திருத்தம். |
| --- | --- | --- | --- | --- |
| ௧௨ | | ௧௮ | வார்ஆுத்த | வாருத்ம. |
| ௧௪ | ௧௬ | ௧ | கர்ப | கர்ப்ப. |
| ,, | ௧௭ | ௧ | ச்ரீர | சரீர. |
| ௧௭ | ௫௦ | ௫ | ஓன் | ஓன். |
| ௧௮ | ௫௧ | ௩ | மாவை | மாயை. |
| ௧௯ | ௫௫ | ௪ | ஞுக்கி | ருக்கி. |
| ௨௩ | ௭௦ | ௨ | சாரியார் | சாரியர். |
| ௨௪ | ௭௭ | ௭ | வெட்ட் | வெட்ட. |
| ௩௨ | ௧௧௩ | ௫ | புத்தினை | புத்தியினை. |
| ௪௦ | ௧௨ | ௫ | மார்க | மார்க்க |
| ௪௫ | ௨௫ | ௧ | பிற | பிர. |
| ,, | ௨௮ | ௩ | பரு | பறு. |
| ௮௪ | ௧௯ | ௪ | வாரா | வாராம |
| ௯௩ | ௬௪ | ௨ | ேறல் | றெல். |
| ,, | ௬௭ | ௨ | ேவன் | வென். |
| ௧௦௩ | ௨௪ | ௧ | புரம் | புறம். |
| ௧௦௭ | ௭ | ௨ | றைக | றைவே. |
| ௧௦௯ | ௧௩ | ௨௩ | கூடின் | கூடின. |
| ௧௧௨ | ௧௭ | ௩ | ளப்ப் | ளப்ப. |
| ௧௧௩ | ௨௧ | ௩ | தெங்க் | தெங்ங |
| ௧௨௯ | ௩ | ௩ | கிற | கிர. |
| ௧௩௨ | ௬ | ௭ | பிபி | பி. |
| ௧௩௪ | ௮ | ௧௨ | வாரு | வாரா. |
| ௧௪௬ | ௨௯ | ௪ | காறி | காரி. |
| ௧௪௯ | ௮ | ௪ | குரு | கிரு. |
| ௧௫௫ | | ௨௩ | பிரகணரம் | பிரகரணம். |

# பரிசோதனா பத்திரம்.

## பஞ்சதசப்பிரகரணம்.

| பக்கம். | சங்கையுத்தரம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௰௫ | ௪௧ | ௩ | தாந்தி | ... தாந்தி |
| ௪௩ | ௨௫ | ௨ | யல்ல | ... மல்ல |
| ௫௩ | ௯௩ | ௯ | பிரர் | ... பிரா |
| ௫௭ | ௮௰ | ௩ | மிடற்றி | ... மிடத்தி |
| ௯௩ | ௯௯ | ௫ | பிரார்த்த | ... பிராரத்த |
| ௱௩ | ௨௫ | ௩ | உள்ளுப் | ... உள்ளும் |
| ௱௨௧ | ௩௨ | ௫ | ஆகாசனிடத்தி | ... ஆகாசத்தினிட |
| ௱௨௯ | | ௨௯ | சிவன் | ... அந்தக்கரணம் |
| ௱௪௫ | ௨௯ | ௭ | யழிய | ... வழிய |
| ௱௭௰ | ௨ | ௩௩ | பிரசோற்பதி | ... பிரகஸ்பதி |
| ௱௭௨ | ௩ | ௧ | அத்த | ... அந்த |

௸ அட்டவணைப்பிழை.

௨ ௩ ௨ ௩௯

௸ கூடிய இலக்கப்பிழை.

௧௭௫ ௰௧ ௯௭௫ ௯௱௫

உ

கணபதிதுணை.

சுத்தாத்வைதவேதாந்தாசாரியராகிய

# தத்வராயசுவாமிகள்

அருளிச்செய்த

# பாடுதுறை.

---

இஃது

சென்னைமாநகரம்

அருணாசலமுதலியாரவர்கள்

பதிப்பித்தபிரதிக்கிணங்கச்

சாத்தம்பாக்கம்

கிருஷ்ணசாமிமுதலியாரவர்களால்

பரிசோதிக்கப்பட்டுக்

காணியம்பாக்கம்

பொன்னையாமுதலியார்குமாரர்

கா. முருகேசமுதலியாரவர்களால்

சென்னை:

ஆதிகலாநிதி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

சர்வசித்து௵ சித்திரைமீ.

# சிறப்புப்பாயிரம்.

நேரிசையாசிரியப்பா.

நான்முகன்முதலா நலந்திகழ்மூவரும், வானவர்
குழுவு மறைகளுமுறையிடப், பூரணன்கருணையிற்
பொலிதிருவுருவாய், மாரணம்பிறப்பறு வகையினை
யருள்செய, வாரருட்கொம்பொடு மழகுறுகைலையி,
லேர்பெறவிருந்தரு ளிறைகழல்வணங்கி, யப்பெருந்
தேசிக னடியிணைபுனைதரு, செப்பருநந்திதன் றிரு
வடிவணங்கி, நந்திநற்சேவடி நலம்பெறச்சூடிய,
வெந்தைநற்சனற்குமா ரன்றனையிறைஞ்சி, யாங்கவ
ன்சேவடி யழகுறப்புனைந்த,வோங்குநல்வியாத னொ
ண்கழலிறைஞ்சி, யருளுடைவியாத னடியரிற்சிற
ந்த, தெருளுடைச்சூதன் றிருவடியிறைஞ்சிச், சிற்
பரன்சூதன் றிருவடிபுனைந்த, நற்பெருங்கடவு ளாச
ணாயிறைஞ்சி, பவ்வழிவந்தங் கருளினிற்சிறந்த,தெ
ய்வநற்றருவைச் சித்தனையிறைஞ்சி, யத்தவனடிபு
னை யழகுறச்சோதிச், சித்தவேடத்தவன் றென்றி
சைவிளங்க, வந்துநற்புலியூர் மகிழ்ந்தினிதிருந்த,
வந்தமிலருண்முனி யருட்கழலிறைஞ்சி, யாங்கவன
ருளா லழகுறுகிழமையி, லோங்கியமுனிவர னொண்
கழலிறைஞ்சி,பழகுறுகிழமையி லாரியனடிபுனை,யொ
ழிவறுபராமுனி யொண்கழலிறைஞ்சி, யுளாத்தநற்றி
ருமுனி யொண்கழல்சூடிய, திருப்பனந்தாளிறை
சேவடியிறைஞ்சி, மாமுனியருளான் மதுரைநம்பு

ஞ்சைச், சேமநல்வைப்பின் றிருவடியிறைஞ்சிச், சீர்தருமிறையடி சென்னியிற்புனைந்த, வோர்தருவடமுனி யிணையடியிறைஞ்சி, யலகில்சீர்முனிவ னடியிணைமுடிபுனை, யுலகுயவந்தோ னொண்கழலிறைஞ்சிக், குருபரஞாலமுய வந்தவன்கழல்புனை, திருநடராசன் சேவடியிறைஞ்சித், தத்துவன்றிருநடன் சரணவம்புயம்புனை, சுத்தநற்சுரூபன் றுணையடியிறைஞ்சி, யையனற்சுரூப னடியிணைபுனைந்த, செய்யநற்சிவப்பிர காசனென்செல்வன், றன்னையோர்மொழியினிற் சதுர்பெறவளித்திங், கன்னையி லன்புசெய் யாருட்பெருங்கட, லருளாற்குன்ற மருட்பெருங்கற்பக, மருளார்மேக மருட்பெருமுழுநிதி, யென்னையும்பொருளா வாண்டவனிணையடி, தன்னைநூறுயிரங் கோடிகால்வணங்கிப், பெருந்திரட்டாஞ்சிவப் பிரகாசநூலை, யருந்திரட்டாக வுறைவனென்றருள்வோன், மத்துவராயர்செய் மாதவமதனாற், றத்துவராயனாத் தரணியிலுதித்து, மாவாக்கியப்பொருண் மாமழைபொழிந்த, பாவாக்கியனெனும் பண்டிதர்சிகாமணி, முத்தாந்தர்போற்று மூதிர்சுத்தசைவச், சித்தாந்தர்க்குத் திருவாசகம்போ, லொருபொருளேயில் வுயிரெலாமுய்ய, விருபொருளாகி யெய்தியதெனவந், தரூபானந்த மனைவர்க்குமுதவுஞ், சுரூபானந்தச் சுந்தரன்மீதுந், தவப்பிரகாசஞ் சார்ந்தவர்க்கருளுஞ், சிவப்பிரகாசச் சிற்பரன்மீது, நாடுதுறைபெலா நணமறைமுடிக்குப், பாடுதுறையெனப் பண்ணி

யநாரு, னெச்சமயருமெச் ஞலெக்ஞலென், றச்சு
ருதியிற்கொள வான்றதான்று, மறுதிகணின்று
மாண்டுங்காணுனு, வறுதியையங்கை யாதநத்தா
க்கிச், சவணமாத்திரத்திற் சச்சிதானந்தச், சுவண
மாக்குறுந் தாய்தாதலானு, மிறவாதியாண்டு மிகூச
த்திடவெண்ணி, யறமென்றூன்று மம்பிகைவளர்த்
த, விச்சகத்தொன்புரி யெழிறுஞ்சிறந்த, கச்சிபி
லுபய கவிகளாஞ்சுத்த, வைதிகசைவ வளர்திருக்
கூட்ட, வுய்திகொள்குரவரி லொருவனானேன், குமு
ரக்கோட்டன் கூருணிறைந்து, திமிரக்கோட்டந்
தீர்ந்தமெய்க்குரவனைக், கச்சியப்பன் கழலையுங்கலை
யையு, முச்சியிற்கொண்டவ னுயர்வழிவந்தோ, னி
லக்கணவிலக்கிய மிலையில்வேதாந்த, மலக்கணில்
சிவாகம வருங்கலைகண்டோன், சமயம்விசேஷந்
தருதிருவாண, மமைஞானதீக்ஷையி னடுத்தவர்பவ
த்தி, னினப்பிரகாச மெல்லாமொழித்து, ஞானப்பி
ரகாச நண்ணியவருள்வோன், சண்முகக்குரவன்
சான்மாதவத்திற், றண்மையோடுதித்த தநயனானோ,
னண்ணலங்கலையா மண்டாமடமும், விண்ணளாம்
வகுளமும் வியோமகோத்திரமுஞ், சாந்தானிகமு
நந்திசந்தானமுந், தேர்ந்தவர்புகழ்சிதம் பரகேத்தி
ரமு, மகோரபட்டாரக னந்தீக்ஷநாமமு, மகோர
சூத்திரமே யாதியாமிரண்டுங், திகழருணாசல தேசிக
ன்றன்பாற், புகழந்தூலளித்துப் புராதனமாதலா,
லெழுத்துச்சொற்பொரு ளேறியுங்குறைவுறும், வ

முத்தபக்களோந் துகைம் மாறுவேண்டாத, வெழிவேயி
ற்பலவா வெழுதாக்கிளவியிற், பழுதறவச்சிற் பதிப்
பித்தளித்தன, னெழிற்கோட்டங்நான் கிருமூன்று
ள்ளும், புழற்கோட்டம்மே பொற்பினதெனவுஞ்,
சம்பத்தூரோழ் தசநவநாட்டி, னம்பத்தூரே யழகிய
தெனவு, மேகமிவிரண்டா யிரமெனுநத்தத், தாகுநீ
ர்நிலவள ஞார்ந்திடுபிறவுளன், றழையுமிவ்வூரைத்
தானும்வேட்டனன்போல், விழைசொன்றம்பிகை
வில்வேசனென்னக், கொன்றையந்தொடையான்
கொடியிடையொடும்வாழ், கொன்றையம்பதியே
கோப்பதியெனவும், பதினெண்மொழியுளும் பைந்
தமிழொன்றே, யெதிரிலதென்ன விருநிலம்புகழவு
ஞ், சமயமோராறிற் ஸைவமொன்றே, யமைவிலா
மேன்மைய தாகியதெனவும், பல்வளக்கோத்திரப்
பண்ணவர்தம்முள், வில்வமாமுனியே விசேடவா
னெனவுந், தருகற்பகநிகர் தகையினர்தம்முண், முரு
கப்பமன்னன் மொய்தவனெனவு, நாற்குலந்தனிற்
சுர நதிக்குலமதுவே, மேற்குலமெனவு மேதினிவ
ந்தோன், பனகந்தாங்கும் படிமுழுதாண்டுஞ், சனக
னதறிவிற் சலியாவறிவினன், பவபுண்ணியமுயல்
பசுக்கள்போலாது, சிவபுண்ணியமே செய்தொழி
லானோன், செந்தமிழ்க்கெல்லையாய்ச் சேய்க்கிடனு
ய்க்கோ, விந்தனில்வளர்ந்த வேங்கடவரையான், வா
வினீர்நதிகள்போ லாதுவான்சுரயியின், பாவினீர்
பெருகிய பாவிமாநதியா, னண்டமெலாமுய வமர்ந்

தென்னான்கறங், தொண்டைவாயுமைசெயுந் தொண்டைநன்னாட்டான், குடக்கிற்றுகிர்வரை குணக்கிற்புணரி, வடக்கின்வேங்கடம் வரும்பெண்ணைதெற்கி, னற்புதமிக்க வரணநான்காகிக், கற்பமுமழியாக்கச்சிமாநகரான், வெய்யவற்காணாஉ விழைந்துமுகமலர்ந்து, தையலரடிக்குந் தாழ்தருமுவமை, முண்ணிகழ்நாள முளரிபோலாது, தண்ணியற்காணாஉத் தழைந்துமுகமலர்ந்து, மேலவயவமாம் விழிக்கிளையாயக், கோல்வளையார்விழை குவளையந்தொடையா, னாற்படைத்தலைவனாய் நகுலனிற்செறுநர், தார்த்தேறநடத்துஞ் சயபரியுடையான், றன்குலமென்றுந் தழைந்திடப்புரப்பான், மின்குலஞ்சொரியு மேகவாகனனே, தள்ளருஞ்சிறப்பிற் றரணிவந்தமைக்கு, விள்ளருஞ்சான்றென வெண்களிறுடையான், படையுங்கொடையும் பகர்தருவிழாவு, முடையவளிவனென வொலிக்குமும்முரசான், கையுறுமேனையர் கதலிபோலாது, மெய்யுறவெடுத்த மேழியம்பதாகையா, னாழிசூழுலகமே ழுந்தமாணையா, மாழியினடத்து மாசர்கட்கமைச்சாய்ப், பண்ணியகளிற்றைப் பாகரினூல்வழி, நண்ணியநாளு நடத்திடுமாணையா, னெருக்கிவெம்போர்செய நேர்ந்திடுநேரலர், தருக்கினையொழிக்குஞ் சவளதோரணத்தா, னருணாசலப் பெயரார்ந்த கருணாசலதியாய்க் கவினுமன்னவனே.

இஃது காஞ்சீபுரம், வித்வான்

சபாபதிமுதலியாரவர்கள் பாடியது.

இவை

கைலாசபரம்பரையாகிய திருவாவடுதுறை

ஆதீனவித்வான்

## தாண்டவராயசுவாமிகள் பாடியவை.

எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

ஒப்பரியதத்வமசிவாக்கியத்தின்பொருளை யுள்ள ங்கைநெல்லியெனவொண்புவிக்குக்காட்டு, முப்புவ னமும்புகழும்பாடுதுறைநூலை மூதறிவிஞேர்மருவு காஞ்சிநகர்வளருந், திப்பியகுணவருணைசலக்குரவ ஞலே சீர்மைபெறவேசெய்துதெண்டிரையுடுத்த, வி ப்புவனமகிழவச்சிற்பதிப்பித்தா னிருங்கொன்றைவா ழு மருணைசலவிந்திரனே.

கட்டளைக்கலித்துறை.

கத்துவராழிசுலவுமிக்காசினிக் கண்ணிலவு
மத்துவராயெங்கண்மாணிக்கவாசகவள்ளனிகர்
தத்துவராயர்சொல்சாத்திரமெங்குந்தழையச்செய்
னத்துவராகுலம்வாட்டருணைசலநாயகனே. [தா

---

இஃது

## சாரம். குமரப்பமுதலியார் பாடியது.

விருத்தம்.

நாடுதுறையெவைக்குமுதாகரணவிலக்கியமென்ன நாவலோர்கள், வீடுதுறையிஃதென்னச்சாதனர்சா

த்தியர்களிருவிஷயானந்தத், தாடுதுறைபராமென்னை ப்பாடுதுறையினைப்பதிப்பித்தக்கைதந்தான், கோடு துறையூர்வாழிக் கொன்றையருணாசலப்பேர்க்குரிசி ன்மாதோ.



# குருபரம்பரை

## முதலாசாரியர்.

ஸ்ரீகைலாசத்திலெழுந்தருளிய உமாமகேஸ்வரர். அவர்மாணுக்கர் - நந்திகேஸ்வரர், அவர்மாணுக்கர் - சனற்குமாரர், அவர்மாணுக்கர் - வியாசர், அவர்மாணுக்கர் - சூதரிஷி, அவர்மாணுக்கர் - கடவுள்நாதர், அவர் வழிவந்தமாணுக்கர் – தருவூர்ச்சித்தர், அவர்மாணுக்கர் - அருள்முனிவர், அவர்மாணுக்கர் கீழூர்முனிவர், அவர்மாணுக்கர் - பரமுனிவர், அவர்மாணுக்கர் - திருப்பனந்தாளார், அவர்மாணுக்கர் - மதுரைப்புஞ்சைமுனிவர், அவர்மாணுக்கர் - திருநடராசர், அவர்மாணுக்கர் - சிவப்பிரகாசர், அவர்மாணுக்கர் - சுரூபானந்தர், அவர்மாணுக்கர் – தத்வராயர்.



சிவமயம்.

# தத்வராயசுவாமிகள்

## சரித்திரச்சுருக்கம்.

பூமிதேவிக்குத் திருமுகம்போலச் சிறந்திருக்கிற தமிழ்நாடு பலவற்றினு மேம்பட்ட நடுநாட்டில் வீரமாநகரத்தில் சற்றேறக்குறைய மூன்னூறுவருஷத்திற்குள்ளாக மாத்துவப்பிராமணருக்குள்ளே யிவ்வுலகஞ்செய்த மாதவமென்றுசொல்ல இரண்டு புண்ணியமூர்த்திகள் அவதரித்தார்கள். அவர்கள் அம்மான் * மருமகன் என்கிற முறைமையையுடையவர்கள், அவ்விருவரும் வடமொழி தென்மொழி யிரண்டிலும் வல்லவராய் அறிவாசாரமுதலியவைகளிற் சிறந்தவர்களாய்ப் பிரமசாரியர்களாகியேயிருந்து தங்கள் கருமத்தில் வழுவாது நடந்துவருநாளில் வேதாந்தசாஸ்த்ரம் யாவையும்படித்து ஐயந்திரிவு அறியாமையில்லாமல் அவற்றின்பொருள்களை ஆராய்ந்தறிந் தெப்போதுந் தத்வவிசாரணையும் ஸ்வரூபவிசாரணையுஞ் செய்துவருதலாலும் அவைகளையே எவர்களுக்கும் போதித்தலாலும் பெரியவிருக்ஷம் தோன்றற்கிடனான சிறிய ஆலம்விதைபோல் ஞானாங்குரமானவராதலாலும் இவர்களுக்கு அப்பாருவத்

---

* ஸ்வரூபானந்த சுவாமிகளுடன்பிறந்தாள்பிள்ளை - தத்வராயசுவாமிகள்.

திலேதானே பூர்வநாமம்போய்த்தத்வராயரென்றும், ஸ்வரூபானந்தரென்றும், காரணநாம முண்டாயின.

(இவர்கள்.) பூர்வ தவக்குறைவால் வந்தவர்களாதலால் ஆத்மவிசாரணை செய்யவேண்டுமென்கிற விவேகமே மேலிட்டாலோசித்தார்கள். அவையென்னெனில், இம்மையில், யாவரினுஞ்சிறந்த அரசர்கள் வாழ்வுஞ் சிலநாளி லழிந்துவிடும் அதனால் வருமின்பமு முள்ளிப்பூவின்றேனை யொக்குமென்றும் மறுமையில், இந்திராதிதேவர் பதங்களும் ஆயுண் மிகுந்திருந்து காமாதிதுன்பமுற் றழியுமென்றும் இளமையாதியும் நிலையல்லவென்றும் நினைத்துப் பெண்ணாதி மூவாசையும் துறந்து சாந்திமுதலாகிய குணங்களைத் தமக்கங்கமாகக்கொண்டு தலையில் நெருப்புப்பற்றிக்கொண்டவன் நீர் தேடுதல் போலவும் மிகுந்த கோடைவெயிலி லகப்பட்டவன் நிழல் தேடுதல்போலவும் அதிதீவிர பக்குவமுடையவர்களாய்ச் சனனமரணமொழிக்கவல்ல ஞானாசிரியனைத்தேடி அடுக்கவேண்டிப் பலநாள் பலவிடங்களினுந் தேடிப்பார்த்துங் கிடையாமையால் மிகவும் வருத்தமடைந்து ஒருநாள் போம்வழியில் ஒரு சிறந்தசோலையில் பெரியகல்லால விருக்ஷத்தின்கீழிருந் தாலோசித்தார்கள். அவையென்னெனின் நாம் இப்படித்தேடினால் எத்தனைகாலஞ்செல்லும் ஆதலால் ஒருவர் உத்தரதிசையிலும் ஒருவர் தக்ஷி

ணதிசையிலும்போய்த்தேடிப்பார்ப்போம்; நமக்குள் எவருக்குமுன்னே ஆசிரியர்கிடைத்தனுக்கிரகம்பெற்றுக்கொள்ளுகின்றோமோ அவரோமற்றொருவருக்கும் ஆசிரியரென்று நிச்சயித்துக்கொண்டுபோனார்கள். அவர்களில் தென்றேசத்திற்சென்ற ஸ்வரூபானந்த சுவாமிகள் பலதேசங்களிலும் பல ஊர்களிலும் பல வனங்களிலும் பலமலைகளிலும் பலநதிதீரங்களிலும் பல புராதனாலயங்களிலுந் தேடிக்கொண்டு திருவரங்கமுந் திருவானைக்காவும் காவேரிநதியும் தெற்காக வடக்கேபோய்த் திருப்பைஞ்ஞீலியென்கிற சிவஸ்தலத்தையும் திருவெள்ளறையென்கிற விஷ்ணுஸ்தலத்தையும் தன்பாங்கினுடைத்தாயிருக்கிற கோவத்தமென்னும் ஸ்தலத்துக்குச் சமீபத்தில் போம்பொழுது இவருக்கு ஒருகாரணமுமின்றிப் பேரானந்தமும் சரீரத்திலே புளகாங்கிதமும் உண்டாகிக் கைகள் அஞ்சலிமுகிழ்த்திடக் கண்களில் நீர்பெருகக்கண்டு நான் தேடிவந்த ஞானாசிரியரிருக்கிற ஸ்தானம் இதுவேயென்று அந்த நகரைப் பிரதக்ஷணமாய்வந்து உள்ளேபோய் இவ்விடத்திலே பெரியவர்கள் உண்டோவென்று விசாரித்தார். அவ்விடத்திலுள்ளவர்கள் இந்த ஊர்க்குப் புறத்திலே நாணற்புதலிருக்கின்றது, அதனுள்ளே யொருபெரியவரிருக்கின்றார். அவர்பெயர் * சிவப்பிரகாசசுவாமிகளெ

---

* சிவப்பிரகாசசுவாமிகள் பூர்வஸ்தலம் திருவாரூர்-இவர் சுத்தவைதீக சைவர்.

ன்றும் அவர் ஒவ்வொரு தினத்திலே சாயங்காலத்தில் அந்தப்புதலைவிட்டு வெளியில் வருகின்றபொன்றுஞ்சொல்ல அவ்விடத்திலேபோய் இவர் காத்துக்கொண்டிருக்கிறபோது அந்தச் சிவப்பிரகாசசுவாமிகள் ஒருநாள் வெளியிலேவந்தார். ஸ்வரூபானந்தசுவாமிகள் நமஸ்காரம்பண்ணி நெடுங்காலமாயலைக்கின்ற ஜனனமரணப் பிரவாகத்தினின்றும் அடியேன் கரையேற ஞானோபதேசம் பண்ணவேண்டுமென்று பாததாமரையைப் பிடித்துக்கொண்டு முறையிடும்பொழுது நாம் நினைத்திருந்த அதிதீவிரபக்குவனிவனேயென்று ஆலோசித்து அப்பா உனக்காகத்தான் இங்கே இதுவரையில் யானிருந்தேனென்று மேலான மஹாவாக்யத்தைச் சிரவணாதிகளால் அநுக்கிரகம்பண்ண அவ்வநுக்கிரகத்தைப்பெற்றுக்கொண்டு ஸ்வாநுபூதியாகவேண்டிச் சமாதிபண்ணிக்கொண்டிருக்குநாளில் வடக்கே தேடிக்கொண்டுபோன தத்வராயசுவாமிகள் அத்தேச முழுமையுந்தேடி ஆசிரியர்கிடையாமல் மறுபடியுந் தென்றேசத்திற்கேவந்து ஸ்வரூபானந்தசுவாமிகளைக்கண்டார். ஸ்வரூபானந்தசுவாமிகளுந் தனக்காசிரியர்கிடைத்ததும் அநுக்கிரகம் பெற்றுக்கொண்டதும் பிறவுஞ்சொல்ல மிகவும் அதிசயமடைந்து ஸ்வரூபானந்தசுவாமிகளை வணங்கி மேலான ஞாநாநுக்கிரகம் பெற்றுக்கொண்டு நிருவிகற்ப சமாதியிலிருந்து நித்ய நிரதி

சயானந்தத்தை யனுபவித்துக்கொண்டிருக்கின்றகா லத்திலே பெரியோர்களுக்குத் தாம் பெற்றபேறு உலகம் பெறவேண்டுமென்கின்ற சங்கல்யம் சுபாவ மானபடியால் ஸ்வரூபானந்தசுவாமிகள் திருவுள்ள த்தில் இந்தத் தத்வராயர் தென்மொழியிற் பாடுத லில் மிகவும் வல்லவராயிருக்கையால் இவரைக்கொ ண்டு லோகோபகாரமாச் சில சாஸ்திரங்களைச்செய் விக்கவேண்டுமென்று நினைத்து உபாயமாய்க் குறிப் பித்துக்கொண்டுவர அவர் சதாநிஷ்டையில் இருக்கி ன்றவரானபடியால் அவருக்கு இந்தக்குறிப்பு மிக வுந் தோன்றும லிருந்ததுகண்டு இக்கருத்து நன்று ய்த் தெரிவிக்கவெண்ணி ஒருநாள் அமாவாசையில் அப்யங்கஞ்செய்ய வேண்டியவர்போல ஏவலாளரை த் தயிலங்கொண்டுவாருமென்றுசொல்ல அருகேநி ன்ற தத்வராயசுவாமி அமாவாசையென்கிறதைமன திலே நினைத்து அம்மென்றூர். அப்போது ஸ்வரூ பானந்தசுவாமிகள் கோபித்துக்கொண்டவர்போல விதிவிலக்கென்கிற சங்கல்பமுங்கடந்து காலாதீதரா யநின்ற நமக்கும் விதிவிலக்குண்டோ நம்மெதிர்நிற் கவேண்டாம் போமென்றுசொல்லத் தத்வராயசுவா மிகள் அகண்டபரிபூரண சச்சிதானந்தமாய்விளங்கு கின்ற சுவாமிகளுக்கும் நான் விதிவிலக்குக்கற்பித்த குற்றத்தால் இனிநானிந்தச்சரீரத்தோடிருத்தல்தகா து. தட்டில் விழுந்திறத்தலன்றி இதற்குப்பரிகாரம்

வெளியில்லையென்று நினைத்து ஆசாரியர். சந்நிதானத்தைநோக்கிக்கொண்டே பின்னிட்டபடிநடந்து ஆராமை மேலிட்டுக் கண்களிற் சலம் தாரைதாரையாய்ப் பெருகப் பரமாசாரியராகிய சிவப்ரகாசசுவாமிகளையும் ஆசாரியராகிய ஸ்வரூபானந்தசுவாமிகளையுங் குறித்து ஸ்வரூப சாக்ஷாத்காரவிலாசத்தை நவநவமாய்த் தமது ஸ்வாநுபூதியின்க ணனுபவித்தபிரகாரம் பின்னுள்ள வாத்மகோடிகளும் அவ்வனுபூதியைப் பெற்றுய்யும்படி ஜீவகாருண்ணியத்தினுல் தமது ஸ்வரூபானுபூதி ஆவேசத்தால் ஸ்தோத்திரமாய்ச்-சிவப்ரகாசவெண்பா-தத்வாமிர்தமென்னும், இரண்டுடன்-திருத்தாலாட்டு, பிள்ளைத்திருநாமம், வெண்பாவந்தாதி, கலித்துறையந்தாதி, சின்னப்பூவெண்பா, தசாங்கம், இரட்டைமணிமாலை, மும்மணிக்கோவை, நான்மணிமாலை, கலிப்பா, ஞானவிநோதன்கலம்பகம், உலா, சிலேடையுலா, நெஞ்சுவிடுதூது, கலிமடல், அஞ்ஞவதைப்பரணி, மோகவதைப்பரணி, அமிர்தசாரவெண்பாவென்னும் இந்தப் பதினெட்டையும் திருவாய்மலர்ந்தருளிக்கொண்டுபோம்பொழுது அருகில்நின்ற மாணுக்கர்கள் அப்போதைக்கப்போதே அப்பிரபந்தங்களைத் தனித்தனியெழுதிக்கொண்டுபோய் ஸ்வரூபானந்தசுவாமிகள் சந்நிதானத்திற் படிக்கச் சுவாமிகளும் அச்சாஸ்திரங்களில் விருப்பமில்லாதவர்போல் மயிருள்ளவள் வா

ரிமூடிக்கிறதுபோல வாயுள்ளவன் பாடியனுப்புகிறா
னென்று திருவாய்மலர்ந்துகொண்டிருந்தார். அப்
படியிருக்க இங்கே தத்வராயசுவாமிகள் ஆசாரியர்
தரிசனத்துக் கபாத்திரனாய்விட்டேனே இனி நா
னெந்தச்சனனத்தில் தரிசிப்பேனென்னும் ஏக்கத்தி
னாலே தாயைக்காணாத இளங்குழந்தையைப்போல
அழுதுமுகம்வீங்கி பாடுதுறைத்திருவடிமாலையை
ப் பாடிக்கொண்டு விழுந்திறக்கக் கடலுக்குச் சமீப
த்தில் போம்பொழுது அந்தச்செய்தியையு மாணாக்
கர்கள் வந்துசொல்ல ஸ்வரூபானந்தசுவாமிகளறிந்
து குருவுக்கு விங்கியை வரச்சொல்லுமென்று கட்
டளையிட அதைக் கேள்விப்பட்ட தத்வராயசுவாமி
கள் தங் தேகவருத்தமுழுதும் நீங்கிடக்கச் சக்தியு
ம் பெற்றுக்கொண்டு சுவாமிகளால் அனுப்பப்பட்ட
மாணாக்கர்களைப்பார்த்துக் கருணாநிதியாகிய சுவாமி
கள் மகா அபராதியாகிய வென்னையும்வரக் கட்டளை
யிட்டதோவென்று பேரானந்தமடைந்து மேற்படி
பிரபந்தத்தில் திருவருட்கழன்மாலை, போற்றிமாலை,
புகழ்ச்சிமாலை முதலானவைகளையும் பாடிக்கொண்
டு சிரசின்மேல் அஞ்சலியஸ்தராய்ச் சுவாமிகளுடை
ய சந்நிதானத்தைப் பார்த்துக்கொண்டேவந்து பிர
தக்ஷணம்பண்ணி அஷ்டாங்க பஞ்சாங்கமாக அநே
கநமஸ்காரஞ்செய்து முன்னிலும் அதிகமாய்க் கண்
களில் நீர்பெருகமயிர்க்கூர்ச்செறிந்து பரவசப்பட்டு

நெஞ்சமுருகி ஸ்தோத்திரம் பண்ணிக்கொண்டு நிற்கும்போது சுவாமிகளும் இருவென்று கட்டளையிட இருந்து சுவாமிகளின் பணிவிடைசெய்துகொண்டு மிகவும் சந்தோஷமடைந்திருக்குநாளில் சுவாமிகள் தத்வராயர் பாடிய சாஸ்திரங்களை யெல்லாம் பார்வையிட்டுச் சொல்லமைதியும் பொருளமைதியுநோக்கிச் சந்தோஷத்தைத் தனக்குள்ளே யடக்கிக்கொண்டு இந்தச் சாஸ்திரங்கள் மிகக் கற்றவர்க்கன்றி மற்றவர்க் குதவாதென்று நினைத்துத் தத்வராயசுவாமிகளைப்பார்த்து அப்பா இந்தச்சாஸ்த்ரங்களெல்லாம் உனக்கே பாடிக்கொண்டனையன்றி யுலகத்தாருக் குபயோகமாகப் பாடவில்லையே என்றருளிச்செய்ய அப்போது, மடைத்தொழிலாளர்கள் சுவாமீ அமுது கொள்ள வெழுந்தருள வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய சுவாமிகளும் நித்யகர்மங்களை முடித்து அமுதுக்கெழுந்தருளத் தனியேயிருந்த தத்வராயசுவாமிகள் ஆசாரியார் திருவாக்கை ஆலோசித்து அப்படியே தாமும் நினைத்து சுவாமிகள் அமுதுகொண்டு வருமுன்னர் எல்லாருக்கும் பிரயோசனப்பட மோகவதைப்பரணியில் ஒருபிரகரணமாகச் சசிவர்ணபோதமென்னும் ஒருசாஸ்த்ரத்தைசெய்து சுவாமிகள் திருவடியிலேவைத்து நமஸ்காரம்பண்ணச் சுவாமிகளும் தத்வராயர் விரைந்துபாடினதையும் அச்சாஸ்த்ரத்தின் பாகத்தையும் பார்த்துச் சந்தோஷமடைந்தார். பின்னும் தத்வராயசுவாமிகள் சில வேதாந்த சாஸ்த்ரங்களுஞ் சிலமத சித்தாந்த

நாலைந்து செய்துகொண்டு நிர்விகற்பசமாதியி லி ருக்குநாளில் யாத்திரைசெய்கின்றவராகிய சிலஆசா ர்ப்பர்களுஞ் சில வித்வான்களும் ஸ்வரூபானந்த சு வாமிகளின் சந்நிதானத்தில் வீற்றிருக்கிற தத்வரா யசுவாமிகளின் முன்னேவந்து போர்முகத்தாயிரங் களிற்றி யானையைக் கொன்ற சுத்தவீரனைத் தலைவ னாகக்கொண்டு பாடப்பட்ட பரணியென்னும் பிர பந்தத்தை வீரமென்பது கனவிலுங்கேட்டறியாத உம்முடைய ஆசான்மேலெப்படி நீர் பாடினீரென் றுகேட்க அதற்குத் தத்வராயசுவாமிகள் நம்முடை ய சுவாமிகளும் சிஷ்யருடைய அகங்காரமாகிய யா னையைக் கொல்லுதலாற் பாடினேமென்றுசொல்ல அதற்கு அவர்கள் நீர்சொல்லும் அகங்கார யானை கண்ணுக்குப் புலப்படாமையால் ஒவ்வாது ஆயி னும் ஒரு சிஷ்யனுடைய அகங்காரமாகிய யானை யைக் கெடுத்தற்கு அநேகநாட் செல்லுமே இவர் ஏககாலத்தில் ஆயிரஞ்சிஷ்யர்கள் அகங்காரத்தைக் கெடுத்த தெப்படியென்றுவினவ அதற்குத் தத்வ ராயசுவாமிகள் அனுபவத்திற் காட்டவேண்டுமெ ன்று பிரதியுத்தரமொன்றுஞ் சொல்லாமல் சமாதி செய்திருந்தார். ஸ்வரூபானந்தசுவாமிகளின் சந்நி தானம் பட்டமையால்வந்த வித்வான்களனைவரும் இராப்பகல் ஒன்றுந்தெரியாமல் மூன்றுதினமளவும் பரிபூரணநிலையிலிருந்தார்கள். நாலாநாள் தத்வரா யசுவாமிகள் திருக்கண்விழித்தபின்பு அவ்வித்வான் களும்எழுந்து சுவாமிகளையும் தத்வராயசுவாமிகளை

யும் நமஸ்காரம்பண்ணி நாங்களறியாமையினால் ஆக்ஷேபித்தோம் தங்கள் சந்நிதானத்தினது விசேஷம் ஏககாலத்தில் பதினாயிரஞ்சிஷ்யர்கள் நேரிட்டாலும் பரிபாகப்படுத்தத்தக்க வல்லபமுள்ளதென்று அவர்கள் பலரும் இப்பிரபந்தங்களைக்குறித்து ஒவ்வொரு கவிகளைச்சாத்தி மாணாக்கர்களாய் வழிபட்டுப் போனார்கள். பின்பு தத்வராய சுவாமிகள் லோகோபகாரமாக வேதாந்த சாஸ்த்ரத்திற்குள்ளே சுவானுபூதிக்கிசைந்து சாரமாயுள்ள செய்யுட்களையெல்லாந்திரட்டிப், பெருந்திரட்டு குறுந்திரட்டென்ன இரண்டு சாஸ்த்ரத்தை அருளிச்செய்தார். இப்படியாகச் சுவாமிகளுடனே பிரியாமல் இருக்கும்பொழுது ஸ்வரூபானந்தசுவாமிகள் யாதோ ஒரு திருவிளையாட்டை நினைத்துத் தத்வராயசுவாமிகளைவைத்துத் தாம் பிரிந்து புறப்பட்டுப்போகையில் இவரும் பின்றொடராச் சுவாமிகளுந் தமக்கு நேரிட்டபடி வழியொன்றின்றிக் காடு நாடு மலைகள்முதலான விடங்களிற் சுற்றித்திரிந்து சமுத்திரத்தின் சமீபத்திற்போயினார். தத்வராய சுவாமிகளும் உடனேகவேபோய் ஸ்வரூபானந்த சுவாமிகள் கடன்மேல் நடக்கக் கடற்சலம்விலகி வழிகொடுக்க அதைக்கண்டு தாமும் கடலில்நடக்க ஜலம் வழிவிடாமையால் கரையிலே நின்று பசுவைநீங்கிய விளங்கன்றுபோலக் கதறித் திக்குகள்தோறுந் தேடும்பொழுது ஸ்வரூபானந்த சுவாமிகளுந் தரிசனங்கொடுத்துப் பின்பு அகண்ட பரிபூரண சச்சிதானந்தமாய் விளங்கினார்; அதைக்

கண்ட தத்வராயசுவாமிகள் அதிசயமும் ஆராமையும் அடைந்து சுவாமிகளுக்குச் செய்யவேண்டிய உத்தரகிரிகைகளெல்லா முடித்துச் சுவாமிகளையே நினைத்துக்கொண்டிருந்து பிரிவாற்றுமையாலோ பேரன்பினுலோ சுவாமிகளையன்றித் தமக்கொரு செயலின்மையினுலோ தாமும் உடனே பரிபூரண நிலையடைந்தார். இவர்களுக்குத் திருவலஞ்சுழியும் வாசஸ்தானம் சிவப்ரகாசசுவாமிகள் சமாதி திருவாரூர் சமீபஸ்தானம். ஸ்வரூபானந்தசுவாமிகள் சமாதி திருவண்ணுமலைக்கும் விருத்தாசலத்துக்கு மத்தியஸ்தானம். தத்வராயசுவாமிகள் சமாதி சிதம்பரத்துக்கும் விருத்தாசலத்துக்கு மத்தியஸ்தானம். இந்தச்சரித்திரம் மேற்படி சுவாமிகளுடைய பரம்பரை மாணுக்கர்கள் அனுப்பின பிரதிகளின்படி பதிப்பிக்கப்பட்டது.

தத்வராயசுவாமிகள் சரித்திரச்சுருக்கம் முற்றிற்று.



காப்பு.

இஃது சுரூப்பானந்தசுவாமிகள்மேல்

அடியேனையாள வருண்மேனிசாத்திப்
படிமீதுவந்த பரனே - கொடியேனென்
றெண்ணுதிமைப்பளவி லிங்ஙனேவீடளித்த
கண்ணுகவைட போகக்கா.

உ

சிவமயம்.

# பாடுதுறை.

---

முதலாவது

## ஸ்வரூபானந்தசுவாமிகள்

## திருவடிமாலை.

---

கலிவெண்பா.

செழுந்தரணி தன்னிற் றிருவுருக்கொண் டென்னை
யுழுந்துருளும் போழ்தி னுணர்த்த - வெழுந்தருளி
வந்தவடி நாயேன் மனத்தால் வணங்கமதி
தந்தவடி யாளச் சமைந்தவடி - யந்தரத்து
வில்லும் வியன்கனவும் வெண்டேரு நீர்க்குமிழும்
புல்லு மதிலெழுத்தும் போலவே-சொல்லளவாய்ப்
பொன்று முடற்குள்ள பொல்லாங் கெலாநினைந்து
நின்று நடுங்கிமிக நெஞ்சழிந்தே-னென்றுணையே
கோற்றேனே மாயைக் குரம்பைக்கூத் தாட்டவினி
யாற்றேனே யென்ன வளித்தவடி-யாற்றகிலாத்
தொண்டனையா ளென்று தொழுது பழவடியார்
தெண்டனிடுவிண்ணப்பஞ்செய்யுமடி-கண்டருளித்
தஞ்சமொன்று மில்லாத் தமியேனைத் தன்னருளா
லஞ்சலஞ்ச லென்ற வமலனடி - மஞ்சனஞ்செய்
நீத்தங்கொண் டென்னை யடியவர்த நேயத்தாற்
றீர்த்தமாட் டிக்கொண்ட செம்பொனடி-யாத்தமா

யச்ச மறநம் மடியானென் ருமிர்த
மிச்சி றரவிசைந்த வீரனடி - விச்சையாற்
கட்டப் பிறவிக் கருவைக் கணமொன்றில்
வெட்டக் கழலிட்ட வீரனடி - கெட்டேனென்
ருலம் பனமி லடியேன் மனமுருகக்
கோலம் புனைந்த குரவனடி - சீலமிகும்
பாங்காய நல்ல பழவடியார் தற்சூழப்
பூங்கோயி லுள்ளே புகுந்தவடி - யோங்கு
மிருவர்தே டுற்றவடி யிப்படிகண் காண
வருவதே யென்று மனநெக் - கருவியாய்ப்
பாயாத கண்ணென்ன கண்ணென்று பத்தர்கணம்
வாயார நின்று வழுத்துமடி - காயமுட
னண்ணு முயிரும் பொருளு நயந்துதத்தம்
பண்ணுவித்துக்கொண்ட பரமனடி-தண்ணியவென்
சென்னிமிசை வைத்தவடி சித்தந் திரித்தவடி
முன்னையறி வெல்லா முடித்தவடி - யென்னுருவு
காட்டுமடி கண்ட பொருளெல்லா மென்கண்ணில்
வாட்டி யெனையே மலர்த்துமடி - கோட்டமற
நம்பத மல்லவிது நான்மறைமா வாக்கியத்திற்
றும்பதங்கா ணென்ற சுகுயனடி - யம்பரமாய்
நின்ற பரவுடலி னோராக வேயென்னை
யின்றி யிடவே யிருத்துமடி - யின்றெனலு
மீண்ட விடத்தே விளம்பு மிதுவொழிய
மாண்டவிடத்திலையென வைத்தவடி-காண்டவிலா
வல்லை யறிந்தவறி வெங்கேகா ணென்றருளான்
மெல்ல விளம்பிவிழிப் பித்தவடி - தொல்லைமறைத்

தற்பதத்தின்மெய்ப்பொருளாந் தற்பரமாயிச்சகத்தி
னுற்பவத்தை யெல்லா மொழித்தவடி - கற்பிதமாம்
பூட்சி யிரண்டும்போய்ப் போதமாய்ப் போகுதனு
மீட்சியு மின்றி விளங்குமடி - காட்சியுங்
கண்ணாகக் காணுங்கண் டந்தவடி கண்ணென்று
மெண்ணாத வண்ண மிருத்துமடி - வண்ணந்தான்
பாமறைக ளோதரிய வாசாம கோசரத்தை
யூமை யொழியா வுணர்த்துமடி - யேமுற
வாங்கி முழுது மலர்த்தாளி லென்னைமகிழ்
தூங்க வளித்த சுரூபமடி - யிங்கமிர்த
மூழி யகநிறைந்து தித்தித் துடன்மயிர்க்கா
லூறுந்தேக் கிட்டுச் சுடருமடி - தேறித்
தெவிட்டாது நின்றவடி தீப்பிறப்பு மாள
வுவட்டாதென் னுள்ளே யுதித்துப் - பவத்தில்வரு
மூனைநடங் கண்டவா றொப்பவே மீட்டென்னை
ஞானநடங் கண்டு நயந்தவடி - யூனில்வரு
மச்சந் தவிர்த்தவடி யங்கைக் கனியாகி
நிச்சங்க மாகி நிகழ்ந்தவடி - பிச்சனைப்போற்
கத்தாமல் வைத்தவடி கண்ணாகி நின்றவடி
வித்தார மெல்லாம் விளைத்தவடி - சித்தத்தி
லெண்ணேது மாய்த்தவடி யென்னைவாழ் வித்தவடி
கண்ணேகண் ணாகக் கரைத்தவடி - யெண்ணுற்ற
காலங் கடந்தவடி காமங் கடிந்தவடி
சீலங் குடிகொண்ட செம்பொனடி - ஞாலமெலா
முன்பிழைக்க வல்லவடி முற்றுந் துடைக்குமடி
யென்பிழைக்குச் சால விரங்குமடி - யன்பினொடு

மூவருந் தேடுமடி மூர்த்தியாய் வந்தவடி
யாவருங் காண விருந்தவடி - பாவியேன்
சென்னிகுடி கொண்டவடி சித்தம் புகுந்தவடி
சொன்னிகழா நின்ற சுரூபனடி - முன்னைவினை
மாள மிதித்தவடி வல்வினையே னைத்திருத்தி
யாள மதித்துவந்த வண்ணலடி - நாளுக்கு
நாளும் புதியவடி நல்லடியா ரோடெனையு
மாளும் படியிசைந்த வையனடி - மாளாவென்
கள்ளத்தை வாங்குமடி கண்ணுகு மானந்த
வெள்ளத் தெனைப்புகுத விட்டவடி - யுள்ளத்திற்
கொண்டகோ ணீக்குமடி கோகனகன் றொழுமடி
யண்டர்கோனேத்தமிகவஞ்சுமடி-தொண்டரொலாங்
கொண்டு குலவுமடி கொங்கு கமழுமடி
பண்டை நிலையிற் பதித்தவடி - கண்டவர்தம்
பாவத்தை நீக்குமடி பாகொத் தினியவடி
* யாவத் தனமான வம்பொனடி - வீவற்ற
வாதி பகவனடி யாதித் தனைமுதலாஞ்
சோதிக்குஞ் சோதியாந் துய்யவடி - யாதுக்கு
மீதாகி நின்றவடி மேல்கீ ழிலாதவடி
யோதாம லுண்மை யுணர்த்துமடி - பேதாதி
பேத மறுத்தவடி பேச வினியவடி
போதக் கனமாம் புனிதவடி - யாதியு
மந்தமு மற்றவடி யாரணங்க டேடுமடி
பந்தமும் வீடும் படைக்குமடி - சிந்தைக்கு
மப்பாலாய் நின்றவடி யன்பர்க் கணியவடி

* ஆவத்துக்குத்தனமென்பது - ஆவத்தனமென மருவிற்று.

யொப்பான செய்யவடி யொப்பிலடி - யிப்பிறவி
மாற்றுமடி தன்னை வழங்குமடி மாதவர்கள்
போற்றுமடி யின்பம் பொழியுமடி - தோற்றிலர்கட்
கின்னலாய் நின்றவடி யென்னுள்ளத் தின்னமிர்தாய்க்
கன்னலாய்த் தேனாய்க் கலந்தவடி - தன்னிலைபோய்
வாராது வந்தவடி வாழ்வுறவாழ் வித்தவடி
யாரா வமிர்தான வம்பொனடி - தீராவென்
வஞ்ச மறுக்குமடி மானங் கடிந்தவடி
நெஞ்ச மறிய நிறைந்தவடி - துஞ்சல்பவப்
போக்குவர வற்றவடி பொன்னான செய்யவடி
யாக்க மழிவற்ற வண்ணலடி - யாக்கையுடன்
முத்தி யளிக்குமடி மூவா முதல்வனடி
பத்தி வலையிலகப் பட்டவடி - புத்தியா
லுள்ளற் கரியவடி யுண்மைக் கவருண்ண
வள்ளத் தமிர்தான வள்ளலடி - தெள்ளூற்ற
வின்சொன் மதிப்புலவோ ரேத்தப் பெருவடியென்
புன்சொ லுவந்த புனிதனடி - யென்சென்னி
செய்த தவமான செம்பொனடி தீவினையேன்
கைதவங் காணாக் கருணையடி - பைதலென
வாவாவென் றென்னை யருட்கண்ணாற் பார்த்தருளி
வாவாவென் றன்றலையில் வைத்தவடி - நாவார
வாழ்த்த மனநினைய மாமலர் தூஉய்க்கரங்கள்
சூழ்த்தச் செவிக டுதிகேட்பத் - தாழ்த்தத்
தலைதந்த வள்ளலடி தாமரையோ னுண்மை
நிலையும்பர் கா ணநிகழ்த்த - வலதின்றி
யற்ற பொருளிதுவே யாரணத்தி லானையே

மற்றில தென்று மழுவேந்த - முற்றுலகிற்
றக்கவர் நால்வரோ தத்துவ ஞானத்திற்
பக்குவ ரென்று பகரவான் - சக்கிரக்கை
யாண்டகை தன்பா லறியாது வாழித்தேர்ப்
பாண்டவனுக் கோதப் பதிணெண்கா - வீண்டுலகிற்
கையின் மணியென்ன யாவர்க்குங் கண்ணளிக்குஞ்
செய்யசுகு பானந்தன் செம்பொனடி - மையலாய்க்
கன்று மறுசமயக் கத்திற் கலையாம
லொன்று மொழிவந் துளவெல்லா - நின்ற
படியே சிவமாக்கிப் பார்த்தென்னை யாண்ட
வடியென்னை யாண்ட வடி. (க)

ஆகண்ணி - சுரு.

## நேரிசைவெண்பா.

வடிவிலா மாயையால் வந்த பவத்திற்கு
முடிவிலா முத்திப் பொருட்கு - மடியோரி
னீண்ட பெருமா னிகளமறப் போதமளித்
தாண்ட பெருமா னடி.

திருவடிமாலை முற்றுப்பெற்றது.

சிவமயம்.

## இரண்டாவது
# சிவப்பிரகாசசுவாமிகள்
## திருவருட்கழன்மாலை.

கலிவெண்பா.

திருவார் செழுங்கமலச் சீராரும் பொற்று
ளருமா முனிவ ரமரர் - பெருமால்கொண்
டின்னஞ் சுவடொற்றிக் காணுதங் கேதமுற
முன்னை யொருமூவர் தாமுயலப் - பின்னவியற்
பாதகமே செய்துழலும் பாவியேனைப்பொருளா
நாதனுடல் சாத்தி நலந்திகழப் - பேதையேன்
றன்னைவலிந் தாண்டருளித் தாவாத வென்பவத்தை
முன்னமுறு மூலமல மாமாயை - தன்னினொடுஞ்
சேரத் துணித்துச் சிறியேனைத் தாணுக்கச்
சீருற்ற கோலத்தைச் சீர்ப்பதியில் - வீரைப்
பெருமான் சிவப்பிரகா சப்பெருமான் போரா
வருண்மா மகடுறவி யாயுந் - திருமா
மகள்வீறு சாந்தியொடு வாழ்கருணை யன்பாந்
துகடீர் தயைமாதர் சூழ - மிகுஞானச்
சித்தர்கணஞ் சேவிப்பச் சீராரு நல்லன்பர்
பத்தியுட னின்று பரவியிட - வெத்திசையு
மாரணங்க ளாகமங்க ளாத்தர்மொழி யென்கின்ற
*பாரணங்களெங்கும் பரந்தொலிப்பக்-காரணந்தான்

* பாராயணங்களென்பது - பாரணங்களென மருவிற்று.

யோகாந்த ஞான வுயர்முத்தி மண்டபத்தி
லேகாந்த பீடத் தினிதிருந்து - சோகாந்த
வெங் 0 கோலகால மிகப்பெருத்த வெவ்வினையாம்
பொங்கார் மயனெறியிற் போய்நரகி - லங்கே
தலைகிழா வீழ்வேனைத் தன்னருளா கின்ற
வலியாலே தானெடுத்து வன்பாய் - நிலையதற
நெஞ்சத் தினைவணக்கி நீள்வஞ்சப் பற்றெல்லாந்
துஞ்சத் துகளாகப் பார்த்தருளி - நஞ்சதறு
மென்கோண் முழுது மெழிற்கணுற் றுன்விழுங்கி
நன்கேது மில்லாதே னுய்த்தலைபி - லன்போடும்
வைத்தவடி வாசாம கோசரமென் றாரணங்கள்
பித்துறுபே ரன்பாய்ப் பிதற்றுமடி - யெத்தவருந்
தேடுமடி தேட்டமெலாந் தீர்க்குமடி திண்ணன்பிற்
கூடுமடி. கூடற் கரியவடி - பாடியிடும்
பத்தர்க்கு நல்லவடி பாதகனே னைப்பிடித்து
முத்திப்போ கத்தின் முழுத்துமடி - சித்தத்தை
யாற வளித்தவடி யாசை யறுக்குமடி
யூறு முளத்தை யொருக்குமடி - வேறதற
தன்னை யளிக்குமடி சால வினியவடி
யென்னை யுருக்கியின் பித்தவடி - முன்னையொரு
மூவர்க்கு மூலவடி மூவாது சாவாது
தேவிற் பொலிந்து திகழ்ந்தவடி - தாவற்ற
சுத்தசுக போதவடி சொல்லிற் படாதவடி
பெத்தமொடு முத்தியிற்பே ரின்பவடி-யெத்தியெனை
யாரவென வந்தவடி யாயேனை யாண்டருளும்

0 கோலாகலமென்பது - கோலகாலமென மருவிற்று.

பொருளாற் றன்பெரும்பித் தானவடி - சீருளா
லெல்லை யிறந்தவடி யென்று முள தாயவடி
சொல்லுமனஞ் செல்லரிய தூயவடி - தொல்லைவினை
போகத் துரந்தவடி பூரணம தாயவடி
மாகத் தவருண் மறைந்தவடி - யோகத்தின்
மெய்த்துமுடி வாயவடி மெய்யன்பி லார்க்கென்றும்
பொய்த்தவடி பூமாய் நின்றவடி - நித்தலுமென்
போராத போரவலங் கண்டும் பிசகலறச்
சீரார் திருக்கருணை செய்யுமடி - யோராதே
யென்றுமப ராதமே செய்திடினுந் தான்புனிவை
யொன்று மறியாத வொப்பிலடி - கன்றுமனப்
புல்லினத்தே நான்மறந்தும் போகாமைத் தன்னன்பர்
நல்லினத்தை யேகூட நல்குமடி - யல்லலுறுஞ்
சாதி குலச்சடலைச் சங்கற்ப நான்சாடப்
போத மளித்த புனிதவடி - மேதக்க
வெட்டாமி யோகங் களும்பயனுங் கோதெனநான்
விட்டே விளையாட வைத்தவடி - துட்டாய
வென்கொடுமைநெஞ்சத் திருந்தகலா தேயருள்செய்
நன்கதனுன் மிக்கு நயந்தவடி - தன்கருணை
காட்டவெனை யாண்டவடி காயமதாய் மாளுமெனை
மீட்டவடி யுள்ளே விழித்தவடி-பாட்டினொடு
பண்ணாகி நின்றவடி பாவனைதீர்த் தாருள்ளக்
கண்ணாய் மணியாய்க் கலந்தவடி - யெண்ணுதற்கு
நான்மறைகள் கூசுமடி நன்கறியே னெத்தியிடு
மூனவுரை கேட்க வுவந்தவடி - மோனமதாற்
றன்முடிவு கூறுமடி தன்பெருமை பாராதே

யென்னை யிங்ஙனை விசைந்தவடி - பன்னுமறை
மூலமென வோதுமடி மூடனே னென்புருக்குஞ்
சீலமதாய் நின்று சிறந்தவடி - காலமவை
கண்டவடி காலங் கடந்தவடி யென்னுயிரை
யுண்டவடி யுள்ளொளியாய் நின்றவடி-மண்டுபவக்
காடு சிதைத்தவடி கண்ணுறு மானந்த
வீடுதனை யெனக்கு நல்குமடி - கேடனே
னென்பதனுந் தீங்கொழிய வள்ளுறு முள்ளந்தந்
தின்பமுறவென்னையிங்ஙன்வைத்தவடி-முன்பின்றே
வெதித் திலகுமடி மெய்யரனு பூதியினாற்
சாதித்துக் காட்டுமிஞ் சம்புவடி - பேதிக்கு
மெய்ப்பொருளு மாயவடி யாவுங் கழன்றவடி
முப்பதமு மோதி முடிந்தவடி - சிற்பதமாய்
நின்றபடி நின்றவடி நேரேயென் கண்குளிர
வொன்றுமடி யோருவமை யற்றவடி-சென்றடையு
மெப்பதமு மாயவடி யேழையர்க்கு நல்லவடி
யொப்புவமை தான்றனக்கா யுள்ளவடி-யெப்பழைய
கோளும் விரகெவையுங் கொண்டவடி கூழையனை
யாளு முவந்தடிமை கொண்டவடி - நாளுமுறு
நண்புசெறு மென்றனையு நாணிவிடா தேபிடித்துப்
புண்செயுமென் புன்மையெலாம் போக்குமடி-கண்டு
கூர வினியவடி கூற வரியவடி [களி
பார்வையற மெய்யே பணைத்தவடி-யூரொடுயே
ரின்றி யிலகுமடி யேகாந்த மாயவடி
நன்றிமுடு தீங்கிலா ஞானவடி - வென்றிமிகுந்
தூய துறவினர்பாற் றுன்னுமடி தூவிஷய

மாயமுறி லங்கே மறையுமடி - காயமது
பேணியிடும் பெற்றியனைப் பேயாக்க வல்லவடி
காணுமவைமுற்றுங்கண் ணாக்குமடி - நாணமெலாந்
தீர்த்தவடிசெத்தினிப்போய் நான்பிறவாவண்ணமெ
பார்த்தவடி பாதாதி கேசமுறச் - சீர்த்த [னைப்
வருளே பொழியுமடி யாய்வொன்று மில்லா
மருளேனை மாயாமைக் காத்துத் - தெருளாவென்
சித்தஞ் சிவமாக்கிச் செய்தவெலா மெய்த்தவமா
வைத்தெனைவாழ்வித்துவந்த வள்ளலடி-யெத்திறரு
நாளுக நல்குமடி ஞாலமெலா மானவடி
வானுடர் காண வருந்துமடி - யூனே
டிருடைமையானவெலாங் கொண்டவடியோரென்
மயலறவென் சென்னிதனின் மன்னி - நயமதுறச்
சென்ற நனைவைத் திரித்துத் திரிந்தவிடத்
தொன்றும் விகார மொழித்த வடி - கன்றுமிருள்
காண வளித்தவடி காண்கின்ற வக்கரியாய்ப்
பேணுமிரு டன்னைப் பிரித்தவடி - மாணுணர்வு
தானுகி நின்றவடி தன்னிற் பகுதியினை
யானு தழித்தழியா தானவடி - தானு
டறிவெங்கு மாயுள்ளா யெல்லா மறிந்து
பிறிவின்றி நின்று பிறங்கிச் - செறிகின்ற
தோற்றந் திதியழிவுந் தன்கணே தோன்றியிட .
ஆற்றத்துக் கோவா தொளிருமடி-யேற்றத்திற்
றுனிகழ்ந்த கோளெவையுஞ் சாற்றிப் பரன்மிகுதி
யானெனவே யாவளித்துநின்றவடி-மேனிகழ்ந்த [கி
கோளெவையுங்குற்றமெனக் காட்டியக்கோண்மழுக்

நீளும் பான்கனவாய் நின்றவடி - மானவெறு
முய்த்தவவி காரமதா யோங்குமடி யோதரிதாய்ச்
சுத்தவெதி ரித்தமறத் துன்னுமடி - யத்தி
லெறிவயர்வங் கின்மையின லாய்ந்தற்ற வத்தங்
குறியிறிது விங்கெலலாய்க் கூடி - நெறிமையினிற்
போங்குணர்வாய்ஞாலத்துவேறுய்ப்புருந்துரைவுந்
தேய்ந்து செருகியிடுஞ் சிறிவால் - வாய்ந்தபரன்
றன்சுழுத்தி யாகுமெனச் சுட்டியது தான்கழன்று
நன்பாமே யாகி நயந்தவடி - முன்புகலு
மீரியல்பாய் நின்ற விகுதி பகுதியும்போ
யோரியல்பாய் நின்றங் கொளிருமடி - தீர
வுதயாத் தமனமுமற் றேதவத்தை யும்போ
யிதயாத்த மாகியிலங்கு - மதுபார்த்துத்
தீர்ந்து கழன்று தெளிவாய் நிரந்தரமா
யார்ந்த வுணர்வுருவ மானவடி - போந்தவித
னிற்றிகழும் விச்சுவமே செய்ததுபா ரொன்றருள
*வித்தனையு நானென் றியம்பியிடு - மித்திகழ்வால்
நின்றபடி நேரோ யிதம்வே றெனத்தோன்று
மென்றியல் குற்ற மெனக்கேற்கக் - கன்றலறக்
காட்டுமடி யிவ்வளவுங் காணு முபாதிகளை
வாட்டிய திங்கிளித்தான் மன்னிநிகழ்-சேட்டுணர்வி
மேற்கிடந்த மாசறுத்த லென்றுவெதி ரித்தமுங் [ன்
0 தீர்த்திதமுந் தாமுய்த் திகழ்ந்தவடி - பார்த்த
வனிதமுடன் றனிதமு மற்றொளிரு மம்பொற்
புனிதவடி பூதவுல குண்ட - தனதுசெய

* இனவெதுகை. 0 மூன்றெழுத்தினவெதுகை.

ருனு மிறந்தவடி சாற்றவரி தாயவடி
யான வுபசமன மாயவடி - மோனபதந்
தம்பிரான் வந்து வெளிப்படுமித் தானமென
நம்புமா காட்டி நயந்தவடி - யெம்பரம
தின்றி யெழுநிகழு மெல்லையிலாப் பேரொளியாய்
நின்றபடி நின்ற நிமலவடி - யென்றுந்தா
னேத வுலகி னுலப்பில்சுக சாகரமாய்
நித்தியது தானாய் நிகழ்ந்தவடி - யீதெனவே
தானிருந்து காட்டத் தயங்குமூ மைக்குடத்தி [ந்தே
‡ ளிர்நிறைந்தாற்போனிறைந்துநின்றவடி-தேனிறை
யெற்புத்தொளைதொறுமங் கேறுமயிர்க் கால்கடொ
* மிக்குத்தித் திக்கும் விமலவடி — தக்க [று
வொருமையா யித்திகழ்வெ லாமொன்று சித்திப்
பெருமைபே ணாம்புலனு மாரக் - கரவதிலா
வெள்ளவெளி யாயவடி மேவுமருட் கண்ணதனாற்
கள்ளமற வெவ்வுருவுங் காணுமடி - தொள்ளைச்
செவிவழிய தின்றித் திகழொலியாய் நின்ற
நவையிலடி நாடற் கரிதாய்ச் - சுவையதுறு
நாவினு லன்றி நலமாரத் தித்திக்கு
மோவிலா வின்சுவையா மொப்பிலடி - மேவு
முடற்பரிச மின்றி யொழிவறுபே ரின்பத்
திடப்பரிச மாகித் தெரிவுற் - றுடைக்குமிழான்
மேவுமண மின்றி விரிவொடுக்க மின்றாகித்
தாவின் மணமாய்த் தயங்குமடி - பாவியேன்
சென்னிகுடிகொண்டவடிதீவினையேனெஞ்சதனின்
மன்னி யிருந்தவடி நான்மறந்துந்-தன்னுழிய
வுன்ன றவிர்த்தவடி யொன்றாகி நின்றவடி

‡ மூன்றாமெழுத்தினவெதுகை. * இனவெதுகை.

யன்னையினுந் தானெனக்கன் பானவடி - நன்னயமா
மன்பர்க் கெளியவடி யன்பிலா நெஞ்சதுறும்
வன்பர்க்குச் சால வலியவடி - யென்பற்றும்
வஞ்சத்தைச் சாடுமடி வாராது வந்தவடி
கொஞ்சிட் டுபசிடங்கள் கூவுமடி - தஞ்சமதாய்
நின்றபடிநின் றவடி நேரோயென்மோகத்தைக்[வென்
கொன்றவடியுண் டிலையென் கோண்முழுது-மன்றிய
மாற்றமது வாட்டுமடி வாழ்வறவாழ் வித்தவடி
போற்றுமடி யானைமிகப் போற்றுமடி - யாற்று
தருணியினைந்தங் கள்ளுறு மன்பர்தஞ் சிந்தை
வெருளதற மெய்யே பொலிந்திங் - கிருளுமனத்
தென்னைப் பொருளாக வெண்போ லுடல்சாத்தித்
தன்னைத் தருந்தம்பி ரான்றனடி - சென்னிக்கண்
வைத்து மனமகிழ்ந்து வாயார நான்வாழ்த்தும்
பித்ததுவாம் பேரன்பே தந்தருளெ - னத்தர
சிவப்பிரகா சாபோற்றி சீமானே போற்றி
யவக்கட லுள்ளாழ் வேனையாண்ட - தவக்கடலே
போற்றி சயசய பல்லாண்டு பல்லாண்டு
போற்றி சயசயபோற் * றீ. (௨)

ஆ கண்ணி - ௬௯.

## நேரிசைவெண்பா.

என்புன் றலைமன்னு மின்பத் திருக்கழலை
யன்பொன் றியேத்த வனவரத-மின்பஞ்செய் [நான்
தாண்டானே தந்தருள்செய்யல்லதுவேறொன் றையு
வேண்டா மையுமருள்வாய் மெய்.

திருவருட்கழன்மாலை முற்றுப்பெற்றது.

---

* வகையுளி - நீட்டல்விகாரம்.

உ

சிவமயம்.

மூன்றாவது

# ஸ்வரூபானந்தசுவாமிகள்

## போற்றிமாலை.

---

கலிவெண்பா.

வானாடர் கோனு மலரோனு மாலோனுங்
காணாநின்றநுதற் கண்ணோனுந் - தானாட்
மாட்டார் மதிமயங்கி மாமறையி னீறுகளுந்
தாட்டா மரைதேடித் தானரற்றச் - சேட்டார்
முனிவரெலாங் காணார்போய் முந்நீரி னுள்ளே
பனிவருங்கா லத்துப் படிந்துந் - துனிபெருகுங்
கோடையினில் வெய்ய கதிருங் கொடுந்தீயும்
* பாடு மெரியப் பதைபதைத்தும் - வாடித்
தலைகீழாய் நின்று தபித்துச் சலமோ
டிலைகாய் கிழங்குகாற் றெய்திற் - றலமாகக்
கொண்டயின்றுங் காடுங் 0 குமிடு மிடமாகக்
கண்டுயின்று மிங்ஙனே காயத்தைக் - கொண்டு
படக்கடவ வெத்தனையும் பட்டாலும் பட்டு
விடக்கடவ ராக விதித்திங் - கடற்புலன்க
ணீத்தார்க டங்க ணினைவுங் கடந்தகமே
பார்த்தார்க் கதிதூரப் பட்டிருண் - டேத்துவார்க்
கின்ன தெனவறிய வில்லா வியல்பதனா
லன்ன வரையு மயர்ப்பித்துத் - தன்னுருவ

---

* பாடு பக்கம் உம்மையிடைச்சொல், 0 குமிடு-குன்று.

டானென்ன வன்றி வழியென்னப் பெண்ணென்னப்
பேறும் வகையின்றிப் பேசுங்கால் - கான
வொருவழியு மின்றி யுரையுணர்வுக் கெட்டாத்
திருவடியை யுள்ளங்கைச் சேர்த்த-தொருகளிபோம்
கண்டோமென் பார்காட்சி யாவையுங் கைகடந்
துண்டோ விலதோவென் றோர்வுமறத்-திண்டாடப்
பண்ணிப் பரம கருணையினா லொருருவாய்
நண்ணித் திருஞான நாட்டத்தைத் - திண்ண
மளித்திடினு மன்பர்க் ககமதிப்பின் முன்வந்
தொளிப்பமோ போலே யொளித்தும்-வெளிப்படா
வெம்பிரா னென்றிரங்கும் யாவர்க்கு மெய்தரிய
தம்பிரா னேயெற்கித் தாரணிக்கே - செம்பொற்
கழல்காட்ட வாகமெலாங் கண்ணாகக் காணே
னழல்காட் டியமெழுகே யாகே-னெழில்போற்ற
வாயா யிரங்காணேன் மாறுப் பெருங்களிவந்
தோயா திருகு முளங்காணேன் - காயம்
புரையுள்ள வெல்லையும்போய்ப் பூரிக்கக் காணேன்
கரையுந் திறந்தானுங் காணேன் - றிரைகொண்ட
வாழிபோ லார்த்தோங்கி யாகாயத் தோடுநில
னேழையே னலித் தெழுந்துவிழேன் - வாழே
னுருகேன் பெருகே னுடையானே யுன்னிப்
பருகேன் பரவேன் பதையே - னொருகால்
விழிபனியேன் வெய்துயிரேன் மெய்சோரேன் விம்
னழிவறவே நின்றுருக்கி யூனைக்-கழிவுறவே [மே
பாரோன் பயந்துள்ளம் பாதாதி கேசமுற
வேரோன் வியவேன் விதிர்விதிரே - னீராய்க்

கனாயே னெனதுடலங் கம்பிக்கக் காணேன்
வினையேன் மலர்ப்பதத்தே வீழே - னுனையுங்
குழறேன் தழுதழுத்துக் கூத்தாடே னெஞ்சைக்
கழறேன்கண் ணீர்சொரியக் காணே - னழறே
னொளியே யடியே னுருவியப்புங் காணேன்
களியேனுன் செய்யும்வகை காணேன் - றெளிவிலே
னுற்ற வறிகிலே னத்தா கழல்போற்றி
தோற்று சுரூபச் சுடர்போற்றி - நாற்றிசையுங்
கீழ்மேலு மெங்குங் கிளரொளியா யப்புறம்போய்ச்
சூழ்மேவிநின்ற சுடர்போற்றி - யூழ்மேவு
காயங் கரைவித்த கண்போற்றி காற் * றியமான்
றேயங் தரைவிண் சுடர்மூன்று - மேய
வருவித்த வல்லபம் போற்றி யவைமாற்
றுருவித் தகம்போற்றி யுன்னைத்-தெரிவித்த
வாபோற்றி நின்னை வளைவோ ருளம்விட்டு
நீபோக் கிலாத நிலைபோற்றி - தீபத்
தொளியின் றெளிவாய வோருருவம் போற்றி
களியொன் றியகழல்கள் போற்றி - யெளிவந்து
பேயேனை யாண்டு பிழைபொறுத்தென் பேதைமை
நீயே தவிர்க்கு நெறிபோற்றி - தாயேயென் [யை
றந்தையே போற்றி தமியேனை யாட்கொண்ட
வெந்தையே யீசா விறைபோற்றி - பந்த
மறுத்தானே போற்றி யடியேன் பிறப்பை
வெறுத்தானே போற்றி வினையான் - மறுத்துன்

* இயமானனென்ப தியமானெனக் கடைக்குறை விகாரமாயிற்று.

றிருவருளைக் காலெனது சித்தந் திரித்த
வொருவிரகே யுத்தமனே போற்றி - பருகமிர்த
மானானே போற்றி யடிநாயே னெஞ்சிடையே
தேனாகித் தித்திக்குஞ் சீர்போற்றி - யானா
ரவனியின் வந்தாள வாற்றுகிலேன் போற்றி
சிவனயன்மா லாந்தேவே போற்றி - தவமிலியே
னென்செய்தேன்போற்றி யிறைபோற்றியெப்பொரு
முன்செய்தானேமுழுது நீபோற்றி-நின்செயலிங்[ட்கு
காரறிவார் போற்றி யனைத்துமா யல்லாத
பேரறிவே போற்றியெவறும் பேயேற்குப் - பாரறியத்
தந்தாய் மலர்ப்பாதந் தம்பிரானேபோற்றி
சிந்தா குலந்தவிர்த்த சீர்போற்றி - கொந்தாருந்
தாளிணைகள் போற்றி தரிக்கிலேன் காண்போற்றி
யாளெனையுங் கொள்வதழ கோபோற்றி-மாளாமே
காத்த கழல்போற்றி நாயேன் கவலையெலாந்
தீர்த்த விழியின் றிறம்போற்றி - வார்த்தைவெறு
மொன்றுலேயெண்ணிறந்த வூழிவருமென்பவத்தை
கொன்றானே போற்றி குறிபோற்றி - பொன்று [க்
மிதமோ டகமேவு மென்மயலை மாய்த்த
மதஞான வாரணமே போற்றி - பதகக்
கலையோ தலைவலைகள் காண்டற் கரிய
நிலையேயென் னின்மலனே போற்றி - சிலைபோலு
மென்னெஞ்சினைநெகிழ்த்த தென்செய்தவாபோற்றி
முன்னஞ்செய் தாய்மூர்த்தி யேபோற்றி - யின்னந்
தெளிகிலேன் போற்றி தெளியாத வென்னை
* விளிகிலேன் வித்தகனே போற்றி - யளிபவர்த

---

* பிறவினை தன்வினையின் வந்தது.

ழுள்ளத் தமிர்தே யுடையானே யேபோற்றி
தெள்ளத் தெளிவே செயபோற்றி - கொள்ளக்
குறைவிலா வின்பக் குணக்கடலே போற்றி
யிறைவனே யென்னுனைக்கேன் போற்றி-முறையோ
கைம்மாறு காணேன் கருணைப் பெருங்கடலே[நான்
யம்மானே போற்றி யடிபோற்றி - பொய்ம்மாயத்
தீர்த்தாய் பிரானே பிரானே செயபோற்றி
காத்தாய் கருணா கரபோற்றி - மூர்த்தியே
மூலமே போற்றி முழுதழிய வுள்புகுந்த
கோலமே போற்றியெனைக் *கோப்பழித்த-சீலத்தின்
வித்தகமே போற்றி வினையேனை நின்றூருக்கு
முத்தமனே போற்றியுடை யாய்போற்றி-பத்திக்
கடலா மடியவர்முன் காசினிமேன் மாய
வுடலா னதைநானென் றுன்னி - யடலார்
புலனெறியே போவேனைப் புண்ணியநீ யாள்கை
நலனதுவே நாயகனே போற்றி - சலமதிபோ
னின்று குலைகுலையு நெஞ்சந் திரித்தவிர
கொன்று மறியே னுனையிறந்த - குன்றமே
போற்றி புனிதாநின் பொற்கழலே யெப்பொழுதுஞ்
சாற்ற வளித்த சதுர்போற்றி - தோற்றமெலா
நீயேகாண் போற்றி நினைவணங்கா தாரெல்லாம்
பேயேகாண் போற்றிவெறும் பித்தனே - ஞயேனுன்
சொல்லும் வகையறியேன் சோத்தெம்பிரான்போற்
கல்லு மனங்கரைத்த கண்போற்றி - யல்லும் [றி
பகலு மடியேனை யாண்டவா பார்மேற்

---

* கோப்பு-கூட்டம்.

புகலும் வகையருளாய் போற்றி - சகலமு
முன்னிற் பிறந்திருக்க வொன்றிற் பிறந்திறவாத்
தன்னந் தனியேநின் முள்போற்றி - யென்னெப்பி
லென்னையாட் கொண்ட விறைவே முறைபோற்றி
முன்னையாய்ப் பின்னாய் முழுதுமாய் - மன்னும்
பொருளாய பூரணனே போற்றிதாள் போற்றார்க்
கிருளா யிருப்பவனே போற்றி - யருளேது
மற்றேன்காண் போற்றி யடியே னடையவுனைப்
பெற்றேன் பிழைத்தேன் பெருமானே - சிற்றின்பம்
வேண்டாவேண்டாபோற்றி வெவ்வினையேனுள்ளுரு
யாண்டானேபோற்றியடிபோற்றி-தூண்டுசுடர்ச்[க்கி
சோதி துறந்தோர் துணையே கழல்போற்றி
யாதி யறிவே யருள்போற்றி - பேதையேன்
றேமாகின் செம்பொற் றுணைமலர்த்தாள் காணுதா
வாழேன்காண்போற்றி மதிபோற்றி-யேழையே [ன்
றாற்றுகிலேன் போற்றி யருளாய் கழல்போற்றி
தேற்றமெனக் குன்சே வடிபோற்றி - போற்றி
சுரூபானந் தச்சுடரோ யென்றுணையே போற்றி
திருவேயென் செய்தவமே போற்றி - கருவாய
மூலமே போற்றி முடிவே யடிபோற்றி
ஞாலமே விண்ணே நலம்போற்றி - தூலமே
நுண்மையே போற்றிமிகு நுண்ணுணர்வோர் தங்கருத்தி
னுண்மையே போற்றி யொளிபோற்றி - கண்மேவிக்
காண்பதெலா நீயொழியக் காணேன் கழல்போற்றி
பூண்பதினி யுன்பொற் கழல்போற்றி-யாண்பெணலி
யல்லானே போற்றி யடியேன் பிழைபொறுக்க

வல்லானே போற்றி மதியிலேன் - பொல்லாதே
னென்றறிந்துமாட்கொண்டாய்போற்றிநீயெவ்விடத்
தின்றறிக்த நின்மலபோ தம்போற்றி - யொன்று [து
மறியே னுடையா யடைக்கலநான் போற்றி
சிறியே னிடர்சிதையாய் போற்றி - குறியேது
மில்லாத வின்பப் பெருங்கடலே யேத்தினர்க்கு
நல்லா யெனையா ளையம்போற்றி - பல்லாண்டு
போற்றி சயசய பல்லாண்டு பல்லாண்டு
* சித்திறமேதுந் தெரியாதேன் - ரூற்றியவா
வின்னைப்பஞ் செய்தவிது வேதங்கள் கண்டுதுதி
பண்ணப் பெறுதமலர்ப் பாதத்தே - நண்ணுமே
யென்போல வெல்லாப் படியாலுங் கீழெனக்கு
முன்போ ருயிரில்லை முற்றுணரிற் - பின்பு
முளதாகா திப்பரிசே யுள்ளேனை யாண்ட
0 பளகாவென் பாக்கியமே போற்றி-யுளகாலங்
கொண்டாடி நாவுன் குணம்பரவ நின்கோலங்
கண்டார நாயேன்றன் கண்ணிரண்டு - மண்டாநின்
கிர்த்தியினையெப்பொழுதுங்கேட்டென்செவியுவப்ப
மூர்த்தி கழலே முடிசூட - வேத்துதற்கு
வானவருங் காணாத மாணிக்கப் பாதமலர்
ஞான மணம்பருக நாசியென - தூனடைய
வுள்ளமாய் நின்றுருக வோருடம்புங் கண்ணாகி
வெள்ளமாய் நீர்சொரிய நான்வியப்ப - வள்ளலே

---

* மூன்றாமெழுத் தினவெதுகை.

0 பழகாவென்பது - பளகாவென ழகர ளகர அபேதத்தா
ல்வந்தது.

யுன்னடியா ரோவற் றொழிலுவந்து நான்செய்யப்
பொன்னடிதா போற்றி புகழ்போற்றி - யின்ன
மதுவே யிரக்கின்றே னாயிரங் கால்போற்றி
யிதுவே பெறிலடியே னென்றுங் - கதியேது
மில்லாப் பிறவியிலே யென்றும் பிறந்தாலும்
பொல்லாதென் றீதே புரிபோற்றி - கல்லாக்
கயவேனை யாண்ட கருணைக் கடலே
செயபோற்றி செம்பொற் கழல்.

ஆ கண்ணி - அகஅ.

போற்றிமாலை முற்றுப்பெற்றது.

---

உ

சிவமயம்.

நான்காவது

# ஸ்வரூபானந்தசுவாமிகள்

# புகழ்ச்சிமாலை.

---

கலிவெண்பா.

திருநாமம் போற்றுந் திறமறியேற் கிந்த
விருநா னிலத்தி னிடையே - யொருநாம
மோருருவ மொன்றுமிலா வுண்மேனி காட்டவருஞ்
சீருடைய செம்பொற் றிருவடியா - யாரமிர்தே

தித்திக்குந் தேனே தெளிவிலா நாயேற்கும்
பத்தித் திறமிருக்கும் பண்பளித்தாய் - முத்திக்
குடையானே யென்னையாட் கொண்டானே யெண்டிக்
குடையானே யென்னையுடை யானே-கடையானேன்
மாளா வகைவந்த வள்ளலே மெய்ப்படவே
யாளா மடியவர்கட் கன்பனே - சூளா
மணியே மரகதமே மாற்றிலாச் செம்பொ
னணியே யெனக்கணியை யானாய்-திணியவெறும்
பொய்யு மிருளும் பொருந்து மனங்களையச்
செய்யு மருட்கட் செழுஞ்சுடரே - மெய்யன்பா
லாளான நல்ல வடியார் பிழையென்றுங்
கேளானே யென்னுடைய கேளானே - மீளார்க்குத்
தோன்றானே தோற்றி யளித்தழிக்குஞ் சோதியுரு
மூன்றானே யோரிடத்து மூன்றானே - வான்றிகான்
மண்ணலாய் நீரலாய் மாமலர்த்தாள் சூடாதார்க்
கண்ணலாய் நாயேனுக் கண்ணலாய் - பெண்ணலா
யாணலா யன்றி யலியலா யென்றனக்குங்
காணலாய் வந்த கருணையே - நாணிலா
தென்னையு மாண்டருளு மெந்தையே யென்மனமாய்
கன்னையு மாறு கடைக்கணித்தா - யன்னையினு
நல்லானே வேண்டியவா நான்செய்ய முத்திதர
வல்லானே யென்றனக்குவாய்த்தானே-சொல்லோடு
செய்திமன மொவ்வாத தீமையேன் செய்பணியுங்
கைதவமே யென்றறியக் கல்லானே — மைதீர்ந்த
சோதி யுருவே சுரூபானந் தச்சுடரே
யாதி யுடனடுவீ றற்றானே - நீதியா

மேலானே கீழா மடியேற்கு வீடளித்த
காலானே நாயேன்றன் கைப்பொருளே - நாலான
வேதங்க ளேமுதலா மெய்ந்நூல்க ளாலுன்றன்
பாதங்கள் போற்றரிய பண்புடையாய்-வாதங்கட்
கெட்டானேமுன்னூல்க ளெண்ணுகின்றவெட்டுருவ
தொட்டானே சிட்ட ருளத்தமிர்தே-கிட்டானே [த்
விண்ணோர்க டங்களுக்கு மேதினிமே னீதியிலேன்
கண்ணார வந்தருளுங் கார்முகிலே - பண்ணார்
மொழியார் விழிவலையான் மொத்துண்டு நாயே
னழியாமைக் காத்த வரசே - யொழியாதே
யெப்பொருட்குமெவ்விடத்துமெக்காலத்துங்கலந்த
* செப்பொருளே யெப்பொருட்குஞ்சேயானே-யப்
[பொழுதைக்
கப்பொழுது மாரா வமிர்தே யடியடைந்தார்க்
கெப்பொழுதுந் தித்திக்கு மின்சுவையே-செப்பரிய
பூவோன் முதலாகப் புல்லீறு பல்லுருவாய்
நீவேறு பட்டாய் நிராமயனே - யாவேறு
பால்போ லொருதன்மைப் பட்ட பரம்பொருளே
நூல்போயுணர்வரியநுண்ணுணர்வே-வேல்போலுங்
கண்ணார்தம் பார்வையாற் கட்டுண்டு கள்ளமுறும்
பண்ணார் மொழிகள் பலவுங்கேட்-டண்ணாந்து
நிற்கு மதியிலியே னேயமிலா நெஞ்சென்னுங்
கற்கரையச் செய்ததிருக் கண்ணனே - நற்கமலப்
பாதந் தொழவறியாப் பாவியேற் குன்னறியும்
போதந் தரவந்த புண்ணியனே - யேதங்

* செம்மென்பது - செப்பெனவலித்தல்விகாரமாயிற்று.

கெடுத்தானே கேடிலா நின்பாதங் காட்டி
யெடுத்தானே யென்னா ருயிரே - தடுத்தாண்டு
கொண்டானே யேதுங் குணமிலே னென்றறிந்துந்
தொண்டாகக்கொண்டசுடரொளியே-0கண்டாரொ
றில்லாத தீங்கரும்பே யாவர்க்குங் கிழேனுக் [ன்
கல்லாதா ருள்ள வறியானே - பல்லுயிரு
மீன்றானே யேழையேன் கண்ணொழிய யாவர்க்குந்
தோன்றாது நின்ற சுரூபனே - மூன்றாய
காலமே காலங் கடந்திடமே யெப்பொருட்கு
மூலமே யாவு முடிந்திடமே - கோலங்
கரியாய் வெளியாய்நீ செய்யாய் கருத
வரியா யெளியா யனந்த - விரிவே
யொடுக்கமே பற்பலவா யோதுகின்ற லோகத்
தடுக்கமே யவ்வுலகுக் காணி-யடுத்தவடி
வாகும் பளிங்கேபோல் யாதினுக்கு மவ்வவையாய்
நீகுன்றி லாத நிறையொளியே - யோகொன்றி
லொட்டானே யொன்றறியா வுன்மத்தன் கையிலகப்
பட்டானே யெட்டாய பல்லுயிரே - யெட்டா
வகலமே வண்மையின்மற் றண்மையே யெண்ணுஞ்
சகலமே யொன்றாநீ தானே - பகலிரவொன்
றில்லா விரவியே யிவ்வண்ணத் துன்னுருவைச் [ய்
சொல்லாதேநான்காணச்சொன்னவனே-யெல்லாமா
நின்றானே யொன்றுமலா நின்மலனே துன்மனத்தி
லொன்றானே நீமுடிவி லொன்றானே - குன்றா
வொளியானே யென்னை யுவந்தாண்டு கொள்ள

---

0 ஒன்றுமென்பதின், உம்மைவிகாரத்தாற்றொக்கது.

வெளியானே சால வெளியாய் - தெளியாதேன்
வெற்றவெறும்பொய்யேன்மெய்யடியார்போலுஞ்சீர்
கற்றுப் பிதற்றுமது காதலொடுங் - குற்றமெனக்
கொள்ளா தெனக்குங் குறைகழறந் தாட்கொண்டு
விள்ளாதென் னுள்ளிருக்கும் வித்தகனே - யெள்ளா
வறிவே யறிவடங்கு மாலயமாய் நின்ற
செறிவே யெலாங்கடந்த தேசே - பிறிவதறத்
தேசாய மேனி தெளிந்தடைந்தோர் சேர்ந்தமைந்த
வாசாம கோசரமே மற்றெவைக்கு - நீசான்றாய்
நின்றா யடியேற்கு நீயளித்த கண்ணதனா
லொன்றாகப் பார்த்தளவி லுன்னையலா - தின்றி
யிருந்த தினியடியே னேதாமென் றென்று
திருந்து புகழுன்னைச் செய்வேன் - பொருந்தவுனை
யாதி யிமையோர்க ளவ்வுலகின் றிவ்வுலகிற்
போத முனஞ்செய்த புண்ணியத்தா - னாதன்
றரணி மிசையதனிற் றாளடைந்தார் சன்ம
மரண மறவருள வந்து - கரணங்கட்
கெட்டா வொளியை யிதுவென்று கண்காணா
மட்டாக்கு மென்று வரநினைந்து - கிட்டாராய்
நன்மையான் மிக்கவர்க ணின்றுணங்க நாடரிய
தன்மையான் றன்னைத் * தரவென்னக்-கெண்மையாற்
றன்னா லவத்தை பலவாகத் தான்பாவித்
தென்னா லனைத்து மிலவாக்கித் - தன்னாகத்
தன்னாலே யென்னைத் தனதுருவே தானாக்கி

---

* தரவெனக்கென்பது-தரவென்னக்கென வொற்றில்வழி யொற்றை யுண்டாக்கியது.

யென்றாலே தற்றுதித்த வென்றானை - முன்னான
வென்னரசனென்னப்பனெம்பெருமானென்றென்று
கின்னரியபொன்னடிக்கே நின்றிறைஞ்சி - யுன்னரிய
விசனை யெந்தையே யாவர்க்குங் காண்பரிய
தேசனை யென்றென்று செப்புவார் - நேசமொடுன்
பாதம் பணிவார் பரம்பரனே யென்றிசைப்பார்
வாதக்கட் கெட்டாத வாழ்வென்பார் - போதத்தா
லாய்தற் கரிய வறிவென்பா ரன்னவலங்
காய்தற்குத் தோன்றுங் கனலென்பார் - மாய்தற்கே
வல்லிலனே மாளா வகைகாக்க மண்ணில்வரு
நல்லோனே யென்று நலங்கிளப்பார் - பல்லுயிர்க்குங்
கோன்றானே யென்பார் குருபரனாய் வீடருளுஞ்
சான்றோனே யென்று சதுராழ்வார் - தோன்றுபெருஞ்
சோதியே யென்பார் சுரூபானந் தாவென்பா
ராதியே யென்பா ரகமகிழ்வார் - நீதியழிந்
தார்ப்பா ராற்றுவா ராவிப்பார் கோலத்தைப்
பார்ப்பார் மலர்ப்பாதம் பற்றுவார் - வேர்ப்பார்
விழுவார் தொழுதெழுவார் விம்முவார் விம்மி
யழுவா ரதிசயிப்பா ராவார் - வழுவாம
லெப்படிநீ யெப்பிறப்பு மாளி லெழில்வீடாஞ்
*செப்பதமுந்தி தென்று செப்புவா - ரெப்பொழுதும்
போற்றுவார் நல்ல புகழ்மாலை கொண்டடிமே
லேற்றுவா ரென்செய்வே மென்றுரைப்பா - ராற்றே
முடையானே யென்பா ருரைமறப்பார் யார்க்கு
கிடையானே யென்று கிளப்பார் - கடையேனைத்

* செம்மென்பது, செப்பெனவிகாரமாயிற்று.

தொண்டாகக்கொண்டருளுந்தூயோனேநாயடியேன்
கண்டானேனென்று களித்திடுவார் - கொண்டுகொண்
டேத்துவார் கும்பிடுவா ரெந்தாய்நின் கோலத்தைப்
பார்த்துவாழ் வார்நின் பழவடியார் - நாத்தழும்பப்
போற்று மவருட் புலையேனை யும்வைத்துச்
‡சீர்த்ததிரு மேனித் திறங்காட்டிச் - சாற்றுமறை
நாடும் பரம்பொருளாய் நான்றெளிந்து பக்தியுடன்
பாடும் பரிசு பணித்தருளித் - தேடுகின்ற
விண்ணோர்கள் புண்ணியநீர் மெய்விரும் பாதென்னு
கண்ணீராமஞ்சனமேகாதலித்துப்-பண்ணாரும் [டைய
வேதமுதல்வெவ்வேறுபோற்றிசைத்த மெய்ம்மாலை
பாத மணியாதிப் பாரதனி - லாதமிலி
நாயேனை நீயாக்கி நானோதும் பாமாலை
யாயாம லாதரத்தோ டாங்கணிந்து - தேயமெலா
மாக்குந் திருப்போ னகமமுது செய்யாதென்
னாக்கு முயிரை யமுதாக்கி - நீக்கின்றி
நின்றா யிதுநினையே னெஞ்சுருகே னுள்ளழியே
னுன்றாள் பணியும் வகையுணரே - னென்றாகப்
பாரே னுனையடியேன் பாவியேன் வையமெலா
மானோனீ யாண்ட வருளுரையே - னூரூர்போய்ச்
சாற்றே னகமகிழேன் சம்பிரமத் துன்பாதம்
போற்றேன் புகழ்ந்து புகழ்ந்துரையே - னூற்றேனுன்
செய்யும் வகையறியேன் றீவினையேன்சேவடிசேர்ந்
துய்யும் வகையருளா யுத்தமனே - பொய்யன்றி

‡ சீர்த்தவென்பது, மூன்றாமெழுத்தினவெதுகை.

மெய்யேநான் செய்கின்ற விண்ணப்பங் கேட்டருளி
யையே யருள வதுவேண்டுக் - துய்யதிருப்
பாதந் தொழவென்கை பார்மிசைமேல் வந்தாண்ட
நாதன் றனைத்துதிக்க நாமனமுங் - கேதமறச்
சிந்திக்க வின்னருளைச் செய்யதிரு மேனியைக்கண்
பந்திக்க வென்புன் றலைபானே - வந்திக்க
வென்று முரைப்ப வொழிலடியார் யானதனி
லொன்றுமுரைக்க வுளத்தெண்ணேன் - பொன்றுங்
கடையெலாங் காய்பசியை யஞ்சுதலா னையேன்
விடயமே மெய்விரும்ப லுற்றேன்-கொடுவினையேன்
மாயவிட யத்தே மயங்கா வகையருள
றிய தெளிற்சமிக்கச் செய்தருளல் - காயந்தான்
வீய வருளல் விரும்படியார் சிந்தையகத்
தாய பெரும்பத்தி யாங்கருள - னீயருளிச்
செய்யா தொழிதியேற் றீவினையேன் போய்நரகுக்
கையா வொருவ னெனவமைவேன் - வையகத்தா
ருன்னடியே னேதேனு மானு லுனையிகழ்வா
ரென்னுடையதீநெஞ்சையாரறிவார்-பொன்னடிகள்
கூடும் பரிசு குறித்தருளி மற்றவைகொண்
டாடும் பரிசெனக்கு மன்பருளிக் - கோடுமனன்
போகுந் திறமருளிப் புண்ணியனே நின்னுருவே
யாகுந் திறனே யருள்.

ஆ கண்ணி- அஎ.

புகழ்ச்சிமாலை முற்றுப்பெற்றது.



சிவமயம்.

# சிவ சிவ சங்கீர்த்தனம்.

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

அளவி றந்தது வருள்சிவ சிவசிவ
அகநி றைந்தது வடியிணை சிவசிவ
வுளமி றந்துயி ருணர்வொடு பரமற
வொளிரு கின்றது சிவசிவ சிவசிவ
களவு துன்றிய கனகலெ னுளநிறை
கழல்கொ ளன்பது கரையிலை சிவசிவ
தெளிவி னன்குறு தெளிதரு மனுபவ
திதிதி கழ்ந்தது சிவசிவ சிவசிவ. (க)

உபநி டங்களு மூவமையில் கலைகளு
மொருமை யிங்குற வறைதரு மொருபொரு
ளபய நன்குற வருளிட வுருவுகொ
ட்டுந டந்தது சிவசிவ சிவசிவ
வுபய வின்பமு மூவகையு மொழிவற
வொளிரு கின்றது சிவசிவ சிவசிவ
நியம தொன்றற நிகழனு பவதிதி
நிகரி றந்தது சிவசிவ சிவசிவ (உ)

வகையி றந்தது சிவசிவ சிவசிவ
மனமி றந்தது சிவசிவ சிவசிவ
வகம தொன்றிய வனுபவ திதியமிர்
தளவி றந்தது சிவசிவ சிவசிவ

தருவ தன்றுள வடியவர் திரளொடு
சலனே வஞ்சனை யெனையுமோர் பொருளென
விகமெ ழுந்தரு ளிடலது கருணையி
னெலையி றந்தது சிவசிவ சிவசிவ. (௩)

ஒளிரு நன்கழ றுதிசெய வரியந
லுபநி டங்களு மொருவிர கறிகில
துளப னன்குறு மயன்முத லிமையவர்
* தொடர்வு மஞ்சுவர் சிவசிவ சிவசிவ
யளிய தன்கழ லெளிதினி லளவறு
மதிச யங்கொடு துதிசெய வெனையருள்
வளரி னேங்கென துளமுக விறைகழல்
வருசு தந்தர வலிசிவ சிவசிவ. (௪)

அளவை கொண்டுந விறைகழ லடைதர
வலம ருங்கல ருளவலி சிவசிவ
வளமில் வன்கலு மிவருள மதில்வசம்
வருதல் சங்கைய திலைசிவ சிவசிவ
வளர வன்பது விரகழி யடியவர்
மதியி லங்கிடு மிறைகழல் சிவசிவ
களவ நெஞ்சுடை யெனையுந லடிமைகொள்
கருணை யங்கடல் சிவசிவ சிவசிவ. (௫)

உருகு நெஞ்சுடன் மயிர்புள கிதம்வர
வுரைத ளர்ந்தழு துவகைசெ யடியவர்
பருகு மின்பம திறைகழல் சிவசிவ
பகலொ டிங்கிர வதுமிலை சிவசிவ

---

* தொடரவுமென்பது - தொடர்வுமென இடைக்குறை விகாரமாயிற்று.

திருகு வன்புறு மெனதுள மிதுநிகழ்
திருவு ளஞ்செய்து செறிவிட மிதுவென
வருத லென்செய்த படிசிவ சிவசிவ
வளமை யென்புகல் வதுசிவ சிவசிவ. (௬)

நடலை கொண்டிர வொடுபக லறமிக
நடுந டுங்கிடு மெனதுள மதுதனை
முடலை வன்பிணை வுடலழி பொருளுயிர்
முழுதை யுங்கொடு சிவசிவ சிவசிவ
கடலை யின்பந லமிழ்தினை யெனதுறு
கரத லந்திகழ் மணியென வருளிய
படியி தென்செய்த படிசிவ சிவசிவ
பரம பண்டித னருள்சிவ சிவசிவ. (௭)

ஒருக ணந்துய ரறும்வகை யதுவற
வுகளும் வன்பவ வுததியின் மடிதரு
மிருக ணின்றிய வுறுசெவி டொயுமி
விழிசெய் வன்பிணை வெனையுமொர் பொருளென
வருத ருந்திரு வருள்சிவ சிவசிவ
வடிவு கொண்டவ லபமிது சிவசிவ
* வருள்க ணன்றியொர் பொருளிலை சிவசிவ
வமல னென்செய்த படிசிவ சிவசிவ. (௮)

உளம தொன்றிய வொருநிதி சிவசிவ
வுடனி கழ்ந்திடு மொளியது சிவசிவ
வளவி றந்தந லமிழ்தது சிவசிவ
வகில மின்றிய வருள்சிவ சிவசிவ

* அருள்கண் வினைத்தொகை.

வளம்வி ளம்பிட விரகிலே சிவசிவ
  வனமை தோன்றிடும் வகையிலே சிவசிவ
வெளிதி கழ்ந்தில கியதுதி சிவசிவ
  விகிர்த னென்செய்த படிசிவ சிவசிவ. (௯)

கருணை யம்புய முகமலர் சிவசிவ
  கருணை யங்கட் டிருவிழி சிவசிவ
வருணை யந்திடு மடியிணை சிவசிவ
  வழகு துன்றிய வடிவது சிவசிவ
விருணை யந்திடு மிடருறு பிறவியை
  யெறியு மெந்தைதன் மறமது சிவசிவ
திருந டன்றனை தருள்சிவ சிவசிவ
  சிவதி கழ்ந்தது சிவசிவ சிவசிவ. (௧0)

சிவசிவசங்கீர்த்தன முற்றுப்பெற்றது.

---

உ

சிவமயம்.

# ஸ்வரூபானந்தசுவாமிகள்

## துவாதசநாம சங்கீர்த்தனம்.

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

பேச வாதிமறை நாலு மோர்விரகு
  பேசி லாமைநனி பேசு பாதநம
கூச வானவர்கள் கூற யானுனடி
  கூறு மாறுனருள் கூரு கோலநம

தாச வாபரண மார மாலைதரு
சோபை மாதருட ஞய்தில் பாதவனை
கேச வாதியென வேச வாய்மையருள்
கேச வாயநம கேச வாயநம. (க)

வேறு.

ஆராய வேதமுடி வாஞத பாதநம
வாசாபி சாசமற வேயாஞ பாதநம
சீராய வானவர்க டேவாதி தேவநம
தேஞரு பாதமலர் சீராக வோதுதொறு
நீராய வாணவனை நேர்காணு பாதநம
நீதான தாகுமென நேரோது மாசில்பொரு
ணராய ணயபத மாநாட வோதிநம
நாராய ணயநம நாராய ணயநம. (உ)

வேறு.

வாத வாதரறி யாத பாதநம
மாகர் நாடரிய வேக பாதநம
வோது வாரறிய வேத நாலுமன
மோர்வு ருதநென வோது பாதநம
சீத வாதவழல் சேரு மாதவர்கள்
சேரு மாறுனடி தேரு மாறருளி
மாத வாவிலழி வேனை யாளுநம
மாத வாயநம மாத வாயநம. (ங)

வேறு.

தாரம் போதுபொரு டானென் றோதிநம
தாரம் பாலர்பலர் சார்பென் றோதிநம
வீரம் போதுதலை மீதந் தாளுநம
வேகம் போதிலெரி மாகங் காலவணி

பாஞ்ச பவுதிகமாம் பரிணாம வுபாதிக்கே
மாஞ்சேது மறியாதே மயல்கொண்டு திரிந்தெங்கு
மோஞ்சேனைப் பெருஞ்சோதி யுணர்வேயென் றுணா
வாஞ்சேயா னந்தமா மவனேநா னேனே. [ர்த்திட

கற்பனை தவமென்று கலைவிசு மாந்தர்த
மூற்பனக் குழியிலே யுழைத்துணர் விலியேனை
நிற்பன திரிவன நீயேகா ணெனச்சொன்ன
வற்புதங் கண்டபி னவனேநா னேனே. (ரு)

தோன்றிய வுடலுக்குந் தூரகமா மனத்துக்குஞ்
சான்றாகிச் சலியாதே நின்றதற் சுரூபத்தை
யூன்றவென் மனத்திடை யுத்தம னுரைத்தபின்
ஞான்றேசஞ் சலமின்றி யவனேநா னேனே. (சா)

செறிவான வடிவினைச் சிபுரு டோத்தம
னெறியான மறையாலே நேதிநேதி யென்றுபின்
பிறியாத பேரின்பப் பிரமமே நீயென்றென்
னறியாமை தவிர்த்தபி னவனேநா னேனே. (எ)

பண்டைநான் முகனூரும் பாந்தநல்லுலகமுங்
கண்டவை நரகென்று கழித்தவர்க் கருள்செய்தான்
விண்டலர் பொழில்சூழும் வீரையந் தணனுய்வந்
தண்டமுநீ யென்ன வவனேநா னேனே. (அ)

ஓராமை யேமூல மூலகுக்கென் றுணராதே
பேராசை யுள்புக்குப் பிரமித்துத் திரிவேனை
வாராயென் றருள்செய்து மறைசொன்ன பிரமமு
மாராயி னீயென்ன வவனேநா னேனே. (கூ)

அடியொடு முடிவினை யாராயி னிலையாகுங்
குடியொடு பதிகுலங் கோத்திர சூத்திரச்
செடிவினை யறுத்திட்ட சீபுரு டோத்தம
னடியிணை சேர்ந்தபின் னவனேநா னேனே. (கய)

போதுக்கு மொளியான பூமநற் சோதிதன்
பாதத்தேபணிமாறத்தொடுத்தசொற்றொடைபத்துங்
கோதற்ற மனத்தார்கள் குருபர னருளாலே
வாதற்ற பிரமமே வடிவாகி யிருப்பாரே. (கக)

அவனேநான் முற்றுப்பெற்றது.

---

௬௬ - வது

## அவித்தியாப்பிரலாபம்.

எண்சீர்க்கழிநெடிலடியால்வந்த ஆசிரியவிருத்தம்.

அறிவென்றே ராண்மகனு ளளவையறி யாதே [ந்தே
யவிச்சையெனும்பேதையேனுமவர்க்குமுன்னம்புகு
நெறிநின்று நெடுநாளெல்லா மென்னோடே நல்கி
நேயமெனும் விலக்கமுமாய் நின்றதற்குப் பின்பு
பொறியைந்தும் புலனைந்தும் பூமிமுத லைந்தும்
புந்திமன மாதிநாலும் புரியும்வாயு வைந்து
மெழுகின்ற விருபத்து நால்வரையும் பெற்றே [டே.
னென்னைவிடாவினையாளோடேபோனார்காணுமாண்

பொய்யான வுறவாலே புத்திரரு முண்டாய்ப்
பூமிதனி லென்னைப் புறப்படவே புகுந்தேன்

மெய்யான வுறவாலே மிக்கவளை விரும்பி
வீடுகெட்டு விளைவுகெட்டு வேற்றுடம்பே யானார்
சையோவிவ்வார்த்தைதனைச் சாற்றலாவதொன்றோ
தம்பாவ மனைத்தினையுந் தள்ளிவிட்ட தன்மை
யையோவிவ் வாண்மகனா ரவளைவிடா ராண்டே
யவிச்சைகுல நசித்தாலன்றி யவளைவிடா ராண்டே.

என்னைமணம்புணர்ந்தநாளே யிரட்டைவளையிட்டா
னேகனா யிருந்தவனே யனேகனுமிங் கானா
னன்னைசொல்லை மறுப்பானோ ராங்காரன் பிறந்தா
னந்தரமே யவர்க்குநல்ல வாசையையும் பெற்றேன்
பின்னைவிச்சைபுகுந்ததற்பின்பேர்த்திடவுந்தவிர்ந்தான்
பேதையேனுமிவர்க்குச்செய்த பிழைகண்டிலேனிதன்முன்
முன்னமிவ னெனக்குச்சால நல்லர்கிட ராண்டே
முகமாய மிடுவதன்மு னல்லர்கிட ராண்டே. (ரு)

சாந்தியொடு தாந்தியெனும் பாங்கியர்கள் சூழத்
தற்பரமா மறிவினொடே சமாதியிலே புகுந்தான்
பேர்ந்திடுதல்பறைந்திடுதல் பிரிந்தொருகாற்பாரான்
பிச்சியெனப் பிதற்றவிட்டுப் பேசாதே யிருப்பன்
றேந்திரியேயமையாதோ செகத்தினுள்ளீரெனக்குச்
சிலவரோடே யோரஞ்செய்து சீவிப்பதிற் காட்டி
லோர்ந்திடி லிங்குரைக்கலாவதொன் றுமில்லையாண்டே
யோமென்னும்பெருந்தீயில் வீழ்வதல்லாலாண்டே.

அருவாகி யிருந்தவருக் கென்னுடைய யுடைவா
லகிலமெல்லாம் படைத்தளிக்கு மாண்மைதனைக்கொடுத்தே
னொருவராலு முடியாத வுதவிதனைச் செய்தே
னொருநாளென் குடிலகத்தி னடந்தாலோடிப் போவ

ரிருவர்புக்கார்க்கிதற்குமுன்ன மிவைகண்டதுமில்லை
யென்னுடையபொறையினாலே யிதுநாளிங்ஙனடந்தேன்
புருடரிவராகையாலே பொறுத்தேன்காணுமாண்டே
பூண்முலையாரிவைகள்செயப்பொறுப்பரோதானுண்டே.
எங்குமெங்கு மிவர்க்குநல்ல வின்னமிழ்தாயிருப்பே
னிகலோக பரலோக மென்னதல்லா தில்லை
யங்கங்கே வற்றையுண்டிட் டவளோடே யிருப்ப
ராண்மகனார் செய்யுங்குண மாற்றலாவ தொன்றோ
கொங்கைநல்லா ளிடுமருந்தாற் குணமிலியுமானான்
கொச்சையேனு மிச்சித்தக்காற் கூடலாவதுண்டோ
வங்கணமொன்குடில்வாயிலயர்த்தார்காணுமாண்டே
யவர்க்கிளையா ளந்தரங்க மானாள்காணு மாண்டே.௬
அத்தலைக்கு மித்தலைக்கு மொத்திருக்கச் செய்தே
யாண்மகனார்க்கொருதவசி யறிவுசொலப்புகுந்தா
னித்தலையி லுறவறுத்தா னிளையவளைக் கொண்டே
யிதுவுமென்றன்விதிவசமோவென்றிருந்தேன்சிலநா
ளத்தலையி லுறவினையு மப்படியே யறுத்தா
னுண்டிசெய்தவழகுதன்னை யார்க்குச்சொல்லுவேனான்
றொத்தறுத்துச்சோதிவடி வாக்குவாரோபெண்ணே
சோதிக்குளே நாமும்புகத் துரியமில்லைகாணே.(எ)
சாக்கியாகி யவரங்ஙன் சலியாதே யிருக்கச்
சகமனைத்துஞ்சந்நிதிக்கேசாய்ச்சுகொடேபோந்தேன்
பாக்கியமில் லாமையாலே பயல்களையும் பாரான்
பசித்தாலும் பயிக்கம்பண்ணப் பார்த்துக்கொடே யிருப்பன்
வாக்கினுக்கு மனத்தினுக்கு மெட்டாத நிலத்தே
மறையவளைக்கொடுபுக்கே வைச்சுக்கொடேயிருப்ப
னுக்கினாரே யழிப்பாரானாற் றடுக்கலாமோவாண்டே
யடையக்குலநசிப்பதிங்ங னறிந்தோமேயாண்டே.அ

அன்றிவன் வசத்திலுெடு சத்துமல வாகி
யாண்மகனார் வெறுத்தவன்றே யகிருபதி யானே
னின்றெனக்குச் சனித்தனவு மிப்படியே யானு
லேந்திழையீ ரென்சொலுவே னிந்தக்கேடு தனக்கு
வொன்றிடினுலகு தனிலொருத்தியைப்போலிருப்ப
னேருபாயங் காணேனு னுணர்வுபுக்க பின்னே
யென்றுமிளை யவளைப்பார்த் திடுவர்காணு மாண்டே
யென்னைக்கடைக்கண்ணாலும்பாரார்காணுமாண்டே.

அச்சட்டையா லன்னமேறி யகிலமாக வென்றிட்
டன்புடையகுணத்தினாலே யகிலமெலாம்படைத்தா
னுச்சட்டையாற் புள்ளையேறி யுலகமெலாங் காக்கு
மொளியுடைய குணத்தினாலே யுவமையிலி யானுன்
மச்சட்டையா லெருத்தையேறி யுலகமெலா மாள
மாயக்குணந் தானான வள்ளலெனைப் பாரா [ண்டே
னெச்சட்டையாலுணர்வுதோன்றி யுண்மையானோரா
யோமுமிட்டுத்துரியமாக வுணர்ந்தார்காணுமாண்டே.

அவித்தியாப்பிரலாப முற்றுப்பெற்றது.

---

கஎ - வது

## * பாண்டியுரைவாரம்.

குறள்வெண்செந்துறை.

ஏற்றப்பானைபோலிவ்வுடலை, யென்றுமென்றுநீரி
ற்றோய்த்தக்காலும், பேர்த்துப்பேர்த்துமிது வூத்தை
யன்றோ, பேதமறுத்திடவற்றோ சொல்லீர். (க)

* பாண்டியுரைவாரமென்பது-பாண்டித்தியவுரையாம்.

அல்லலுடலைக்கழித்து, அறிவேவடிவென் றுணர்ந்திருப்பார்க்குச், சொல்லக்கடவதொன் றுண்டோ, சுருதிகடேற்றி யளவிறந் தத்தை. (உ)

கானலை நீரென் றுணர்ந்து, கரையுந்திரையு நுரையுங்கண்டாற்போற், றனல்லாவுனைத்தாணுக்கிச், சாத்திர கோத்திரஞ் சாற்றுகின்றனரோ. (ங)

புத்திவிகற்பத்தைவிட்டுப், போதம்வடிவென் றுணர்ந்திருப்பார்க்கு, மித்தனை கூத்தாடல் வேண்டுமோ, விரவியுதித்தா லிருள்போ மிடத்து. (ச)

பரிதியொருவ னுதிக்கப், பலகோடி யண்டங்கள் பேதமானாற்போற், சுருதிமுடிவி னுதிக்கச், சொல்லும்பொருளுந் துலங்கிடுங்காணே. (ரு)

பாத்திரபேதத்தினாலே, பலகோடி யிரவிகள்பேதமானாற்போ, னேத்திரமான பிரம, நிகரிற்பிரபஞ்சமுமாயுதித்தானே. (சா)

மதியைக்குறிப்ப திலக்காய், மாமரத் துச்சியைக் காட்டினாற்போற், பதியைக்குறிப்ப திலக்காய்ப், பஞ்சகோசச்சட்டை சாத்தினரோ. (எ)

செகத்தெங்கு நிறைந்தவச் சிவனார்தம்மைச், சிந்தையிலன்றித் தெளிவுறார்காண், முகத்தைமுகத்தாலேகாணலாமோ, முன்கையிற்கண்ணாடிதாமொழிய.

ஊனிலேயொன்பதுவாசல்விட்டங்,கொருவனைக் காவலிருத்திவைத்தவ்,வூனிலொருவனும் போனவாறே, யொன்பது வாசலு நாய்புகுங் காணே. (கூ)

ஓங்குமுடியைத் தலையில்வைக்க, வுலகமெல்லாம ரசாளு மாப்போ, லாங்காரந் தனையறிவோடேகூட்ட, வகிலமு நாமா யிருக்கலாமே. (க0)

நெஞ்சிலேகட்டை யடுக்கவிட்டு, நீட்டிநிமிர்ந்து கிடப்பதன்முன், னஞ்சையுமுள்ளே யடக்கிக்கொண்டே, யானந்தமாயறி வாகவல் லீரே. (கக)

அம்மையு மப்பனுங் கண்டிருக்க, வந்தக னுருயிர் கொள்வதன் முன்ன, மும்மையுமுனையும் வேறதாக, வுள்ள பொழுதே யுணரவல்லீரோ. (கஉ)

மக்களுங்கத்த மனைவிகத்த, மாய வுடலெரி கொள்வதன் முன்ன, நிட்களமான வறிவுதன்னை, நும்வடிவாக நினையவல்லீரோ. (கங)

இருவினைப்பாசங் கழுத்தினிலிட், டேற விறங்க விழுப்பதன் முன்னங், குருவினைச் சென்று பணிவீராகிற், கோதி லறிவோடே கூடலாமே. (கச)

போத வடிவுதனைமறந்து, பூமிக்கேவந்து பிறந்தவாறே, தாதா தவசியென் றேசிச், சங்கேதித் துத்தம் வடிவிழந்தாரே. (கரு)

தன்மயமான வுணர்வயர்த்துத், தரணியில் வந்து பிறந்தவாறே, யென்மகனென் றெடுத்துக்கொள்ள, யானுன் மகனென் றிசைந்திருந்தாரோ. (கசு)

தளையுமிரண்டுளதண்டொன்றத்தைத், தாமேயிடுவாருந் தாங்குவாருங்,களையும்படியறி யாமையாலே, காவித்திருந்தவா கண்டுகொள்ளீரோ. (கஎ)

வாறுதிபூதங்க டோற்றுகைக்கும், வான்கருத்தும் புலன் ஞேற்றுகைக்கு, மூறுதிபேதங்க டோற்றுகை க்கு, மூண்மையு மாயுணர் வாயிருந்தானே. (௧அ)

போது புலர்ந்து புகுந்தனையும், புத்தியை யெங் கேனும் போகவிட்டுத், தூதுவர்வந்து புகுந்தவாறே, துடைகள் பறக்கத் தொடங்கி ஞரே. (௧௯)

கொத்து முதலியொருவ னுள்ளனவன், கொள்வ தும்இல்லைக் கொடுப்பது மில்லைப், பத்துக் கூலிபத்து ச் சேவகருமவன், பார்வையா லேபடை யாயினுரே.

கொல்லும் புலிபோ லுயிர்பருகுங், கூற்றத்தின் வாயிற் குறுகிடாதே, சொல்லுமனமு மிறந்துநின்ற, சோதிநா மென்று சுகிக்கவல்லீரே. (உ௧)

பாண்டியுரைவார முற்றுப்பெற்றது.



௯அ - வது

## பார்ப்பானும் பறைச்சியும்.

குறள்வெண்செந்துறை.

அன்னமயமீதுடம்பே யறிவானந்தபோதமேயெங்கு மென்னேபிராமணனீரேயேறப்போவென்குதிங்காளை.

சோதியாய்நின்றதிங்கொன்று சொல்லுமுடம்பிதுசோறு சாதியாய்நின்றதிங்கேது சாயப்போவென்குதிங்காளை. (உ)

பூண்டவுடம்பிதுபூதம் பரிபூரணமானதுபோத மாண்டேபிராமணனீரோ யகலப்போவென்குதிங்காளை. (௩)

சுக்கிலஞ்சோணிதமன்றித் தோற்றுங்குலமுண்டோசொல்லீ
ரெக்குலநல்லதென்றுதே யேறப்போவென்குதிங்காணா.(௪)

இறைச்சியெலும்புதோலன்றி யெனக்குமுனக்கும்வேறு
ண்டோ, பறைச்சிபோவென்றுண்டாய்பார்ப்பான்பண்டேநீ
பேய்கொண்டாயாதே. (௫)

இருவருமொருவழிபோகச்சேயேறப்பாராப்பார்ப்பானெ
னைவிலங்கென்று, னிருவர்விலங்கிலும்வழிவிலங்கா தென்
றேனெத்தாலென்றுனுமத்தாலென்றேன். (௬)

உடலுக்குடல் பொய்யல்லவொன்றே யுண்ணின்றசோதி
விலங்கவொன்றே, வடலைப்பிரமணனீரோ யகலப்போவெ
ன்குதிங்காணா. (௭)

பார்ப்பானும் பறைச்சியும் முற்றுப்பெற்றது.

---

௬௬ - வது

## பறைச்சியும் பறையனும்.

---

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

பரமான மதுவுண்டு பரவசனும்படி
பாதங்க டலைந்தா ராரோடா பறையா
வரமான குணமூன்று மழியவே யருள்செய்த
வானந்த நாடனென் றறியாயோ பறைச்சி. (௧)

மெய்ஞ்ஞான மதுவுண்டு மெய்ம்மறந் திருக்கவே
மேலான பதந்தந்தா ராரோடா பறையா
வஞ்ஞானமழியவே யறிவினை யருள்செய்த
வானந்த நாடனென் றறியாயோ பறைச்சி. (௨)

எண்ணிறந்த நரம்புகளு மிறைச்சிகளு முடைய
விந்திரியப் பொந்திரிய வழித்தாரார் பறையா
கண்ணெதிரே யெழுந்தருளிக்கலியுகத்தின்றெடுத்துக்
கரையேற விட்டாரென் றறியாயோ பறைச்சி. (ங)

ஏற்றத்தாழ் வின்றி வரம் பொன்றுங் காணாமே
யெங்கும் போதவெள்ள மாவானேன் பறையா
வாற்றைத் தலையிலே தேக்கினேன் காலிலே
யடைய வொதுக்கினேன் காணேடி பறைச்சி. (ச)

சோதிமந் திரமுண்டு சுகியாமே சுகிக்கின்ற
வாதிமந் திரந்தந்தா ராரோடா பறையா
வாதியந் தமுமில்லா வறிவானந் தத்தேவர்
பாதமென் றலைதந்த தறியாயோ பறைச்சி. (ரு)

தன்னைத்தா னறியாத சாதியை மிகவுண்ணத்
தாளிணை தலைமிசை தந்தாரார் பறையா
யன்னத்தால் வருங்கோச மறுவன் றென்றிடு
மானந்த நாடனென் றறியாயோ பறைச்சி. (சா)

கருமறை யும்படி திருமந் திரமுண்டு
களிக்கவே பதந்தந்தா ராரோடா பறையா
வருமறை முடிவிலு மறியவொண் ணாதிடு
மானந்த நாடனென் றறியாயோ பறைச்சி. (எ)

ஊனைக் கழித்துண்மை யாமந் திரமுண்ண
யுபதேசந் தந்தவ ராரோடா பறையா
வானைக் கருள்செய்ய வன்றுவந் துதவிய
வானந்த நாடனென் றறியாயோ பறைச்சி. (அ)

இருவினை யானது வேறறப் பார்த்துன்னை
யிப்பிறப் பறுத்தவ ராரோடா பறையா
சுருதிக டேடியு மறியவொண் ணாதவத்
துய்யநற் சோதியார் காணேடி பறைச்சி. (௯)

அன்றான வறிவுதந் தறியாமை தனைப்போக்கி
யகம்பிர்ம முனக்களித்தா ராரோடா பறையா
குன்றாத மெய்ஞ்ஞான நன்றாக வருள் செய்யுங்
கோதில்சுக வப்பனென் றறியாயோ பறைச்சி. (௧௰)

சாதிகுல பேதமறச் சங்கை யறத்தெரிந்து
சந்தான வுபதேசந் தந்தாரார் பறையா
நீதியினு ணர்வேயாய் நித்தசுத்த மாகிய
நின்மலனு மப்பனென் றறியாயோ பறைச்சி. (௧௧)

குன்றாத மெய்ஞ்ஞானங்கொணர்ந்துனக்கருள்செய்
கொன்றான வுண்மையையுரைத்தாரார் பறையா [திங்
சென்றார்தம் போதத்தைத் தெளிவுறக் கண்டிடி
லன்றாயு மவனென்றிட் டறியாயோ பறைச்சி. (௧௨)

பறைச்சியும் பறையனு முற்றுப்பெற்றது.



## ௧00 - வது சாற்றுபறை.



இரட்டைக்குறள் வெண்செந்துறை.

பொன்னையொழி யச் * சவடி காறையிலை யாற்போற்
புவனங்கள் பதினாலு மிருந்தபடி பார்க்கி
லென்னையொழி யப்புவன மேதுமிலை யென்றிட்
டிரவுபக லனவரத மறையுமேடா பறையை. (௧)

* சவடி இத்தேசத்தில் சவளியென வழங்குகின்றது.

ஆங்கார வன்னியறை யரசழியப் பொருதிட்
டவருடைய மைந்தனையு மறவச் சிறைவைத்து
வோங்கார வடிவான துண்மையதே யென்றிட்
டுலகுதொறு மோயாதே யறையுமேடா பறையை. உ
இயமமென நியமமென விரட்டைமதி லிட்டு
விதயபுண்ட ரீகமெனு மில்லதனுக் குள்ளே
யயனைமுத லமரரொலா மடிகள்பணிந் தேற்ற
வறிவுகிட ராசரசென் றறையுமேடா பறையை.(ங)
ஊனைவடி வாகவுண ரும்மதியை விட்டு
வுண்மையுண ரும்மதியை யுள்ளூறவே நிறுத்தி
ஞானவடி வானவனே நானவனே யென்று
நாடோறு நாடோறு மறையுமேடா பறையை. (ச)
ஏதுமலா வறிவதனுன் யான்மறையோ னென்றிட்
டெருதுபோ லேயாகா திகன்மதன்ம மெடுத்துப்
பேதமெனும் படுகுழியில் விழுந்துபல பிதற்றும்
பித்தனையு மறுத்தோமென் றலையுமேடா பறையை.
எடுப்பதொன்று மிடுவதொன்று மன்றுகிடீர் பிரம
மேழைச்சன மூழன்றறுக்கு மாயத்தானம்போலே
கொடுப்பதொன்றுங்கொள்வதொன்றுமன்றுகிடீர்பி
கோதிலறிவானதென்றறையுமேடா பறையை.[ரமங்
அறிவான வடிவுதனை யறியாமை மறைத்திட்
டகமனித னென்றிடுமவ் வவமானங்கழிய
நெறியான வறிவுதரு நின்மலனு ரருளா
னித்தசுத்த மானேமென் றறையுமேடா பறையை.

வானாதி பூதமெல்லா மாயையாலே வளர்த்து
வடிவுதொறு மறிவாகி வளர்வுகுறை வின்றித்
தானேயா யுலகனைத்துந் தன்னில்லே யில்லைத்
தான்சேரா னுலகமென்று சாற்றுமேடா பறையை.
பொய்யாய மாயையினைப் புவனமுழுதாக்கிப்
புத்தியெனு மந்திரிதனோடுபுவி யாள
மெய்யாய வறிவுகிட ராசாள்வ தென்று
வீதிதொறும் விளங்கிடவே யறையுமேடாபறையை.
புகழிலங்கு மறிவானும் பூமச்சோதி யருளாற்
புவனங்கள் பதினாலும் பொய்யெனவே யுணர்ந்து
துகளின்மறைத் தமிழ்மாலைபத்தினையுந் தொடுத்துத்
தோளின்மிகச் சாத்தினேமென்றறையு*மேடாபறையை.

சாற்றுபறை முற்றுப்பெற்றது.

---

## கய௧-வது திருவுந்தியார்.

---

கலித்தாழிசை.

அஞ்ஞான காரிய மனைத்தையு மறவிட்டு
விஞ்ஞான மானேமென் றுந்தீபற
வெளியாகி நின்றோமென் றுந்தீபற. (க)
முடியாத பிறவிகண் முடிந்திட மாயையைத்
துடியாம லறுத்தோமென் றுந்தீபற
துரிசற்று நின்றோமென் றுந்தீபற. (உ)
போதத்தை யுணராதே பொல்லாத மாயையாற்
பேதத்தை யுணர்ந்தோமென் றுந்தீபற
பேதமும் பிரமமென் றுந்தீபற. (ங)

---

* ஏடர்களென்பது ஏடாவென பன்மையொருமையாய் வந்த வழுவமைதி.

தோற்று மாயத் துவக்கையறுத்துத்
தூய்ய போதச் சுகத்தினை யுண்டு
காற்றி லாவிடங் கண்டிட் டிருந்தாற்
கற்ப னையின் கருத்தழி யாதோ. (௬)

வான ழிந்து மகானு மழிந்து பின்
மாயை தானு மழிந்து வழக்கற
நான ழிந்துபின் ஞானது வானு
ஞானெ னென்பதோர் நாசந்தா னுண்டோ. (௭)

சுருதி யந்தமாஞ் சுத்த சுகத்தைச்
சோம்பை விட்டுச் செவியாரக் கேட்டு
மிருதி யாற்றெளி வாக வுணர்ந்தான்
மீண்டுபோ தென்னும் வேதனை யுண்டோ. (௮)

எரியின் முன்னவ நீத மதுபோ
லெல்லா மேகபோ கத்தி லுருக்கிச்
சரிவி லாதசச் சித்தா யிருந்தாற்
றுமியா மென்னுந் தங்குத லுண்டோ. (௯)

போக்கி னோடு வரவு மிறந்து
பூரண போதம தாகிப் பொலிந்து
வாக்கி னோடு மனமு மிறந்தால்
வாசகஞ் செய்ய லாவதொன் றுண்டோ. (௧0)

அனுபவ மாலை யையி ரண்டையு
மத்தன் பூமனற் சோதிதாள் சாத்தி
யனு பவவழி மாள வுரைத்த
வொப்பி லாதார்க் கொருகுறை யுண்டோ. (௧௧)

அனுபவமாலை முற்றுப்பெற்றது.



சிவமயம்.

## ௧0௩ - வது அறிவு.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

போகாத மாயையைப் போக்கிட லாவதும்
புண்ணிய பாவம் புறத்திட லாவது
மாகா தழியா திருந்திட லாவது
மறிவே வடிவா யிருந்திடி னல்லவோ. (௧)

என்னிலே யாவையுங் கண்டிட லாவதும்
யாவையு மென்னையுங் கண்டிட லாவது
மன்னியங் கண்டிலோ மென்றிட லாவது
மறிவே வடிவா யிருந்திடி னல்லவோ. (௨)

மோகாதி யெல்லா முறிந்திட லாவது
முற்றுமுற் கன்மங்க ளற்றிட லாவது
மாகா தழியா திருந்திட லாவது
மறிவே வடிவா யிருந்திடி னல்லவோ. (௩)

இந்தப் பிறப்பினின் றேறிட லாவது
மேகாந்த மாகி யிருந்திட லாவது
மந்தக் கரண மறுத்திட லாவது
மறிவே வடிவா யிருந்திடி னல்லவோ. (௪)

நற்செய் தவங்களு மற்றிட லாவது
நானெனு மாங்கார நச்சற லாவது
மற்சனை யெல்லா மறவிட லாவது
மறிவே வடிவா யிருந்திடி னல்லவோ. (௫)

அறிவுமுற்றுப்பெற்றது.

சிவமயம்.

## கoச-வது * தச்சராண்டு.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

என்னை யறியா வறியாமை போயிட
வேகமா யின்ப மெனக்கே யருள்செய்து
பின்ன மில்லாத பிரமநீ யென்றிடப்
பேச்சற்ற மெய்ப்பொரு ளானோமே யப்பா. (க)

கண்ட கருக்குழி மாளும் படிக்குக்
கருணையி னூற்கலந் தாண்டு கொண்டு
பண்டை வடிவது நீயானு யென்றிட்டுப்
பார்க்கப் பரமா யிருந்தோமே யப்பா. (உ)

கருதும் பொருளிவை யெல்லா மெல்லாங்
கானலி னீரொன்று சொல்லிச் சொல்லி
யொருவ னுணர்த்த வுணர்ந்தங் குணர்ந்தவ்
வொப்பற்ற மெய்ப்பொரு ளானோமே யப்பா. (ங)

தப்பா மறைப்பொரு டன்னை முன்னைத்
தானே யெனக்குத் தலைவ னளித்திட
வொப்போத மில்லா வுணர்வேகா னனபின்
னென்றிய மெய்ப்பொரு ளானோமே யப்பா. (ச)

பேதப் பிணக்கற வெண்ணி யெண்ணிப்
போராத துன்பப் பிறவி யறுத்திடும்
போதப் பொருளே யுணர்த்த வுணர்த்தப்
பொய்யிலா மெய்ப்பொரு ளானோமே யப்பா. (ரு)

---

* தச்சராண்டென்பதோர் கூட்டம்.

தேடுந் தனமுந் திடமாம் பிராணனுங்
கூடு முட்டலுங் குருபர னூர்க்கென்று
பாடு மறையின் படிபரன் கைக்கொள்ள
நீடும் பரமாகி நின்றோமே யப்பா. (௬)

தோற்று முலகவை யெல்லாந்
தோற்ற திருக்குஞ் சுகமேவடி வென்னப்
பேற்று முறையுங் கடந்து நடந்த
பிரமமே நாமா யிருந்தோமே யப்பா. (௭)

அத்தி கிரியிலு மன்ப ரறிவிலு
மாதி யருளாளர் தாமா யிருக்கவே
யெத்திசைக் கேதெய்வ முண்டென்று சொல்லிடு
மேழையர் தங்காசு கொள்ளோமே யப்பா. (௮)

அண்ட மனைத்துமாய் நின்ற பரனூர்த
மாகம வாக்கியந் தன்னை யுணராதே
பிண்ட மதனையே நானென்று பேசிடும்
பேதையர் தங்காசு கொள்ளோமே யப்பா. (௯)

கூடும் பரனுங் குருபரன் பாதமே
நீடு மடியவர் நெஞ்சத்து ணின்றிடத்
தேடுந் தனமுஞ் செகமுந்தான் மெய்யென்று
நாடு மவர்காசு கொள்ளோமே யப்பா. (௧0)

தச்சராண்டு முற்றுப்பெற்றது.



உ

சிவமயம்.

# க௦௫-வது பாம்பாட்டு.

---

குறள்வெண்செந்துறை.

ஆதியு மந்தமு மேது மில்லா வறி
வானந்தத் தேவ ராணை யாணை
சோதியுட் சோதிநா மானோ மென்று
சுருதிகள் பாடநின் றாடாய் பாம்பே. (க)

சுருதியுங் கருதிடாச் சுகமேகா ணீயென்று
சொல்லாதே சொன்னவ ராணை யாணை
கருதிய வுலகினிற் கற்பனைக ளெல்லாங்
கானலி னீரென்றே யாடாய் பாம்பே. (உ)

ஆங்கார மோகங்க டாமே கழிய
வடியிணை சூட்டினா ராணை யாணை
யோங்காரத் துட்பொரு ளாகி நின்ற
வுண்மைநா மானோமென் றாடாய் பாம்பே. (உ)

நாரிய வொன்றும் வலையிற் பட்டு
நானென தென்னு நருவ றீர
வாரியன் வந்தடி வைத்த போதே
யானந்த மானோமென் றாடாய் பாம்பே. (௪)

மனமுத லான கரண மெல்லா
மாய வருள்செய்தா ராணை யாணை
நனவிலுங் கனவிலுஞ் சுழுத்தி யிலு
நானேதா னானேனென் றாடாய் பாம்பே. (௫)

கடையிற் சரக்கினைக் கண்டு நான்போய்க்
காதலித் தெங்குங் கழிந்தி டாதே
மடியிற் சரக்கினைக் காட்டித் தந்த
மாமறை பாடிநின் றாடாய் பாம்பே. (கூ)

ஒக்கலைப் பிள்ளை யுடனி ருக்க
யூரெங்குந் தேடி யுழலு வேனை
யக்கணம் பிள்ளையைக் காட்டித் தந்த
வாசானைப் பாடிநின் றாடாய் பாம்பே. (எ)

சந்திக டோறுங் குடைவி ரித்துத்
தப்புக்கை கொட்டும் பிடார னல்லேன்
புந்தியுள் ளேயுறப் பார்த்த போதே
போக்கிட மற்றேமென் றாடாய் பாம்பே. (அ)

கோசங்க ளென்னுங் குடமு றுட்டிக்
குலநல மென்னுங் கொடிய றுத்துப்
பாசங்க ளென்கின்ற பற்கள் வாங்கிப்
பார்ப்பறப் பார்த்தோமென் றாடாய் பாம்பே. (கூ)

அப்பத மிப்பத மென்றி ரண்டி
னைசங்கை தீர்த்தவ ரானை யானை
தற்பதந் தொம்பதந் தாம்பு றம்பாய்த்
தன்மய மானோமென் றாடாய் பாம்பே. (க0)

பிறவிக ளென்னும் பெருங்க டலைப்
பிறகிட்டுப் போந்தவ ரானை யானை
திறவிய தேசிகன் சேவடியைச்
சேராதே சேர்ந்தோமென் றாடாய் பாம்பே. (கக)

அஞ்சு முகமுடைப் பாம்பி னீரே
யாராயி னும்முக மொன்றே காணுந்
துஞ்சுவ தில்லாத் துரிய நாமே
தோன்றாதே தோன்றிநின் றாடாய் பாம்பே. (கஉ)

பாம்பாட்டு முற்றுப்பெற்றது.

---

## கOசா-வது நையாண்டி.

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

ஆரணந் தேடற் கரியா னொருபையல்
பேராமை காட்டிப் பிறவா தனசொன்னான். (க)
நாணா தனசொல்லி நாண மழித்தென்னைக்
காணாது காட்டிக் கழித்தானா னென்செய்வேன். (உ)
நில்லா வுபாதி நிலையேநீ யென்றிட்டுச்
சொல்லாது சொல்லித் துவக்கை யறுத்தானே. (ந)
முடிவு நடுவு முதலுமில் லாப்பைய
லடியை நினைவுற வானந்த மானேனே. (ச)
சுருதிக டேடியுந் தோன்றாத பையலார்
கருதிய நீயென்னக் காலாலே பாய்ந்தானே. (ரு)
வரையொன் றிலாப்பையல் வார்த்தையைக்கேட்டுநா
னுரையொன்றுங் காணாத வுன்மத்த னானேனே. (சா)
எட்டா நிலத்தே யிருப்பா னொருபையல்
கட்டின தெல்லாங் கழித்தானா னென்செய்வேன். எ
பேச்சு முரையும் பிறவு மறுத்தென்னைத்
தோய்ச்சுமொளியிலே தோய்ச்சாமெய்செய்தானே.

விதியாலே காட்டேறி விறகோட்டே போவேனைப்
புதியானோராண்பிள்ளை போகாய்வாராயென்றான்.௯
கரியாமுடம்போட்டே கடைகொள்ளப் போவேனைப்
பெரியானோராண்பிள்ளை பிறவாதெல்லாஞ் சொன்னான்.
விள்ளேன் விள்ளேனென்று வேண்டிற்றெல் லாஞ்சொல்லி
யுள்ளே கொடுபுக் குடம்பைக் கழித்தானே. (௧௧)
கருதி யிருக்கினுங் கண்ணுக்கெட் டாப்பையல்
சுருதி முடிவிலே தோன்றினா னென்செய்வேன்.௧௨
ஆரணந் தேடற் கரியா னொருபையல்
காரண நீயென்னக் காலாலே பாய்ந்தானே. (௧௩)
மருவ வடிவில்லான் மானமில் லாப்பைய
லொருவன் கிடைன்னை யுள்ள மழித்தானே. (௧௪)
முன்னில்லைப் பின்னில்லை மூலமில் லாப்பைய
லென்னில்லைத்தன்னில்லையென்றானென்செய்வேன்.
சோதித்துப் பார்க்கிலேன் சுருதிக டேற்றிலேன்
பேதிக்கப் போகாத பிரமமா மானேமே. (௧௬)
இட்டிடத் தூங்கிலெ னேதேனுஞ் செய்கிலே
னெட்டொன்று மில்லாத வுணர்வுமா மானேமே. ()
ஓட்டிலே பிச்சையேற் றுண்பா னொருபையல்
வீட்டிலுங் கொண்டுபோய் வெளியிலேவிட்டானே.
பண்டில்லை மேலில்லைப் பாரீரிப் பையலார்
பெண்டிரோ டென்றும் பிரியா வுணர்வென்னே. ()
கண்டதுங் கேட்டதுங் காணாத போதிலு
முண்டதுங்கொண்டதுமுனக்குண்டோவென்றானே.

பொறியுற் றிருக்கிலென் புலனைச் செயிக்கிலெ
னறிவைப் பிரியாத வானந்த மல்லலேனோ. (உக)

நெஞ்சிலே நெஞ்சிலே நிற்பா னொருபைய
லஞ்சு மறுத்தறி வாக்கினே னென்செய்வேன். (உஉ)

கருவை யறுக்கிலேன் கழலிணை சூட்டிலே
னுருவையில்லாப்பைய லுறக்க றவிர்த்தானே. (உங)

தன்னை யிகந்து தனியே யிருப்பானை
யென்னெனச் சென்றுநா னென்னை யிகந்தேனே. ()

நாட்டார்தாமென்செய்வார்நமனார்தாமென்செய்வார்
வீட்டார்தா மென்செய்வார் வீணே திரிவாரை. உரு

அஞ்சுவ தில்லை யடங்கு வதுமில்லைத்
தஞ்சமில் லாப்பைய றன்றேன்றி யானனே. (உசு)

உள்ளத்தி லுள்ளே யுதிப்பானொரு * பையல்
வள்ளலைக் கண்டுநான் வரவுபோக்கற்றேனே. (உஎ)

ஏதமில் லாப்பைய லென்னையுந் தானாகப்
போத வுணர்த்திப் புகலு மறுத்தானே. (உஅ)

காமே கலமாகக் கண்டிட மிரந்துண்டு
பரமே பரமாகப் பற்றறப் பெற்றேமே. (உகூ)

அடியின்றி முடிவின்றி நடுவு மின்றி
யாகாசந் தானின்றி யங்ஙனேயாய்
வடிவின்றி நின்றதோர் வடிவு தன்னை
மறைகளல் லோதேடி மயங்கு தின்னும். (ங0)

நையாண்டி முற்றுப்பெற்றது.

---

* பையல் - சிற்றாள்.

உ

சிவமயம்.

# ௧௦௭ - வது மனம்.

இரட்டைக் குறள்வெண்செந்துறை.

சேராய் மனமேநீ சிற்பரத்தோடே நஞ்சிவனை
யோராமையல்லதுணர்விற்பிறிதொன்றுங்கண்டிலேனே
சொல்லாய் மனமேநீ சொல்லாதிருப்பதென் சொல்லற்றோ
வெல்லாம் பிரமமாய்நின்றபி னேதென்று சொல்லுவேன்.
சுற்ற னினைத்தல் கருதுதல் செய்யாய் மனமேநீ
சுற்று மகத்துஞ் சுகங்கா ணினிப்பலசொல்லியென்.
பண்டுபோ லன்றிப் பதைப்பற்றிருந்தாய் மனமேநீ
கண்டதனைத்து மறிவாகக் காணாதே கண்டோநீ. (௪)
ஐயோ மனமேநீ யாராயமாட்டா திருப்பதென்
பொய்யோ முடிந்தது பூரணபோதமே யானோமே.
என்னே மனமேநீ யேவிற்றுச்செய்யா திருப்பதென்
முன்னே கருமத்தின் மூலவவிச்சை முடிந்ததோ.
கோத்தாமவித்தையின் கொத்தக்குலையாய் மனமேநீ
பார்த்தாலனைத்தும்பழுதையிற்பாம்பாய்முடிந்ததே.
அன்னையைமுன்ன மறிவாலறப்பறித் தாட்டினே
னென்னையும் பின்னையிலாமைநிலையிட்டாலென்செய்வேன்.
கரண மனைத்தையுங் கையொக்கப்பாராய் மனமேநீ
புரணமேயெங்கும்புலனுக்குப்போக்கிடங்கண்டிலேனே
போகாய்மனமேநீ போகாதிருப்பதென் போக்கற்றோ
வாகாவிவர்சொல்லும்வார்த்தையேயெங்குமறிவன்றோ
கலைகளனைத்தையுங் கற்கிலைகண்டாய் மனமேநீ
யுலைநீர்போல்வெந் தனக்குள்ளேநடா வொளியானேனே.

மனமுற்றுப்பெற்றது.



சிவமயம்.

# ௧0அ - வது செட்டியார்.

குறள்வெண்செந்துறை.

ஓரா திருபல வெண்கல, மொக்க நிறுத்திக் கொடுத்தே ஞன், சேர வொருபல மாக்கிஞர், செய்யும் படியெனிச் செட்டியார். (௧)

எட்டிடை யாலிட்ட தட்டியை, யெல்லோருங்காணக் கொடுத்தேஞன், றட்டி நிறுத்தாரிச் செட்டியார், தத்வமசி யென்ருர் செட்டியார். (௨)

வீடாயிருப்பது நாற்பல, வெண்கலத் தாலிட்ட தட்டியை, யோடாக மாற்றிஞர்செட்டியா, ரொருபலமாக்கிஞர் செட்டியார். (௩)

கடையி லிருப்பாருந் தாமேயாய்க், காணக்கொடுத்த கலமெல்லா, முடையநிறுத்தி தொருபல, மூண்மையி தென்ருரிச் செட்டியார். (௪)

என்று முடையாக் கலந்தன்னை, யெல்லாருங் காணக் கொடுத்தேஞ, னன்றே யுடைத்தாரிச் செட்டிடியா, ராரறிவா ரென்ருர் செட்டியார். (௫)

உண்டகலங்க ளனைத்தையு, மூராரறியக் கொடுத்தேஞன், கொண்டுநீ யாரென்ருர் செட்டியார், கூறுதுகூறிஞர் செட்டியார். (௬)

ஓட்டைக் கலத்தி லிட்விட, வுள்ளசோ றெல்லா மறவுண்டு, வீட்டி லிருப்பாரிச் செட்டியார், வியாபாரமுஞ்செய்யார் செட்டியார். (௭)

செட்டியார் முற்றுப்பெற்றது.

சிவமயம்.

## ௧0௬ - வது இம்பில்.

கலித்தாழிசை.

ஆதிப் பிரம மறியாமை தன்னாலே
பேதித்துத் தோன்றிற்றென் றிம்பிலடி.
பிறப்பிறப் பில்லையென் றிம்பிலடி. (௧)

வந்த பிறவியும் வானாதி பூதமு
மிந்திர சாலமென் றிம்பிலடி
யெனக்கழி வில்லையென் றிம்பிலடி. (௨)

ஏகமே யல்லா விரண்டில்லை யத்விதப்
போகமே யானேமென் றிம்பிலடி.
புலன்வழி கெட்டதென் றிம்பிலடி. (௩)

அண்டத்தை யெல்லா மறிவே படைத்தமை
பிண்டத்தே கெட்டோமென் றிம்பிலடி.
பேதமற் றில்லையென் றிம்பிலடி. (௪)

பூதங்களைந்தும் புலன்கள் பதினாலும்
பாதத்தே பாய்ந்ததென் றிம்பிலடி.
பரமே பரமாமென் றிம்பிலடி. (௫)

ஏறிட்ட சட்டை யிரண்டையு ஞானத்தாற்
கீறிக் களைந்தோமென் றிம்பிலடி
கிளைப்பதொன் றில்லையென் றிம்பிலடி. (௬)

மாங்கூ டுடுக்கிட மாநாகந் தீண்டிற்றென்
றேங்கா விறந்தானென் றிம்பிலடி
யெல்லா மிப்படியேயென் றிம்பிலடி. (௭)

ஆரியன் வந்திங் கடிதலை வைத்தபின்
பூரண மானதென் றிம்பிலடி
போக்குவா வில்லையென் றிம்பிலடி. (அ)

பன்னு மறையின் படியே பரனைத்
தன்னை யுணர்ந்தோமென் றிம்பிலடி
தத்துவந் தானேயென் றிம்பிலடி. (கூ)

இம்பில் முற்றுப்பெற்றது.



## கக௦-வது பந்து.

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

ஒன்றாகி நின்றபே ருணர்வே யுணர்ந்திட்
டோமென்னுங் கரத்தினாற் பந்தாடா நின்றேன்
பின்றாதே யென்னோடே பிழைப்பாயோ பந்தே
பேய்த்தேரி னீருண்ணப் போவாயோ பந்தே. (க)

பத்தியே வளர்கோலப் பட்டினை யுடுத்துப்
பழவினை சரிதையாற் பந்தாடா நின்றேன்
முத்தியே வடிவாகி நிற்பாயோ பந்தே
முட்பூவிற் றேனுண்ண முயல்வாயோ பந்தே. (உ)

வாகாதி தொங்கலை வாவலித் துடுத்து
மதனன்றன் வழிமாறப் பந்தாடா நின்றேன்
போகாதி யனைத்தையு மொழிவாயோ பந்தே
புரியி லரவாகிப் போவாயோ பந்தே. (ந)

சுருதிநன் முலைமாதர் தோழிமாராகச்
சொல்லொணா நிலத்திலே பந்தாடா நின்றேன்
றிருகின்மை யாலறி வாவாயோ பந்தே
தெளிவின்மை யாற்பிறந் திறப்பாயோ பந்தே. (ச)

உலகங்கள் பதினாலு மொருகாலா லடக்கி
யுணர்வேமுக் காலாகிப் பந்தாடா நின்றேன்
னலகில்லா வறிவுரு வாவாயோ பந்தே
யங்குமிங் கும்மாகி யலைவாயோ பந்தே. (௫)

தேசிக னாரடி சென்னிமேல் வைத்துத்
தேச காலங்கெடப் பந்தாடா நின்றேன்
வாசியில் லாவறி வாவாயோ பந்தே
மாயா மயமாகிப் போவாயோ பந்தே. (௬)

ஆறு முகமு மடையப் புதைத்திட்
டறிவே முகமாகிப் பந்தாடா நின்றேன்
வீறும் வெறுப்பு மறுவாயோ பந்தே
விதியா ரோவற்றொழில் செய்வாயோ பந்தே. (௭)

குணக்குங் குடக்கொடு தெற்கும் வடக்குங்
கோணங் களுமாகிப் பந்தாடா நின்றே
னணுக்கவொண் ணாவறி வாவாயோ பந்தே
யங்குமிங் கும்மா யலைவாயோ பந்தே. (௮)

கோசமென் னுங்கழற் கற்றைக் குலையக்
குருபரன் றாள்சூடிப் பந்தாடா நின்றேன்
பாச மறுத்தறி வாவாயோ பந்தே
பார்க்கி லில்லாப்பவ மாவாயோ பந்தே. (௯)

எல்லாம் பிரமமே யென்னு மொழியாலே
யானேயா னாகப் பந்தாடா நின்றே
னில்லாத வாழ்வை நினைவாயோ பந்தே
நித்த சுத்தம்முத்த மாவாயோ பந்தே. (௧0)

பந்து முற்றுப்பெற்றது.

---

சிவமயம்.

கககக - வது

# ஞானகாண்டம் - கன்மகாண்டம்.

கலிவிருத்தம்.

அந்தண னாகிவந்தா றங்கமறை யோதி
மந்தணங்கள் பேசி மடவாளை மணஞ்செய்து
செந்தழ லில்விட்டுத் தேவரோ டிருக்கின்ற
நந்தறி வாருண்டோ ஞானகாண் டத்தில். (க)

அருக்கனூர் கலங்கடோறு மநேகரா யிருந்தாற்போ
லொருத்தனை யுணராமையாலுல கேழுமாய்ப்
பொருத்தறவுடல்கடோறும்புரைவறப்புகுந்துநின்ற
கருத்தனை யறிவாருண்டோ கன்மகாண்டத்தில். (உ)

தேடிய பொருள்கொண்டு தேவாரம் பலசெய்து
கூடிய செல்வத்தைக் குறைவற விருந்துண்டு
நீடிய வுலகங்க ளனைத்தினு நெடுங்கால
நாடிட விருப்பாருண்டோ ஞானகாண் டத்தில். (௩)

அளவறுத் துலகத்தை யநித்தியமென் றறிந்தபி
னிளமை கெடுவதன்மு னியமநிய மஞ்செய்து
தளவறவானந்த வனுபோக வடிவினைக்
களவறக் கண்டாருண்டோ கன்மகாண் டத்தில். (௪)

அரசரா யவனிதன்னி லடிதொழ வரசாண்
டிரைசெய வுலகினி லொப்பாருண் டோவென்னப்
பெருசறிவ ராகிப் பிறந்துள்ள பெருமையு
நரர்சுரர் பசுவுமுண்டோ ஞானகாண் டத்தில். (௫)

பெரியதே சுகமென வருமறை பேசிட
வரியதோ ரனுபவ மகத்திலே யுதித்தபின்
மருவிய பிறவியு மாயையு மாய்வுறக்
கருவினைக் கழித்தாருண்டோ கன்மகாண் டத்தில்.கூ
வாடாத மலர்சாந்து மதிமுக மடந்தையர்
தேடாத வடிசிலுஞ் சென்றிடச் சேவிப்ப
வீடாசா மரம்வீச வெண்கொற்றக் குடையிட்
நாடாளப் பிறந்தாருண்டோ ஞானகாண்டத்தில்.(எ)
கோணாத மனத்தராய்க் குருபர னருளாலே
நாணாத நான்மறைத் தலையினை நிலைகண்டு
பூணாதே யுலகினைப் புரைவறப் புகுந்திட்டுக்
காணாது கண்டாருண்டோ கன்மகாண் டத்தில்.(அ)
வானினு மண்ணினு மற்றுள வுலகினுந்
தேனினு மினியபோ கங்களைத் தெரிந்துண்டு
மேனில நிலையென்றும் விதிவேதத் துளதென்று
நானென்று மிருப்பாருண்டோ ஞானகாண் டத்தில்.
செய்தவப் பயனெல்லாஞ் சிறிதென்று சிலதள்ளி
மொய்தவத் தினாலே முத்திக்கே முயன்றிட்டு
மெய்தவத் தினைக்கண்டு வேதாந்தத் திருப்பார்கள்
கைதவ மல்லாதுண்டோ கன்மகாண்டத்தில். (க0)
கொள்ளையா குதியினை யமரர்க்குக் கொடுக்கைக்கே
யெள்ளளித் தெசமானு மொட்டுப் பெயரோடே
சள்ளென வள்ளெனச் சாற்றிய சடங்கிலே
நள்ளென வல்லாருண்டோ ஞானகாண் டத்தில். ()

ஆரணந் துதிசெய்யு மறிவினை யகமென்று
பூரண மாகியைம் புலன்களும் புறத்திட்டு
மாரண மும்மற்றைப் பிறவியு மறுத்திடுங்
காரணங் கண்டாருண்டோ கன்மகாண்டத்தில். (௧உ)

ஞானகாண்டங் கன்மகாண்ட முற்றுப்பெற்றது.

## ௧௧உ - வது பாங்கிக்குறைத்தல்.

குறள்வெண்டாழிசை.

மானே பட்டது சற்றே மானே யட்டது சற்றே
மானிற் பெரியதோ ராண்பிள்ளை வந்து
தானே நானென்று போனவன்
றன்னையுங் கண்டிலே னென்னையுங் காணேன். (௧)

பெண்ணே பட்டது சற்றே பெண்ணே பட்டது சற்றே
பென்னம் பெரியதோ ராண்பிள்ளை வந்து
கண்ணே கண்ணென்று போனவந்தக்
கண்ணையுங் கண்டிலே னென்னையுங் காணேன். (உ)

பாங்கிக்குறைத்தல் முற்றுப்பெற்றது.

## ௧௧௩ - வது தச்சாண்டி.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

உன்ற னிடத்திலு மூரா ரிடத்திலு
முலகம் பதினாலு முள்ள வொருபொரு
டன்றனை யீதென்று காட்டித் தந்தார்க்குச்
சமைத்துக்கழலிட்ட தச்சாண்டி யன்றோ. (௧)

ஒப்பாரி தன்னு ளுயிரோ பிரமமென்
றோதியே போகாமே யோர்மாத் திரைக்குள்ளே
தப்பாமே யிங்ங னிருமென் றிருத்தச்
சமைத்துக் கழலிட்ட தச்சாண்டி யன்றோ. (உ)

தச்சாண்டி முற்றுப்பெற்றது.

---

## ௧௧௪ - வது அப்பா.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

ஆத்ம சுரூபமே மெய்த்தெய்வ மென்னு
மாரணம் பொய்யோ வனுபூதி யில்லையோ
பாரப்பற நீர்பனை முட்டைக் குருப்போற்
பாஷாணம் விட்டெம்மைப் பார்த்தாலோ வப்பா. (௧)

கொள்ளைக் * கிராந்தங் குதட்டிப் பிறருநீர்
கோதிலா ஞானமுங் கூறியே காணுதே
மெள்ள விருந்து சிவவேடங் கொண்டு
விழிசிம் பிளிக்கை தவிர்ந்தாலோ வப்பா. (உ)

அப்பா முற்றுப்பெற்றது.

---

## ௧௧௫ - வது குணலை.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

தேவாரஞ் செய்கின்ற திண்டாட்ட மெல்லாநாந்
தீரவே தீர்ந்தோமென் றிடுகுணலை
செயமெங்கு மான திறம்பாடிப் பாடித்
தெளிவெங்கு மானதென் றிடுகுணலை

---

* கிராந்தம் - கிரியைமுடிவு.

நாவார வோதிய நாமமே தங்களு
நமக்கினி யமையுமென் றிடுகுணலை
நம்மில்வே றிலையெனுந் தன்மை யதும்போக
நாமோநா மானோமென் றிடுகுணலை. (௧)

வேறு.

உடம்புட் னுறவில்லை யுணர்வே யுறவென்று
முணர்வொழிந் தில்லையென்றிடு குணலை
யோர்வி லுணர்வேயென் றிடுகுணலை
கடம்படு மென்னுங் கதற்றுக் கழிந்தது
கலங்காது காணென் றிடுகுணலை
கதற்று மொழிந்ததென் றிடுகுணலை. (௨)

ஆசார மெல்லா மடையவிட் டங்கநா
மானோநா மானோமென் றிடுகுணலை
யருமறை யறியாதென் றிடுகுணலை
யாசார மானவை முழுது மறவிட்டே
யானந்த மானோமென் றிடுகுணலை
யறிவு வடிவேயென் றிடுகுணலை. (௩)

குணலை முற்றுப்பெற்றது.

---

## ௧௧௬ - வது பிடாரன்.

---

குறள்வெண்செந்துறை.

நாதச்சிலுகாக்குநச்சரவாட்டும்பிடாரனையெல்லாம்,போ
தச்சம்மட்டியாலேபோனபோனிடமெல்லாம்போகடிப்பேன்

வாக்கையடக்குவிப்பேன் மனமோடாமைவைச்சுத்திரிப்
பே, னீக்கொன்றிலோட்வுமொட்டேனின்மலமாக்கும்பிடா
ரனுனே. (௨)

அன்றுமென்றல்லல்கள்பேசியடங்கியிராதாரையெல்லா, மொன்றாக மெய்யுணர் வாலேயொக்க விருத்தியொருக்குவேனே. (௩)

பிடாரன்முற்றுப்பெற்றது.

---

உ

சிவமயம்.

## ககஎ - வது அம்பட்டன்.

---

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

பதைக்கவேதனைசெய்யும்பலமூலப்பெரும்புண்ணைப்
பார்வையா மயிலாலே யறுத்துத்தன் றசையா
முதித்தவூ னினையுணர் வனலே கோலதுவா
யுண்மையிற் றெகித்திட்ட வம்பட்டன் சீயா. (க)

உலகொடுபொருண்மைந்தரொனுமுள்ளத்தொடுவை
யோர்வாலே கீறியங் கொழித்துண்மை யுணரா
வலைபேதப் பெருவன்மக் கிரந்தியை யறிவா
காரத்திற் கரைத்திட்ட வம்பட்டன் சீயா. (உ)

சங்கற்ப விகற்பமாந் தசையது படர்ந்து
தன்மையாம் விழிமூடிச் சடமாகி யுதித்த
வங்கத்தை யசமென்னும் படலத்தை யுரித்து
வறிவா விழிப்பித்த வம்பட்டன் * சீயா. (௩)

அம்பட்டன் முற்றுப்பெற்றது.

---

* சீயன் - பெரியோன்.

உ

சிவமயம்.

## ௧௧௫ - வது வண்ணம்.

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

கறையுறு முளத்தூசிற் காமாதி முழுதுங்
கமையென்னும் பெருங்கல்லிற் கரிசறப்புடைத்து
வறையுறு மலமா மதியுவர் பிடித்து
வைம்பூதத் தொடக்கென்று மறவாவி வைத்து
வுறைதரு பெருமாயை யொழுக்கற வொலித்து
வொழிவற வொளிர்போதப் பிரமமே யாக
மறைமுறை கழுவிய வண்ணத்த னடியேன்
வாசாம கோசர வண்ணத்த னடியேன். (௧)

தேசறு முளத்தூசிற் றிகழ்மையன் முழுதுஞ்
சிதையவே யெடுத்தடித் தலம்பியங் கதனே
யாசறு சமதம மதியுவர் பிடித்து
வகிலத்தோ டணைவொன்று மறவாவி வைத்துப்
பேசறு பெருமாயை பிறழ்வற வொலித்துப்
பிறிதற வொளிர்போதப் பிரமமே யாக
மாசறக் கழுவிய வண்ணத்த னடியேன்
வாசாம கோசர வண்ணத்த னடியேன். (௨)

அழுக்குறு முளத்தூசி லாகுழுக் குணமீ
டணைமுழு தறப்புடைத் தலம்பியங் கதனே
யிழுக்கறும் விமலமா மதியுவர் பிடித்து
யானென தென்முழு தறவாவி வைத்து
புழுக்கூடி னுளமாயை புரையற வொலித்துப்
புரணபூ ரணப்போதப் பிரமமே யாக
வழுக்கறக் கழுவிய வண்ணத்த னடியேன்
வாசாம கோசர வண்ணத்த னடியேன். (௩)

வண்ணம் முற்றுப்பெற்றது.

சிவமயம்.

## ககக - வது முதலியார்.

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

சட்டென்று தலைபறித்திடுஞ் சழக்கறுத்த முதலியார், சாந்தமாகவே வாய்ந்த பாவனைத் தலைநி லென்ற முதலியார், கட்டறுத் தெனைக் கழலிணைதந்து கண்ணளித்த முதலியார், காரிருளி லிரவிபோலுள்ளே கலந்துநின்ற முதலியார். (க)

சூறைகொள்ளும் புலன்களொந்தையுந் துணியவெட்டு முதலியார், சுருதிசொன்ன சுகவடிவாகத் துணிவுதந்த முதலியார், பாறைநெஞ்சு பதஞ்செய்யும்படி பார்த்தருளிய முதலியார், பத்தரொய்ப்பினில் வைப்பதாகிய பரிசுடைய முதலியார். (உ)

அப்புலனுமவ் வுடலுமோர்வற மொழிதந்த முதலியா, ரடியிணைதலை மிசையினில்வைத் தாண்டுகொண்ட முதலியார், செப்பரிய சிவவடிவாகத் தெளிவுதந்த முதலியார், சிந்தையோடு மனமொன்றும்படி திருத்தியாண்ட முதலியார். (௩)

முதலியார் முற்றுப்பெற்றது.

---

கஉ0-வது

## தவமுந் தவமுடிந்ததும்.

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

சங்கரனாகி யிமையோர் தவம்பண்ணிச் சாரச்சடைகட்டவுந், தன்கழறன்னிற் பணியாருயிரொல்லாந் தானே தலைகட்டவுங், கங்குல்பக லென்றடியார்கள்

வேறொன்றுங் காணுமேகண்கட்டவுங், கட்டுவீட்ற் றகண் காட்டினான்வீரக் கழல்கட்டிக் காட்டினானே.

பண்டைவினையாற் பணியாதவர்தம்மைப் பாசத்த ளைகட்டவும், பணிந்தேத்திநிற்கு மடியாரைவிண் ணோர் பணியப்பட்டங் கட்டவுங், கண்டுகளித்தவர் பண்டுதாங்கத்திக் கதற்றுங்கலைகட்டவுங்,கண்ணாகிய தன்னைக்காட்டினான்வீரக்கழல்கட்டிக்காட்டினானே.

வருபிறவிக்கு மருந்தென்றடியாரை மாலயன்கால் கட்டவு, மனக்கணக்கிட்டு வழக்குற்றறைகின்ற வா தியர்வாய்கட்டவுங், கருதலர்செம்பொற் கதிர்மேனி யின்றன்மை காணுமேகண்கட்டவுங், காணுதுகாட்டி ய தம்பிரான்வீரக் கழல்கட்டிக் காட்டினானே. (௩)

தவமுந்தவமுடிந்தது முற்றுப்பெற்றது.

## கஉக - வது ஆண்டார்.

குறள்வெண்டாழிசை.

முன்னாண்டவல்வினை பின்னாண்டுவாராமே மோ க்கிசமாகவே சாக்கிநானுக்கிய, வென்னாண்டானென் பேனோ வென்னாண்டானென்பேனோ. (க)

மூண்டவல்வினை மாண்டுநான்வெறு முத்தனாக வேசித்தனுக்கிய, வாண்டாரோயென்பேனோ வாண் டரோயென்பேனோ. (உ)

பூண்டமாமும்மல மாண்டுபின்னான்வெறும் பூர ணமாகவே பொற்கழல்சூட்டிடு, வாண்டாரோயென் பேனோ வாண்டரோயென்பேனோ. (௩)

ஆண்டார் முற்றுப்பெற்றது.

சிவமயம்.

## கஉஉ - வது தச்சன்.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

அறுகம்பு னுனிப்பனியின்ற னளவில்பல்யோனி யினூடே, பெறுதாயுதரக் குகைபாய்ச்சிப் பிறழ்ங்கி யின் மீதுவளர்த்து, மறுகாலவ் வியோனியினூடே வளர்காயம தாயிடும்வண்ண, மறியாம லியந்திரம் வைத்த வாசாரியை யாரறிவாரோ. (க)

கால்வைத்திரு கையதுமூட்டிக் கழியென்பு நரம் பொடிசைத்து, சாலக்குரு திப்புனலூடே தசையா மதி டன்னையமைத்துத், தோலைக்கொடு மேலதன்மே வித் துளைதூப வியந்திரகூடஞ், சாலப்பொறிவைச் சதியக்குந் தச்சன்றனை யாரறிவாரோ. (உ)

பொய்யுற்றுடல் போலொருபாவை பொறியுற்று ள போலநடித்துச், செய்யுற்றிகமோடுயரத்திற் செ ன்றேயுழ லத்திரிவித்துக், கைவிட்டவியந்திரமாக க் கண்வைத்தவை கண்ணில்விழுங்குந், தெய்வத்திக ழ் தச்சனவன்றன் செம்பொற்கழல் சூடவல்லீரோ.

தச்சன் முற்றுப்பெற்றது.

---

## கஉ௩ - வது பாம்பாட்டி.

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

விரகற்ற குட்த்திலே பாம்ப டைப்போம்
வேதாந்த வெளியிலே விட்டாட் டுவோங்
கரணங்கள் பிடித்தங்கே யிரையி டுவோங்
காலங் கழியவே தப்பி டுவோம்

பரவிய மும்மல மாயை யென்னும்
பாம்புதான் சீறிக் கடித்த போது
வுரையற்ற மந்திரங் கொண்டு மீட்போ
முள்ளுளார் வாழநின் றாடாய் பாம்பே. (க)

சித்திர முத்தி தருமென் றெண்ணிச்
சிந்தித்து நாளுந் திகைத்தி ராதே
பத்திர நிற்கவுறை குத்து மோதான்
பார்த்தானைப் பார்த்துநின் றாடாய் பாம்பே. (உ)

ஓங்காரத் துட்புகுந் துச்சி யேறி
யொன்பது துவாரத்தி னுட்பு குந்து
தூங்காமை தூங்கிநின் றாடாய் பாம்பே
தொந்தங் கடந்தோமென் றாடாய் பாம்பே. (ங)

ஆருரு மிங்கேயம் பலமு மிங்கே
யாட்ரவக் கிண்கிணிக் காலு மிங்கே
பேருரு மிடபவா கனமு மிங்கே
பிறப்பிறப் பற்றிடந் தானுமிங்கே
சீராருஞ் சிவஞான போதந் தன்னைத்
தெளிந்து தெளிந்துநின் றாடாய் பாம்பே. (ச)

பாம்பாட்டி முற்றுப்பெற்றது.

---

## கஉச - வது நிலம்.

---

குறள்வெண்செந்துறை.

வேறுகூறொன்றுமிலாதநிலம்வேதாந்தமெய்ப்பொருளானநில
மாறியறிந்தாரறியுமங்ஙனேயாகியிருந்தநிலம். (க)

எல்லாவழக்குங்கடந்த நிலமேகமேயாகியிருந்தநிலம்
பொல்லாங்குதன்னிற்புகுதாநிலம்பூரணபோதமாய்நின்றநிலம்

கல்விக்கட்லைக்கடந்தநிலங் கற்பனையெல்லாந்தவிர்ந்தநிலஞ்
சொல்லற்றசோதியாய்நின்றநிலஞ்சோகமோகாதிதுறந்தநிலம்

அறிவேவடிவாயிருந்தநில மாற்றலுடையாரமர்ந்தநிலம்
பிறிவேதுமின்றியிருந்தநிலம் பிரமப்பெருவெளியானநிலம்.

சித்தஞ்சிவமாயிருந்தநிலஞ்செய்வனவொன்றுடன்கூடாநில
முத்தனுமுத்தியுமானநில முக்குணமெல்லாமுடிந்தநிலம்.(௫)

* நிலமுற்றுப்பெற்றது.

---

## கஉ௫ - வது தட்டான்.

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

பந்தமாம் பணிசெய்யுந் தட்டா னென்றும்
பலதார் பதக்கஞ் செய்யுந் தட்டான்
மூந்து நாண்வளை பண்ணுந் தட்டான்
முற்பவமெல்லா முடிவுசெய்யுந் தட்டான். (க)

இருவினைத் தளைசெய்யுந் தட்டா னேனைத்
தளப்பமு நன்றாய்ப் பண்ணுந் தட்டான்
சரியுட்ற சரிசெய்யுந் தட்டான் றெருந்தச்
சங்கிலி பண்ணும்வீ ரத்தட் டானே. (உ)

ஐயஞ் சாவடங் கோக்குந் தட்டா
ஞைசயணி கட்டுவடம் பண்ணுந் தட்டான்
மெய்யுள்ளக் குழைசெய்யுந் தட்டான் ஞான
மெய்க்குழை செய்யும்வீ ரத்தட்டானே. (௩)

அறுதொழி லாழிசெய் தட்டானென்று
மருமறைச் சிலம்புசெய்யுந் தட்டா
னுறுமுயி ருடல்கோத் தங்கு லகே
மூடன்செய்யும் வீரத் தட்டானே. (௪)

மையுற்ற பவபா சக்கு ழைசெய்
வயிர வீட்டுபண்ணுங் தட்டான்
செய்யுற்ற தொழிருஞய் முழுதுஞ்
சிவப்பிர காசமொன்றுந் தட்டானே. (ரு)

தட்டான் முற்றுப்பெற்றது.



கஉசு - வது

## ஏவலிலாக்காரணத்திகழ்ச்சி.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

சாத்துங் தனிமாலை தாஞனே ஞகிலலோ
தம்பிரா ஞக்குநெற்றித் தாரானே ஞகிலலோ
வேத்து மடியார் திரளானே ஞகிலலோ
வெம்பிராற் கேதேனு மொன்ருனே ஞகிலலோ. (க)

பூங்கோயில் செய்கைக்குப் பூவானே ஞகிலலோ
பூவோடே யேறிய நாரானே ஞகிலலோ
பாங்கா மடியார்க்குப் பாங்கானே ஞகிலலோ
பரமன் றிருப்பணிக் காளானே ஞகிலலோ. (உ)

இட்ட திரிமுண்டங் தாஞனே ஞகிலலோ
விலங்குந் திருச்செவிப் பூஞனே ஞகிலலோ
கட்டிய வீரக் கழலானே ஞகிலலோ
கழலுக் கிசைந்தசெய் காலானே ஞகிலலோ. (ங)

உருகு மடியா ருளமானே ஞகிலலோ
வுவந்துவந் தேத்து முறையானே ஞகிலலோ
பெருகிச் சொரியுங்கண் ணீரானே ஞகிலலோ
பெருமா ஞக்குநானும் பித்தானே ஞகிலலோ. (ச)

கலையறப் பார்த்தருட் கண்ணானே ஞகிலலோ
கண்ணிற் கருணைக் கடலானே ஞகிலலோ
தலையிறந்த செய்ய தாளானே ஞகிலலோ
தாடந்த தம்பிரான் முனே ஞகிலலோ. (௫)

ஏவலிலாக்காரணத்திகழ்ச்சி முற்றுப்பெற்றது.

## கஉஎ - வது அம்மானை.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

மாயைக்கு வடிவு கொடுப்பார்கா ணம்மானை
மாயையா லுலகு வளர்ப்பர்கா ணம்மானை
யாயி லறிவா யிருப்பர்கா ணம்மானை
யாயாத போதுலக மாவர்கா ணம்மானை. (க)
பார்க்கி லுலகம் பழுதைகா ணம்மானை
பாராதபோது பழுதைபாம் பம்மானை
யார்க்கு மறிய வரிதுகா ணம்மானை
யற்ற திறையடிகண் மற்றிலா வம்மானை. (உ)
ஊனெனுந் தூணி லுதிப்பர்கா ணம்மானை
யோரா ருடலைப் பிளப்பர்கா ணம்மானை
யானென தென்னவொண்ணு வின்பங்கா ணம்மானை
யின்ப துன்பமற் றிருப்பர்கா ணம்மானை. (௩)
பத்திக் கடலி லமிழ்தங்கா ணம்மானை
பார்க்கில் பரஞ்சோதி யாவர்கா ணம்மானை
யெத்திக்கு மெப்போது நிற்பர்கா ணம்மானை
யீறிலாப் போதமாவர்கா ணம்மானை. (௪)
உண்டிபா னங்க ளுயிரள வம்மானை
யோரின் மனத்தே சுகதுக்க மம்மானை

கண்ட ஞைமரணங் காயத்தே யம்மானை
காண்பானுக் காறான மில்லைகா ணம்மானை. (ரு)

ஆறுபா வங்களு மில்லைகா ணம்மானை
யாறுகோ * தானு மப்படியே யம்மானை
பேறு மிழவுமில்லாப் பேரின்ப மம்மானை
பேதா பேதமில்லாப் பிரமங்கா ணம்மானை. (சா)

அம்மானை முற்றுப்பெற்றது.

---

## கஉஅ - வது காளம்.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

அன்னிய மில்லையென் றூதேடா காள
மானந்த மானோமென் றூதேடா காளஞ்
துன்னு சுடரோயென் றூதேடா காளஞ்
சோதியுட் சோதியென் றூதேடா காளம். (க)

பிறவி கழிந்ததென் றூதேடா காளம்
பேதைமை தீர்ந்ததென் றூதேடா காளம்
அறிவே வடிவென் றூதேடா காள
மறியாமை போனதென் றூதேடா காளம். (உ)

கோசங் குலைந்ததென் றூதேடா காளங்
கூரறி வானதென் றூதேடா காளம்
பாசம் பறிந்ததென் றூதேடா காளம்
பரமே பரமமென் றூதேடா காளம். (ந)

பற்றற்று நின்றோமென் றூதேடா காளம்
பார்ப்பறப் பார்த்தோமென் றூதேடா காள

---

* கோதுகாமாதி - கோடியென்றும்பாடம்.

முற்ற வுணர்வேயென் றூதேடா காள
முன்னொளி யானேமென் றூதேடா காளம். (௪)

உள்ளது போதமென் றூதேடா காள
முலகமோக் காலமென் றூதேடா காளம்
வெள்ள வெளியிதென் றூதேடா காளம்
வேதஞ் சொன்னவண்ண மூதேடா காளம். (௫)

ஊனே மறிவதென் றூதேடா காள
முணர்வே பிரமமென் றூதேடா காள
நானே யவனுமென் றூதேடா காள
நானுவ தில்லையென் றூதேடா காளம். (௬)

உண்மை வடிவேயென் றூதேடா காள
முட்புறம் பில்லையென் றூதேடா காளந்
திண்மை யறிவேயென் றூதேடா காளந்
திசைதிசை தோறுமென் றூதேடா காளம். (எ)

சாதி கழிந்ததென் றூதேடா காளஞ்
சங்கை தவிர்ந்ததென் றூதேடா காளஞ்
சோதி சுகமேயென் றூதேடா காளஞ்
சொல்லவொண் ணாததென் றூதேடா காளம். (அ)

காளமுற்றுப்பெற்றது.

---

கஉகூ - வது ஆவாள்.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

உள்ளா னொருவன்கா ணுவாளே, யுனையல தொன்றுமில்லை யாவாளே, விள்ளா னொருக்காலு மாவாளே, வேண்டுந்தே வைகொள்வா னுவாளே. (க)

பண்டே யெனக்கடை யாவாளே, பற்றித்தென்னு லேகா ணுவாளே, கண்டெ மதிகெட்டே னுவாளே, கண்டுகூடக் கைவிட்டே னுவாளே. (உ)

தேடுமவ னேகா ணுவாளே, தேடப்படு மவர ல்ல ராவாளே, வீடுமவர் தாமேகா ணுவாளே, வே ண்டுந்தே வைமீட்ப ராவாளே. (௩)

காரியஞ் செய்யார்கா ணுவாளே, கண்ணுலே கழி ப்பர்கா ணுவாளே, நேரியர் கூரிய ராவாளே, நிற்ப ரெங் கும்போகா ராவாளே. (௪)

வாயுங் கையுமில்லை யாவாளே, வாவென் றழைக்க வல்ல ராவாளே, யெய்வு மோய்வுந்தாராராவாளே, யெப்போதும் வாய்தாரி யாவாளே. (ரு)

பேதித் திடத்திலு மாவாளே, பேரா திருப்பர்கா ணுவாளே, யோதிக் குடிகெட்டோ மாவாளே, யுனை யுமெனை யுங்கைவிட்டா ராவாளே. (கூ)

வஞ்சனை செய்வார்கா ணுவாளே, வாக்கு மனம ழிப்பா ராவாளே, நெஞ்சு கலங்கினு மாவாளே, நே தியென்று நிற்ப ராவாளே. (எ)

ஓராத போதுளா ராவாளே, யோரி லொளிப்பர் கா ணுவாளே, * யோராத நீயவ ராவாளே, யெல்லா மறிவுகா ணுவாளே. (அ)

ஆவாள் முற்றுப்பெற்றது.

---

* ஏராகாதவென்பது - ஏராதவென விகாரமாயிற்று.

சிவமயம்.

## ௯௩0 - வது சோதனை.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

பூணப் படாதன பூண்டு
போர்த்துடுத் துப்புறம் பேதிரிவேனைக்
காணப் படாவென்று சொல்லியெனிற்
கண்ட தனைத்துங் கழித்துவிட் டானே. (௧)

எட்டாங் கரணத்தி னுள்ளே
யேவின காரியஞ் செய்திருப் பேனை
வெட்ட வெளியினிற் காட்டி
வேற்று முகந்தோன்றா வேறுசெய் தானே. (௨)

உலகர்க் கிசைய நடந்திட்
டொன்றுமுள் ளென்றென் றுணர்ந்திருப்பேனைச்
சிலுகற்ற சிற்பர மாக்கியெனிற்
சேரு மனத்தையுஞ் செம்மை செய்தானே. (௩)

காரிய முண்டென்று சொல்லிக்
கண்ணுக்கெட் டாதே கடக்கப் போவேனை
யாரியன் வந்துபுக் கென்னை
யப்போதே யானந்த மாக்கி விட்டானே. (௪)

சொல்ல வொண்ணாதன சொல்லிச்
செவியோடு கண்வாய்கள் சோதித்துப் பார்த்தென்
னெல்லை யிலாவழி வாகி
யானு மிதன்றி யினிதிருந் தேனே. (௫)

சிட்டனு மாய்ப்பட் டனுமாய்த்
தேசத்துள் ளாரொரு வன்சொல்லப் போகப்
பட்ட விதனமும் பாரீர்
பரிபூர்ண மேபின்னு மானது பாரீர். (௬)

நீருக் குமிழியது போல
நிலையில்லா வாக்கைக்கு நேசித் திருந்தே
யாருக்கு நன்மைசெய் தோநா
மறிவே யகண்டமு மாய் வறியாதே. (எ)

ஏழைத் தனந்தனி னாலே
யென்னில்வே றில்லையென் றேநெடு நாளாய்ப்
பாழுக் கிறைத்தோமு நாமே
பண்டை யறிவை யறியா திருந்தே. (அ)

சோதனை முற்றுப்பெற்றது.



## ௩௱௧ - வது ஊர்.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

* நான்முக னுக்கிட மானவூ ரெங்களூர்
நான்மறை யுந்துதி செய்யுமூ ரெங்களூர்
தேவுக்குத் தேவா யிருக்குமூ ரெங்களூர்
தேவர்க ளன்றித் திரியுமூ ரெங்களூர். (க)

தோற்றா வாகத் துணிந்தவூ ரெங்களூர்
சோகமோ கங்க டுறந்தவூ ரெங்களூ
ராற்ற லுடையார்க் கடைத்தவூ ரெங்களூ
ரானந்த மாயே யிருக்குமூ ரெங்களூர். (உ)

காமக் குரோதங் கழிந்தவூ ரெங்களூர்
கல்விக் கடலைக் கடந்தவூ ரெங்களூர்
நாமரு பங்க டவிர்ந்தவூ ரெங்களூர்
ஞானமே யாக நவின்றவூ ரெங்களூர். (௩)

* இச்செய்யுள் நெடின் மோனை - எதுகையின்று.

அறிவிட் டறியாமை போக்குமெ ரெங்களூ
ரன்னிய மொன்றுமி லாதது ரெங்களூர்
குறியிட்டி தென்னவொண் ணாதது ரெங்களூர்
கோசங்க ளைந்துங் கடந்தது ரெங்களூர். (௪)

புத்தி விகற்ப மறுக்குமெ ரெங்களூர்
பூரண போதமே யானது ரெங்களூர்
வித்தும் விளைவு மிலாதது ரெங்களூர்
விண்முதற் பூதம் விளைந்தது ரெங்களூர். (௫)

எட்டுத் திசையு நிறைந்தது ரெங்களூ
ரேகாந்த மாகி யிருக்குமெ ரெங்களூர்
தட்டற்ற யோகிக டங்குமெ ரெங்களூர்
தன்மபா வங்க டவிர்ந்தது ரெங்களூர். (௬)

உலகத்தை யெல்லா மொருக்குமெ ரெங்களூ
ருண்மையொன் றாகியொன் றானது ரெங்களூர்
சிலுகற்ற சிற்பர மானது ரெங்களூர்
சிந்தனை விட்டுத் தெளிந்தது ரெங்களூர். (௭)

உன்னப் படாவுணர் வானது ரெங்களூ
ருள்ளொளி யாகி யிருக்குமெ ரெங்களூர்
கண்ணுக் கணித்தா யிருக்குமெ ரெங்களூர்
கள்ளப் புலனைக் கழிந்தது ரெங்களூர். (௮)

கற்றுஞ் சிலுகு மிலாதது ரெங்களூர்
காண்பானுங் காட்சியு மற்றது ரெங்களூர்
சுத்த வெளியிலே தோன்றுமெ ரெங்களூர்
சோம்பர் சுகமென் றுணர்ந்தது ரெங்களூர். (௯)

ஊர் முற்றுப்பெற்றது.

சிவமயம்.

## கஙஉ - வது வாரணம்.

இரட்டைக் குறள்வெண்செந்துறை.

விளைவி லங்கு கழற்றிய வாரணம்
விரத கம்ப முறித்திடும் வாரண
மௌனதி யானென் கணையை முறித்தெறிந்
தெங்கு மாமமிழ் தாகிய வாரணம். (க)

கரணப் பாகரை வீசிய வாரணங்
கருணை மாமலை மேவிய வாரண
மரண மாமறை யீறு முழக்கவே
யறநல் வீதியி லேவரும் வாரணம். (உ)

பத்தி வண்கோ லுக் குளைந்தநல் வாரணம்
பாசக் கயிற்றுற் கட்டுறு வாரண
முத்தி மாமடு விற்படி வாரண
மூல மாமத வாரணம் வாரணம். (ங)

அன்ப ரன்பளற் றிற்படும் வாரண
மான்ற மாமத மேபொழி வாரணம்
வன்பி லோடு மனிதரை வாரியே
மாசு சேர்கிர யத்தெறி வாரணம். (ச)

சமய வைம்பொழில் சாடியே யைந்தெனுந்
தளைமுறித்தயி லுந்தனி வாரண
மமைய வாறினர் மேல்கொளும் வாரண
மாதி மூலமென் றோதிடும் வாரணம். (ரு)

கத்த வாதங் கடிந்தநல் வாரணங்
கவள மாவண்ட் முண்டதோர் வாரண
நித்த வாரரு ளின்பட்டங் கட்டியே
நீச னேனையு மாண்மத வாரணம். (சா)

அலம லக்குறு மென்மனந் தன்னையே
யசைவ றச்சிவ மாக்கிய வாரணங்
கலக லப்பைநூற் கட்டினை யொன்றினாற்
கரிச றுத்தநல் வாரணம் வாரணம். (எ)

கொச்சை வன்குலச் சாதிச் சடங்கெனுங்
கோடு வான்கொம் பற்றநல் வாரண
மச்ச மேது மறுத்தெனை யாண்டுகொண்
டிட்ட மாமத வாரணம் வாரணம். (அ)

மூவ ரும்பணிந் தேத்திடும் வாரண
முடிவில் கற்பகச் சோலையில் வாரண
மாவ வென்றடி யாருட னென்னையு
மாண்ட மாமத வாரணம் வாரணம். (கூ)

வாரண முற்றுப்பெற்றது.

---

## கஙங - வது மெய்ஞ்ஞானவிளக்கம்.

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

ஆடு பார்க்குதேடா வாரக் கோனே
யடையப் படர்ந்துதேடா வாரக் கோனே
யோடி மறியேடா வாரக் கோனே
யுள்ளே மறியேடா வாரக் கோனே. (க)

குறுகவனை குறுகவனை கோலக் கோனே
குரவனடி குறுகவனை கோலக் கோனே
குறுகவனைத் தவிழவிராய் கோலக் கோனே
குரம்பைதனைக் குலையவிராய் கோலக் கோனே. (உ)

ஓடிவிடு காடேநான் * போகு தேனே
போடாமை யுள்ளே மறிக்கு தேனே
போடாமை யுள்ளே மறித்த வாறே
போவாமை நின்று நடுங்கு தேனே. (௩)

ஓவாதே நின்று நடுங்கு மென்னை
யுள்ளே புகத்திரியத் தள்ளு தேனே
காவா நரகமுங் கைக ழன்று
கருதுமங் கொன்றையுங் காண்கி லேனே. (௪)

காணாதே நின்று கழியுமென்னைக்
காலிட்டுக் காலிட்டுப் பாயு தேனே
காணாத கண்ணைத் துடைக்கு தேனே
கதிர்போ லழிவங்கே காணு தேனே. (௫)

அறிவா லனைத்தையுங் காணு தேனே
யறிந்த வறிவா யிருக்கு தேனே
பிறியா வறிவா யென்னையு மந்தப்
பேச்சற் றிடத்தி லொளிக்கு தேனே. (௬)

பேராமை பேச்சற் றிடத்தே வைத்துப்
பேரின்பப் பாற்சோ றிடுகு தேனே
யாராதே நான்வாரி யுண்கு தேனே
யடையவு நானா யிருக்கு தேனே. (௭)

உண்டு களித்துநின் றாடு தேனே
போவா தொளிரநின் றாடு தேனே
யண்ட மழிந்துநின் றாடு தேனே
யலைவறக் கொட்டிநின் றாடு தேனே. (௮)

---

* இப்பதிகத்தில் மூன்றாவதுமுதல் ஒன்பதாஞ்செய்யுள் வரைக்கும் அடிகளிலீற்றுச்சொற்கள் காலவிடைநிலைகுறைந்து மருவிநின்றன.

உண்மைக் குழலினின் றூது தேனே
யுளாமாண்டு சும்மா விருக்கு தேனே
வண்மைக் கருணை வளத்தை யுன்னி
மறுகி யுடைந்துக்குப் போகு தேனே. (௯)

ஆதார மிக்குநின் றூடாய் கோனே
யதிசய மிக்குநின் றூடாய் கோனே
சாதியை விட்டெழிந் தாடாய் கோனே
சதுரினை விட்டெழிந் தாடாய் கோனே. (௰)

மெய்ஞ்ஞானவிளக்க முற்றுப்பெற்றது.

---

## கஙச - வது குறி.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

ஆதிப்பிரமத் திருக்குமறியாமை யாகாசாதிபூதமா யப், பூதத்திரளாம் புலன்களொருபதாய்ப் போகும் பொறிகளாயே, யோதத்தகும் வாக்காதிகரணநான் கோங்கிய சோலைக்குள்ளே, வேதத்தலைவன் வருங் குறியாமிந்த வேதாந்தத்துட்குறியே. (௧)

ஏகனேகனிடை யொருவரின்றியெங்கு நிறைந் துநின்று,போகம்புலன்கள்பொழுதுபுணரிலும்போ தமேயாகின்றேன்,மோகங்கழியமுன் வேடங்கொ ண்டென்பான் முத்தியளித்தபோதே, யேகும்பிறவி யென் றிடக்கண்டுடித்திடுமின்றே வருங்குறியே.(௨)

அங்குமொருகுறை யின்றியழியாவறிவா யிருக்கை யாலு, மிங்குமொருகுறை யின்றிபினியனவேகமாய் நிற்கையாலும்,பொங்கும்பிறவியும்பூதப்புலன்களும்

பொய்யா யிருக்கையாலு, மெங்குநிறைந்தவ னென்னையருள்செய்வானென்றே யிடுங்குறியே. (௫)

பூணும்புலன்க ளனைத்தையும் பொய்யாய்ப் பொருந்திக்கழறரவும், பேணுமனந்தப் பிரமநாமாயிடப் பேசாதுபேசிடவுங், காணுங்கனவுநான் கண்டநிமித்தமுங் கண்டோடிடிப்பனவும், வீணென்றுகாணும் விமலன்வருகைக்கு மெய்யேயிடுங்குறியே. (௬)

நீசெய்வினையா னிலையாதலுனையெடுத்து நெடுநாளெல்லாம், வீசேழுலகில் விழுவதெழுவதாய் வீணையுழன்றுயென், றோசைபரிச முருவஞ்சுவைகந்த மோரிலுணர்வாகுமென், றுசையறுக்க வமலன்வருங்குறி யங்கத்திடுங்குறியே. (௭)

சலியாதுலக மனைத்தையுநோக்கிச் சனனமரணங்களு, மெலியாவிகபர லோகங்கடன்னில்வெறுப்பும் விழைவியாவையும், பலியாதேபச்சென்றிருந்தவனைத்தையும் பார்த்துப்பரமொழிய, நிலையாமலென்னெஞ்சுதன்னில்வருங்குறி நித்தன்வருங்குறியே.

ஆருமறியாவறிவதே நானென்றிட்டானந்த மாகச்செய்தே, தாரணணியனயக் கன்மயக்கனுய்த் தோற்றுமம்மாயையினு, லோரறிவாகவுணர்த்த வுணர்வாகுந்தம்மை யுணர்ந்தபோதே, பேரறிவாய்ப்பி னன்றியப்படாமை பிரமநாமாங்குறியே. (௮)

தன்னையறியா திருந்தான்றனையிறைதா னறிவித்த போதே, யன்னியமின்றி யகண்டபோதம்மா யறிந்துமறியாவிடிற், பன்னுமறையும் பரமேநீயென்று பணித்தபடியதுவா, யின்னதிதுவென் றியம்பவொண்ணுப்பர மென்னுங்குறியதுவே. (௯)

தந்தைதாய்சுற்றந் தனையந்தமரகவே தரணியினு ள்ளதெல்லாம், பந்தமேயன்றிப் பயனில்லையென்று பின் பாசம்பறித்தபோதே, சிந்தையவற்றினிற் சேராதவண்ணஞ் செறுத்தேயறத்தையுன்னி, வந்தயடி கண்டு மானமற்றில்லது மாயையறுங்குறியே. (௯)

அத்தனைகாலமறிந்தவர்தம்மி லடங்கியிருப்பதுவு மித்தனைகாலமிவ்வூனையெடுத்தவிருவினைப்பற்றதுவு மத்தனருமறை யாலதுநீயென்ன யானவனானதுவு நித்தனாய்முத்தனாய் நேரொருவரின்றி நிற்கவருங்குறியே.

குறி முற்றுப்பெற்றது.

## ௯௩௫ - வது கனவுரை.

கலிவிருத்தம்.

உண்மையே யாகி யுலகுதிப் பதன்முன்ன
முண்மையிற் றோன்று முணராமை யாலுதித்
துண்மையா லேவளர்ந் துண்மையி னுள்புக்குக்
கண்மையாய்த்தோன்றக் கனாக்கண்டேன் றோழிநான்.

வானே முதலாய வையம் படைத்தபி
னூனே புகுந்துநின் றுள்ளடங் கிக்கொண்டு
நானே முதலாம் பிரம முதலாகத்
தானே தழைக்கக் கனாக்கண்டேன் றோழிநான். (உ)

பண்டமுண் டென்று பரங்கெட் டிராதேநீ
விண்டிடும் போதேவே தாந்தத்தை நோக்கிட
வண்டமே யாத லகண்டமே யாதல்
கண்ட தழிக்கக் கனாக்கண்டேன் றோழிநான். (௩)

மெய்தவத் தாலுன்னை முற்ற வுணர்ந்திட்டுச்
செய்தவத் தாலுன்னைச் சிந்தித் திராதேநீ
கொய்தநற் கூற்றையுங் கொண்டநற் கோதையுங்
கைதவ மாகக் கருக்கண்டேன் றோழிநான். (௪)

எங்கள் பெருமா னிணையடி சென்னிமேற்
றங்கும் படிதந்து தாமரைக் கண்களாற்
பொங்கும் பிறவிகள் போயகலப் பார்த்துக்
கங்குல் கழியக் கருக்கண்டேன் றோழிநான். (௫)

அன்னை மறையாக வப்ப னறிவாக
வுன்னிய போதே புலகையு மூனையுந்
தன்னி லொளித்திடத் தன்குண மாங்கேயாய்க்
கன்னி பிறக்கக் கருக்கண்டேன் றோழிநான். (௬)

வேரிலா மாயைதான் வித்தாகிப் பூதமாய்ப்
பாரிலே தட்டப் பரந்து பலகொம்பா
யீரிலே யாயிந் திரியங்க ளேபூத்துங்
கோரி லொளிக்கக் கருக்கண்டேன் றோழிநான். (௭)

சத்துக்குற் பத்திமுன் சத்தாதலா லில்லைச்
சத்தா வதுக்கு மசத்தலால் வேறில்லைச்
சத்து மசத்துமாய்ச் சந்திப்ப தொன்றில்லைப்
பித்தம் பிதற்றக் கருக்கண்டேன் றோழிநான். (௮)

பற்றிலா தானொருவன் பார்த்திட்ட பார்வையான்
மற்றில்லா மாயை மரமுறிந்து பேரறிவாய்க்
கற்றிலாக் காக்கைக ளெல்லாங் கனியுண்ணச்
சுற்றிலே பார்க்கக் கருக்கண்டேன் றோழிநான். (௯)

போா வுறக்கத்தாற் பெண்டிர் மகச்சுற்ற
மூராரொனத்தா னுறக்கத்தி னின்றேனைச்
சீரார் மறைவினா ஸ்ரீபுரு ஷோத்தம
னேரா வுணர்த்தகா னுள்ளொளியா னேனே. (௧0)

கனவுநா முற்றுப்பெற்றது.

---

## ௧௬௬ - வது குறத்தி.

கலிவிருத்தம்.

பேதை வனம்புக்குப் பிணிமூப்புப் பின்சூழச்
சாதி பலபேசிச் சரித்திடுங் குறத்தியல்லேன்
கேதம் பலவின்றிக் கீழ்மேலொன் றில்லாத
போத வடிவாம் புரையறுங் குறத்தியேனே. (௧)

நில்லா வுபாதிகளை நிரூபியா நிலையாலே
பொல்லாத விடயத்திற்புகுந்துவிழுங்குறத்தியல்லே
னெல்லாம் பிரமமென வென்னில்வே றிலைகண்டு
சொல்லாலுணரவொண்ணாச்சுகமாங்குறத்தியேனே.

மின்னிக் கழிந்தாற்போல் வீழுங் கனவுடலை
யுன்னிப் பலனுறவுசெய்யுங் குறத்தியல்லேன்
றன்னைத் தனிற்கண்டு சத்தாதி யிந்தியங்க
ளென்னுக் கினியென விழித்திடுங் குறத்தியேனே.

பச்சை வடம்பூண்டு பசுங்குழவி யனைசேர்த்துப்
பிச்சை பலகொண்டு பிழைபேசுங் குறத்தியல்லே
னச்ச மறத்துறந்த வதிகாரி குடிசேரும்
விச்சைபலசொல்லி விளையாடுங்குறத்தியேனே.(௪)

கட்டருங் கரணமென்னுங் கடுநோய்கள் புடைசூழப்
புட்டி றலைவைத்துப் போய்மீளுங் குறத்தியல்லேன்
சிட்ட னடிசூழச் சிவனே பிரமமென்று
விட்டுவிடா தொன்றில் விளையாடுங் குறத்தியேனே.

விதிகள் பலபிதற்றி மேதினி புற்பரப்பி
நிதிகள் பலதேடி நெய்தூவுங் குறத்தியல்லேன்
மதிகள் பலவிட்டு மரணபய மானம்விட்டு
விதுவது வென்றே யேகமாங் குறத்தியேனே. (சு)

ஊனை வடிவென்றெண்ணு முலகிற் பிறந்திருந்து
கானல் புனலென்று கருதிடுங் குறத்தியல்லே
ஞானமதப் பட்டதுபோ லாரணக் காட்டினுள்ள
தேனறிவை யுண்டு தெளிவாகுங் குறத்தியேனே. எ

குத்துத் தினைகுத்திக் கொழுமரத் தேன்வாங்கி
யத்திற்குழைத்துண்டறஞ்சொல்லுங்குறத்தியல்லேன்
முத்திமலை யேறிமுடி யாதவா னகத்தேனைத்
தித்திக்க வுண்டு தெளிவாகுங் குறத்தியேனே. (அ)

கேடுபடு முடறனக்குக் கீழாய கிழங்குகல்லிக்
காடு மலையுங் கருதியிடும் குறத்தியல்லேன்
பாடு மறையிற் பரம்பிரம மூகானுங்
கூடும் வகைதேடிக்குனித்திடுங் குறத்தியேனே. (கூ)

போற்றித் தலைக்கொண்டு பூமச் சோதிபாத
மூற்ற மதுவாக வுட்சோதி யுளைபத்து
மாற்றும் பவமென்ன மனத்தோடே யதிகரித்துக்
கூற்றங் கனவிலுங் குறுகிடாக் குறத்தியேனே. (க0)

குறத்தி முற்றுப்பெற்றது.

உ

சிவமயம்.

## ௧௩௭ - வது ஊசல்.

### கலிவிருத்தம்.

ஆரணமாங்கால்களூட்டி யறிவாங்கயிறதுதூக்கிப்
பூரணமாம்பலகைசேர்த்துப்புத்தியதிற்பொருந்தவைத்து
வாரணியுமுலையார்தங்கள் வலையிற்போகாவண்ணங்காத்துச்
சீரணியுஞ்சித்தம்வேறுதிரியாவண்ணமாடிரூசல். (௧)

தானாகாவடிவுதன்னைதானாகநம்வடிவை [யை
பூணுரோடொன்றப்பண்ணியொன்றிலொன்றைமறைக்குமா
தானேதானறியவேண்டிச் சத்தினோடசத்துமின்றி
வானாதிபூதங்களுமாமாயைபோச்சென்றாடிரூசல். (௨)

வேதமுதனீர்தரித்துவிதித்தகன்மம்பலவுஞ்செய்து [தான்
சாதிபேதம் பலவுண்டாகச்சமைந்தான்ஞானம்பிறக்குமோ
வேதவிகாரந்தன்னால்விதித்தகன்மந்தனக்குமுன்னே
சாதனநாலுமுண்டேயாகிற்சமைந்ததேயென்றாடிரூசல். (௩)

கரைபுரளப்பெருகுமாற்றிற்கங்குறங்கிநில்லாதாற்போ
லுரைமுதலாம்யோகத்தாலேயொருமைதன்னைக்குலைக்கவல்
விருமையென்னுமாற்றையேறியேகமண்டபத்திருந்து [ல
பிரமமென்னும்பார்வையாலேபிறவாவண்ணமாடிரூசல். (௪)

புத்தேந்திரியங்கண்முதற்பொறிகடன்மேற்புணரும்போது
நித்திரையில்வந்தபோதுநின்றபோதுமில்லாப்போது
மித்தனையுங்காண்கையாலேயெங்குமுள்ளானேகமாயே
யத்தனையுமறிகையாலேயறிவானென்றாடிரூசல். (௫)

பதினெட்டுவடிவமதாகிப்பரலோகமேறலாமென்று [ண்டாம்
கெதிகெட்டமனிதர்சொல்வேள்விக்கேடுபாட்டைக்கேட்கவே
விதிதட்டாவேதாந்தத்தின்விளங்குஞானமெய்ச்சுடரை
மதிதட்டாதேயறிந்தபோதே மாயைபோச்சென்றாடிரூசல்.

மேதினியேபாதமாக்விரியும்வானேயுதரமாகப்
போதுமதிமுகமதாகப்புரந்தரனூர்முடியேயாக
வேதமாதியாயதாகவிரியும்வாயுவுயிரதாக
வாதியிலேயவதரித்தவனேநானென்றாடிரூசல். (எ)

புரியினிடையரவுதோன்றிப்போனபோதும்போகாப்போதும்
புரியதுவேயானூர்போலப்போதமாகும் புரணந்தானென்னி
லெரியொடுநீர்பவன மன்விண்ணெல்லாந் தோன்றியழியும்
போது, வரியமாயையத்தில்வீழுங்காமமாயவாடிரூசல்.(அ)

ஊசல் முற்றுப்பெற்றது.

---

உ

சிவமயம்.

## ௧௩அ - வது கழல்.

கலித்தாழிசை.

ஒன்றேகாண் பெண்ணே யுலகம் பதினாலு
முள்ளது போதமென் றூடாய்கழ
லொழிவற நின்றேமென் றூடாய் கழல். (க)

இரண்டுகாண் பெண்ணே யிடைபிங் கலைக
ளிரண்டுமொன் றானதென் றூடாய்கழ
லேகாந்த மானேமென் றூடாய் கழல். (உ)

மூன்றுகாண் பெண்ணே மூடிவான மண்டில
முத்திக்கு வித்தாமென் றூடாய் கழன்
மூங்கிலா வீசுதென் றூடாய்கழல். (௩)

நாலுகாண் பெண்ணே நாடினு மூடியுண்
ணுதமே சோதியென் றூடாய்கழ
னம்மை யுணர்ந்தோமென் றூடாய்கழல். (ச)

அஞ்சுகாண் பெண்ணே யறிவே நமக்கென்றுந்
தஞ்சமாய் நின்றதென் றூடாய்கழ
றானேதா னானதென் றூடாய்கழல். (௫)

ஆறுகாண் பெண்ணே யல்லல் கழிந்தபின்
னானந்த மானோமென் றூடாய்கழ
லாசை யொழிந்தோமென் றூடாய்கழல். (௬)

ஏழுகாண் பெண்ணே யெல்லா நிலைகளு
மிந்திர ஞாலமென் றூடாய்கழ
லெமக்கழி வில்லையென் றூடாய்கழல். (௭)

எட்டுகாண் பெண்ணே சுற்றக் குழா மென்னுங்
கட்டதை விட்டோமென் றூடாய்கழல்
காணாது கண்டோமென் றூடாய்கழல். (௮)

ஒன்பதாம் பெண்ணே யுள்ளே தெளிந்தபின்
மின்போலும் போதமென் றூடாய்கழல்
வேத முடிவதென் றூடாய்கழல். (௯)

பத்துக்காண் பெண்ணே பரமேபரமாகப்
பற்றற் றிருந்தோமென் றூடாய்கழல்
பத்தி முடிவதென் றூடாய்கழல். (௧௦)

ஆடுங் கழலா மடியி லொளித்தக்காற்
றேடுவ தில்லையென் றூடாய்கழ
றிருவடி யல்லதென் றூடாய்கழல். (௧௧)

கழல் முற்றுப்பெற்றது.

பாடுதுறை முற்றும் - முற்றுப்பெற்றது.

